நம்மாழ்வார் அருளிய

# திருவிருத்தம்

## ஒரு திறனாய்வு

(A Critical Study)

கோக்கலை ஜே ராஜன்

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATHI DEVASTHANAMS UNDER THEIR SCHEME, "AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

மகராணி

W-146 அண்ணா நகர் மேற்கு விரிவு

சென்னை-600101

தொ. பே. 653963

GITA MAKARANDAM - Vol. I

By

SWAMY VIDYAPRAKASHANANDA

Tamil Translation :

Dr. K. SARVOTHAMA RAO

T.T.D. Religious publication Series No. 574



T.T.D. First Edition :1999

Copies : 2,000

Price :

Cover Page Art: Sri P. Narayanagiri Dattu

Published by :
Dr. I.V. Subba Rao, I.A.S.,
Executive Officer,
Tirumala Tirupati Devasthanams,
Tirupati.

Printed at :
Students Offset Printers
Tirupati.

# ஆசிரியரின் பிற நூல்கள்

## மொழி இலக்கியம் உரை நூல்கள்

1. பேரறிவுக் களஞ்சியம், பட்டினத்தார் பாடல் விருத்தியுரை) (முதல் நூல்)

2. -do- (இரண்டாம் நூல்)

3. தெய்வச் சேக்கிழார் அருளிய திருஞானசம்பந்தர் புராணம். (மூலமும் ஆசிரியர் உரையும்)

4. அதிவீரராம பாண்டியனார் அருளிய நைடதம் (மூலமும் ஆசிரியர் உரையும்)
"NAIDATHAM" is a good piece of literary work. Mr. KOKKALAI J. RAJAN had made the work available to the present day Tamil Literary world. The Commentator cum publisher has to be congradulared on this good venture. The Hindu Dt. 19-5-92

5. புகழேந்தியாரின் நளவெண்பா (மூலமும் ஆசிரியர் உரையும்)

6. தாயுமானவர் பாடல் (முதல் நூல்) (மூலமும் ஆசிரியர் உரையும்)

7. தாயுமானவர் பாடல் (இரண்டாம் நூல்)
(மூலமும் ஆசிரியர் உரையும்)

......... The present commentary by J. Rajan is simple and unassuming. He gives the word-to-word meaning for the correct and easy understanding of all. The Hindu Dt 6-3-96

8. திருமங்கை மன்னர் திருவாயமுதிர்த்த
சிறிய திருமடல் பெரிய திருமடல்
(மூலமும் ஆசிரியர் உரையும்)

9. திரு ஆண்டாள் அருளிய திருப்பாவை
(மூலமும் ஆசிரியர் உரையும்)
........... Tiruppavai the sacred work of Andal, is published by Kokkalai J. Rajan with his elebarate commentaries. Every poem is presented in the prose form and it is followed by necessary interpretatiions and glossary. This Book is Quite useful to the devotees and to those who are interested in Tamil literature. The Hindu Dt. 6-2-96

## மொழி இலக்கியம் திறனாய்வு நூல்கள்

10. இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து.
ஒரு ஆழ்ந்த சிந்தனையின் விளைவாகப்
படைக்கப்பெற்ற ஆராய்ச்சிப் பெருநூல்
பாராட்டுக்குரிய பைந்தமிழ் ஆய்வுத் திரட்டு
அமுதசுரபி டிச. 1991

The author has made a sincere attempt to collect and annotate the poems on devotional themes that are found in the

Tamil epics, narrative idylls, anthologies, ethical work and some Prabaddha ......... on the whole the book has a reference value

THE HINDU Dt. 24-12-91

11. நறுந்தொகை விருந்து (இரண்டாம் பந்தி)
"அழகின் சிரிப்பைச் சற்று வித்தியாச மான கோணத்தில் ஆய்வு செய்யும் இந்நூல் இலக்கியச் சுவைஞர்களுக்கு நல் விருந்து" அமுத சுரபி

"பெண்மையின் பேரழிலை மூன்று இலக்கியக் கட்டுரைகளில் சித்தரிக்கும் நூல், தமிழின் செழுமை நூல் முழுவதும் தித்திக்கிறது. "ராஜம் மாதர் மாத இதழ்"

12. தோலா மொழியாரின் சூளாமணி சுவைகள்

13. நறுந்தொகை விருந்து (முதற் பந்தி)

## நாட்டுப்புற இலக்கிய வரிசை

14. நல்லதங்காள் (நாடகம்)

15. சீதா கல்யாணம் (நாடகம்)

16. பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்)

17. ஜடாயு மோட்சம் (நாடகம்)

18. வாலி வதம் (நாடகம்)

.........For creating this Valivatham, Kokkalai Rajan has followed the Valmiki Ramayanam version. The author has presented the story

in th prose form. He has successfully made all attempt to present the **story** in the readable manner. This tiny **volume will** be useful to all Ramayana **lovers and** the common readers as well. The **Hindu Dt** 18-3-97

19. சூடாமணி (நாடகம்)

The book, the fourth in a series, is a dramatic presentation of the sundarakandam of Valmiki Ramayana in simple and readable Tamil, The idea is that a villager must be able to understand not only what is written but be proud that he or she is an enviable inheritor of the greatest classic.

The author has an innate gift to build a play with all its elements in the right proportion. The language has a certain austerity that it is really a nice religious experience to read. It is thoroughgoingly honest, chaste and no character is denig-rated. What is greatly satisfying is that the author neither blow his trumpets anywhere, nor be distorts the original in the guise of interpretation.

He must be complimented on bringing the classic in a dramatic form to an average Tamil reader. The book deserves to be recommended at the school level as an additional text-book. It will come in handy as a good text giving exerciscs in loud reading in Tamil.

The book carries on the front cover a relevant and pious illustration of Lord Hanuman meeting Sita Devi. The earnestness and utter piety of the author is laudatory. The Hindu Dt. 12-8-97

20. இராமர் பட்டாபிஷேகம் (நாடகம்)

## பயன்தரு அகர வரிசை நூல்கள்

21. இந்து சமயச் சொல் அகராதி

"இந்து சமயம் பற்றிய நூல்களைப் படிக்க விரும்புகிறவர்களுக்கு இது ஒரு நல்ல அறிமுகமாக அமையும்" ஞானபூமி அக்-1992

"The work under review must be considered as a valuable work in Tamilology. The author has done a valuable service to the religious world by compling this dictionary", The Hindu Dt. 8-2-92

22. உண்பொருள் குண அகராதி

கைவசமிருந்தால் நோயில்லா நல்வாழ்வு பெறலாம் ராஜம் மாதர் மலர்

23. கனவுக் கையகராதி

"......... The author has taken pains to compaile a dictionaty on dreams and their impact on day today life. A noval experiment. Readers should find te bookh interesting". THE HINDU Dt. 21-2-89

# முன்னுரை

பாற்கடலை ஒரு பூனை நக்கிக் குடித்திட ஆசைப் பட்டதாம். அது போன்று நம்மாழ்வார் அருளிச் செய்த முதல் நூல் என்று கருதப்படும் திருவிருத்தப் பெரும் பாற் கடல் எப்படியிருக்கும் என நக்கிப் பார்த்திட வேண்டும் எனும் பேரவாவால் எழுந்ததே இத் திறனாய்வு.

திறனாய்வு என்றதால் இந்நூலைக் கற்போர் மனத்தில் என்ன மாற்றத்தைச் செய்ய வல்லது என்பதனை அறியப் புகுந்ததே யன்றி, பிற நூல்களைத் திறனாய்வு செய்வதே போன்றதன்று.

இந்நூலின் ஒவ்வொரு பாசுரங்களையும் பயின்று எழுதியபோது எனக்கு மற்ற நூல்களுக்கு உரை எழுதியது போன்ற உணர்வே இருந்தது. ஆனால் அச்சில் ஏற்றி ஒவ்வொரு பாசுரங்களாகப் படிக்கும் பொழுது என்னுள் ஒரு இனம் தெரியாத உணர்வு, என்னையறியாமலே கண்கள் நீரைத் தேக்க, மெய் சிலிர்க்க, ''வீடு'' என்பது இது தானோ! என்ற வியப்பில் ஆழ்த்தியது.

எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா! எனப் புழி, சொல்லில் அடங்காப் பேரின்பத்தை என்ன சொல்லி விரிப்பது? இந்நூலைக் கற்போரே உணர முடியும்.

சென்னை-101
நாள் : 27-8-1997

கோக்கலை ஜேராஜன்

# நம்மாழ்வார் வரலாறு

பன்னிரு ஆழ்வார்களுள் நம்மாழ்வார்! நம்மாழ்வார்! என்று எல்லோராலும் போற்றப் பெறும் நம்மாழ்வார், பிறக்கும் போதே, தான் பிறவிகள் தோறும், பிறவிகள் தோறும் இறந்து, இறந்து பிறக்கும் ஒரு மானிடப்பிறவி அல்ல என்பதை உலகுக்குக் காட்டச் சிறுகுழந்தையாக யிருக்கையிலேயே மற்ற குழந்தைகளுக்கு முற்றிலும் மாறுபட்டு அழுதல் பாலுண்ணல் முதலிய உலகச் செயல்பாடுகள் இல்லாமல், உண்ணாமையால் உடலில் தோன்றும் வாட்டம் எதுவுமின்றி அழகிய குழந்தையாகத் திகழ்ந்தார். எம்பெருமான் திருவருளால் உதித்த குழந்தையாதலின் அந்த வியக்கத் தகு நிலைகண்ட தாய் தந்தையர் எம்பெருமான் மேல் பாரத்தைப் போட்டு, பிறந்த பன்னிரண்டாம் நாளில் அவர்கள் வாழ்ந்து வந்த திருநகரி எனும் திருநகரில் உள்ள திருக்கோயிலுக்கு எடுத்துச் சென்று சேவித்து, அப்பெருமானது திருமுன்பே அந்தத் தெய்வக் குழந்தைக்கு, உலக நடைமுறைக்கு முற்றிலும் மாறாக இருந்தமையால் ''மாறன்'' என்று திருநாமம் சாத்தி, அக்கோயிலின் அருகில் எம்பெருமானுக்குத் தொண்டாற்றிடப் புளியமரமாக வளர்ந்தோங்கி நின்ற திருவனந்தாழ்வான் அடியில் ஆணிப்பொன்னாற் செய்யப்பட்ட வண்ணச் சிறு தொட்டிலில் வளர்த்திப் போற்றி வந்தனர்.

இவ்வாறு எம்பெருமானது அம்சமாகத் தோன்றிய நமது மாறன், முத்துவளம் மிகுதியாகவுடைய செந்தமிழ் நாடென்னும் சிறப்புடையதும் "ஈரொன்பதாம் பாண்டி" என்றுபுகழப்பட்டதும், பதினெட்டுத் திருப்பதிகளையுடையதுமான பாண்டிநாட்டிலே, தாம்ரபர்ணியென்னும் பொருனை யாற்றின் கரையில் திருநகரி எனும் புனித நகரில் தொன்று தொட்டு எம்பெருமானுக்கே சேவை சாத்தி வந்தவரது குலத்தில் தோன்றிய பொற்காரியர் என்பவரது திருக்குமாரரான காரியார்க்கும், மலையமா நாட்டில் திருவண் பரிசாரமென்னும் திருப்பதியிலுள்ள திருவாழ் மார்பனென்னும் பகவத்பக்தரது தநயையான உடைய நங்கையாருக்கும் திருக்குறங்குடியில் எழுந்தருளியுள்ள நம்பி எனும் எம்பெருமான் அருளால், கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றாம் நாளான பிரமாதி ஆண்டு, வைகாசி மாதம், பௌர்ணமி கூடிய வெள்ளிக் கிழமை, கடக இலக்கணத்தில் அவதரித்தார்.

திருக்குறுங்குடி யென்னும் திருப்பதியில் எழுந்தருளிய 'நம்பி' என்னும் திருநாமமுடைய ஈசன் பெருங் கருணை கொண்டு "அடியேங்களுக்கு ஒரு மகப் பேற்றை அளித்தருள வேண்டும்" என்ற விண்ணப்பம் சாத்திய காரியார் தம்பதியருக்கு "நாமே வந்து பிறக்கிறோம்" என்று அருளிச் செய்தமையின் கர்பத்திலிருக்கும் போதே ஞானமுடையவராயிருந்த குழந்தையாதலின், பிறந்தவுடனேயே சடமென்னும் வாயு இவரையும் மற்ற குழந்தைகளைத் தொடுவது போன்று பற்றுதற்கு வர, அப்பொழுது குழந்தை மாறன் அந்த வாயுவை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டி அழித்ததனால் "சடகோபர்" என்ற திருப்பெயரும் பெற்றார்.

சடகோபர் பதினாறு வயதளவும் கண்விழியாமல் வாய்திறவாமல் மௌனமாக எழுந்தருளியிருக்க

உடைய நங்கையாரும், காரியரும் எம்பெருமானுக்கு யாது அபராதம் செய்தோமோ? என்று கலங்கி யிருந்தனர். இவர்கள் இவ்வாறு கலங்கியிருக்கையில்; பரமபதநாதனது ஆணையின்படி சேனைத் தலைவர் தனியாக யாருமறியாமல் எழுந்தருளிச் சடகோப ருக்குத் திருவிலச்சினை செய்து சகல மந்திரங்களையும் உபதேசம் செய்தருளினார்.

இவ்வாறு பதினாறு கலைகளும் நிறைந்த நிலவைப் போன்று பதினாறு பருவம் நிரம்பி உறங்காப்புளி நிழலில் பதுமாசனங்கொண்டு வீற்றிருந்து பரதத்து வத்தைத் தியானித்துத் தியானம் செய்து ஞானமுத்திரை கைகொண்டிருந்த நாளில், மதுரகவி யாழ்வார் இவரது வைபவத்தைக் கேட்டு அங்கு வந்து இவரது திவ்ய ஒளியைக் கண்டு அருகில் சென்று இவருக்கு உணர்ச்சி உளதோ? இலதோ? என்று சோதிக்கும் பொருட்டு அவர் முன்னிலையில் ஒரு சிறுகல்லை எடுத்துப் போட, அந்தக் கல்விழுந்த ஒலி கேட்ட சடகோபர், தனது திருக் கண்களைத் திறந்து பார்த் தருளினார். மீண்டும் மதுரகவியாழ்வார் ''இவருக்கு வாக்கு உண்டோ? இன்றோ? அறிவோம்'' என்று எண்ணி 'அசித்தாகிய சரீரத்திலே அணுவளவினதான ஆத்மா சம்பந்தித்தால், அது எதனை அனுபவித்து எங்கு இருக்கும்?' என்னுங் கருத்தை அமைத்து ''செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்று வினவ, சடகோபரும் அந்தச் சரீரத்தைச் சார்ந்த சுக துக்கங்களை அனுப வித்துக் கொண்டு அதனையே ஆசிரயித்திருக்கும்' என்ற கருத்தை யமைத்து ''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என்று விடை பளிச்சென்று வரக்கண்ட மதுரகவியாழ்வார் மகிழ்ந்து பொங்கும் கைகள் கூப்பி நிலத்தில் விழுந்து சடகோபர் பாதங்களைத் தொழுது வணங்கி ''அடியேனுக்குத் தத்துவஹித புருஷார்த்

தங்களை விளக்கியருள வேண்டும்'' என்று வேண்டினார்.

இவ்வாறிருக்க திருவைகுண்ட நாதன் சடகோபரது ஞானக்கண்ணுக்கு சேவை சாதிக்கத் திருவுள்ளம் கொண்டு பிராட்டியுடன் கருடவாகனராய் எழுந்தருளி எதிர்வந்து நிற்க அம்முகில் வண்ணனது திருமேனியழகைச் சேவித்து ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினார். எம்பெருமானைக் கண்டுகளித்ததால் அவனது திவ்விய குணங்களை அனுபவித்தது ''யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்'' என்ற பேரவாக் கொண்டு பிரபந்தங்களாக வெளியிடக் கருதி நான்கு வேதங்களுள், இருக்கு, யஜுஸ், அதர்வணம் என்ற மூன்று வேதங்களின் சாரத்தைத் ''திருவிருத்தம்'' ''திருவாசிரியம் 'பெரிய திருவந்தாதி' என்ற மூன்று பிரபந்தங்களின் மூலமாக வெளியிட்டு, வேதங்களுள் சிறந்ததும், பகவானது சொரூபமாகவே யுள்ளதுமான சாம வேதத்தின் தத்துவப் பொருளைச் சாமப் பிரபந்தமான ''திருவாய்மொழி'' பாடியருளி அவற்றை மதுர கவிகளுக்கு உபதேசித்தருளினார். இவர் மற்றைய ஆழ்வார்களனைவரினும் உயர்வுற்றதனால் நம் பெருமாளால் ''நம்மாழ்வார்'' என்ற சிறப்புப் பெயரும் பெற்றனர்-

தம்பக்கல் திருவுள்ளம் உவந்து பொலிந்து நின்ற பிரான் பிரசாதித்தருளிய மகிழமலர் மாலையை அணிந்ததனால் ''வகுளாபாணர்'' என்றும், பிற சமயங்களாகிய யானைகளைத் தமது பிரபந்தங்களிற் கூறிய தத்துவங்களால் அவற்றின் செருக்கை அடக்கியமையால் 'பராங்குசர்'' என்னும் திருப் பெயரும் பெற்றனர்.

இவர் மற்றையாழ்வார்கள் போலல்லாமல் எம்பிரானருளால் தத்துவஞானம் முதலியன தோன்றப் பெற்றுத் திருத்துழாய் பரிமளத்தோடே அவதரிக்கும்

பொழுதே இயற்கையில் ஞானபக்திகளையுடையவராய் அந்நிலை என்றும் மாறாதிருந்ததனால் மற்ற யாழ்வார் களுக்குத் தலைவராகவும், இவரை அவயவியாகவும், மற்றையாழ்வர்களை இவருக்கு அவயவமாகவும் உருவகப்படுத்தி, பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரி யாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத் தாகவும், குலசேகரராழ்வாரையும் திருப்பாணாழ்வாரை யும் கைகளாகவும், தொண்டரடிப் பொடியாழ்வாரை மார்பாகவும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரைப் பாதமாகவும் உரைப்பது மரபு.

நாலாயிர திவ்விய ப்ரபந்தத்தில் உள்ள மொத்தம் 3776 பாசுரங்களில், நம்மாழ்வார் மட்டும் மிகவும் அதிகப்படியான 1296 பாசுரங்களை பாடியருளினார் என்பதும் இவருக்குள்ளதோர் சிறப்பு.

இவ்வாறு ஒப்புயர்வற்ற நம்மாழ்வார் எம்பெருமா னது திருப்பாதங்களுக்கு அந்தரங்கமாக இருந்ததனால் பெருமானது பாதுகை ''ஸ்ரீ சடகோபர்'' என்று இவரது திருநாமத்தால் வழங்கப்படுகிறது என்பது இவருக்குக் கிடைத்த பெருஞ்சிறப்பு.

''மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே!
வேதத்தைச் செந்தமிழால் விரிந்துரைத்தான் வாழியே!
ஆதிகுருவாய் அம்புவியி லவதரித்தான் வாழியே;
அனவரதம் சேனையர்கோ னடிதொழுவோன் வாழியே!
நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே!
நன்மதுரசுவிவணங்கும் நாவீறன் வாழியே!
மாதவன்பொற்பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே!
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே!''

  

# திருவிருத்தம்

## தனியன்

ஒரு நூலுக்கு முகவுரையாய் அமைவது பாயிரம். இது நூலிறுட் சேராமல் தனித்து நிற்பதாதலின் வைணவ ஆச்சாரியர்கள் தாம் செய்த நூல்களுக்கு எழுதப்பட்ட முகவுரை அல்லது பாயிரத்துக்குத் தனித் தமிழால் காரணப் பெயர் கொடுத்துத் "தனியன்" என்றே சிறப்பித்தனர். நூலின் உயர்வு கருதி "அன்" ஆண்பால் விகுதி கொடுத்துத் "தனியன்" என்ற சொல்லை அமைத்திருத்தல் வைணவப் பெரியார்கள் தனித்தமிழைப் போற்றிச் சிறப்பித்தனர் என்பது தெளிவாம். "நாலடியார்" என்றதில் "ஆர்" விகுதி பெற்றிருத்தலை இங்கு நினைவு கொள்க.

### கட்டளைக் கலித்துறை
### கிடாம்பியாச்சான் அருளியது

**கருவிருத்தக்குழி நீத்தபின் காமக்கடுங்குழி வீழ்ந்**
**தொரு விருத்தம்புக்குழலுறு வீருயிரின் பொருளகட்**
**கொருவிருத்தம் புகுதாமற் குருகையர் கோனுரைத்த**
**திருவிருத்தத் தோரடி கற்றிரீர் திருநாட்டகத்தே**

விளக்கவுரை : மக்களே! கருப்பமாகிற வட்டமான குழியினை விட்டு உலகில் பிறந்த பின்பு காமம் எனும் கொடிய குழியில் விழுந்து மீளா முதுமை யடைந்து உழலுவீர்கள். நீங்கள் இந்த உங்கள் பிறவிப் பெரும் பயனை அடைவதற்கு ஒரு இடையூறும் நேரிடாமலிருக்க, குருகையூரின் தலைவரான நம்மாழ் வார் உரைத்த திருவிருத்தம் எனும் திவ்யப் பிரபந்தத் தில் ஒரு அடியாயினும் கற்று பரமபதத்தில் நித்திய சூரிகளாக இருப்பீர்.

திறனாய்வு : எதுகையை முன்னிட்டு 'விருத்தம்' என்ற சொல் நான்கு அடிகளிலும் வெவ்வேறு பொருளில் வருவது காண்க. முதலில் வரும் "கரு விருத்தம்" என்றது தாய்வயிற்றுக் கருவட்டத்தைக் குறிப்பது. யோனி வட்டமாகும். இதனைக் "கரு இருத்த" எனப் பிரித்துப் பொருள் காணினும் அமையும் கருவில் அழுத்தி என்பதாம். "ஊழ்வினைப் பயனாய்த் தோன்றும் பிறவிகளில் அழுத்தி என்பதாம். அடுத்து வரும் "ஒரு விருத்தம்" என்பது பிறந்தபின் நிகழும் துன்பச் சூழல்; அதையடுத்து வரும் மீளா முதுமையைக் குறிப்பதாகும். "இங்கு "ஒரு விருத்தம்" என்றதால் ஒப்பற்ற இழிநிலை அல்லது மீளா முதுமை என்பதாம். அடுத்து வரும் "ஒரு விருத்தம்" என்றது யாதொரு இடையூறும் நிகழாதபடி என்பதாம். கடைசியாக வரும் "திருவிருத்தம்" இந்நூலைக் குறிப்பதாகும்.

"கருவிருத்தக் குழி நீத்தபின்" என்றது கருக்குழி யில் அடங்கியிருந்து பிறப்பெய்திய பின்பு என்பதாம். கருவித்தம் என்பது கருவட்டம், யோனிவட்டம் என்ப தாம். யோனிவட்டக் குழியிலிருந்து வெளியே வந்த பின்பு. "காமக் கடுங்குழியில் வீழ்ந்து" என்கிறார். காமக் குழி யோனிவட்டத் குழியினும் மிகக் கொடியது என்ப தாகக் "காமக் கடுங்குழி" என்றனர். "வீழ்ந்து" என்றத னால் அதனின்றும் மீளா நிலைமையை உணர்த்துகிறது. கருக்குழிநீத்து காமக்குழி விழுந்து என்பது காண்க. "காமம்" என்பது இங்கு உலக இன்பங்களைக் குறிப்ப தாகும். ஐம்புலன்களாலும் நுகர்ந்து அனுபவிக்கத்தக்க இன்பம் என்பதறிக. புலன்களில் ஈற்றலால் விழுந்து எனினுமாம். அவ்வாறு காமக் குழியில் விழுந்த நிலை யினை "ஒருவிருத்தம் புக்கு" என்கிறார். "விருத்தம்" என்பது இங்கு உடல் உணர்வுகளால் அடைந்த இன்பம் தரும் நிலை; இவை உடற்பிணி, மனப்பிணி மூப்பு ஆகியவைகளாம், இவற்றை இழிநிலைகள் என்பர், இவ்

வாறு பிணிகளின் வாய்ப்பட்டு உழலுவீர்'' என்கிறார். ''உழலுதல்'' என்பது துன்புறுதல். இவ்வாறு துன்புறுத லால் யாதுபயன்? இப்பிறவியின் பெரும்பயனை அடை தல் வேண்டாமா? இப்பிறவியின் பயனை அடைதல் பொருட்டு என்பதனை ''உயிரின் பொருள்கண்'' என்கிறார், கருக்குழியினின்றும் உயிர்பெற்று உலகில் தோன்றியதன் பொருள்தனை அடைதற்கு என்பதாம். அப்பொருள்தனை அடைதற்கு இடையூறு எதுவும் நேர்ந்திடாதிருக்க ஒருவிருத்தம் புகுதாமல்'' என்கிறார். இடையூறு எதுவும் நேர்ந்திடா வண்ணம் என்பதாம். அவ்வாறு இடையூறு எதுவும் நேர்ந்திடாதிருக்க, ''குருகையர்கோன் உரைத்த திருவிருத்தத்து ஓர் அடிகற்று'' என்கிறார். ''குருகையர்கோன்'' என்றது திருக்குருகையில் அவதரித்த திருக்குருகையருக்குத் தலைவனான நம்மாழ்வார் என்பதாம். அவர் திருவாய் மலர்ந்தருளிய திருவிருத்தம் நூறு பாசுரங்களில் ''ஓர் அடிகற்று'' என்றது ஓர் அடியையாயினும் கற்றறிவீ ராகில் என்பதாம். அவ்வாறு ஒரு அடியையானும் கற்றீராகில் ''திருநாட்டகத்தே இரீர்'' என்கிறார். திருநாடு என்பது பரமபதம் ''இரீர்'' என்றது நித்திய சூரிகளாக விளங்குவீர் என்பதாம். இப்பாசுரம் உலகில் தோன்றிய மக்களுக்குச் செய்யப்பட்ட ஒரு விண்ணப்ப மாதலின்; மக்களே! என்பதனைச் சேர்த்துப் பொருள் காண்க.

இத்தனியனைக் கிடாம்பியாச்சான் பாடியருளினார் என்று கூறினும் இதனைச் சீராமப் பிள்ளை அருளினார் எனவும் ஆளவந்தார் பாடியருளினார் எனவும் கூறுவர்.

★ ★ ★

# நம்மாழ்வார் அருளிய

# திருவிருத்தம்

## ஒரு திறனாய்வு

நான்மறையில் முதலாவதாக வைத்து எண்ணப் படும் இருக்கு வேதம் எனும் கனியைச் சாறாகப் பிழிந்து "திருவிருத்தம்" எனும் பிரபந்தத்தைத் தந்தருளிய நம்மாழ்வார் நூறு பாசுரங்களில் முதற் பாசுரத்தை எம்பெருமானுக்கு ஓர் விண்ணப்பமாகச் சமர்ப்பிக் கிறார்.

### இமையோர் தலைவனுக்கு விண்ணப்பம்

பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு
மிந்நின்ற நீர்மை யினி யாமுறாமையு யிரளிப்பா
னெந்நின்றயோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளா யடியேன் செய்யும் விண்ணப்பமே. 1

விளக்கவுரை : இமையோர் தலைவா! எல்லா உயிர் களையும் பாதுகாத்தருளும் பொருட்டுப் பலவகையான

பிறப்புகளையுடையனவாய்த்திருஅவதாரம்செய்தனை. பொய்மை நிலைபெற்ற அறிவும் பொல்லா ஒழுக்கமும் அழுக்கடைந்த உடலும் ஆகிய இவை ஒன்று சேர்ந்து நிலைபெற்ற இயல்பை பிறவித் துன்பத்தை இனியும் நாங்கள் அடையாதபடி அடியேன் செய்யும் உண்மையான விண்ணப்பத்தைக் கேட்டருள்வாய்.

**திறனாய்வு :** இமையோர்க்கிறைவனான எம்பிரானை "உயிர் அளிப்பான். எந்நின்றயோனியும் ஆய்பிறந்தாய்" என விளிக்கிறார். எம்பெருமான் எடுத்தபத்து அவதாரங்களும் மானிடர்க்கு "உயிர் அளிப்பான்" வேண்டி என்பதறிக. எம்பெருமான் அந்த அந்த காலகட்டத்தில் திருஅவதாரம் செய்திடாவிடில் உயிர்கள் யாவும் அழிந்து போயிருக்குமாதலின் "உயிர்அளிப்பான்" என்றனர் என்க. அழியும் உயிர்கட்கு உயிர் மீண்டும் கொடுக்கவே திருஅவதாரம் செய்தான் என்றபடி. "எந்நின்ற யோனியும்" என்றது திருமாலின் பத்து அவதாரங்களைக் குறிப்பது. "எந்நின்ற" என்றதை "எநின்ற" எனப் பிரித்துக் காண்க. எண்ணற்ற அவதாரங்கள் என்பதாம். யுகம் யுகமாய் எம்பெருமான் அவதரித்துத் தீயவை அழித்து நல்லவை காத்தருளினான் என்றபடி.

"யோனியும் ஆய்" என்றது மற்ற உயிரினங்கள் போன்று யோனியிலிருந்து வெளிப்பட்டுத் தோன்றி என்பதாம். இதனை எல்லா உயிர்கட்கும், பிறப்புகட்கும் ஆதாரமாய் என்றபடியுமாம், எம்பெருமானே எல்லா உயிர்களுமாய் எல்லா உயிர்கட்கும் ஆதாரமாய் நீக்கமற நிலைத்து நிற்பவன். எங்கும் எல்லாமாயிருப்பவன் என்பதனை.

"தீயுனுட் டெறனீபூவினு ணாற்ற நீ
கல்லினுண் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ

யறத்தினு ளன்புநீ மறத்தினுண் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுட ரொளியுநீ திங்களு ளளியுநீ
யுனைத்துநீ யனைத்தினுட் பொருளுநீ யாதலி
னுறைவு முறைவது மிலையே யுண்மையு
மறவியில் சிறப்பின் மாயமா ரனையை
முதன்முறையிடைமுறை கடைமுறை தொழிலிற்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே''

என்று பாடுவர் கடுவனிளவெயினனார் எனும் புலவர். பரிபாடல் மூன்றாம் பாடல்—திருமால். இப்பகுதிக்கான விளக்கவுரையை அடியனேன் ''இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து'' பக்கம் 44-52 காண்டு தெளிக.

''பிறந்தாய்'' என்றது அவதரித்தாய் என்பதாம். 'பிறந்தாய்' என்றது எம்பெருமானின் பத்து அவதாரங் களையும் இனி எடுக்க இருக்கும் கல்கி அவதாரத்தை யும் குறிப்பதாகும். எம்பெருமானின் பத்து அவதாரங் களாவன. 'இராமர், கிருட்டிணன், பரசுராமன், பலபத்திரன், குதிரை, கூர்மம், நரசிம்மம், மச்சம், வராகம், வாமனம், ஆகிய பத்துமாம். இவ்வாறு பத்து அவதாரச் சிறப்புடைய எம்பெருமானை ''இமையோர்'' தலைவா!'' என விளித்திருத்தல் காண்க.

''அமைவுடை அமரரும் யாவையும் யாரும் தானம்
அமைவுடை நாரணன் மாயையை அறிபவர் யாரே?

என்றனர் நம்மாழ்வார். திருவாய்மொழி 1-3-3

''அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன்''

என்று திருவாய்மொழி முதற்பாசுரத்திலேயே வருவதும் காண்க. ''இமையோர்'' என்றது அமரர். அமரர்கள் பரமபதத்திற் பொருந்திய நித்திய முக்தர்களைக் குறிக்கும்.

"இமையோர் தோத்தும் எறிகடல் வரைப்பினும்"

என்றனர் தொல்காப்பியரும். பொருளியல் 52. இமை யோர் என்றதற்கு அகநோக்காகிய ஞானக்கண் குவியா தவர் என்பதாகவும் பொருள் கொள்வர். இமையோர் தலைவன் என்றதால் அமரர்கட்கு மட்டும் தலைவ னெற்றாகிவிடுமாதலின் இம்மையோர் எனினுமாம். இம்மெய்யோர் என்று இவ்வுலகத்தரையும் குறிப்ப தாகும். நம்மாழ்வாரும்;

"திடவிசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவையவை தோறும்
உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கு பரந்துளன்"

என்றனர். திருவாய்மொழி 1-1-7 "இமையோர் தலைவா" என்றது. பிரமன், சிவன் முதலான தேவர் கட்கு இறைவன் என்பதாம். "பொய் நின்ற ஞானமும்" என்றது பொய்மையையே கொண்ட அறிவு. விபரீத உணர்வால் எழுந்த அறிவு. தத்துவ ஞானத்துக்கு மாறுதலையான விபரீத ஞானம். மறுபிறப்பும் இரு வினைப் பயனும் கடவுளும் இல்லை யெனவும் மற்றும் இத்தன்மையது சொல்லும் மயக்க நூல் வழக்குகளை மெய்யென மயங்குதல், ஒருதலையாய உணர்வு. ஐய மயக்கம். கடவுளும் உளரோ! இலையோவென ஒன்றில் துணிவு பெறாது நிற்றல். கயிற்றைப் பாம்பென அறிதல் போல்வன,

"பொருளல் லவற்றைப் பொருளென் றுனரும்
மருளானாம்......"

என்றனர் வள்ளுவரும். (குறள் 351) முதலில் கூறிய பொருள் பொய் நூற்பொருளை. பிந்தையது மெய்நூற் பொருள்.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்று அறிவுக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர் வாக்கும் (குறள் 355) ''பொய்நின்ற ஞானம்'' என்ன என்பதை உணர்த்துவதும் காண்க. 'பொய் நின்ற' என்றதைப் பொய்யிலே நின்ற என்றும் பொய்யாய் நின்ற எனவும் விரிக்கலாம். ''பொல்லா ஒழுக்கு'' என்றது மனம் போன போக்கில் ஒழுகும் ஒழுக்கம். அறிவுக்கு ஏற்றபடி நடத்தை அமையுமாதலின் பொய்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் என்று ஒழுக்கத்தைப் பின் வைத் தார். அறிவே பொய்யறிவானால் அவன் வாழ்க்கையும் பொய் வாழ்க்கையாய் அமைந்துவிடும். அதுவே பொல்லா வொழுக்கமாகிவிடும். பொல்லா ஒழுங்கை யடுத்து அழுக்குடம்பை வைத்திருத்தல் உடம்பும் தூய்மையற்றதாய் விடும் என்பதாம், மனத்தான் அமைந்ததே மக்கள் யாக்கை! இதனை

''வினையின் வந்தது வினைக்குவிளை வயது
புனைவன நீங்கிற் புவால்புறத் திடுவது
மூப்புவிளி வுடையது தீப்பிணி இருக்கை
பற்றின் பற்றிடங் குற்றக் கொள்கலம்
புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை
அவலக் கலலை கையா றழுங்கல்
தவலா உள்ளந் தன்பாலுடையது
மக்கள் யாக்கை இது.........''

என்று மணிமேகலை பனிக்கறை புக்காதை 111-120. சீத்தலைச் சாத்தனாரின் சொற்கள் யாக்கை வினையின் காரியமாயும், வினைக்குக் காரணமாயும் உள்ளதென்ற படி. ''இந்நின்ற நீர்மை'' என்றது இத்தன்மையாய் நிலைத்துவிட்ட இயல்பை என்றபடி. இவ்வாறு நிற்றல் இயற்கை எனக் குறித்துக் காட்டி அதன் இழிவை உணர்த்தி அதன் ஒழிவை வேண்டியபடி. ''நின்ற'' என்றது நெடு நெடுங்காலமாய் நிலைத்து நின்ற என்ப தாம். ''இனியாம் உறாமை'' உன்னையாம் அடைந்து

பின்பும் அடையாமை. அதாவது பிறப்பற்று பரமபதம் பெறுமாறு என்றபடி. பரமபதத்தையடைந்து மற்றொரு பிறப்பு எடுத்தல் இல்லையென்க. உறாமை கேட்டரு ளாய் எனவும் அமையும். "அடியேன் செய்யும் மெய் விண்ணப்பம்" என்றது அடியவனாகிய நான் சொல் லும் உண்மையான விண்ணப்பம் என்றபடி. "மெய் விண்ணப்பம்" என்று விண்ணப்பத்திற்கு அடை கொடுத்துப் பொருள் கண்டிருத்தல் நோக்குக. "மெய்ந்நின்று" என இசைத்துத் திருமேனி காட்டி யருளி எனவும் பொருள் கொள்க. என் விண்ணப் பத்தை உண்மையாய், நிலையாய் நின்று கேட்டருள்க. "கேட்கைதானே அருளென்று கருத்து" என்றனர் பிறரும். "அடியேன் செய்யும் மெய்விண்ணப்பம் நின்று கேட்டருளாய்" என்றும், "மெய்ந்நின்று கேட்டரு ளாய் அடியேன் செய்யும் விண்ணப்பம்" என்றனர்.

அரும்பதவுரை : பொய்நின்றஞானம் - பொய்மையை மெய்யென அறிந்த அறிவு. இந்நின்ற - இவ்வாறு நிலைபெற்ற. நீர்மை - இயல்பு. இயற்கை நிலை. பொய்மையால் ஏற்பட்டு நின்ற நிலை. உறாமை - அடையாமை. உயிரளிப்பான் - எல்லா உயிர் களையும் காத்து ரட்சிப்பான். எந்நின்ற - எ நின்ற, பலவகையாய் நின்ற. யோனி - பிறப்புறுப்பு. இமை யோர் - கண் இமையாத அமரர். மெய்ந்நின்று - உண்மையாக நின்று. மெய்விண்ணப்பம் என்றும் சேர்த்துக் கொள்க. ஏ - அசையெனத் தள்ளினும் தள்ளும்.

**(தலைவி வேறுபாடுகண்ட தோழி வியந்துரைத்தல்)**

**செழுநீர்த்தடத்துக் கயன் மிளிர்ந்தா லொப்பச் சேயரிக்க**

**ணழுநீர்துளும் பவலமருகின்றன வாழியரோ**

**முழுநீர்முகில் வண்ணன் கண்ணன் விண்ணாட்டவர்
மூதுவராந்
தொழுநீரிணையடிக்கேயன்பு சூட்டிய
சூழ்குழற்கே. 2**

விளக்கவுரை : நீரைத்தாங்கிய காளமேகம் போன்ற நிறத்தையுடையவனான கண்ணபிரானது யாவருக்கும் முற்பட்டவரான பரமபதத்து நித்ய சூரிகள் வணங்கும் சிறப்பினையுடைய இரு திருவடிகளில் தனது அன்பைச் செலுத்தின அடர்ந்த கூந்தலையுடைய இந்தத் தலைமகளுக்கு, நீர் நிறைந்த தடாகத்தில் கயல் மீன் பிறழ்வது போன்று சிவந்த இரேகைகளையுடைய கண்கள் தலைமகனது பிரிவைத் தாங்காமையால் தலைவன், தலைவி எனும் அன்பு நிலை நிலைத்திருக்கக் கண்களிலிருந்து கண்ணீர் ததும்பத் தடுமாறுகின்றன.

திறனாய்வு : நம்மாழ்வார் பெரிய பிராட்டியாகத் தன்னைப் பாவித்துப் பாடிய பாசுரங்களே இத்திவ்ய பிரபந்தத்தில் ஆழ்வார் அருளிச் செய்தவை. தலைவனைப் புணர்ந்து கிடந்த தலைமகள் அவன் பிரிவை ஆற்றாதலான தலைவியினுடைய மன நிலையையும், தோற்றமும் கண்டு தோழி தலைவன் பாற் தலைவி கொண்டுள்ள காதல் முயக்கத்தை வியந்து கூறுவதாய் அமைந்த பாசுரம். எம்பெருமான் அன்பில் ஆழ்ந்து மூழ்கிய ஆழ்வார்கள் அவன் கடைக்கண் பார்வைபட்டு அதில் மயங்கித் தவிக்கும் நிலையையே தலைவன் பாற் தலைவி கொண்ட மயக்கமாக ஆழ்வார் சித்தரித்துக் காண்பிக்கிறார். எம்பெருமானை இந்த உளக்கண்களால் கண்ட பின்பு அதினின்றும் விடுபடாதவர்களாகி, அவனை நேரடியாக நோக்கவும் திறனற்றவர்களாய்த் தவிக்கும் தவிப்பு, அச்சம், உள்ளத் துடிப்பு, படபடப்பு, இதனை எப்படிச் சொல்வது?

''கண்ணொடு கண்ணினை கவ்வியொன்றை யொன்
றுண்ணவு நிலை பெறாதுணர்வு மொன்றிட''

என்ற கம்பன் மிதிலைக் காட்சி 35 போன்ற நிலையில் எம்பெருமானைக் காணக் கொடுத்துவைத்த அந்த ஆன்மாவுக்கே புரியும். அயலாருக்கு இது பருவமடையாப் பாவை போன்றதோர் உணர்வாகும். எம்பெருமான் பாத அடிகளில் தன் கண்களைப் பொதிந்த ஆழ்வார் கண்கள் நீர் துளும்பி அது வழிந்தோடி விடாதபடி அடக்கிக் கொண்டு தவிக்கும் நிலையை இப்பாசுரத்தில் சித்தரிக்கப்படுகிறது. இதனால் நம்மாழ்வார் எம்பெருமான் கண்ணனை ஞானக்கண்ணால் கண்டு மயங்கி மகிழ்ந்தார் என்று கூறுவதினும் இந்த ஊனக் கண்ணால் கண்டு களித்தார் என்பதாம் அந்த எல்லையற்ற பேரழகை இக்கண்கள் கண்டு களித்தாலொழிய கண்களில் நீர்த்ததும்பியிருக்காது. இதனை அனுபவித்தோரே உணர முடியும். உருவெளித்தோற்றமாய் அகக் கடவுள் தோன்றும் பொழுது என்னே இன்பம்! என்னே இன்பம்! அச்சம், மெய்சிலிர்ப்பு, குதூகலம் ஒருங்கே எழுந்து, அந்த ஒரு நொடிப் பொழுது ஒரு யுகமாய்த் தோன்றும். அந்த உணர்வையே ஆழ்வார் இங்கு படம் பிடித்துக்காட்டுகிறார்.

''முழுநீர் முகில் வண்ணன் கண்ணன்'' என்று கண்ணனுக்கு அடைமொழி கொடுத்து அருளியிருப்பது சிறப்பு. முகில் முழுமையான கருமை நிறமுடையதன்று. அது மழை மொழியும் நேரத்தில் அதன் கருமை மிகுதியாக இருக்கும். இதனையே ''முழுநீர் முகில் வண்ணன்'' என்றனர். 'கண்ணன்' 'க்ருஷ்ணன்' என்ற வடசொல்லின் சிதைவு. கருநிறமுடையவன் என்பது பொருள்.

"கண்ணனென்னும் கருந்தெய்வம்"

என்றனர் நாச்சியாரும், "க்ருஷ்ணன்" என்ற சொல்லுக்கு யாவர் மனத்தையும் கவர்பவன் எனும் பொருளும் உண்டு. "முதுவர்ஆம் விண்நாட்டவர் தொழுநீர் இணை அடிக்கே" என்றதில் "முதுவர்" என்றது யாவருக்கும் முற்பட்டவரான பரமபதத்தில் நித்ய சூரிகள் வணங்கும், அதாவது விண்நாட்டவர் வணங்கும் இணை அடிகள் என்பதாம்.

"விண்நாட்டவர்" என்றது பரமபதத்தவர் வணங்கும் இரு திருவடிகள். "இணையடி" என்றது இருகமலபாதங்கள் "இணையடிக்கே அன்பு சூட்டிய சூழ் குழற்கே" என்றதில் முதல் ஏகாரம் தேற்றம். இரண்டவது அசை. அன்பு சூட்டிய" என்பது அன்பு செலுத்திய என்பதாம். அன்பு சூட்டுதல் மண மகனுக்கு மாலை சூட்டுதல் போன்றது. இது சாதாரண அன்புக்கும் மிக்கது என்பதுணர்க. "சூழ்குழல்" என்றது மிகுந்த கூந்தல். முழுமையாகச் சூழ்ந்த கூந்தல். "குழற்கு" என்றது தலை மகட்கு என்பதாம். இங்கு ஆழ்வார் எம்பெருமானை அடைந்திட வேண்டும் எனும் அவாவில் ஆண் பெண்ணாம் நிலை தோன்றி பிராட்டி நிலையடைந்தார் என்பதாம், பரமாத்மாவான எம்பெருமான் தலைமை நிலையும் சீவாத்மா பரமாத்வாவுக்கே உரியதாயிருக்கையில் அவனையே கரணங்கள் யாவற்றிலும் அனுபவித்து இன்புறுதலும் அவன் பிரிந்த காலத்து துன்புறுதலும் அடைந்தவராய்த் தம்மைப் பிராட்டியாகப் பாவித்தார் என்பதாம். "செழுநீர் தடத்து கயல் மிளிர்ந்தால் ஒப்பச் சேய் அரிகண்" என்று எம்பெருமானுக்கே அடிமை செய்து இன்புற்ற நினைவால் எழும் உள்ளக் கிளர்ச்சியை, செழுமையான நீர் நிறைந்த தடாகத்தில்

மீன்கள் பிறழுவது போல, "அழுநீர் துளும்ப அலமரு கின்றனை வாழி" என்றனர். இங்கு "அழுநீர்" செழுநீர்த் தடாகத்து நீருக்கு ஒப்பிடப்பட்டுள்ளது காண்க. அவளின் விழிகள் தடாகத்தில் உள்ள கயல் மீன் களுக்கு ஒப்பிடப்பட்டுள்ளதும் காண்க. "கயல் மிளிர்ந்தாலொப்ப" என்றது, கயல் மீன்கள் பிறழ்வது போன்று என்பதாம். கயல் மீன்களின் செதில்கள் சூரிய ஒளியில் அவை பிறழும் போது ஒளிருமாதலின் "மிளிர்ந்த" என்றனர். "சேயரிக்கண்" என்றது சேய் அரிகண், அதாவது சிவந்த, அரிவரிகளையுடைய கண் என்றபடி. "அழுநீர் துளும்ப" என்பது அழும் பொழுது பொங்கும் கண்ணீர் மல்க என்பதாம். கண்ணீர் வெளிவராது அப்படியே தேங்கி நிற்கும் நிலை இது ஆற்றாமையின் எல்லையில் நிகழ்வது. "அலமருகி கின்றனை" என்றது தத்தளிக்கின்றனை என்பதாம். "வாழி" என்றது இந்த இன்ப உணர்வுகள் நீடூழி வாழி எம்பெருமானை மனத்துள் நினைந்து நினைந்து பொங்கியெழும் உணர்வுகள் வாழி என்பதாம். அரோ ஈற்றிசையாகத் தள்ளுக.

இப்பாசுரத்தில் நம்மாழ்வார் பிராட்டித் தன்மை யடைந்ததைக் காண்கிறோம். திருமங்கையாழ்வாரும் பிராட்டியாகச் சிறிய திருமடலில்,

"காரார்குழலெடுத்துக்கட்டிக்—கதிர் முலையை
வாரார வீக்கி மணிமேகலை திருத்தி
ஆரா ரயில் வேற்கண் அஞ்சனத்தின் நீறணிந்து"

என்று எம்பெருமானுக்கு முன் தான் பெண்மைத் தன்மையடைந்ததை சிறப்பிப்பார். அடியனேன் உரைநூல் பக்கம் 9 காண்க.

"இருமலைபோலெ திர்ந்தமல்லர் இருவரங்கம்
எரிசெய்தாய் உன்
திருமலிந்து திகழ் மார்வு தேக்க வந்து
என்னல்குலேறி
ஒருமுலையை வாய்மடுத்து ஒருமுலையை
நெருடிக்கொண்டு
இருமுலையும் முறைமுறையா ஏங்கியேங்கி
இருந்துணாயே."

ன்று தாயாக முலையுண்ண கண்ணனை அழைப்பது
ட்டர் பிரான். விட்டுச்சித்தன், பெரியாழ்வார்
ிருமொழி 2-8.

அரும்பதவுரை: செழுநீர் - செழுமையான நீர்.
ிகுந்தநீர். கயல் மிளிர்ந்த - கயல்பிறழ்ந்த, மிளிர்தல்,
ின்னுதல். சேயரிக் கண் - சேய் அரி கண். சிவந்த
ரிகளையுடைய கண். துளும்ப - ததும்ப. அலமருகின்
ன - தத்தளிக்கின்றன. முழு நீர்முகில் - மழை பொழிய
ரைத்தன்னகத்தே மிகுதியாகக் கொண்ட கார்மேகம்.
கில் - மேகம். விண்ணாட்டவர் - பரமபதத்தவர்
துவர் - முற்பட்ட, முன்னோர். தொழுநீர் இணை
அடி - தொழும், வணங்கும் தன்மையதான இரு
அடிகள். நீர் - ஒன்றோடு ஒன்று ஒத்த. அன்பு
ட்டிய - அன்பு எனும் மாலை சூட்டிய. சூழ்குழல் -
ிகுந்த கூந்தல். நெருங்கிய கூந்தல். அடர்ந்த முழுமை
ாகச் சூழ்ந்த கூந்தல்.

(பிரிவாற்றாத தலைவி நெஞ்சழிந்து உரைத்தல்)

தழற்கோவலர் மடப்பாவையுமண் மகளுந்திருவு
நிழற்போல் வனர்கண்டு நிற் குங்கொான் மீளுவ்
கொறண்ணந்துழா

யழற்போலடுஞ்சக்கரத் தண்ணல் விண்ணோர்
தொழுக்கடவுந்
தழற்போற் சினத்தவப் புள்ளின்பின் போனதனி
நெஞ்சமே 3

விளக்கவுரை : குளிர்ந்ததும் அழகியதுமான திருத் துழாயையும், கொடியவர்களைத் தீயெனச் சுட்டு அழிக்கும் சக்கரப் படையையுமுடைய எம் அண்ணல், விண்ணோர் தொழும்படி ஏறி அமர்ந்து நடத்துகின்ற பகைவருக்கு நெருப்புப் போன்ற கடுங் கோபத்தை யுடைய அந்தக் கருடாழ்வான் பின்னே சென்ற தனிப் பட்ட எனது மனம் வேய்ங்குழலுடைய கோவலரது மடப்பாவை நப்பின்னையும், மண் மகளும் பெரிய பிராட்டியும் எம்பெருமானுக்கு நிழல்போல் சேவித் திருக்க அவர்களைக்கண்டு என்மனமானது அங்கேயே நிற்குமோ? மீண்டுவருமோ?

திறனாய்வு : திருமங்கையாழ்வார் பிராட்டிப் பேறு பெற்றவராய் எம்பெருமானைச் சேர்ந்திடத் துடிக்கிறார். திருநறையூரில் மலை போன்ற எம்பிரான் சந்நதியின் கதவை மெல்லத் திறந்து நோக்குகிறார். எம்பிரானு டைய பிராட்டியர் தங்கும் திருமார்பும், புன்னகையும் திருவடிகளும், திருவரைநாணும், தோளணியும் குண்டலமும் முத்தாரமும் காண்கிறார். ஆனால் எம்பெருமான் அருகில் மின்னற் கொடிபோல் பெரிய பிராட்டி அமர்ந்திருப்பதைக் காணாதவராய் எம்பிரானையே கண்டுகளித்து நிற்கிறார். இதனை;

''இன்னிள வஞ்சிக்கொடியொன்று நின்றதுதான்
அன்னமாய் மானா யணிமயிலா யாங்கிடையே
மின்னா யிளவே யிரண்டா யிணைச் செப்பாய்
முன்னாய தொண்டையாய்க் கெண்டைக்
குலமிரண்டாய்

அன்ன திருவுருவம் நின்ற தறியாதே
என்னுடைய நெஞ்சு மறிவு மினவளையும்
பொன்னியலும் மேகலையு மாங்கொழிய—''

என்பர். பெரிய திருமடல் அடியனேன் உரை நூல்பக்கம் 113 கண்டு தெளிக. நம்மாழ்வாரும் இதே நிலையை இப்பாசுரத்தில் கண்ணனைக் கண்ட கண்கள் நிற்குமோ மீளுமோ என்று ஐயுற்றவராய் அருளுகிறார்.

''தண் அம்துழாய் அழல்போல் அடும் சக்கரத்து அண்ணல்'' என்று தன் தலைவனை அறிமுகப்படுத்துகிறார். குளிர்ந்த அழகிய துழாய் மாலை அணிந்தவன். தீயவரைத் தீயெனச் சுடும் அழிக்கும் சக்ராயுதமுடைய அண்ணல் என்பதாம். வெப்பமின்றித் தணிந்து இருப்பதால் ''தண்'' என்றானது. 'தண் நீர்' வெப்பமின்றித் தணிந்த நீர் எனப்புழி. ''அம்துழாய்'' என்றது அழகிய துழாய் மாலை, துளசி மாலை. ''அழல் போல் அடும் சக்கரத்து'' என்றதால் கண்ணன் கையில் ஏந்திய சக்கரம் தீ போல் பொசுக்கிவிடும் என்பதாம். தீ எதை புமழித்துவிடும். கண்ணன்கைச் சக்கரம் தீயவரையே தீயென அடும் என்பதாம் ''சக்கரத்து அண்ணல்'' என்றது சக்கரம் ஏந்திய அண்ணல். ''அண்ணல்'' என்ற சொல்லுக்குத் தலைவன், பெரியோன், கடவுள் என்றெல்லாம் பொருள் உண்டு. சர்வேசுவரன் அவனைக் கூடினார்க்குக் குளிர்ச்சி தரும் திருதுழாய் மாலை கொண்டு அருளுவதும் அவனைக் கூடாதாருக்கு அழல் போல் சக்கரம் கொண்டு சுடுவதும் அவன் இயல்பு எனினுமாம். ''விண்ணோர் தொழக் கடவும்'' என்றது பரமபதநாதனைத் தொழுதேத்தும்படி நடாத்தும் என்பதாம். விண் ஆகாயம், தேவர்கள் மேல் உலகில் வாழ்பவராதலின் 'விண்ணோர்' எனப்பட்டனர்.

"தழல் போல் சினத்த அப்புள்ளின் பின்போன" என்றது எம்பெருமானைத் தாங்கிப் பறந்து செல்லும் தீ போன்ற சினத்தையுடைய அந்தப் பறவையின் பின் போன என்பதாம். "தழல் போல் சினத்த" என்றதால் கருடாழ்வார் எம்பெருமானைச் சுமந்து செல்கையில் தன் சேவைக்கு யாரும் இடையூறு செய்யக் கூடாது என்று எம்பெருமானைத் தேடுவாரையுந் தழல்போல் சினந்து நோக்கும் என்றாகிறது. இங்கு பிராட்டி நிலையடைந்த ஆழ்வாரையும் சினந்து நோக்கியது எனலுமாம். கருடாழ்வார் எம்பெருமானைச் சுமந்து செல்லப் பிராட்டி நிலையடைந்த ஆழ்வார் எம்பிரானைத் தொழ இயலாதபடி கருடாழ்வார் ஆழ்வாரைப் பார்க்க என்பதாம். கருடாழ்வார் பறந்து செல்ல அதன் பின்னாலே மனம் சென்றது என்பதனை "புள்ளின் பின் போன தனி நெஞ்சம்" என்கிறார். "தனி நெஞ்சம்" என்றது எம்பெருமானுக்கேயென்று அமைந்த நெஞ்சம், தனிப்பட்ட மனம் என்பதாம்.

அத்தனிப்பட்ட மனம், "குழல் கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழல் போல்வனர் கண்டு நிற்கும் கொல்? மீளும் கொல்?" எனும் ஐயத்தை எழுப்புகிறார். "குழல் கோவலர்" என்றது வேய்ங்குழல் உடைய இடையர். கோவலர் மடப்பாவை நப்பின்னைப் பிராட்டி, மண்மகள் பூமிப் பிராட்டி, பெரியபிராட்டி ஆகிய இம்மூவரும் நிழல் போல் நின்று கொண்டு சேவை சாத்தியிருப்பது கண்டும் எனது மனம் எம்பெருமான் திரு உருவைத் தைத்து நிற்குமோ அல்லது மீளுமோ என்பதாம். நம்மாழ்வார் பிராட்டியர் மூவர் சூழ்ந்து சேவை செய்து கொண்டிருப்பதையறிந்தும் திருப்பாதங்களில் வைத்த கண்வாங்க முடியாது தவிப்பதை விளக்கும் பாசுரம்.

"குழல்" என்றது வேய்ங் குழல் கோவலர்க்கு அடைமொழியாய் அமைந்தது. இதே சொல்லைக் கூந்தல் எனப்பொருள் கொண்டு மடப்பாவைக்கு அடைமொழியாகக் கொள்ளினும் அமையும். 'கோவலர்' என்றது கோபாலகர் என்ற சொல்லின் திரிபு. குறுகிக் கோவலர் என்றானது. பசுக்களைக் காப்பவர் என்பதாம். "மடம்" மகளிரின் நாற்குணத்தொன்று. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகிய நான்குமாம். மடம் என்றது அறிந்தும் அறியாதவர்போல் இருந்து விடுவது. "பாவை" என்றது சித்திரப்பாவை போன்ற அழகிய பெண் என்றும், கண் மணிப்பாவை போன்று அருமையானவள் என்பதாம்.

நப்பின்னைப் பிராட்டிக்கு நீண்டதோர் அடை கொடுத்துப் பாடியிருத்தல் நோக்குக. நம்பின்னை நக்னஜித் என்ற மன்னன் மகள். கண்ணபிரான் மிகப்பெரும் வலிமை கொண்ட ஏழு எருதுகளை அடக்கி வென்று இவளை மணம் செய்து கொள்கிறார். கண்ணபிரான் இது போன்று 16108 அரசகுமாரிகளை மணந்து கொள்கிறார். இவள் நீளாதேவியின் அம்சமானதால் மண்மகள், திரு ஆகிய இருவருடன் சேர்த்து மூன்றாமவதளாக நீளாதேவி என்றும் கூறுவர். இம்மூவரும் நிழல் போன்று எம்பிரானை என்றும் பிரியாதவர் என்றும் அடியார்க்கு அருள் பொழியும் நிழலாய் இருப்பவர் என்பதுமாம்.

"நிற்குங் கொல் மீளும் கொல்" என்றது அவர்கள் இருப்பது தெரிந்தும் தெரியாதது போல் அவன் மார்பில் மனதைப் பாய்ச்சி விட்டு அவர்கள் மூவரும் இருக்கக் கண்டு அஞ்சி மீளுமோ அல்லது ,பதிந்தேதான் இருக்குமோ என்பதாம். நிழலாய் இருப்பர் என்பது அடியார்க்கும் இம்மூவரே

"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் குளிர் தரு" என்பதாம். "புள்ளின் பின் போன தனி நெஞ்சம் நிழல்போல்வனர் கண்டு நிற்குங்கொள்மீளுங்கொல்" என்றதால் இம்மூவரும் இருக்கத் தனக்கு பிராட்டி நிலை கிடைக்குமோ கிடைக்க இவர்கள் விடுவார்களா அல்லது நாம் வந்தது கண்டு நிழல்போல் நின்று கொண்டே இருப்பார்களா என்றும் பலவாகவும் ஐயம் எழுந்தபடியிருக்கிறது என்பதாம்.

கருடாழ்வாரின் தோற்றத்தைக் குறிப்பிடுகையில் "தழல் போல் சினத்த அப்புள்ளின்" என்கிறார். நம்மாழ்வாரின் மேல் கருடாழ்வான் சினத்துடன் நோக்க வேண்டியதன் காரணம் என்னே என்று வியக்க வைக்கிறது. சினத்துக்குக் காரணம் நம்மாழ்வார் பிராட்டி நிலை செய்ததுதான். பிராட்டி நிலையடைந்த ஆழ்வார்தான் எம்பெருமானுக்குச் சேவை செய்வதில் இடையூறாக இருப்பார் என்ற அச்சத்தால் "சினத்த புள்ளி" யானது என்பது காண்க.

அரும்பதவுரை : குழல் - வேய்ங்குழல். கூந்தல் எனினுமாம். கோவலர்-கோபாலகர். கோபராமரிப்பவர். மடம் - மடமை. பாவை-பெண். உவமையாகு பெயராய் அமைந்தது. மண்மகள் - பூமாதேவி. திரு - இலக்குமி. பெரிய பிராட்டி. போல்வனர் - போன்றவர். தண்ணந் துழாய் - தண் + அம் + துழாய்- குளிர்ந்த அழகிய துழாய் மாலை. அழல் - தீ. அடும் - சுடும் வெல்லும். சக்கரத்தண்ணல் - சக்ரதாரி. சக்கரம் தரித்த நாராயணன். விண்ணோர் - தேவர், அமரர். கடவும் - செலுத்தும். நடத்தும். தழல் - நெருப்பு, தீ. புள் - பறவைகருடன். அண்ணல் - இது ஆண்பால் சிறப்புப் பெயர்,

(தலைவனைப் பிரிந்த தலைவி
வாடைக்கு ஆற்றாது வருத்திக் கூறல்)

தனிநெஞ்ச முன்னவர் புள்ளே கவர்ந்தது
தண்ணந்துழாய்க்
கினிநெஞ்ச மிங்குக்கவர் வதியா மிலநீ நடுவே
முனிவஞ்சப் பேய்ச்சிமுலை சுவைத்தான்
முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்ச மாருதமே யெம்மதாவி பனிப்பியல்வே. 4

விளக்கவுரை: என்னைவிட்டுப் பிரிந்து சென்று தனித்து நின்ற என் மனமே! முன்பொருநாள் அந்தத் தலைவனது கருடப்பறவையே கவர்ந்து சென்று போனது. அவரது குளிர்ந்த அழகிய திருத்துழாய்க்கு கவர்ந்து செல்வதற்கு இனி இந்த இடத்தில் நாம் வேறொரு மனத்தை உடையோமல்லோம். அப்படி யிருக்கச் சினம் கொள்ளும் தன்மையுடைய வஞ்சக மனமுடைய பேய்மகளின் முலையை சுவைத்து உண்டருளிய கண்ணபிரானது திருமுடியிலே சூட்டப்பட்ட திருத்துழாயினது குளிர்ந்த நஞ்சு வீசும் காற்றே! நீ இடையே புகுந்து என்னுடைய உயிரை மேலும் தவிக்கச் செய்வது இயல்பாமே?

திறனாய்வு: சென்ற பாசுரத்தில் "புள்ளின் பின் போன தனி நெஞ்சமே" என்ற அத்தனி நெஞ்சம் "முன் அவர் புள்ளே கவர்ந்தது." முன்னமேயே அவருடைய கருடனே கவர்ந்து சென்று விட்டது என்றனர். "புள்ளின் பின் போன தனி நெஞ்சமே" என்றது கணவனைப் பின் தொடர்ந்து போன காரிகையின் நெஞ்சம். இதனையே "தனி நெஞ்சம், முன் அவன் புள்ளே கவர்ந்தது" என்கிறார்.

தலைவனைத் தொடர்ந்து சென்றது என்பதும் தலைவன் கவர்ந்து சென்றான் என்பதின் இரண்டிலும்

சொல் வேறுபாடு இருக்கலாம். ஆனால் பொருள் வேறுபாடில்லை. "தனி நெஞ்சம்" என்றது வேறு எதனுடனும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாத, தனித் தன்மை கொண்ட, எம்பெருமான்பால் ஈடுபட்ட நெஞ்சம். எம்பெருமான்பால் ஈடுபாடு கொண்ட மற்றுமொரு நெஞ்சுடனும் ஒப்பிட முடியாத நெஞ்சம் ஆதலின் "தனி நெஞ்சம்" என்றனர்.

சென்ற பாசுரத்தின் கடைசி வரியை மீண்டும் காண்க "தழல் போல் சினத்த அப்புள்ளின் பின்போன தனி நெஞ்சம்" புள்ளினைத் தொடர்கிறது. ஆனால் அப்புள் தழல்போல் சினத்ததாகிறது. இருந்தாலும் நெஞ்சம் அதனைப் பின் தொடர்கிறது. புள்ளின் சினத்திற்கான காரணம் சென்ற பாசுரத்திற்கான உரையிலேயே கூறப்பட்டு விட்டது. தான் ஏற்றிச் செல்லும் பிரானை ஆழ்வார் பங்குபோட்டுக் கொள்ளப் பார்க்கிறார் என்பதாம். இதனைச் சக்கரவர்த்தி பார்வையாகவும் கொள்ளலாம். பிரிவென்னும் துயரால் தலைவனைப்பின் தொடர அவனை ஏற்றிச் சென்ற கருடன் சினத்தால் மனம் மேலும் வேட்கையுற்று, "தன் அம் துழாய்க்குக் கவர்வது இனி இங்கு யாம் நெஞ்சம் இலம்" என்கிறார். தனித் தன்மை வாய்ந்த ஒரே மனத்தையும் கருடாழ்வான் கவர்ந்து சென்றுவிட்டான். ஆதலின் குளிர்ந்த அழகிய திருத்துழாய்க்குக் கவர்ந்து கொண்டு போக இனி என்ன இருக்கிறது என்பதனை, "இனி இங்கு யாம் நெஞ்சம் இலம்" என்கிறார்.

தலைவனுடைய ஒவ்வொரு உறுப்பும் அவன் உடுத்திய ஆடை, அணிந்த அணிகலன் ஒவ்வொன்றும் தலைவியைக் கவர்ந்திழுக்கும் வலிமை பெற்றவை. அவளுக்கு ஒரே சமயத்தில் பல நெஞ்சம் உள்ளது போன்று தோன்றும். ஆனால் தலைவன் பிரிந்த விடத்து மற்ற பொருள்களிடம் மனம் செல்லாது.

ஏனெனில் அவள் மனம் அவளிடத்தில் இல்லை என்பது சாதாரண காதல் மயக்கு. இந்த நிலையையே நம்மாழ்வார் விளக்குகிறார். கருடன் ஏற்றிச் சென்ற தலைவன் பின் சென்று விட்ட மனம் திரும்பாததால் அவன் சூடிய துழாய் மாலை அவரைக் கவரவில்லை என்றபடி கணவன் பிரிந்த காலத்து வேறு ஒரு ஆட வனை நினைக்கும் மனம்இல்லாமைபோல் எனினுமாம். இதனைத் திருவைணவத்தில் ஈடுபாடடைந்தவர் வேறு ஒரு மதத்திற்கு மாறும் மனமுடையவராக இருக்க மாட்டார் என்பதுவுமாம். தலைவன் தன்னைப் பிரிந்து சென்றான் என்ற காரணத்தால் அவன் விட்டுச் சென்ற அவனது பொருட்களைக் காணுந்தோறும், காணுந்தோறும், தீயாய்ச் சுடும். பிராட்டித் தன்மை பெற்ற நம்மாழ்வாருக்கும் கண்ணன் சூடியிருந்த துழாய் மாலை பனிபோன்று குளிர்ச்சி மிக்க நஞ்சாக வீசும் கற்றெனப்படுகிறது. இதனை, "முனி வஞ்சப் பேய்ச்சி முலை சுவைத்தான் முடி சூடு துழாய் பனி நஞ்சம் மாருதமே" என்கிறார்.

பேய்ச்சியை, "முனிவஞ்சப் பேய்ச்சி' என்கிறார் முனிதல் என்பது கோபித்தல். கோபிக்கும் தன்மை யுள்ள பேய்ச்சி என்பதாம். கடைசிவரியில் உள்ள "நஞ்சம்" எனும் சொல்லை இங்கு கொணர்ந்து "பேய்ச்சிமுலை நஞ்சம் சுவைத்தான்" எனக் காண்க.

"வஞ்சனையால் வந்த பேய்ச்சிமுலையுண்ட
அஞ்சனவண்ணனை......

என்றும்,

"வஞ்சமுலைப்பேயின் நஞ்சமது உண்டவனே"

என்றும்,

"பேய்ச்சி முலையுண்ணக்கண்டு பின்னையும்
நில்லாது என்னெஞ்சம்
ஆய்ச்சியரெல்லாரும் கூடி அழைக்கவும் நான்
முலைதந்தேன்"

என்றும் ஆங்காங்கு கண்ணன் பேய்ச்சிமுலையுண்ட செய்தியை பெரியாழ்வார் திருமொழியில் கூறி யிருப்பதும் காண்க.

"முலைசுவைத்தான்" என்றது நஞ்செனக் கண்டும் அதனைச் சுவைத்து முழுமையாக உறிஞ்சிக்குடித்தே வீழ்த்தினான் என்பதாம். "வஞ்சப் பேய்ச்சி" என்றது வஞ்சகமாக நஞ்சூட்ட வந்த பேய்ச்சி என்பதாம் "முடிசூடு துழாய்ப்பனி நஞ்சமாருதமே" என்றது என் தலைவன் என்னைப் பிரிந்து சென்றதால் அவன்பின் என்மனம் சென்றுவிட்டதால் எனக்கென்று வேறு ஒரு மனம் இன்மையால், அவன் தலையில் சூடிய துழாய் மாலை அது பனி போன்று குளிர்ந்ததன்று. நஞ்சு கலந்த காற்று. பேய்ச்சி நஞ்சைத் தன் மார்பில் கொண்டு வந்தது போல கண்ணன் சூடிய துழாய் மாலையில் துளிக்கும் பனித்துளிகள், தேன்துளிகள் நஞ்சைச் சுமந்து வந்தன என்பதாம். "மாருதம்" என்றது காற்று. "நஞ்சமாருதம்" நஞ்சு கலந்த காற்று. வாடைக் காற்று உடலுக்கு ஆகாது ஆதலின் இதனை நஞ்சு கலந்த வாடையென்றும் கூறலாம், நஞ்சுகலந்த காற்றை உண்பதால் "எம்மது ஆவி பனிப்பு இயல்பே" என்கிறார். வாடைக்காற்று வீச உடல் நடுக்கம் ஏற்படும். தலைவனைப் பிரிந்ததால், தென்றல் காற்றும் நடுக்கத்தை ஏற்படுத்துவது இயற்கை, இயல்பு.

"இன்னிளம் பூந்தென்றலும் வீசும் எரி எனக்கே" என்றனர் பெரியதிருமடலில் திருமங்கையாழ்வார். அடியனேன் உரைநூல் பக்கம் 118 கண்டு தெளிக.

தென்றல் மெல்லமெல்ல இன்பமூட்டுவது. தலைவன் அருகில் நெருங்க நெருங்க இன்பம் மிகும். அவன் கை பட்ட இடமெல்லாம், அவன் வலிமைமிக்க கரங்கள் அழுத்திய இடமெல்லாம் மென்மையாய் இன்பமூட்டி மெய்சிலிர்க்க வைக்கும். தென்றலும் அத்தகைய தன்மையதே. அப்படியிருக்க 'நீ என்னைச் சுடுவதென்மாயம்? 'தென்றலே நீ எனக்குப் பகையோ?' என அஞ்சி வருந்தி நடுக்குற்றவராய் "நஞ்ச மாருதமே" என்கிறார். இங்கு ஏகாரம் தேற்றம். நெஞ்சம் கருடாழ்வார் பின் சென்று விட்டது. ஆனால் "எம் மதஆவி" இன்னமும் நீங்காதிருக்கிறது. ஆவி நீங்கும் முன் உடல் துடிக்கும். அது இயற்கை. ஆனால் என் ஆவி பிரியமாட்டேன் என்று என் உடலில் இருந்துகொண்டு என்னை வதைக்கிறது. அதனால்தான் "எம்மத ஆவி" என்றனர். "மதஆவி" என்றதால் மதம்கொண்ட ஆவி, திமிர் பிடித்த ஆவி, என்னை வதைப்பதற்கென்றே நீங்காது குடிகொண்டிருக்கும் ஆவி என்பதாம் "மதம்" என்ற சொல்லுக்கு மகிழ்ச்சி என்ற பொருளும் உண்டு. ஆதலின் என் துன்புறுநிலை கண்டு மகிழ்ந்து இருக்கும் ஆவி என்பதுவுமாம். நெஞ்சம் இருக்கும் வரையாரும் உயிர் இருப்பதுபற்றி உணர்வதில்லை. நெஞ்சம் நீங்கியபின்தான் உயிர் இருப்பது பற்றிய நினைவே தோன்றுகிறது. தனித்து உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் ஆவி மகிழ்ச்சியில் கூத்தாட உடல் நடுக்குற்றது எனினுமாம்.

அரும்பதவுரை : தனி நெஞ்சம் - தலைவன் பின் சென்ற நெஞ்சம். தண்ணந்துழாய் - தண் அம் துழாய். குளிர்ச்சி மிக்க அழகிய துழாய்மலர். கவர்ந்தது - கவர்ந்து சென்றது. நெஞ்சம் இலம் - வேறு ஒரு நெஞ்சம் இல்லை. நடுவே இடையில். முனி - கோபம். பேய்ச்சி - பேய்ப் பெண். முடிசூடு - முடியில் சூட்டப்

பட்ட. மாருதம் - காற்று. எம்மதாவி - எம்மத ஆவி எனப்பிரித்துக் காண்க. எம்செருக்கு அல்லது களிப்பு மிக்க ஆவி, பனிப்பு - நடுக்கம்,

(வாடைக்கு நலிந்த தலைவியின் மாமை கண்டு தோழி இரங்கல்)

பனிப்பியல் வாகவுடைய தண்வாடை
யிக்காலமிவ்வூர்ப்
பனிப்பியல் வெல்லாந்தவிர்ந்தெரி வீசுமந்தண்ணந்து
துழாய்
பனிப்புயல் சோருந்தடங்கண்ணீ மாமைத்திறத்துக்
கொலாம்
பனிப்புயல் வண்ணன் செங்கோலொருநான்று
தடாவியதே, 5

விளக்கவுரை : பனியின் இயல்பையுடைய குளிர் வாடைக்காற்று இக்காலத்தில் இந்த ஊரில் பனியின் தன்மையெல்லாம் தவிர்த்து வெப்பத்தை எங்கும் வெளிப்படையாக வீசுகின்றது. இவ்வாறு குளிர்ந்த காளமேகம் போன்ற தன்மையுடைய எம்பெருமானது செங்கோல் இந்த ஒரு காலத்தில் செவ்வை குலைந்து சாய்ந்தது. அழகிய குளிர்ந்த அவனது திருத்துழாயின் மீது ஆசைப்பட்டு, பனிப் புயல் வீசுவதே போன்று நீர் பொழியும் பெரிய கண்களையுடைய இவளது மேனி யின் அழகை அழிப்பதற்கே போலும்.

திறனாய்வு : தலைவனைப் பிரிந்த தலைவிக்கு அதாவது கருடாழ்வார் பின் சென்ற நெஞ்சம் திரும்பி வராததால் கண்ணனது முடியில் சுட்டப்பட்ட துழாய் மலரின் குளிர்ச்சியையுடைய காற்றும் நஞ்சானது. அக் காற்று மேனியில் படுவதால் எம்மத அவி நடுங்குவது இயல்பு என்று சென்ற பாசுரத்தில் சொன்ன ஆழ்வார்;

பாசுரத்தில், ''பனிப்பு இயல்பாக உடைய தண்வாடை, இக்காலம், இவ்வூர், பனிப்பு இயல்பு எல்லாம் தவர்த்து எரிவீசும்'' என்கிறார். சென்ற பாசுரத்தின் அந்தியில் வந்த ''பனிப்பு'' என்னும் சொல்லின் பொருள் படபடப்பு. நடுக்கம் என்பது. இப்பாசுரத்தின் ஆதியில் வந்துள்ள 'பனிப்பு' குளிர்ச்சி எனும் பொருளில் வருவது. ''பனி'' என்ற சொல் குளிர்ச்சி, குளிர்ந்த நீர்த்துளி, நீர், மழை, இனிமை என்றும், அச்சம், நடுக்கம், துன்பம் என்றும் பொருள்படும். சென்ற பாசுரத்தில் பனிப்பு நடுக்கமானது இப்பாசுரத்தில் குளிர்ச்சியானது காண்க. முற்றிலும் மாறுபாடான பொருள்களைத் தன்னகத்தே கொண்ட சொல் என்பது காண்க ''ஆதலின் பனிப்பு இயல்பாக உடைய'' என்றது குளிர்ச்சியை, குளிர வைக்கும், குளிர்ச்சி உண்டுபண்ணுதலையே இயல்பான தொழிலாக உடைய, ''தண்வாடை'' குளிரைச் சுமந்து வரும் வாடைக்காற்று எனக் காண்க. இது குளிர்காலத்தில் வீசுமாதலின் ''இக்காலம்'' என்றனர். பனிகாலம் எனினுமாம். ஐப்பசி, மார்கழி, தை ஆகிய இம்மூன்று மாதங்களைக் குறிப்பிடுகிறார் என்பதாம். ஐப்பசிமாதம் அடைமழை பொழியும். ''பனியில்லாத மார்கழியா'' என்பர். ''தைமாசம் தரையெல்லாம்'' நடுங்கும் என்பர். ஆக நம்மாழ்வார் குறிப்பிடுவது இக்காலமாகத்தான் இருக்க முடியும். ''இவ்வூர்'' என்றது பதினெட்டுத் திருப்பதிகளையுடைய பாண்டிநாட்டில் ஆழ்வார் அவதரித்த தலமான திருநகரியைத்தான் குறிப்பிடுகிறார் என்பது புலனாகிறது. ஆழ்வார் அவதரித்த திருத்தலத்தை இங்கு இயல்பாகவே குளிர்ச்சியுடைய ஊர் என்று சிறப்பிப்பது; தான் பிறந்த மண்ணுக்கு ஆழ்வார் சாத்தும் புகழாரமாகும். பனிப்பு இயல்பாகவுடைய வாடைக்காற்று மழையும் பனியும் பொழியும் குளிர் காலம், தெய்வீகத் தன்மை பொங்கும் பதினெட்டு திருப்பதிகளைக் கொண்டதும், கங்கை யமுனை

முதலிய புண்ய நதிகளிலும் மகிமையுடைய தாம்ரபரணி யென்னும் பொருநை யாற்றின் கரையில் அமைந்த திரு நகரி யென்னும் இவ்வூரின் இயல்பும் "எரிவீசும்" என்கிறார். வெப்பத்தைக் கக்குகிறது என்பதாம்.

"காரும்வார் பனிக்கடலும், அன்னவன்
தாரும் மார்வமும் கண்ட தண்டமோ?
சோருமாமுகில் துளியினூடு வந்து
ஈரவாடைதான் ஈரும் என்னையே."

என்றனர் திருமங்கையாழ்வாரும். பெரிய திருமொழியில் (11-1-2) நெஞ்சைக் கருடாழ்வான் கொண்டு சென்ற தால், இவருடைய ஆற்றாமையைக் கண்டு உராரையும் வாடை வாட்டியது என்றும் உரே வாடியது எனினுமாம். எம்பெருமான் சர்வேசுவரன் காற்றை யும் மாற்றவல்லவன் என் நிறத்தையும் மாற்றுதற்கு ஏவிவிட்டானோ என்றதொரு அச்சம் எழுகிறது.

"பனிப்புயல் வண்ணன் செங்கோல் ஒரு நான்று தடாவியதே, அம்தண் அம்துழாய், பனிபுயல் சோரும் தடம்கண்ணி மாமை திறத்து கொல் ஆம்" என்றதில், "பனிப்புயல் வண்ணன்"என்றது குளிர்ந்த புயல் மழை பொழியும் மேக வண்ணன் என்பதாம். பனி இங்கு குளிர்ந்த என்ற பொருளில் வருவது. "பனிப்புயல் வண்ணன் செங்கோல்" என்றது கண்ணனின் நீதி வழுவா நெறிமுறை, நல்லாட்சி என்பதாம் "ஒரு நான்று தடாவியதே" என்றது ஒரு நாள் வளைந்ததே. வளை யாதது வளைந்ததே என்பதாம் வளைந்ததே என்பதி லான ஈற்று ஏகாரம்இரக்கம் தோன்றச்சேர்க்கப்பட்டது எனக் காண்க. என்றும் வளையாதது இன்று மட்டும் வளைந்தது எங்ஙனே யென்னும் பொழுது, "அம்தண் துழாய்" மாலைக்கு ஆசைப்பட்டதால், "பனிப்புயல் சோருந் தடம்கண்ணிமாமை திறத்து கொல் ஆம்" என்றனர். அவனது அழகிய குளிர்ச்சி மிக்க துழாய்

லர் மாலைக்கு ஆசைப்பட்ட பாவத்திற்காக எனக்கு ாமை நோய் தந்தான் என்றபடி. "பனிப்புயல் சாரும் தடம் கண்ணி" யாகத் தன்னை நம்மாழ்வார் ாண்பிக்கிறார். இங்கு பனி யென்றால் மழை. புயல் ன்றது நீரைக் குறிக்கும். மழைநீர் போன்று நீர் சாரியும் கண்ணினாள்; தடம் கண்ணினாள் எனவும் ட கண்ணினாள் எனவும் பிரித்துக் காணலாம். தட ண்ணினாள் என்றது அகன்ற விழிகளையுடையவள். டம் கண்ணினாள் என்றது பெருமை மிக்க கண்களை ுடையவள். எம்பெருமானைக் கண்டு களித்த கண் ளாதலின் இவளுடைய கண்கள் புண்ணியம் செய்த ;ண்கள் என்பதால் தடம் கண்ணினாள் என்று ாண்பதே பெருமை சேர்க்கும். தடம் கண்ணினாள் இவளது, "மாமை நிறத்து கொல் ஆம்" என்றது இவளது மேனி அழகை அழிப்பதற்கே ஆம் ான்றபடி. "பனி புயல் வண்ணன் செங்கோல் ஒரு ;ான்று தடாவியது" இவளது பேரழகைச் சிதைப் பதற்கே என்றபடி. அழகிய அவனது குளிர்ந்த திருத் துழாய் மாலைக்கு ஆசைப்பட்டதால் என்மேனி அழகு சிதைந்தது என்பதுவுமாம்.

> "வடம்கொள் பூந்தண்ணந்துழாய் மலர்க்கே இவள்
> மடங்குமால் வாணிதவீர்! என்மடக்கொம்பே."

ான்றனர் திருமங்கையாழ்வார். திருவாய் மொழி(4.2.7.)

அரும்பதவுரை : இக்காலம் - இந்தக் குளிர்காலம், இவ்வூர் - ஆழ்வார் அவதரித்த திருநகரி. எரிவீசும் - வெப்பம் கக்கும். வெப்பத்தைப் பாய்ச்சும். தண் அம் துழாய் - குளிர்ந்த அழகிய துளசி மாலை. தடம் கண்ணி - பெருமைமிக்க கண்ணினாள். மாமை - அழகு. தடாவியது - வளைந்தது. நான்று - நாள். பனிப்பியல்வாக - குளிர் செய்வதை இயல்பாக. பனிப்

பியல்லெல்லாம் - குளிர்ச்சி செய்யும் தன்மையை. பனி புயல் சோரும் - மழைத்துளி போல் நீர் சொரியும். பனிப்புயல் வண்ணன் - மழைமேகம் போன்ற நிறமுடையன். "தடாவியதே" என்றது ஈற்று ஏகாரத்தால் இரக்கம் தோன்றும்படி.

**(தலைமகள் எழில்கண்டுவியந்த தலைமகன் வார்த்தை)**

தடாவியவம் புமூரிந்த சிலைகளும் போகவிட்டுக்
கடாயின கொண்டொல்கும் வல்லியிதேனும
சுரர்மங்கக்
கடாவிய வேகப் பறவையின் பாகன் மதன செங்கோ
னடாவிய கூற்றங் கண்டீருயிர் காமின் கண்
ஞாலத்துள்ளே 6

விளக்கவுரை : வளைந்து போன அம்புகளையும் ஒடிந்து போன விற்களையும் பயனற்றவையென்பதால் விடுத்துப் பாய்ந்து செல்லத்தக்க அம்புகளையும் வளைத்து செலுத்தக் கூடிய விற்களையும் ஏந்தித் துவண்டு நடக்கும் ஒரு வல்லிக் கொடி போன்ற பெண் வடிவமாயினும் அசுரர்கள் அழிந்துபோகச் செலுத்திய வேகம் கருடாழ்வானுக்கு இனிய பாகனாகிய எம்பெருமானது மகனான மன்மதனது செங்கோல் ஆட்சி நடக்கும் கூற்றுவனாயிருக்கும் இவ்வுலகில் இந்தப் பேரெழிலைக் கண்ட உலகத்தவரே! உங்கள் உயிரைக் காத்துக் கொள்ளுங்கள்.

திறனாய்வு : இது தலைமகளின் எழில் தோற்றத்தைச் சித்தரிக்கும் பாசுரம். மன்மதனின் செங்கோலான யமனாயிருக்கும் இந்த அழகிய வடிவைக் கண்டவர்கள் தங்கள் உயிர் காத்துக் கொள்ளுங்கள் என்பதாக அமைந்த இப்பாசுரம், சீவகசிந்தாமணியில் திருத்தக்க தேவரின் நாவன்மையையும் நமக்கு நினைவூட்டுகிறது.

"மீன்சேர் குழாமனையமே கலையும்
வெம்முலையும் கூற்றங் கூற்றம்
ஊன்சே ருயிருய்யக் கொண்டோடிப் போமின்களு
ரைத்தேமென்று
கான்சேர் கமழ்கோதை கறொடர்ந்து கைவிடா
தரற்றுகின்ற
தேன்சேர் திருவடிமேற் கிண்கிணி
பொன்னாவதற்கே தக்கதென்பார்."

சீவகசிந்தாமணி 637. "கூற்றம்கூற்றம் ஊன் சேருயிருய்யக் கொண்டோடிப் போமின்" என்றதோடு "மதன செங்கோனடாவிய கூற்றங் கண்டீர் உயிர்காமின் காண் ஞாலத்துள்ளே" என்பதையும் ஒப்பிட்டுக் காண்க. இது போன்று ஒப்பாராய்தல் இலக்கியச் சுவைஞர்கட்கு ஒருபெருவிருந்தாகும்.

போரில் அம்புகள் இலக்கைத் தாக்கி முற்றிலும் அழிக்க முடியாத நிலையில் வளைந்து போவதும் சிலைகள் முரிந்து போவதும் இயல்பு. மன்மதன் தொடுக்கும் போரும் இதற்கு விதிவிலக்கல்ல என்பதாக "தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டு" என்கிறார். மன்மதன் கரும்பை வில்லாகவும் மலர்களை அம்பாகவு முடையவன். அந்த மலரம்புகள் ஐந்தென்பதனை;

"கூற்ற மென்னக் கொலைபுரி வேனிலா
னூற்றி தழ்க்கம லத்திறை நோன்மைய
வாற்றல் சான்ற மலர்க்கணை யைந்தல
தேற்ற நல்கினுலகினை யென்செயான்"

என்றனர் அதிவீரராம பாண்டியனர். நைடதம். அடியனேன் உரைநூல் பக்கம் 312 கண்டு தெளிக. நம்மாழ்வார் இப்பாசுரத்தில் காட்டும் தலைமகள் முற்றிலும் மாறுபட்டவர். எம்பெருமானின் பிராட்டியிடத்தைப் பற்றிடத்துடிக்கும் ஆன்மா. எம்பெருமான்

துழாய் மாலை வயப்பட்டவள். இரும்புத் துகள்களைத் தன்பக்கம் இழுத்துக்கொள்ளும் காந்தம் போன்று இவ்வுலகத்தாரை எம்பெருமான் துழாய் மாலையில் பிணித்துக்கட்டும் வலிமை மிக்கவள்.

"யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்"

எனும் பெரு நோக்கு கொண்டவள். இவள் காமனே யெனத் தடாவிய அம்பும் முரிந்த வில்லையும் போட்டு விட்டு எம்பெருமானின் திருக்கோலமே வில்லாகவும் அவன் சூடிய துழாய் மாலையே அம்பாகவும் கொண்டு புறப்பட்டு விட்டாள். ஆதலின் சம்சாரத்தில் உழலும் உலகமாந்தர்களே! இவள் தோற்றத்தில் மெல்லியளாகத் தோன்றினும் இவள் "அசுரர் மங்கக் கடாவிய வேகப் பறவையின் பாகன் மதன செங்கோனடாவிய கூற்றம் கண்டீர்" என்று எச்சரிக்கையை விடுக்கிறார். இவள் தோற்றத்தில் வல்லிக்கொடி போன்றவள். "கடாயின கொண்டு ஒல்கும் வல்லி" என்கிறார். மற்றய மலரம்புகளும் வில்லும் பயனற்றனவாயின என்பதை நன்குணர்ந்து எது கொண்டு தாக்கினால் இவ்வுலக மக்கள் எம்பெருமான் லயப்படுவர் என்பதை நன்கு தீர்மானித்து எம்பெருமான் கோலவடிவே வில்லாகவும் அவன் விரும்பிச் சூடும் துளசி மலரை அம்பாகவும் கொண்டு "ஒல்கும்வல்லி" என்று இங்கு பொருள் கொள்வது சாலப்பொருந்தும். வல்லிக் கொடி கோள், கொம்பு இவற்றை ஆதாரமாகப் பற்றி வளருவது. அதற்குத் தனித்து நிற்கும் வலிமை கிடையாது. ஆழ்வாரும் எம்பெருமான் வயப்பட்டவராய்த் தன்னை முற்றிலும் இழந்தவர். அத்தகையவருக்கு அவன் எழிற் கோலமும் துழாய் மலரே ஆயுதமாக அமையமுடியும். "கடாயின" என்ற சொல் அவன் திருக்கோலமும் துளசி மாலையுமாம் என்பதறிக. இவள் வல்லிக்கொடி போன்றவளாயினும் இந்த வல்லிக்கொடி, "அசுரர் மங்கக் கடாவிய வேகப் பறவையின் பாகன்" என்று

அசுரர்கள் அழிய ஏறிச் செலுத்திய வேகமாகப் பறந்து செல்லும் கருடாழ்வானை நடாத்திச் செல்லும் பாகனாகிய எம்பெருமான் என்பதாம். யானைப்பாகன் போன்று இங்கு பறவைப் பாகன் என்பது காண்க.

எம்பெருமானை இங்கு "பாகன் என்று கூறி யிருப்பது பாரதப் போரில் சாரதியாகி அருளியதற் கொப்பாகும். "வேகப் பறவை" யென்றது நினைத்த இடத்திற்கு விரைந்து செல்லும் என்பதாம்- பறவையின் பாகன் எம்பெருமான், எம்பெருமான் சம்பந்தப்பட்ட, "மதன செங்கோல் நடாவியகூற்றம்" என்கிறார். மத னன் செங்கோல் என்பது மன்மதன் ஆட்சிக்குட்பட்டு நடத்துகிற யமனாகும். ஞாலத்துள்ளே கண்டீர் உயிர் காமின்" என்றது உலகத்தில் வேறு இதற்கிணையாகக் காண இயலாது ஆதலின் இவளின் அழகிய வடி வழகைக் கண்டவர்களே! சம்சாரத்தில் உழலும் இவ்வுலகத்தவரே எம்பெருமான்! கோலவடிவில் மூழ்கி எழுந்திருந்திருக்கும் இவளின் எழில் தோற்றத்தைக் கண்டு இவ்வாழ்வாரின் வயப்படாதார் ஒருவருமில்லை என்பதோடு, சம்சாரத்தில் உழல்வதையே பெருவாழ் வாகக் கொள்வோர் தங்களைக் காத்துக் கொள்ளுங்கள் என்பதுவுமாம்.

இப்பாசுரத்தில் "பறவையின் பாகன் மதன்" என்றது மன்மதன் திருமாலின் மகனாதல் பற்றி எனினு மாம். கண்ணபிரானின் முதல் மனைவியும் திருமகளின் திருவவதாரமுமான ருக்மணிப் பிராட்டியிடம் மன்மதன் பிரத்யும்நனென்னும் குமாரனாகத் தோன்றினான் என்பது புராணம். மனைவி கருவுற்றவிடத்து கணவன் அவள் வயிற்றினின்று மறுபடியும் தோன்றுகிறான் என்பது மனுஸ்மிருதி. இதனை நன்கு உணர்ந்தே பறவையின் பாகன் மதன் என்றனர் எனலாம். "நெடி யான் மகன்" என்றனர் பிறரும்.

அரும்பதவுரை : தடாவிய-வளைந்த. சிலை-வில். கடாயின-பயன்படத்தக்க. ஒல்கும்-மெலியும், தளரும், துவளும். வல்லி-வல்லிக்கொடி. அசுரர்-சுரர் அல்லாதார் கள். கள்அருந்தாதார். மங்க-அழிய. கடாவிய-நடத்திச் சென்ற, ஏறிச்சவாரி செய்த. வேகப் பறவை-நினைத்த இடத்திற்கு செல்லும் கருடாழ்வார். பாகன்-செலுத்து பவன். மதனன்-மன்மதன். களிப்பை-விளைவிப்பவன். செங்கோல்-செம்மை ஆட்சி. நடாவிய-நடத்துகின்ற கூற்றம்-எமன். காமின்-காப்பாற்றுவீர். ஞாலம்-உலகு. கடாயின என்பது கடாவின என்பதன் விகாரம். அது போன்றே 'நடாவிய' என்றது நடவிய என்றதன் விகாரம். கூற்றம் என்பது உடலையும் உயிரையும் கூறுபோடுபவனாதலின் இப்பெயர் பெற்றான்.

காலமயக்கு

ஞாலம் பனிப்பச் செறித்து நன்னீர்ட்டுக்கால்
சிதைந்து
நீலவல்வேறு பொரா நின்றவான மிதுதிருமால்
கோலஞ்சுமந்து பிரிந்தார் கொடுமை குழறுதண்பூங்
காலங்கொலோ வறியேன் வினையாட்டியேன்
காண்கின்றவே. 7

விளக்கவுரை : இந்த உலகம் நடுங்கும்படி நெருங்கிச் சினம் பொங்கச் சிறு நீரை நன்றாக வெளிச் சிந்தித்தன் கால்களால் தரையைக் கீறிக்கொண்டு நீல நிறத்தையுடைய வலிமை மிக்க எருதுகள், போர் செய்யப் பெற்ற வானம் இதாகும். திருமகளின் கணவ னான எம்பெருமானது வடிவத்தையுடையதாய்ப் பிரிந்து போன தலைவரது கொடிய தன்மையைக் கூறுகிற குளிர் மிகுந்த அழகியதான கார்காலம்தானோ? தீவினையுடைய நான் என் கண்முன் தெரிகின்றவற்றை அறியும் நிலையில் இல்லை,

திறனாய்வு : இப்பாசுரம், கார்காலம் வரக் காத்திருந்த தலைவி அவன் வராதது கண்டு, பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவித் தற்குப் படைத்தது போன்றது. தலைவன் எப்பொழு தும் கார்காலத்தில் வருவதாகக் கூறிப்போகிறான். கார்காலத்தில் அப்படி என்ன சிறப்பு? காதலன் வருகைக்காகக் காத்திருந்த ஒரு பெண் :

''கொடுமிடல் நாஞ்சிலான் தார்போல், மராத்து
நெடுமிசைச் சூழும் மயில் ஆலும்சீர
வடிநரம்பு இசைப்ப போல் வண்டொடு
சுரும்பு ஆர்ப்ப
தொடிமகள் முரற்சிபோல் தும்பிவந்து இமிர்தர,
இயன் எழீ இயவை போல, எவ்வாயும் இம்மென
கயன் அணி பொதும்பருள் கடிமலர்த்தேன்ஊத
மலர் ஆய்ந்து வயின்வயின் விளிப்ப
போல்மரன் ஊழ்ப்ப
இருங்குயில் ஆல, பெருந்துறை கவின் பெற
குழவிவேனில் விழவு எதிர்கொள்ளும்
சீரார் செவ்வியும் வந்தன்று
வாரார் தோழி! நம் காதலோரே''

என்று கார்காலச் சிறப்பைத் தெளிவு படுத்துவது கலித்தொகை. பாலைக்கலி 36. கலித்தொகை காட்டும் கார்காலச் செழிப்புக்குக் கார்மேகங்கள் பொழியும் மழையே காரணம். கார்மேகம் நிறைந்து பரவி யிருக்கும் வானம், அதுகண்டு கூத்தாடும் மயில்கள் கூவும் குயில்கள், ஆர்ப்பும் வண்டுகள், சுரும்பு தேன் உண்ணப் பறந்து திரியும் தேனீக்கள் இவை யனைத்தும் கார்காலத்தை அறிவிப்பன. நம்மாழ்வார் இதனை, ஞாலம் பனிப்பச்செறிந்து நன்னீரிட்டுக்கால் சிதைந்து நீலவல்லேறு பொரா நின்ற வானம்'' என்று வான்சிறப்பைப் போற்றியருளுவது காண்க. ''பனிப்ப''

என்ற சொல் இரு பொருளில் வருவது. ''நடுங்க'' என்றும்''குளிர''என்றும்பொருள் கொள்ளலாம். மழை, இடி, மின்னல், காற்று இவற்றால் நிலம் நடுங்குவது இயற்கை. பூமி அதிர இடிக்கும் இடி, வீசும் காற்று அச்சத்தை விளைவிக்குமாதலின் ''ஞாலம் பனிப்ப'' என்றது ஞாலம்நடுங்க என்ற பொருளில் வந்துளது எனினுமாம். பெருமழை பொழிவதால் நிலம் குளிர்ந்து நாடு செழித்திடுமாதலின் ''ஞாலம் பனிப்ப'' என்றது ''நிலம் குளிர்ந்து'' என்றும் பொருள்படும். ''செறிந்த நன்னீரட்டு'' என்றது அடுத்தடுத்துப் பொழியும் அடமழையைக் குறிப்பதாகும். ''கால் சிதைந்து'' என்றது. காற்று தன் வலிமையை இழந்து என்பதாம். காற்று அதிகமாக வீசினால் மழைமேகங்கள் சிதைந்து மழை பெய்யாது நின்றுவிடும்'' ''நீலவல் ஏறு பொராநின்ற வானம்'' என்றது கரிய வலிமை மிக்க மேகங்களும் இடியும், மின்னலும் போட்டியிட்டுக் கொண்டு நிற்கும் வானம் என்பதாம். ''நீலம்'' என்ற சொல்லுக்கு 'கருமை' என்றும் பொருள்படும். ''ஏறு'' என்ற சொல்லுக்கு 'இடி' என்ற பொருளாகி அது மின்னலையும் குறிக்கும். மின்னல் தோன்றிய பின்பே இடிஇடிக்குமென்றாலும் 'இடியும் மின்னலும் என்பதே உலக வழக்காதலின் இங்கு இடியை முன்வைத்தனம். ''பொரா'' என்றது போட்டியிடும் என்ற பொருளில் வருவதாகும் கார்மேகமும் காற்றும், இடியும், மின்னலும் ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொண்டு நிற்கும் காட்சியினை நம்மாழ்வார் திருவுள்ளம் கொண்டு ''நின்றவானம்'' எனப்போற்றுகிறார். ''நின்றவானம்'' என்றது இவையனைத்தும் ஒருங்கு கொண்ட வானம் என்றபடி. ''கால் சிதைந்து செறிந்து நல்நீரிட்டு'' எனப் பிரித்துக் காண்க.

இப்பகுதியில் வரும் ''ஏறு'' என்ற சொல்லுக்கு எருது, காளை எனப் பொருள் கொண்டு வேறு

விதமாகப் பொருள் கொள்வாரும் உண்டு. ''ஞாலம் பனிப்பச் செறித்து நன்னீரிட்டு'' என்பதனை இவ் வுலகம் நடுங்க அல்லது குளிர சிறுநீர்பாய்ச்சி, ''கால் சிதைந்து'' என்பதைக் கால்களால் கிளறும் நீலநிறம் கொண்ட வலிமைமிக்க எருது போர் செய்யப் பெற்ற வானம் என்பதாம். நீலநிறம் கொண்ட மாடுகள் இல்லையாதலின் கரியநிறம் கொண்ட காளையென்ப தாம். கரியநிறம் கொண்ட காளை மேகத்து உவமை யாகவும்அதுபாய்ச்சும் சிறுநீர் மழைக்கும் ஒப்பிட்டுப் பொருள் கூறின் அமையும்.

இந்தவானம் நீலவானம், கரியநிறத்தையுடையது. இந்த வானம் ''இது திருமால் கோலம் சுமந்து'' அதாவது திருமாலின் கருமையான நிறத்தைக் கொண்டு எம்பெருமானது வடிவத்தை உடையதாய், கருமை யான காளை போன்ற உருவை உடையதால், ''நீலம் வல் ஏறு'' என்றனர் என்க.

''கோளரி மாதவன் கோவிந்தனென்பான் ஓர்
காளை புகுதக் கனாக்கண்டேன் தோழீ! நான்''

என்றனர் நாச்சியாரும். திருமொழி 6.2. எம்பெருமான் திருக்கோலத்தைச் சுமந்து, ''பிரிந்தார் கொடுமை குழறு'' என்றது பிரிந்துபோன தலைவனின் கொடிய தன்மையைக் குழறுகின்ற ''தண் பூங்காலம் கொல் ஓ'' என்கிறார். பிரிந்தார் என்றது ''கார்காலம் வரும் முன் உன் முன் வந்து நிற்பேன்''என்று குழறிவிட்டுப்போன தலைவன் சொன்ன கார்காலம் இதுதானோ?என்பதாம் ''குழறுதல்'' என்ற சொல் அச்சத்தாலோ அல்லது வேறு ஏதாகிலும் ஒருகாரணத்தாலோ சொல்ல வேண்டிய சொல்லை முழுமையாகவோ அரைகுறை யாகவோ சொல்லுதல். குழறுபடி செய்தல் என்புழி. ''குழறு'' என்றதால் பிரிந்தார் குழறிய கொடுமை எனக் கொள்க. கொடுஞ் சொல் என்பதாம். ''குழறு தண்

பூங்காலம் கொல்லோ'' என்றது உளரி விட்டுப்போன குளிர்ந்த அழகிய கார்காலம் இதுதானோ? கார்காலம் வந்து விட்டதோ? அவன் சொன்ன சொல் தவறாமல் வந்து விடுவனோ? ''வினையாட்டியேன் காண் கின்றவே'' என்கிறார். ''வினையாட்டியேன்'' என்றது தீவினையுடைய நான் அவனைக் காண்கின்றவரை அவன் உண்மையிலேயே வருவானா அல்லது இல்லையா என்பதறியேன் என்றபடி. அவனைக் கண்ணால் கண்ட பின்தான் அவன் குழறி விட்டுப் போன சொல் உண்மையா என்பது புலனாகும் என்பதுவுமாம்.

இப்பாசுரத்தில் ''இது திருமால் கோலஞ் சுமந்த நீலம் வல்ஏறு பொரா நின்றவானம்'' என்கிறார். எம் பெருமானைக் கார்மேக வண்ணன் என்று திருப் பெயரிட்டு விண்ணப்பிப்பர். மூன்றாம் பாசுரத்தில் பிரிவாற்றாத தலைவி நெஞ்சழிந்து ''தழல் போல் சினத்த அப்புள்ளின் பின் போன தனி நெஞ்சமே நிற்கும் கொல் மீளும் கொல்'' என்று கூறியதை இங்கு நினைவு கொள்க. புள்ளேறிச் சென்ற தலைவன் கார் மேனியன். வானத்தைச் சூழ்ந்து நிற்கும் மேகங்களைக் கண்டு என் தலைவன் ''திருமால் கோலஞ் சுமந்து நின்ற வானம்'' என்கிறார். தலைவிக்குத் தலைவனிடம் கொண்ட ஈடுபாடு புலனாகும். எம்பெருமான் ''கேளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை'' ஆதலின் ''இது திருமால் கோலம் சுமந்த நீலம் வல் ஏறு'' எனக் காண்கிறார். இங்கு 'ஏறு' என்பதைக் காளை எனப் பொருள் கொள்க. எம்பெருமான் என்றும் காளை. கரியநிறம் கொண்ட காளை. எம்பெருமான் வானம் முழுவதுமாய் நிறைந்து சிறுநீர் பொழிவதாக ஆழ்வார் காண்கிறார். ஆடு மாடு இவற்றின் சிறுநீர் வளம் மிக்கவை. அதன் நீர்பட்டால் பயிர்கள் செழித்து வளரும். எம்பெருமான் காளையின் சிறுநீர் உலகை

உய்விக்கும் என்பதாகக் காண்கிறார் ஆதலின் "நல் நீரிட்டு" என்கிறார். கருடாழ்வார் மேல் என் தலைவன் தான் மீண்டும் எழுந்தருளினனோ என்றே காண்கிறார். அவன் திரும்புவான் என்பதற்கு இவையனைத்தும் அறி குறியோ. என்றபடி "வினையாட்டியேன் காண்கின் றேன் அறியேன்"என்றது பருவமடையாப் பாவை கூறு வதாகவும் அமைந்தது. ஆற்றாமையின் எல்லையைத் தொடுவதாகும், சிறுபிள்ளைத் தனமான இதற்கு உதாரணம்;

"பாரேர்களெல்லாம் மகிழப் பறைகறங்க
சீரார் குடமிரண்டேந்தி—செழுந்தெருவே
ஆராரெனச் சொல்லி ஆடுமதுகண்டு
ஏராரிளமுலையார் என்னையரும் எல்லாரும்
வாராயோ வென்றார்க்குச் சென்றேன் என்
வல்வினையால்"

என்று திருமங்கையாழ்வார் சிறியதிருமடலில் பாடியிருத் தல் காண்க. இதற்கான விளக்கம் அடியனேன் உரை நூல் பக்கம் 9.10 காண்க. வினையாட்டியேன்" என்று நம்மாழ்வாரும், "வல்வினையால்" என்று திருமங்கை யாரும் கூறியதன் தாத்பரியம் யாது எனின் எம் பெருமானுக்கும் ஆழ்வாருக்கும் யுகம் யுகமாய் இருந்து வரும் தொடர்பு, என்றென்றும் உள்ள வலிமை மிக்கதொடர்பு, பிராட்டித்தன்மை என்பதாம். இச் சொற்களுக்கு விதிப்பயன் என்றோ, தீய, நல்வினைப் பயன் என்றோ கொள்ளலாகாது. பிறப்பின் பயனே எம்பெருமானைச் சேர்ந்திட வேண்டுமன்பதாகும். வாழ்க்கையின் தத்துவவே அவன். அவனின்றி யாம் இல்லை என்றபடி.

"கொத்தலர் காவில் மணித்தடம் கண்படை
கொள்ளும் இளங்குயிலே! என்
தத்துவனை வரக் கூகிற்றியாகில்"

என்றனர் நாச்சியாரும் திருமொழி 5-6. நாச்சியாரும். ''என் தத்துவனை''யென்பது காண்க.

''மருங்கு இலா நங்கையும், வசைஇல் ஐயனும்
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினார்
கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால், பேசல்வேண்டுமோ!''

என்றனர் கம்ப நாட்டாழ்வாரும்... பாலகண்டம் மிதிலைக்காட்சி 38. அதனால்தான் நம்மாழ்வாரும் இப்பாசுரத்தில் ''நீலம்வல் ஏறு பொரா நின்றவானம் இது திருமால் கோலம்'' என்றனர் என்க.

அரும்பதவுரை : ஞாலம் பனிப்ப - உலகு நடுங்க. குளிர எனினுமாம். செறித்து - நெருக்கமாக அடர்த்தியாக. கால் -.காற்று. சிதைத்து - சிதறி. ஏறு - இடி. பொரா - பொருதும். போரிடும். நின்ற - நிலை நின்ற. கோலம் - அழகு. குழறு - தெளிவுபடச் சொல்லாது உளறுதல். வினையாட்டி - வினைப்பயனாய். தொல்வினைத் தொடர்பால். ஏறு - எருது. இளமை கடந்த ஆண்மிருகம் சிங்கம் இவற்றிற்கும் அமைதியும். சிலர் காளை யென்பர். 'இது' என்ற சொல்லை ''வானமிது'' என்றும் 'இது திருமால்' என்று இருபக்கமும் சேர்த்துப் பொருள்கொள்ள அமையும்.

(தலைவன் பொருள் வயிற் பிரிதல் குறிப்பாலறிந்த
தலைவி தோழிக்குக் கூறல்)

காண்கின்றனை களுங்கேட்கின்றனை களுங்காணி
விந்நாட்
பாண்குன்ற நாடர்பயில்கின்றன விதெல்லாமறிந்தோ
மாண்குன்ற மேந்தி தண் மாலை வேங்கடத்தும்
பர் நம்புஞ்
சேண்குன்றஞ் சென்று பொருள்படைப்பான்கற்ற
திண்ணனவே. 8

விளக்கவுரை : குன்றுகளையுடைய நாட்டிற்குத் தலைவன் இன்றைய நாளில் செய்யப்படுகின்றவையான காணப்படும் செயல்களும், கேள்விப்படும் சொற்களும் ஆய்ந்து காணுமிடத்து வெளித்தோற்றத்துக்கு மட்டும்தான். இவையெல்லாம் பெருமைமிக்க கோவர்த்தன மலையை ஏந்திய கண்ணபிரானது குளிர்ந்த திருவேங்கட மாமலையின் தேவர்கள் வந்து விரும்பித் தங்கும் உயர்ந்த சிகரத்தைச் சென்றடைந்து அங்கு பொருளீட்டும் பொருட்டுப் புதிதாகப் பயின்ற பெருமையின் செயல் என்று அறிந்தோம். பொருளீட்டும் பொருட்டுத் தலைவன் பிரிந்தான் என அறிந்தோம் என்றபடி.

திறனாய்வு : இப்பாசுரம் தலைவன் பொருள் வயிற்பிரிதல் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்தது, இதனை, தோழியை நோக்கிக் கூறியதாகக் கொள்ளாமல் தலைவனை நோக்கியே முன்னிலைப் படர்க்கையாகக் கூறியதாகவும் அமையும். தலைவன் பொருள்வயிற் பிரிதல் என்பது பற்றிய செய்தி அகநானூறு பாடிய புலவர்கள் அழகு படப் பொழிந்து சென்றுள்ளனர். ஆனால் அவர்கள் பாடியவையனைத்தும் அகவாழ்க்கையைப் பற்றியவை. ஆனால் நம்மாழ்வார் அகவாழ்க்கையில் ஈடுபாடு இல்லாமையால் பரவாழ்க்கையை அடைவதில் எம்பெருமானைத் தன் தலைவனாக ஏற்று பிராட்டி நிலையில் ஆற்றாமையை இவர் தம் பாசுரங்களில் அடுக்கிச் செல்கிறார். கருடாழ்வார் சுமந்து சென்ற என்தலைவன் எப்பொழுது வருவானோ என்ற ஏக்கம், அவன் சொல்லிப் போந்தவை அவள் தம் காதில் ரீங்காரம் செய்வதைக் காண்கிறார். இல்லாதவன் பொருள்தேடச் செல்கிறான். ஆனால் இவன் திருவேங்கடத்தானாயிற்றே, பொருள் வயிற்பிரிதல் என்பது இவனுக்கு எப்படிப் பொருந்தும் என்ற ஐயம்

மேலோங்குகிறது. அவன் உள்ளக் கருத்து என் என்பது அறியாது திகைக்கிறாள். "பொருள் படை பான் சுற்ற திண்ணளவே" என்று வியக்கிறா அய்யுறுகிறாள். ஆழ்வார் திருவுள்ளத்தெழு ஏக்கமும் ஏனைய தலை மகன் பால் மற்ற தலைமகட் ஏற்பட்டது போன்றதே.

"பண்பு இல் கோவலர் தாய் பிரித்துயாத்த
நெஞ்சு அமர்குழவிபோல, நொந்து நொந்து,
இன்னா மொழிதும் என்ப:
என் மயங்கினர் கொல், நம் காதலோரே?"

என்று பாடினர் காவன்முல்லைப்பூதனார் அக பாலை 293.

"திருமால் கோலஞ் சுமந்து பிரிந்தார் கொடுமை குழ
தண்பூங்காலம் கொலோ"

என்று சென்ற பாசுரத்தில் கூறியதை இங்கு நினை கொள்க.

"முள் உறழ் முளை எயிற்று அமிழ்து ஊறும்தீ நீரை
கள்ளினும் மகிழ்செயும் என உரைத்தும் அமைய
எ
ஒள் இழை திருத்துவர்; காதலர், மற்று அவர்
உள்ளுவது எவன்கொல் அறியேன்?' என்னும்"

"நுண் எழில் மாமமைச் சுணங்கு அணி ஆகம்தம்
கண்ணொடு தொடுத்தென நோக்கியும்
அமையார் எ
ஒள் நுதல் நீவுவர், காதலர்; மற்று, அவர்
எண்ணுவது எவன் கொல்? அறியேன்!' என்னும்

இவ்வாறு உள்ளுவது எவன் கொல்?எண்ணுவது எவ கொல்? என ஏங்கித் தவிப்பது பாலைக்கலி 4 - அ நானூற்றுப் பாடலும், கலித்தொகைப் பாடலு

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்தின் இப்பாசுரமும், தலைவன் பொருள் வயிற் பிரிதல் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்குக் கூறுவதாக அமைந்தவை அல்லது தோழி தலைமகற்கு உணர்த்துவதாய் அமைந்தது அல்லது தலைவனை நோக்கியே முன்னிலைப் படர்க்கையாகக் கூறியதென்றாலும் அமையும். இனி பாசுரம் செல்வழி காண்போம்.

எம்பெருமானைக் "குன்றம் நாடார்" என்கிறார். நாடர் என்றது நாட்டுடைத் தலைவன். அவன் நாடு செல்வம் கொழிக்கும் குன்றமுடைத்து ஆதலின் "குன்றம் நாடர்" என்றனர். "குன்றம் நாடர்" இன்றைய தினத்தில், பலவாறாக நடத்துகின்றவையான கண்ணால் காணப்படுகின்ற செய்கைகளாளும், காதால் கேட்கப்படுகின்ற சொற்களாலும் ஆகிய இவற்றை ஆய்ந்து காணுமிடத்து எனும் ஓர் ஐயப் பாட்டை வெளியிடுகிறார். "பயில்கின்றன" என்றது இப்பொழுது நடக்கும் செயல்கள். அவை. "காண்கின்றன" என்பது நேருக்குநேர் கண்களால் காணப் படுபவை. "கேட்கின்றன" என்பவை காதுகளால் கேட்கப்படுபவை. பிறர் சொல்லக் காதில் வந்து விழுபவை. கண்ணால் காணுபவையையும், காதால் கேட்பவையையும் நம்பாமல், கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீரவிசாரித்தறிவதே மெய் என்பதற்கொப்ப "காணில்" என்கிறார். தீர்க்கமாக ஆய்ந்து காணில் என்பதாம். ஆய்ந்து காணுமிடத்து, "மாண்குன்றம் ஏந்தி தண் மாமலை வேங்கடத்து உம்பர் நம்பும் சேண் குன்றம் சென்று பொருள்படைப்பான் இது எல்லாம்" என்கிறார். மாண் குன்றம் ஏந்தி என்றது மாட்சிமை மிக்கு கோவர்த்தன கிரியை ஏந்தி என்பதாம்.

"மலையையெடுத்து மகிழ்ந்து கல்மாரிகாத்துப்
பசுநிரைமேய்த்தாய்!"

என்றனர் பெரியாழ்வாரும். திருமொழி 3 - 8 ஐந்தாம் திருமொழியை காண்க. எம்பெருமான் திருவேங்கடத் தெழுந்தருளியிருப்பதை "தண் மாமலை வேங்கடத்து உம்பர் நம்பும் சேண் குன்றம்" என்றனர். திருவேங் கடம் இயற்கையாகவே எழில்மிகு குன்றம். எம்பெரு மானைத் தேடி வருவோர் மனதைக் குளிரவைப்பது.

"ஏத்துவார்தம் மனத்துள்ளான் இடவெந்தை
மேவிய எம்பிரான்
தீர்த்த நீர்த்தடஞ் சோலைசூழ் திருவேங்கடம்..."

என்றும்; (1-7-4)

"வேயேய்பூம் பொழில்சூழ் விரையார்
திருவேங்கடவா"

என்றும்; (1-9-1)

"கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலை
வேங்கடவா"

என்றும்; (1-10-8)

"கல்தேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை
வேங்கடவா"

என்றும்; (1-10-10)

திருமங்கையாழ்வார் ஆசை தீரப் பாடியிருத் தல் பெரிய திருமொழியில் நாற்பது பாசுரங் களில் திருவேங்கடவனை, தண்மாமலை வேங்கடத் தவனைப் பாடிப்பாடி மகிழ்கிறார். அத்தகு சிறப்பு வாய்ந்த திருவேங்கட மலையின் "உம்பர் நம்பும் சேண் குன்றம்" என்பது எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் சிகரம் உச்சி. "சேண்" என்ற சொல் மலை உச்சியைக் குறிப்பதாகும். இதனை "உம்பர் நம்பும் சேண் குன்றம்" என்றது தேவர்கள் விரும்பித் தொழ உயர்ந்தது சிகரம் என்பதாம்.

"வடமலையப்பன்னகஞ் சேர்ந்தவனிடை மங்கை கொங்கை
வடமலையப்பன்னரும் போகந்துய்த்தவன் மாயன் கண்ணன்
வடமலையப்பன்னருள் போற்றியைவர் மயக்குகர
வடமலையப்பன்னிரு நாமநாவின் மலக்குவனே"

என்று மலையப்பனை அற்புதமாகப் போற்றுவர் அழகிய மணவாளதாசர். திருவேங்கடத்தந்தாதி. 39

தேவர்கள் வந்து தொழும் திருவேங்கடம் "சென்று" "பொருள் படைப்பான்" அதாவது பொரு "ளீட்டுவான் என்பது "இதெல்லாம் பாண் கற்ற திண்ணனவே" என்று பிரித்துக் காண்க. அதாவது இவையனைத்தும் பொருளீட்டுவான் வழி திரு வேங்கடம் சென்றானென்பது வெளியுபசார மாத்திர மாம் என்க. "பாண்" என்ற சொல் புகழ்ந்து பேசுதல் அல்லது வெற்றுப் பேச்சு என்பதாம். "கற்ற திண்ணனவு" என்றது பெரிதாகக் கற்றுக் கொண்ட வலிமையின் செயல், சொல் என்றபடி.

"பொருள் வயிற் பிரிவு" என்பது சங்க கால நூல் களில் ஆங்காங்கு கூறப்பட்டுள்ளது. அவற்றிலிருந்து சிலசெய்யுட்களும் முன்னமே எடுத்தாளப்பட்டது. பொருள் வயிற் பிரிதல் என்பதால் தலைவன் பொரு ளினனாய்ப் பிரியுமென்பதானது, பொருளிலனாம் எனின் எள்ளநர்ப் பனித்தலும், இரந்தோர்க்கீதலும் நள்ளுநர் நாட்டலும் நயவரொறுத்தலும் எனும் இவையெலாம் பொருட் குறைபாடுடையார்க்கு நிகழாமையின் தலைவனை பொருள் வயிற் பிரிந்தான் என்பது பொருளிலனாய்ப் பிரியுமென்பதன்று. முதுகுர வராற் படைக்கப்பட்ட பொருள் கொண்டு வாழ்வு

நடாத்துதல் ஆண்மைக் கழகன்று என்றும் தனது தாளாற்றளாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தலே மேன்மையான வாழ்வு என்பதாகும். குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள் கொண்டு இல்லறம் செய்தால் அதனால் வரும் பயன் அவர் கட்குமாம் என்பதனால் தன்பொருள் கொண்டு குடும்பம் நடாத்துதல் பொருட்டுச் சென்றான் என்பதே ''பொருள் வயிற் பிரிவு'' என்பதாகும்.

இப்பாசுரத்தில் ''மாண்குன்ற மேந்தி'' என்று கண்ணன் அவதாரத்தில் கோவர்த்தன மலை ஏந்திக் கோ காத்ததும் ''தண்மாமலை வேங்கடத்து'' என்று திருவேங்கடத்து எழுந்தருளியதும் கூறியிருத்தல் எம்மெருமானின் இரு செயல்களையும் ஒருங்கே கூறி யிருத்தலாம். ஒரு மலையை மேலெடுத்தும்,மற்றுமோர் மலையின் மேல் நின்றும் காத்தருள்வன் என்பதாம்.

''பாண்'' என்றது பாணருடைய தொழிலைப் போற்றிப் புகழ்தலாம். வெளிக்குச் செய்யும் வழிபாடு. பொய்யாகச் செய்யும் ஒரு உபச்சாரம். காண்கின்றன றனகளும், கேட்கின்றனகளும் அதாவது தலைவன் தலைவிக்குச் செய்யும் இதுவரையில் செய்திராத சில செயல்கள், காலைப் பிடிப்பது, கையைப் பிடிப்பது அழகை மிகைப்படுத்திக் கூறுவது முதலியன காண்பவையும் கேட்பவையுமாம். பொய் உபச்சாரம் செய்யும் தலவைன், நீயே எல்லாம், நீயின்றி எனக்கு ஒரு பொருளும் வேண்டாம் என்று புகழ்ந்து பேசுதலும் இதன் வகைப்படும்.

எம்பெருமான் குன்றம் ஏந்திய கதை : திருவாய்ப் பாடியில் இந்திர விழாவின் பொழுது இந்திரனுக் கென்று சமைக்கப்பட்ட உணவை அவனுக்குப் படைக்காதபடி கோவர்தன மலைக்குப் படைக்கச்

சால்லிக் கண்ணபிரானே ஒரு பூத உருக்கொண்டு
முது செய்தருள இந்திரன் கடுங்கோபங்கொண்டு
ஷ்கலா வர்த்தம் எனும் பலமேகங்களை ஏவி எழுநாள்
டாது மழைபொழிய வைக்கக் கண்ணபிரான் மேய்
ன்ற கன்றுகளையும் பசுக்களையும் ஆயர்பாடி மக்
ளையும் அந்தணர்களையும் கோவர்த்தன மென்னும்
லையை எடுத்துக் குடையாகப் பிடித்து உயிர்களைக்
ாத்தருளினன் என்பதாம்.

அரும்பதவுரை : காணில் - ஆய்ந்து காணில்.
ாண் - வெளி உபச்சாரம். பாணர் பாடும் பாடல்
பான்ற புகழ்ச்சி. குன்ற நாடர் - குன்றுக்குத்
லைவன், குறிஞ்சி நிலத்தலைமைகன் என்பதுவுமாம்.
ன்ற நாடர் என்றது வன்னெஞ்சர் எனினுமாம்.
ன்றுதல் தாழ்தல் எனும் பொருளில் வருபவை.
யில்கின்றன - புதிதாக நடந்து கொள்வது. இதற்கு
ன் செய்திராததைச் செய்யத் துணிதல். இது
ல்லாம் - இந்தப் புதிதான செய்கை யெல்லாம்.
ாண் குன்றம் - மாட்சிமை மிக்க குன்றம். கோவர்தன
லை. எம்பெருமான் கையிலேந்தியமையால் மாண்
ன்றமெனச் சிறப்புப் பெற்றது. நாடர் - உயர்வுப்
ன்மை. குன்றமேந்தி - இது கண்ணனுக்கான பெயர்.
ன்றமேந்திதண் மாமலை - குன்றம் ஏந்தியவனான
ண்ணன் வதியும் பெரிய மலை. உம்பர் - ஆகாயம்.
மலிடம். தேவர் உலகம். அங்கு வாழ்வோருக்கான
ால் இடவாகு பெயர். இம்பர் இதன் எதிர்ச்சொல்
-ம்பர் நம்பும்-தேவர்கள் விரும்பித்தங்கும். மேலுலகம்
சன்றோரும் திரும்பிவந்து தொழும் இடம். சேண் -
கரம், ஆகாயம், உச்சி, சுவர்க்கம், தேவர் உலகு.
சண் குன்றம் - மிக உயர்ந்த சிகரம். வேங்கடவன்
ழுந்தருளியிருப்பதால் அது சேண் குன்றம் எனச்
றப்புற்றது. பொருள் படைப்பான் - பொருளீட்டு

வான். கற்ற - அறிந்த. புதிதாகக் கற்ற. திண்ணன் வலிமையால் எழுந்தது. புதிதாகக் கற்றவலிமையால் எழுந்த செயல்.

வேங்கடம் எனும் திருத்தேசம் திருமாலினது திருப்பதிகளுள் ஒன்று. வட நாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதன்மையானதாகக் கருதட் படுவது. தன்னையடைந்தவர் பாவ மனைத்தையும் அழிப்பதனால் பெற்ற சிறப்புப் பெயர், வேம் - பாவம். கடம் - எரித்தல். வேம் என்றால் அழி வின்மை என்றும், கடம் ஐசுவரியம் எனப் பொருள் கொண்டு என்றும் நீங்காத செல்வத்தைத் தந்தருளும் எம்பிரான் என்றதனால் இப்பெயர் பெற்றதென்பர். இப்பாசுரத்திற்கு இரண்டாமவதே பொருந்தும் எனக் காண்க.

(தலைவன் தலைவியின் நீங்லருமை கூறல்)

திண்பூஞ்சுடர் நுதிநேமியஞ் செல்வர்
விண்ணாடனைய
வண்பூமணி வல்லியாரே பிரிபவர் தாமிவையோ
கண்பூங்க மலங்கருஞ்சுடராடி வெண்முத்தரும்பி
வண்பூங்குவளை 'டமான் விழிக்கின்றமாயிதழே 9

விளக்கவுரை : அழகிய திரட்சிமிக்க ஒளி வீசும் கூர்மையுடைய சுதரிசநமென்னுந் திருவாழியையுடைய அழகிய செல்வம் யாவையும் தன்னகத்தே கொண்ட எம்பெருமானது பரமபதத்தை ஒத்த வண்ணமிகு அழகிய மலர்க்கொடி போன்றவளையாரே பிரிய வல்லார்? ஏனெனில் இவள் கண்கள் கண்களோ? தாமரை மலர்களாய், அழகிய செங்கழு நீர் மலர்களு மாய் பெரிய அகன்ற இதழ்களையுடையனவாய், கரிய

அஞ்சனத்தின் ஒளியுடன், கண்ணீர் வெண்முத்துக்க ளென அரும்பி மடமையுடைய மானோக்குடையன.

திறனாய்வு: தலைவன் பொருண் வயிற் பிரிதல் பற்றிக் குறிப்பால் அறிந்த தலைவி தோழிக்குக் கூறி யதைச் சென்ற பாசுரத்தில் ஆழ்வார் திருவுள்ளம் நமக்கு உணர்த்தியதைக் கண்டோம், தலைவன் பிரிதலை அவன் சொல்லும் முன்பாகவே குறிப்பால் அறிந்து கொள்ளுகிறாள் தலைவி. அவர்கள் இருவருக் கும் உள்ள ஈடுபாடு அத்தன்மையது. தலைவனது ஒவ்வொரு அசைவினின்றும் அவன் மனம் என்ன எண்ணுகிறது என்பதை உணர்ந்து கொள்கிறாள் தலைவி. இருவரும் ஒத்த மனத்தினராய் இருத்தலால் இது இயல்பாகவே நடந்து விடுகிறது. தலைவனும் இதற்கு விதிவிலக்கல்ல. தான் பிரிந்து செல்ல இருப் பதைத் தலைவி உணர்ந்து கொண்டாள் என்பதை யறிந்து அவளின் எழில் தோற்றத்தில் மாற்றங்களைக் காண்கிறான். எப்படியிருந்தவள் எப்படியாகி விட் டாள் என்று தனக்குத் தானே மனதில் எண்ணிப் பார்க்கிறான்.

"உறுகழி மருங்கின் ஓதமொடு மலர்ந்த
சிறுகரு நெய்தற்கண்போல் மாமலர்ப்
பெருந் தண் மாத் தழை இருந்த அல்குல்
ஐயஅரும்பிய சுணங்கின், வை எயிற்று,
மை ஈர்ஓதி, வாள்நுதல், குறுமகள்!"

என்று காண்கிறான் ஒரு நெய்தல் நிலத்தலைவன். அகம் 230. மற்றுமொரு நெய்தல் நிலத்தலைமகன்.

"பொன் அடர்ந்தன்ன ஒள் இணர்ச் செருந்திப்
பல் மலர் வேய்ந்த நலம் பெறு கோதையள்"

என்று எண்ணிப் பார்க்கிறான். அகம் 280. தலைவி மட்டும் தன்னைப் பிரியும் தலைவனை நினைந்து வருந்துவதில்லை. தலைவனும் தலைவியின் நிலை கண்டு எண்ணற்ற எண்ணங்களை மனத்தில் சுமக்கிறான் என்பதே இச்செய்யுட்கள் நமக்குப் புகட்டும் பாடமாகும். எம்பிரானும் ஆழவாரும் மனத்தால் ஒன்றுபட்டவர்கள். ஒத்த மனத்தினராய் வாழ வேண்டும் என்று பேரன்புகொண்டு ஒழுகும் தலைவன் தலைவியராய் ஒன்றுபட்டவர்கள். ''சேண் குன்றஞ் சென்று பொருள்படைப்பான்'' வேண்டிய எண்ணம் தன்னுள்ளத்து எழுந்ததைப் பிராட்டித் தன்மையடைந்த நம்மாழ்வார் உணர்ந்து கொண்டதை அறிந்து கொள்கிறார். பிராட்டியின் எழில் தோற்றம் கண்முன் நிழற்படமாக ஓடுகிறது. அவளுடைய கண்கள் பூங்கமலம். ''அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'' என்பது பழமொழி. அதிலும் கண்கள் மிகத் தெளிவாகக் காட்டிவிடுமாதலின் தலைவியின் கண்களை நினைவு கூர்கிறார். ''கண்பூங்கமலம்''என்கிறார்.

''பூங்கமலம்''என்றது அவள் கண்களின்அழகையும் மென்மையையும் குறிப்பது. கமல இதழ்கள் போன்ற நிறத்தாய் மென்மையாய் அழகாய் உள்ள கண்கள். அது வண்பூங்குவளை. ''வண்'' என்ற சொல் வண்ண மிகு என்ற பொருளில் வருவது, வர்ண ஜாலங்கள் செய்யும் என்பதாம். காதலியின் கண்களின் ஒவ்வொரு அசைவும் ஒருகோடி கதை சொல்லுமாதலின் ''வண்'' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். ''குவளை'' என்பது செங்கழுநீர் மலரைக் குறிக்கும். ''பூங்குவளை'' அழகிய அல்லது கூர்ந்து காணும் அல்லது வேல்போன்று பாயும் கரிய விழிகள் என்பதுமாம் அவள் விழிகளே குவளை மலர்கள் போன்ற கரு விழிகள். அவள்விழிகள் அஞ்சனம் பூசப் பெற்று இருக்கின்றன. இதனைக் ''கருஞ்சுடராடி'' என்கின்றனர்,

நீராடுதல் போல் அஞ்சனத்தில் மூழ்கி எழுந்ததால் ஒளி பெற்று விளங்குகிறது என்பதைச் "சுடர்" என்ற சொல் சேர்த்து விளக்குகிறார். இங்கு அஞ்சனம் என்று சொல்லாமல் "கருஞ்சுடர்" என்பது காண்க. அது கருமையாயிருப்பினும் ஒளிபடைத்தது. "ஒளி படைத்த கண்ணினோய்" எனப்புழி. இவ்வளவு சிறப்புப் பெற்ற கண்களில் முத்து முத்தாக நீர் அரும்பு கிறதைக் காண முடிகிறது. கண்ணில் தேங்கிக் கிடப்ப தால் "அரும்பி" என்கிறார். தேங்கி நிற்கும் நீர் வெண் முத்துக்களெனக் காட்சியளிக்கிறது. வெண்முத்துக்கள் என்றது ஒளிவீசும் முத்துக்கள் என்பதாம். கண் ஒளி பட்டு அங்கு தேங்கியிருக்கும் நீரும் ஒளிவீசுகிறது என்பதாம். இதனை வெளுத்த முத்துக்கள் போன்று எனின் அமையாது. "முத்து" என்ற சொல் கண்ணீ ரின் வடிவத்திற்கானது. நிறத்திற்கானதல்ல.

எம்பெருமான் தன் பிராட்டியின் கண் அழகை "பூங்கமலம்" என்றும் "பூங்குவளை" என்றும் கூறியதோடு நிறைவு பெறாதவராய் "மான் விழி" என்றும் மற்றுமோர் அடைமொழி கொடுத் தடுக்குகிறார். மான்விழிக்கு ஓர் அடை கொடுத்து "மடமான்விழி" என்கிறார். மானின் மருண்ட விழிகள். அத்தகு மருண்ட பார்வை அழகு சிந்துமாதலின் "மட மாண் விழி" என்றனர். "மடம்" என்ற சொல்லுக்கு அழகு எனப் பொருள் கொள்வதே சாலப் பொருந்தும். மடமை கொண்ட பார்வை எனினும் அமையும். தலைவியின் கண்கள் அகன்று நீண்டிருப்பவை. அக் கண்களின் இமைகளும் பெரிதாக அகன்று இருப்பதால் கண் இமைகளை "மா இதழ்" என்று சிறப்பிக்கிறார். "இதழே" என்றதிலுள்ள ஏகாரம் தேற்றமாக வியப்பு இரண்டையும் உணர்த்துவது காண்க. இப்பாசுரத்தின் இரண்டு வரிகளில் பிராட்டியின் கண்களையே சித்த ரித்த தலைவன் இத்தகு சிறப்பு மிக்க கண்களுக்குரிய

வள் அழகிய சிறந்த கொடி போன்றவள், பரம பதத்தைப் போன்றவள் எனக் காண்கிறார்.

இதனை, "திண்பூஞ்சுடர் நுதிநேமியம் செல்லர் விண்ணாடு அனைய வண்பூமணி வல்லி" என்று நீண்ட அடை கொடுத்துக் கூறுவது காண்க. "திண்பூஞ்சுடர் நுதிநேமியம்" என்று திருவாழியைச் சிறப்பிக்கிறார். திருமாலின் நேமியம் வலிமை மிக்கது. மென்மையான ஒளி வீசும் தன்மையது. பகைவரைத் தாக்கி அழிப்பதில் வைத்தகுறி தப்பாது இயங்கும் கூர்மையுடையது ஆதலின் "திண்பூஞ் சுடர் நுதி நேமியம்" என்றனர். சுதரிசனம் என்னும் சக்ராயுதம் கையிலேந்திய "செல்வர்" என்பது திருமாலைக் குறிப்பது,

"அங்கைத் தலத்திடை யாழி கொண்டான்"

என்பர் நாச்சியார். திருமொழி 12.4. அவர்வதியும் நாடு பரமபதம். அதனை 'விண்ணாடு' என்றது. மேலுலகம் என்பதாம். விண் ஆகாயம். அந்த விண்ணாட்டைப் போன்ற "வண்பூமணி வல்லி" என்றது பிராட்டி. எம்பெருமானது பரமபதத்தை யொத்த 'வண்பூங்குவலை' யென்றது போன்று, "வண்பூமணி வல்லி" என்கிறார். அழகிய மாணிக்க மணிகள் பதித்த மலர்க் கொடிபோன்ற இவளை "யாரே பிரிபவர்" பிரிபவர் யார்? யாரால் பிரிய இயலும்? என்பதாம்.

அரும்பதவுரை : நுதி-கூர்மை. நேமியம்-சுதரிசன மெனும் திருமாலின் சக்ராயுதம். சுடராடி-சுடரில் மூழ்கி. வெண்முத்து-ஒலி வீசும் முத்து. அரும்பி-தோன்றி. மடமான் - அழகியமான். மாயிதழ் - பெரிய இமைகள். நுதி, நேமி, வல்லி, கமலம் இவை வடசொற்கள்.

(மதியுடம் படுத்தலுற்ற தலைவன் குறையுறவுரைத்தல்)

மாயோன் வடதிருவேங்கட நாட வல்லிக்கொடிகா
ணோயோவுரைக்கிலுங் கேட்கின்றி லீருரையீர் நுமது
வாயோவது வன்றி வல்வினையேனுங் கிளியுமெள்கு
மாயோவடுந் தொண்டை யோவுறையோ
விதறிவரிதே 10

விளக்கவுரை: மாயைகள் செய்யும் எம்பெருமானது வட திருவேங்கட மலையை இடமாகக் கொண்ட, வல்லிக்கொடி போன்ற கன்னியரே! என்னுடைய காதல் நோயை நான் என்ன சொன்னாலும் கேட்டு அறிந்துகொள்ளவில்லை. உங்களுடைய வாயோ அதுவல்லாமல் கொடிய தீவினையையுடைய நானும் எனது கிளியும் தளர்ந்துபோகும்படி "ஆயோ" என்கிற சொல்லோ? தொண்டைப் பழம்போன்ற சிவந்த உங்கள் உதடுகளோ என்னைக் கொல்லும் தன்மையன. அதனை அறிந்து கொள்வதரிது சொல்லுவீர்களாக.

திறனாய்வு: ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பேரின்பம் பற்றிக் கூறும் பகுதிக்கு "அகப்பொருள்" என்பதாம். இவ்வகப் பொருள் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என மூவகைப்படும். இவற்றுள் ஐந்திணை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து திணைகளாக விரியும். கைக்கிளை என்பது ஒரு தலைக் காதல் என்றும், ஐந்திணை என்பது ஒத்த காதல் என்பதும், பெருந்திணை என்பது பொருந்தாக்காதல் என்பதாம். ஆழ்வார் பாசுரங்களில் அமைந்த காதல் ஐந்திணைக் காதல். அன்புடைக் காமம். இந்த அன்புடைக் காமத்துள் இப்பாசுரத்தில் ஆழ்வார் அருளியிருப்பது களவொழுக்கத்தின் ஊழான் எதிர்பட்டு இயைந்து

உளம்விரும்பித் தாமே கூடுவது. இதற்கு "இயற்கைப் புணர்ச்சி" என்று பெயர். இனி மதியுடம் படுதல் பற்றிப் பார்ப்போம்.

காதலர் இருவர் பாங்கற் கூட்டத்தினாலாவது இடந்தலைப் பாட்டினாலாவது சேர்ந்து விடுகின்றனர். இது யாருக்கும் தெரியாது நிகழ்ந்த நிகழ்ச்சி, பின்பு தலைமகளைக் கூடிய தலைமகன் தலைமகளும் தோழி யும் ஒருங்கு கூடிப் புனங்காத்திருக்கிற அமயம் நோக்கி அவரருகிற் சென்று அறிவித்துத் தோழியை மதியுடம் யடுத்துவது.

"இரந்துகுறையுறாது கிழவியுந்தோழியு,
மொருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கிப்,
பதியும் பெயரும் பிறவும் வினா அய்ப்,
புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து
மதியுடம் படுதற்கு முரியனென்ப"

என்ற இறையானார் அகப்பொருள். மதியுடம் படுத்தல் என்பது ஒரு சிக்கலான நிலை. ஒருவருக்கொருவர் அருகில் இருந்த காரணத்தாலோ அல்லது தனியாகச் சந்தித்தனாலோ தலைமகளைக் கூடிய தலைவன் தலைமகளின் தோழிக்கு இதை உணர்த்த அவர்கள் இருவரும் தனித்திருக்கையில் யாது மறியா தவன் போல் சென்று தனக்கு மனக்குறையிருப்பது போல் உரைத்தல். இதற்கு மதியுடம் படுத்தல்துறை யெனவும் பெயர்படும். இது தலைமகன் தோழிக் குரைத்தலாகும் அல்லது பாங்கர்க்குரைத்தலாகும். அதனாற்றான் "மாயோன் வட திருவேங்கட நாட வல்லிக் கொடிகாள்!" என்கிறார். திருமாலுக்கு மாயோன் என்ற சிறப்புப் பெயர் உண்டு.

"மாஅயோயே மாஅயோயே"

என்றனர். கடுவனிள வெயினனார். பரிபாடல் மூன்றாம் பாட்டு அடியனேன் "இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து" பக்கம் 44-47 காண்க.

> "விளியெனப்படுவது கொள்ளும் பெயரொடு
> தெளியத் தோன்று இயற்கைய என்ப"

என்றனர் தொல்காப்பியரும். சொல் அதிகாரம் விளிமரபு இப்பாசுரத்தில் மாயோய் என்று விளிக்காமல் " மாயோன்" என்று சுட்டுப் பெயராய் திருமாலை உணர்த்துவது திருமால் வதியும் நாடுகளில் வட திருவேங்கடமும் ஒன்றாதலின் "வட திருவேங்கட நாடன்" என்றனர். "வடவேங்கடம் தென்குமரி" என்றனர் தமிழகத்துக்கு எல்லை வகுத்தோர். ஆதலின் "வடவேங்கட நாடன் வல்லிக் கொடிகாள்" என்றது வடவேங்கட நாட்டிலுள்ள வல்லிக்கொடி போன்ற மங்கைமீர்! என்பதாகும். இங்கு "கொடி" மகளிருக்கானது. வல்லிக்கொடி தனித்து நிற்கும் வலிமையற்றது. மகளிரும் கணவனைத் தழுவியே யிருப்பராதலின் மகளிரை "வல்லிக் கொடிகாள்" என்றனர். என் தலைவியின் தோழியரே என்றபடி. தலைவியும் தலைவனும் இரண்டறக் கலந்து விட்டனர். என்றாலும் இவர்களின் காதல் முயக்கத்தைத் தோழியரும் அறிதல் வேண்டும் என்பதற்காகவும் தலைவியை மீண்டும் மீண்டும் புணரும் வேட்கையினாலும், தோழியரின் உதவி மிகமிகத் தேவைப்படுவதால், என் தலைவியின் தோழியரே! "நோயே உரைக்கிலும் கேட்கின்றிலீர்" என்கிறார். எனது காதல் நோயை உரைத்தாலும் கேட்க மாட்டாது இருக்கின்றீர் அதாவது தலைவியின் மனநிலையையும் அவளின் தோற்ற மாறுபாட்டைக் கண்டும் எங்களுக்குள்ள காதல் அறியாதவர்போல் இருக்கிறீர்கள் என்றபடியுமாம். சற்று வாயைத் திறந்து தான் சொல்லுங்களே என்பதுபோன்று "உரையீர்"

என்கிறார். "நுமது வாயோ அதுவன்றி வல்வினை யேனும் கிளியும் எள்கும் 'ஆயோ' தொண்டையோ அறையோ, அடும் இது அறிவதரிதே" என்கிறார்.

"நுமது வாயோ" என்றது உமது அல்லது உங்களுடைய வாயின் அழகோ என்பதாம். "வாயோ" என்றது வாய்மை தவறாத எனினுமாம். சொல் அழகோ எனினுமாம். 'அதுவன்றி' என்றது அது இல்லாமல் என்பதாம். "வல்வினையேனும் கிளியும் எள்கும் ஆயோ" என்றது வல்வினையோனா கிய நானும் கிளியும் தளர்ந்து போக "ஆயோ" என்று நீங்கள் எழுப்பும் ஒலியும் என்றபடி. ஆயலோட்டுதல் என்பது அறுவடை காலத்தில் கிளிகள் மற்றும் பறவை யினங்கள் வயல்களில் நன்கு விளைந்துள்ள கதிர் களைக் கொத்தி உண்டு சேதப்படுத்தி விடும். அது மாதிரி வரும் பறவைகளை விரட்டியடிக்க மகளிர் பரண்மேல் நின்று கொண்டு 'சோ, சோ' என்று விரட்டியடிப்பார்கள். இதற்கு ஆயலோட்டுதல் என்பது பெயர். முருகக் கடவுள் வள்ளியை மணக்க விரும்பி அவள் ஆயல் ஓட்டியிருக்கையில் சென்று அவள் கை பற்றி மணக்கும் செய்தி யாவரும் அறிந்ததே. அவ்வாறு மகளிர் ஆயலோட்டுவது கேட்பதற்கு இனிமையாகவும் ஓசை நயமுடனும் இருக்கும். இதனையே இங்கு "ஆயோ" என்றனர். எனினுமாம் "எள்கும்" என்றது இங்கு அச்சமடை யும் என்பதுமாம். சோ! சோ! என்று ஆயலோட்டும் பொழுது கதிர்களைக் கௌவியிருக்கும் கிளிகளும் பறவைகளும் பறந்தோடுவதைக் காண்பது கண் கொள்ளாக் காட்சி. ஆழ்வார் பெருந்தகை இக்காட்சியைத் திருவுள்ளம் கொண்டு இங்கு படைத் திருப்பது இன்ப மூட்டுவதாய் உள்ளது. "தொண்டையோ" என்றது ஆதொண்டைப் பழம்

போன்ற உங்கள் வாயுதடுகளோ! அல்லது அவ்வுதடு களிலிருந்து வெளி வரும் சொற்களோ எனவியக்கிறார். "அறை" என்றது சொல் எனப் பொருள்படும். "ஆதொண்டையோ அறையோ" என இவ்விரு சொற் களையும் ஒள்றன்பின் ஒன்றாக வைத்து அம்மகளிரின் சிவந்த உதடுகளையும் அவ்வுதடுகள் வெளித்தள்ளும் ஒலிகளையும் சிறப்பிக்கிறார். "தொண்டையோ அறையோ அடும் இது அறிது அரிது உரையீர்" என்கிறார். சோ! சோ! எனும் ஆயலோட்டுதல் கிளி களை அச்சமடையச் செய்யும். ஆனால் அம்மகளிரின் ஆதொண்டைவாய் உதடுகளோ அல்லது அவை உதிர்க்கும் சொற்களோ உயிர்க் கொலை செய்யும் கொடியது. இவற்றில் இன்னது என்னை வருத்தும் என்பது அறிய அரிய தாயுள்ளது, சொல்லுங்கள் என்பதாம்.

இப்பாசுரம் களவொழுக்கத்தின் பாற் பிறந்ததாகப் பட்டாலும் எம்பெருமானுக்கு ஆழ்வாருக்கும் ஏற்பட்ட இயற்கைப் புணர்ச்சியைப் பற்றிப் கூறுவதாகும். "களவு" என்பது பிறப்பு, உருவு, பருவம். நிறை, அருள், உணர்வு ஆகிய இயல்புகளில் ஒத்திருந்து தலைவனும் தலைவியும் ஊழின் காரணமாகக் காதல் கொண்டு கடிமணம் செய்து கொள்தற்கு முன்பே பிறர் அறியாமல் சந்தித்துக் கூடி இன்புறுவது. இதுவே களவு ஆகும். ஆழ்வார் எம்பெருமானை என்றும் மனத்துள் கொண்டவர். எம்பெருமான் மேல் கொண் டிருந்த உறவு யாரும் அறியாததொன்று. இவ்விருவர் சந்திப்பும் யாவருக்கும் தெரியாது. நம்மாழ்வார் கண்ணன்பால் கொண்டுள்ள காதல் யாரும் அறியாத ஒன்று. இந்த நிலையில் தலைவியைப் புணர்ந்த தலைமகன் எம்பிரான் அந்த இயற்கை புணர்ச்சியினை உலகுக்கு அறிவிப்பதாகவும் அமைந்தது இப்பாசுரம்.

சிறப்பான கற்பனை நயமுள்ள இப்பாசுரம் கற்போரைக் களிப்பில் ஆழ்த்தவல்லது.

அரும்பதவுரை : மாயோன்—மாயையுடையவன், யாவருக்கு தெரியாத இயல்புகளுடையவன். இறைவன் குண இயல்புகளுள் ஒன்று. வல்லிக்கொடிகள்—வல்லிக்கொடி போன்ற மகளிர். நோயோ—நோய். ஓ இழிவு சிறப்பு. இரக்கமுமாம். உரையீர் - சொல்லுங்கள். சொல்லமாட்டீர்களா. நுமது - உமது வாயோ - வாயின் அழகோ. சொல் அழகோ. வல்வினை - தீவினை. எள்கும் - நடுங்கும். நகையாடும். ஆயோ - சொல் போக்கோ. அடும் - சுடும். கொல்லும். தொண்டை - ஆதொண்டை போன்ற உதடுகள். அறை - சொல்

(பிரிவாற்றாத தலைவியின் வேறுபாடு கண்டு
தலைவன் உரைத்தல்)

அரியன யாமின்று காண்கின்றன கண்ணன்
விண்ணனையாய்
பெரியனகாதம் பொருட்கோபிரிவென ஞாலமெய்தற்
குரியனவொண் முத்தும்பைம் பொன்னுமேந்தி
யொரோ குடங்கைப்
பெரியன கெண்டைக்குல மிவையோ வந்து
பேர்கின்றவே. 11

விளக்கவுரை : நாம் இப்பொழுது காண்பது உலகில் எங்கும் காண்பதுரிது. எம்பெருமானது பரமபதம் போன்ற பேரின்பம் தந்தருளுபவனே! பொருளீட்டுதற்காகப் பல காததூரம் தலைமகன் பிரிந்து சென்றான் என்று கூற உலகம் யாவையும் தம்

வசமாகப் பெறுதற்கு உரியவையும் தனித்தனி ஒரு உள்ளங்கையளவுள்ளதும் ஆகிய கெண்டைமீன்களின் இனமான இக்கண்கள் பிரிவாற்றாமையால் சிந்திய கண்ணீர்த் துளிகள் எனும் ஒளிவீசிம் முத்துக்களையும், பசலை நிறம்படர்ந்த என்மேனி எனும் பசும் பொன்னையும் கொண்டு வந்து என்முன் வந்து உலாவுகின்றன. இது என்னவோ!

திறனாய்வு : கன்னியொருத் ஆற்றங் கரைக்குச் சென்று ஆவலுடன் நீர் அருந்த இருகை களாலும் நீரை அள்ளிப் பருக முற்படுகிறாள். உடனே அலறிக்கொண்டு கெண்டை! கெண்டை! யென நீரைக் கரையில் கொட்டி விட்டு வியந்து பார்க்கிறாள். தான் அஞ்சியது போல் கெண்டைமீன் ஒன்று மில்லாதது கண்டு, தன் கண்கள் அவள் குடங்கைக் குளத்துள் கெண்டையெனத் தோன்றியது என்ப துணர்ந்து நாணமுறுகிறாள். நம்மாழ்வார் இப்பாசுரத் தில் "குடங்கைப் பெரியன கெண்டை குலம் இவை வந்து பேர்கின்றவே ஓ" என்கிறார். குடங்கை என்பது உள்ளங்கை. குடங்கையென அகன்ற கெண்டை விழிகள் என்பதை இவ்வாறு சிறப்பிக்கிறார். மகளிர் விழிகளின் மேல் புலவர் யாவருக்கும் ஒரு கண். சீவக சிந்தாமணி பாடிய திருத்தக்கத் தேவர் "குடங்கைப் பெரியன கெண்டைக்குலம்" இவையென்பதை ஆங்காங்கு பாடி மகிழ்ந்திருக்கிறார்.

"கொண்டார் குடங்கை யளவேயுள
கண்ணினாளை"—பதிகம் 17

"குடங்கை யுண்கணாள் கொண்ட பண்ணையுள்"
குணமாலையாரிலம்பகம் 139

"குடங்கையி னெடிய கண்ணாற் குமரன்மே
னோக்கினாளே"—பதுமையாரிலம் பகம் 125

"குடங்கையி னெடியன குவளை யுண்கணே"

சுரமஞ்சரியாரிலம்பகம் 11-1

ஒல்கிப்போய் மாடஞ் சேர்ந்தா ரொருதடங்
குடங்கைக் கண்ணார்—

இலக்கணையாரிலம்பகம் 158

"ஒரு குடங்கைக் கண்ணா லுளங்கழிய வே......"
முத்தியிலம்பகம் 541

நம்மாழ்வாரும் இச்சிறப்புமிக்க சொல்லைக் கையாண்டு தன்புலமைத் திறனுக்கு நிகர் இலர் எனக் காண்பிக்கிறார். ஆழ்வார் படைத்திருக்கும் தலைமகள் "கண்ணன் விண்ணனையாள்" என்பது வேறு யாருமல்ல நம்மாழ்வாரேயாவார். கண்ணன் வதியும் விண்ணகரம் போன்ற பெருமை மிக்கவளே! என்பதாம். "யாம் இன்று காண்கின்றன அரியன" அருமையானவை வேறு எங்கும் காணக் கிடைக்காத ஒன்று என்பதாம். தலைவன் "பொருட்கோ பெரியன காதம் பிரிவு என ஞாலம் எய்தற்கு உரியன" என்கிறார். "பொருட்கோ" என்றது பொருளீட்டுதற்கு பொருளீட்டும் பொருட்டாக என்பதாம். "பெரியன காதம் பிரிவு" என்றது நீண்ட பலகாததூரம் பிரிந்து செல்வது என்பது, என்று கூறுவது, எல்லா உலகங்களையும், உலகம் யாவையும் தன்வயப்படுத்தற்கு உரியவையும் என்பதாம்.

பொருலீட்டடல் பொருட்டு தலைமகன் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணி, தன் எண்ணத்தை முழுமையாக உடனே சொல்லாமல் தான் வெளியூர்

செல்ல இருப்பதைத் தன் செய்கைகளால் உணர்த்து கிறான். தான் செல்ல வேண்டியதன் அவசியத்தை அவ்வப்போது சொல்லி வருகிறான். தலைவனின் செயல்பாடுகளையும் சொல் வேறுபாடுகளையும் கண்ட தலைமகள் கணவன் தன்னைப் பிரிந்து செல்ல திட்டமிட்டுள்ளான் என்பதை நன்கு உணர்ந்த வளாய்க் கண்களில் நீர்மல்க நிற்கக் கண்ட தலைவன், பொருள்வயிற் பிரிதல் என்பது இயற்கையெனக் கூறுகிறான்.

"அரும்பொருள் செய்வினை தப்பற்கும் உரித்தே;
பெருந்தேள் அரிவை தகைத்தற்கும் உரியள்;
செல்லாய் ஆயினே நன்றே—
மெல்லம் புலம்ப! இவழ் அழப் பிரிந்தே"

என்பது ஐங்குறு நூறு தரும் பாலைக் காட்சி. 302.

நம்மாழ்வார் இதே காட்சியினை இங்கு படைத்துக் காண்பிக்கிறார்.

தலைவி 'அப்பிரிவு எனக்கு நேருமாயின் யான் என் செய்வேன்?' என்று வேதனையால் நிறமாற்றம் பெற்றதனையும் கண்ணீர் மல்கி நின்றதனையும் "ஒள் முத்தம் பைம்பொன்" என்கிறார். அவள் கண்களில் ஒளிவீசும் முத்துக்களும் அவள் உடல் தலைவனைத் பிரிய இருக்கும் சோகத்தால் நிறம் மாறுதலைப் "பைம் பொன்" என்றும், தலைவன் பொருள்வயின் பிரிவதா யின் 'முத்தும் பொன்னும்' இவள்வயின் இருப்பதால் இவளை ஏன் பிரியவேண்டும் என்பதாகக் காண்பிக் கிறார்.

இத்தகைய முத்தும் பொன்னும் ஏந்தி வருவது "ஒரோ குடங்கை பெரியன கெண்டை குலம் இவை ஒள் முத்தும் பைம் பொன்னும் ஏந்திவந்து பேர் கின்ற',

என்று தலைவன் தேடிச் செல்லும் செல்வம் வந்து இவளின் உள்ளங்கையளவேயுள்ள கெண்டை மீன் களின் இனமான இவள் கண்களில் தேங்கிக்கிடக் கின்றன "ஓ" இது என்ன வியப்பு என்கிறார்.

"முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு"

என்றனர் வள்ளுவரும். 1113

நீ தேடிச் செல்வன அனைத்தும் இவள்கண் உள வாதலின் பிரிதல் ஏன் என்பதாகும். தலைமகளைத் தலைமகன் "கண்ணன் விண்ணனையாய்" என்றதும், "ஞால மெய்தற் குரியன" என்பதும் மூவுலகும் விலை யாகப் பெறுதற்கு உரியவை என்பதுமாம். இப்பாசுரத் தில் முத்து கண்ணீருக்கும் நிறம் அதாவது அவள் அடைந்த நிற மாற்றம் பொன்னுக்கும் உவமையாகும். "குடங்கை" என்பதில் வரும் "குட" என்பது வளைந்த என்ற பொருளில் வரும். கையை நீர் அள்ளப் பயன்படுத்துவது போன்று வளைக்கும்போது தான் அது குடங்கையாகிறது. "குடங்கைப் பெரியன கெண்டைக் குலம்" என்றதால் குடங்கை போன்று பெரிய அகன்ற நீண்ட கெண்டை விழிகள் என்பதா கும். குடங்கை என்பதனைக் குடம் கையெனவும் காண அமையும். நீர்க்குளத்து வாழும் கெண்டையும். கட்குளத்து வாழும் விழிகளும் ஒருகுலமாயின காண்க.

இப்பாசுரம் பிரிவாற்றாத தலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைத்தலாகும். இப்பாசுரத்தால் எம்பெருமானுக்கு நம்மாழ்வாரிடத்துள்ள ஈடுபாடு 'உள்ளங்கை நெல்லிக்கனி'. "அரியன யாமின்று காண்கின்றன" என்று தன் தலைவியைப் பார்த்து வியக்கிறார். "கண்ணன் விண்ணனையாள்" என்னும்

பொழுது இவளுக்கும் மேன்மையானோர் இல்லை எனினுமாம். கண்ணபிரான் திருமணம் செய்துகொண்ட 16108 மனைவியருளினும் இவள் சிறந்தவள் என்றபடி.

இவள் எனக்குக் கிடைத்திருப்பது இந்த "ஞாலம் எய்தற்கு உரியன" என்கிறார். "கண்ணன் விண்ணனையாள்" என்றதால் மூவுலகையும் அடைதற்குரியவள் இவளுக்கு ஈடாக வேறு எவ்வுலகிலும் காண இயலாது என்பதுவுமாம். உலகத்தாரனை வரையும் தன்வயப்படுத்த இவள் ஒருவளே போதும். இவ்வுலகத்தார் அனைவரையும் வைணவ மார்க்கத்தில் இழுக்கும் வலிமை மிக்கவர் நம்மாழ்வார் என்பதாம்.

அரும்பதவுரை : அரியன - அருமையான. கிடைத்தற்கரிய. கண்ணன் விண்ணனையாள் - பரமபதம் போன்றவள், ஈடுஇணை யற்றவள். பெரியனகாதம் - நீண்ட வழி, காதம் என்பது ஒரு தூர அளவை. பொருட்கோ - பொருள் கொள்ளவோ. பொருளீட்டு தற்கோ. ஞாலம் - பூமி. எய்தல் - அடைதல். ஒண் முத்தம் - ஒள் முத்தம். ஒளிபடைத்த முத்துக்கள். பைம் பொன் - பசும்பொன். ஒரோ - ஒவ்வொரு. குடங்கை - உள்ளங்கை கெண்டைக்குலம் - கெண்டை மீனின் இனம். பேர்கின்றன - உலவுகின்றன.

(தலைவன் பிரியப் பெற்ற தலைவி, தன் ஆற்றாமை கூறி நெஞ்சொடு கலாய்த்தல்)

பேர்கின்ற துமணி மாமை பிறங்கியள்ளற் பயலை<br>
யூர்கின்ற துகங்கு லூழிகளே யிதெல்லா மினவே<br>
யீர்கின்ற சக்கரத் தெம்பெருமான் கண்ணன்<br>
தண்ணந்துழாய்<br>
சார்கின்ற நனனெஞ்சினார் தந்துபோன<br>
தனிவளமே 12

விளக்கவுரை : எனது மேனியழகு வேறுபடு கின்றது. பசலை நிறமானது அடர்ந்து மேல் மேலும் பரவுகின்றது. இரவு அநேக கல்பங்களாக நீடிக் கின்றது இத்தன்மையான இவை யாவும் தீயவரை அழிக்கவல்ல திரு ஆழியை உடைய எமது தலைவன் கண்ணபிரானின் குளிர்ந்த அழகிய திருத்துழாயினை அடைந்திட ஆவல் கொண்ட எனது நல்ல மனமானது தான் என்னைவிட்டு அவனிடம் சொல்லுகின்றபோது எனக்குக் கொடுத்துவிட்டுச் சென்ற ஒப்பற்ற தனிச் சிறப்பு என்பதறிவாய்.

திறனாய்வு: சென்ற பாசுரத்தில், "பெரியன காதம் பொருட்கோ பிரிவென ஞாலமெய்தற்குரியன வொண் முத்தும் பைம்பொன்னு மேந்தி குடங்கைப் பேர் கின்றவே" என்றனர். அதனையே இங்கு, "மணி மாமைபேர்கின்றது" என்கிறார். "பிறங்கி அள்ளல் பயலை ஊர்கின்றது" என்றார். முன்பாசுரத்தின் "பைம்பொன்" இங்கு "பேர்கின்றது". தலைவனைப் பிரிந்ததால் எனது மாமை நிறம் மாறுபடுகின்றது. மாமை என்றால் அழகு எழில். இளம் கன்னியரின் தோற்றம், பூத்துக் குலுங்கும் எழில் தோற்றம் அத்தகு நிறம் மாறுகின்றது என்கிறார்.

வெளிரிப்போதல். என்பது சோகை பிடித்தது போன்று தோன்றுதல். "மணிமாமை" என்று இளமை அழகுக்குமணிகள் பதித்துஅலங்கரித்திருப்பது காண்க. மாமை மறையக் பசலை படரும். ஆதலின் "பிறங்கி அள்ளல்பசலை ஊர்கின்றது"என்கிறார். பசலை நோய் பரவுகின்றது, இப்பசலை நிறம் பைம் பொன் போன்ற நிற மாதலின் சென்ற பாசுரத்தில் "பைம் பொன்னு மேந்தி" என்றனர். இக்கொடிய பசலை நோய் ஊர்ந்து உடலெங்கும் பரவுகிறது என்பதாம். காதல் நோயால் ஊன் உறக்கமின்றியிருப்பதால் இரவு அநேக ஊழிக் காலம் போன்று இருக்கிறது எனக் காண்கிறார்.

இதனை "கய்குல் ஊழிகளே" என்கிறார். "ஊழி களே" என்ற ஏகாரச் சேர்க்கையால் பல ஊழிகளை உள்ளடக்கிய ஓர் இரவு எனப்படும். கணவனைப் பிரிந்தார்க்கு ஓர் இரவு என்பது பல ஊழிக்காலங்கள் ஒன்று சேர்ந்தன போன்றது. "ஊழிகளீர்வனவே', என்றனர் பிறரும்.

"ஊழிபல வோரிரவாயிற்றோ"

என்றனர் புகழேந்தியார். நளவெண்பா சுயம்வர காண்டம் அடியனேன் உரை நூல் பக்கம் 130 காண்க.

"மணந்தார் தமக்கொ ரிமைப் பொழுது
மாறாக் காதன் மகிழ்நர் புயந்
தணந்தார்க் கூழியாகுமென்"

என்றனர் அதிவீரராம பாண்டியனார். நைடதம். அடியனேன். உரைநூல் பக்கம் 289 காண்க. திருமங்கையாழ்வாரும்,

"ஊழியின் பெரிதால் நாழிகை யென்னும்
ஒண்சுடர் துயின்ற தாலென்னும்
ஆழியும் புலம்பும் அன்றிலும் உறங்கா
தென்றலும் தீயினிற் கொடிதாம்..."

என்றனர். பெரிய திருமொழி 2.7.4.

மாலைப் பொழுது பிரிந்தார்க்குச் செய்யும் கொடுமை மேலும் காண்க.

"கூற்று நக்கது போலும், உட்குவரு கடுமாலை!
மாலைநீ—உள்ளம் கொண்டு அகன்றவர் துணை
தாராப் பொழுதின் கண்

வெள்ள மான்நிறம் நோக்கிக் கணை தொடுக்கும்
கொடியான் போல்
அல்லற்பட்டு இருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ?
மாலை நீ—ஈரம் இல் காதலர் இகந்து, அருளா
இடன்நோக்கி
போர் தொலைந்து இருந்தாரைப்பாடு எள்ளி
நகுவார் போல்
ஆர்அருர் உற்றாரை அணங்கி வந்தாயோ?
மாலைநீ—கந்து ஆதல்சான்றவர் களைதாராப்
பொழுதின்கண்
வெந்தது ஓர் புண்ணின்கண் வேல் கொண்டு
நுழைப்பான் போல்
காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய
வந்தாயோ?''

என்பது நெய்தற்கலி 120-9-19. கலித்தொகை நெய்தலில் இது போன்று மாலைப் பொழுதைச் சாடும் பாடல்கள் ஆங்காங்கு காணலாம்.

இவையனைத்தும் ஒருங்கு திரட்டியது போன்று ''கங்குல் ஊழிகளே'' என்றனர் நம்மாழ்வார். திருமங்கையாழ்வாரும். ''ஊழியின் பெரிதால் நாழிகை'' என்றதும் காண்க. ஊழிக்காலம் என்பது பிரம்மாவின் ஆயுட்காலம் முடிவு. பிரளயத்தால் உலகம் அழியும் காலம். அடியனேன். ''இந்து சமயச் சொல் அகராதி'' கண்டு தெளிக.

இவையனைத்தும் செய்தது. அதாவது மணிமாமை வேறுபடா நின்றது, பிறங்கி அள்ளல் பயலை மேமேற் பரவா நின்றது, இரவு அநேக கற்பங்களாக நின்றது ஆகிய இவற்றையெல்லாம் தந்தவன். இவற்றிற்கான காரணம் யார் எனின், ''எம்பெருமான் கண்ணன்'' என்கிறார். ''ஈர்கின்ற சக்கரத்து எம்பெருமான்''

என்கிறார். ஈர்தல் என்பது இங்கு இரு பொருளில் வருவது. அறுத்தல், கவர்தல் என்பன. எம்பெருமான் சக்ரதாரியாதலின் அவன் சக்ராயுதம் தீயவரை ஈர்த் தழித்து விடும் என்பதும், அன்புடையாரை ஈர்த் திழுக்கும் சக்கரம் என்பதுவுமாம். சக்ராயுதம் ஈர்த் தழிக்கும் அல்லது இழுத்தணைக்கும். ஆனால் காதல் செய்து கொடுமை விளைவித்ததாக எங்கும் கூறப்பட வில்லை, அத்தொழிலுக்கே உரியது அவன் "தண் அம் துழாய்". அதனைச் "சார்கின்ற நன்னெஞ்சினார் தந்து போன தனிவளம் இனவே" என்கிறார். எம்பிரானது திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்டுச் சென்றதால் வந்தவினை என்பதாகும். குளிர்ந்த அழகிய துளசி மாலை வயப்படாதார் யாரே இருப்பார்? ஆதலின் "சார்கின்ற நல் நெஞ்சினர்" தந்து போன, கொடுத்துச் சென்ற "தனி வளமே" என்கின்றார். ஒப்பற்ற வளப்பங்களே "இனவே" என்கிறார். "தனி வளம் இனவே" எனச் சேர்த்துப் பொருள் காண்பதே முழுமையுடையதாக இருக்கும். நல்நெஞ்சர் தனி வளமும் இது போன்றவையும் என்பதாம். "இனவே" என்றது கண்ணன் துளசி மாலையும் இது போன்றதும் என்பதாம். இதனை;

"வண்ணவாடை கொண்டு என்னை வாட்டம்
தணிய வீசிரே"

என்றும்;

"நீலார் தண்ணந்துழாய் கொண்டு என்நெறிமென்
குழல்மேல் சூட்டீரே"

என்றும்;

"அவன் மார்பணிந்த வனமாலை வஞ்சியாதே
தருமாகில்
மார்பில் கொணர்ந்து பூட்டீரே"

என்றும்;

"ஆராவமுதனையான்தன் அமுதவாயிலூறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி
இளப்பை நீக்கிரே"

என்றும்;

"......நெடுமா லூதிவருகின்ற
குழலின் தொளைவாய் நீர் கொண்டு குளிர
முகத்துத்தடவீரே"

என்றும்; பலவாறும் நாச்சியார் திருமொழியமுதம் இதனை வலியுறுத்தும். 13ம் திருமொழி.

"நன்னெஞ்சினார்" என்றது மற்ற ஆழ்வார்களையும் எம்பெருமானது பாதகமலத்தில் தலைதாழ்த்திக் கிடக்கும் அடியார்களனை வரையும் குறிப்பதாகும். ஆகவே "இனவே"என்றது இத்தகு அடியார்களையும் குறிப்பதாகும்.

அரும்பதவுரை : பேர்கின்ற - வேறுபடுகின்ற. மாறுபடுகின்ற. பெயர்கின்ற. மணிமாமை - அழகிய நிறம். மாமை - நிறம்.பிறங்கி - விளங்கி. பிறங்குதல் - விளங்குதல், சிறத்தல். செறிதல். அள்ளல் - சேர்ந்தெடுத்தல் அள்ளிக்கொளல், அள்ளியெடுத்தல். பயலை-பசலை நிறம், சோகை நிறம். பைம்பொன்னிறம். அழகுத் தேமல். ஊர்கின்றது - பரவுகின்றது. கங்குல்- இரவு. ஊழி - ஊழிக்காலம், உலக முடிவு, இனவே - இது போன்றவையே. ஈர்கின்ற - அறுக்கும். இழக்கும். சார்கின்ற - சார்ந்திருக்கின்ற. தனிவளம் - தனிப்பட்ட ஒப்பில்லாத வளப்பம். இருஏகாரமும் தேற்றமாகவே கொள்க. அள்ளல்தொழிற் பெயர். பயலை, பசலையென்பதன் போலி,

(பிரிவற்றாத தலைவி இருளுக்கும் வாடைக்கும் இரங்கல்)

**தனிவளர் செங்கோனடாவுதழல் வாயரசவியப்**
**பணிவளர் செங்கோலிருள் வீற்றிருந்த பார்முழுதுந்**
**துனிவளர் காதற்றுழாயைத் துழாவுதண்வாடை தடிந்**
**தினிவளை காப்பவராரெனையூழி களீர்வனவே. 13**

விளக்கவுரை ; பகைமையின்றித் தனித்து வளரும் தன்மையதான செங்கோல் செலுத்துகிற வெப்பக் கதிர் களையுடைய ஞாயிறு எனும் மன்னன் நீங்கிப்போக, மக்களுக்கு நடுக்கத்தைத் தருவதில் செம்மையாக ஆட்சி செய்யும் இருளாகிய அரசு நிலமெங்கும் பரவி அரசோச்சியிருக்க, இனிமேல் துன்பத்தை மிகுதியாகச் செய்கின்ற என் வேட்கைக்கு இலக்கான எம் தலைவனது திருத்துழாய் மாலையை உளைந்து வருகின்ற குளிர்காற்றை அழித்து, பிரிவாற்றாமையால் கழன்ற எனது வளைகளைக் கழலவொட்டாது தடுத் துப் பாதுகாப்பவர் யார் உளர். கல்பங்களென நீண்ட இரவு என்னைப் பிளக்கிறதே.

திறனாய்வு : இப்பாசுரத்தைப் பயிலும்பொழுது அதிவீரராம பாண்டியனாரின் நைடதம் எனும் நூலி லிருந்து ஒரு செய்யுள் நினைவில் ஓடுகிறது. இப்பாசுரத் திற்கும் செய்யுளுக்குமான சொற்கள் வேறுபட்டாலும், பொருள் ஒன்றே என்பது காண்க.

“பொருவி லாழியொன் றுருட்டியெப்புவனமும் விளக்கு
மிரவி மன்னவ னிறத்தலு மெதிர்ந்தபுன் மாலை
பரவை மாநில முழுவதும் பரிப்பவ னிற்றப்ப
விரவு வெந்தொழிற் குறுநில வேந்து போன்றுளதே”

நைடதம். அடியனேன் உரை நூல் பக்கம் 252-53 காண்க. இது கதிரவன் மறைந்ததும் சந்திரன் குறுநில

வேந்து போன்று தோன்றியதாகக் கூறும் பாடல். நம்மாழ்வார் அருளிய பாசுரத்தைக் காண்போம். "தனிவளர் செங்கோல் நடாவுதழல் வாய் அரசு" என்றது கதிரவன். கதிரவன் மேற்கில் மறைய என்பதை "அவிய" என்கின்றார். விளக்கு அவிய இருள் சூழ்ந்ததே போன்று 'அவிய' எனும் சொல் கையாளப் பட்டுள்ளது. ஞாயிற்றின் ஆட்சியை "தனிவளர் செங்கோல் நடாவு தழல்வாய் அரசு" என்கிறார். கதிரவன் காலையில் தோன்றி வளர்ந்து மதியம் மாலை யென முதுமையடைதல் பற்றியும், அதற்கு ஈடாக யாரும் இல்லையென்பது பற்றியும் 'தனிவளர்' அதாவது தனித்து வளரும் தன்மையாகவும் அதன் ஆட்சி சிறப்பை "செங்கோல் நாடவும்" என்கிறார். நல்லாட்சி நடாத்துவதும் என்பதாம்.

"நடாவும்" என்பது எங்கும் ஒப்பத் தடையறச் செலுத்துகிற ஆட்சி என்பதாம், கதிரவன் எழுந்ததும் மற்றைய ஒளிகள் மங்கி ஒளியற்றுப் போய்விடுவதால் "தனிவளர்" என்றனர். கதிரவனின் வெப்பக் கதிர் களும் அவனது பெருமை ஆகிய இவ்விரண்டும் "தழல் வாய்" என்றதனால் பெறப்படும். தோன்றிய உயிர் களனைத்தும் அத்தழல் வாய் வயப்பட்டதே. "தனி வளர் செங்கோல்" என்றதும் ஆதவன் இன்றி இவ் வுலகின் உயிரினங்கள் இல்லை. எல்லா உயிரினங் களும் உய்யத் தோன்றும் கதிரவனை என்ன சொல்லிப் போற்றினாலும் பொருந்தும் பகலவனை, பகவன் என் றும் போற்றினர். வள்ளுவ நாயனாரின், முதல்குறளே கதிரவனைப் போற்றிப் பாடப்பட்டதாகும். "ஆதி பகவன் முதற்றே உலகு" என்றதால் ஆதிமுதல் யாவற்றிற்கும் ஆதாரமானவன் ஞாயிற்றின் முதற்றே உலகு என்பதறிக.

பருதியே! பொருள் யாவற்கும் முதலே!
பானுவே! பொன்செய் பேரொளித் திரளே!
கருதி நின்னை வணங்கிட வந்தேன்!

என்றனர்மகாகவி சுப்ரமணிய பாரதியாரும். இப்பாடல்

"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்"

என்ற இளங்கோவடிகளின் அடிச்சுவட்டைத் தொடர்ந்த சொல்நயமும் பொருள் நயமும் பொதிந்தது ஞாயிறே!

"நீஒளி, நீ சுடர், நீ விளக்கம், நீ காட்சி, மின்னல்
இரத்தினம், கனல், தீக் கொழுந்து—இவை
யெல்லாம்
நினது திகழ்ச்சி, கண் நினது வீடு"

"நீ சுட்கின்றாய், நீ வருத்தம் தருகின்றாய். நீவிடாய்
தருகின்றாய் இவை இனியன"

"ஞாயிறே! இருளை என்ன செய்து விட்டாய்?
ஓட்டினாயா? கொன்றாயா? விழுங்கி விட்டாயா?
கட்டிமுத்த மிட்டி நின்கதிர்களாகிய கைகளால்
மறைத்து விட்டாயா?"

மகாகவியின் வசனகவிதையின் இனிமையையும் ஆதி பகவன் முதற்றே உலகு என்பதன் விரிவாக்கத்தையும் அடியனேன் "நறுந்தொகை விருந்து" இரண்டாம் பந்தி "அறிஞர்க்கழகு" கண்டு மகிழ்க.

"ஞாயிறே! இருளை விழுங்கி விட்டாயா" என்று மகாகவி சுப்ரமணிய பாரதி இன்று கேட்ட அதே கேள்வியை எழுப்புவது போன்று நம்மாழ்வார் "இருளே! ஒளியை என்ன செய்தாய்?" என்பதாக,

''விழுங்கிவிட்டாயா'' என்பதாக ''தழல்வாய் அரசு அவிய'' என்கிறார்.

''நீங்கள் இருவரும் ஒருதாய் வயிற்றுக் குழந்தைகளா? முன்னும் பின்னுமாக வந்து உலகத்தைக் காக்கும்படி உங்கள் தாய் ஏவியிருக்கிறாளா?'' என்று கேட்கிறார் மகாகவி. ஒளி இருளைப் பற்றாது. இருள் ஒளியைப் பற்றாது. தழல்வாய் அரசு அவிய இருள் என்னும் அரசன் எழுந்தனன் என்கிறார். நம்மாழ்வாரின் இப்பாசுரத்தை மகாகவியின் கவிதையுடன் ஒப்பிட்டுக் காணும் பொழுது எத்தனை இன்பம். ''தழல் வாய் அரசு அவியப் பணிவளர் செங்கோல் இருள் பார் முழுதும் வீற்றிருந்தது'' என்பது எத்தனை பொருளை உள்ளடக்கியிருக்கிறது என்பதை ''நறுந்தொகை விருந்து'' பயின்றோர் நன்குணர்வர்.

இப்பாசுரத்தில் ''தனிவளர் தழல் செங்கோலவிந்து பனிவளர் இருள் செங்கோலுயர்ந்தது''என்பது ஒளியும் இருளும் தனித்தனி கோலோச்சும் தன்மை இங்கு சித்தரிக்கப்படுகிறது. ஒளி இருளைப் பற்றாது இருள் ஒளியைப் பற்றாது என்பதை மீண்டும் நினைவு கொள்க. தனிவளர் தழலும், பனிவளர் இருளும் தனித்து இயங்குபவை. இரண்டும் தனித்தனி அதன் சேவையைச் செம்மனே செய்து முடிப்பவை. ஒளியின்றேல் இருள். இருள் என்றும் இருப்பது. நம்மாழ்வார் ''தழல் வாய் அரசு அவிய'' என்றனர். இதனை நன்கு உணர்ந்து பொருள் காணவேண்டும். இவ்வண்ட முழுதும் இருளால் சூழ்ந்தது. அதில் கதிரவன் ஒளி ஒரு விளக்கு போன்றது. இருள் சூழ் உலகுக்கு கதிரவன் ஓர் ஒளிவிளக்கு. அதனால்தான் ''தழல்வாய் அரசு அவிய'' என்றனர் என்பதும் கூர்ந்து காண்க. இருள் என்றும் எங்கும் இருப்பது ஆங்காங்கு ஒளிச் சுடர் இருளை நீக்கும். இதுவே நியதி.

"தனிவளர் செங்கோல் நடாவும்" என்று கதிரவன் ஒளிக்கு அடை கொடுத்த ஆழ்வார், "பனி வளர் செங்கோல் இருள் வீற்றிருந்தது" என இருள் வீற்றிருந்து என்பது காண்க. அந்த இருளில் "ஒளி நடாவும்" அதாவது ஒளி சென்று காணும் என்றபது, "பனிவளர்" என்றது, நடுக்கத்தைக் கொடுக்கும் என்பதாம். தலைவனைப் பிரிந்தார்க்கு மலைப்பொழுது துன்பத்தைக் கொடுப்பது. இத்துன்பத்தைக் கொடுப்பது எம்பெருமான் சூடிய துழாய் மலர்களே என்று முன்னமே கண்டோம். "துனி வளர் காதல் துழாய் துழாவு தண்வாடை தடிந்து வளைகாப்பவர் யார்"? என்கிறார்.

திருத்துழாய் தந்த "மாணிமாமை, பிறங்கி அள்ளல் பயலை" ஆகிய "தனிவளம்" போதாது என்று, இப்பொழுது, துன்பத்தைத் தரும் என் ஆவலை மிகவும் தூண்டும் என்தலைவனது திருத்துழாய் மாலையில் அளைந்து மிதந்து வரும் குளிர்ந்த காற்றும் என்னை அலைகழிக்கிறது; அதனைத் தடுத்து என் வளையல்கள் கழன்று விழாது யாரே காப்பார்? காப்பதற்கு யார் உளர்? என்கிறார். "துனிவளர் காதல்" என்பது துன்பத்தை மென் மேலும் வளரச் செய்யும் என் காதல் மயக்கு,எம்பெருமான் சூடிய துழாய் மலரின் மேலுள்ள எனக்குள்ள மோகம் என்பதாம். "துழாயைத் துழாவு தண் வாடை" என்றது துழாய் மலையில் உழன்று அதில் கொஞ்சி விளையாடி வெளிவந்து மணம் கமழ வீசும் அதன் குளிர்ந்த வாடைக்காற்று என்பதாம். துழாய் மாலையில் தோய்ந்து வருவதால் அது மேலும் குளிர்ந்து "தண் வாடை"யென்றானது. "தடிந்து" என்றது அழித்து அதாவது. துழாய் மாலையின் நறுமணத்தைச் சுமந்து வரும் குளிர்ந்த வாடைக் காற்றை அழித்து என்பதாம். "வளைகாப்பார் யாரே"

என்றது கழன்று விழாதபடி காப்பவர் யாரே உளர்? யாரும் இல்லை என்றபடி.

''பரோர்களெல்லாம் மகிழப் பறைகறங்க
சீரார்குட மிரண்டேந்தி — செழுந்தெருவே
ஆராரெனச் சொல்லி ஆடுமது கண்டு
ஏராரிளமுலையார் என்னையரும் எல்லாரும்
வாராயே வென்றார்க்குச் சென்றேன் என்வல்
வினையால்
காரார் மணிநிறமும் கைவளையும் காணேன் நான்''

என்றனர் திருமங்கையாழ்வாரும் சிறியதிருமடல் அடிய னேன் உரைநூல் பக்கம் 5. 6 காண்க.

''ஊழிகள் ஈர்வனவே'' என்று பல ஊழிக் காலங்கள் ஒருங்கு சேர்ந்த இரவு என்னை அறுக் கின்றன என்கிறார். ''ஈர்தல்'' என்பது வாளால் அறுத்தல் போன்ற துன்பத்தைத் தருகின்றன என்பதாம். ஊழிகள் என்றதால் இரவு முழுதும் இரம்பத்தால் கொஞ்சம் கொஞ்சமாக அறுத்துக் கொண்டிருக்கின்றன என்றபடி.

நம்மாழ்வார் அருளிய ''வளை காப்பார் யாரே'' என்றதும், திருமங்கையார் அமுது படைத்த ''மணிநிற மும் கைவளையும் காணேன்'' என்றது ஆழ்வார்கட்கு எம்பெருமானிடத்து இருந்த ஈடுபாட்டின் எல்லையை உணர்த்துவது. எம்பெருமான் வயப்பட்டதால் நான் என்னை முற்றிலும் இழந்தேன், என்னிடமிருந்த மாயை அனைத்து அற்றுப் போயின என்றபடி. நம்மாழ்வார் கழன்றுபோகும் அஞ்ஞானத்தைக் காப்பார் யாரே' என்கிறார். திருமங்கையாழ்வார் சென்றேன் காணேன் என்கிறார். எம்பெருமானிடம் முற்றிலுமாகக் கலந்து விட்டதால் உலகியல் தோற்றங்கள் அவசியமற்றது

தானாகவே மறைந்துவிட்டன என்பதும் இப்பாசுரத்தின் உட்பொருள் என்பது காண்க.

அரும்பதவுரை : தனிவளர்-ஒப்பில்லாத ஒன்றாய் வளரும் தன்மையதாய், காலை, மதியம், மாலையென வளர்ந்த என்பதுவுமாம். நாடாவு-நடத்தும்,செலத்தும். தழல்வாய்-வெப்பம் மிகுந்த, தீயிலகப்பட்ட. அவிய-அழிய, மடிய. பனிவளர்-நடுக்கம் மிக்க. துனி வளர்-துன்பத்தையே செய்யும். துழாவு-கிளறும். அளவளாவு வும், ஆராய்தல். தடிந்து-அழித்து. ஊழிகள்-பல ஊழிக் காலங்கள் கொண்ட ஒரு இரவு. ஈர்தல்-அறுத்தல். பிளத்தல்.

(நலம் பாராட்டு)

ஈர்வனவேலுமஞ்சேலு முயிர்மேன் மிளிர்ந்திவையோ
பேர்வனவோவல்ல தெய்வநல்வேள் கணைப்பே
ரொளியே
சோர்வன நீலச்சுடர்விடு மேனியும்மான் விசும்பூர்
தேர்வன தெய்வமன்னீரகண்ணோவிச்
செழுங்கயலே. 14

விளக்கவுரை : பகையைக் கொன்று பிளப்பனவான வேல்போன்றும் அழகிய சேல்கெண்டை மீன்கள் போலவும் உள்ள இவை எனது உயிரை வசப்படுத்தும் பொருட்டு அதன் மேற் பாய்ந்து அதனைவிட்டு நீங்குவன அல்ல. தெய்வீகத்தன்மையுடைய அழகிய மன்மதனது அம்புகளின் சிறந்த ஒளியையே தாம் வெளியிடுவனவாயின. நீலநிற இரத்தின மணியின் ஒளியை வீசுகின்ற திருமேனியையுடைய எம்பிரானது ஊராகிய பரமபதத்தைத் தனக்கு ஒப்பாகத் தேடுந் தன்மையான; கொழுத்த கயல் மீன்கள் என்று

சொல்லத்தக்க இவை பெண் தெய்வத்தை ஒத்த கண்களோ?

திறனாய்வு : "ஊழிகள் ஈர்வனவே" என்று தன் ஆற்றமையைத் தலைவனுக்கு உணர்த்திய தலைவி, "துனிவளர் காதல் துழாயை துழாவு தண்வாடை தடிந்து வளை காப்பவர் யாரே?" என்று அங்கலாய்த்த பிராட்டியின் நிலைகண்டு, தலைமகன் தலைமகளின் நலம் பாராட்டும் பாசுரம். அவள் அச்சத்தைப் போக்க அவள் அழகைக் கொண்டாடும் சொற்கள் தலைவனுக்குத் தலைவியினிடம் உள்ள ஈடுபாட்டையும் உணர்த்துவதாக அமைந்தவை.

"ஈர்வனவே" என்று தலைவி பயன்படுத்திய சொல்லையே இப்பாசுரத்தின் ஆதியாகக் கையாண்டிருத்தல் காண்க. தலைவியின் கண்களைச் "செழுங் கயல்" என்கிறார். கயல் என்றால் கெண்டை மீன் என்றாகும். செழிப்புமிக்க கயல் மீன்கள் இருகண்களுமாகும். இளமை தாண்டவமாடும் இருநீண்ட கண்கள் என்றபடி. "இச்செழுங்கயலே ஈர்வன" எனப் பிரித்துக் காண்க. தலைவி "ஊழிகள் ஈர்வன" என்றனர். இல்லை இல்லை, "இச்செழுங்கயலே," ஈர்வன எனத் தலைவன் தன் தலைவியின் கண்களைச் சிறப்பிக்கிறார்.

"விண்டுரைக்க மாட்டாத விந்தையடா!
விந்தையடா!
ஆசைக் கடலின் அமுதடா! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்வீகமாம்
காட்சியடா!
பெண்ணொருத்தி அங்கு நின்றாள்; பேருவகை
கொண்டுதான்
கண்ணெடுக்கா தென்னைக் கணப்பொழுது
நோக்கினாள்

சற்றே தலை குனிந்தாள், சாமீ! இவள முகை
ஏற்றே தமிழில் இசைத்திடுவேன்? கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?
மீள விழியில் மிதந்த கவிதையெல்லாம்
சொல்லில் அகப்படுமோ?......"

என்றனர் பாரதியாரும்; பெண்ணொருத்தியின் விழியில் மிதந்த கவிதையெல்லாம் சொல்லில் அகப்படுமோ என்றால் பிராட்டியின் எழில் கண்களை எப்படிப் படம் பிடித்துக் காட்டுவது? "ஊழிகளே" அல்ல, அல்ல "ஈர்வன" இச்செழுங்கயலே ஈர்வன" என்று இரு சொல்லில் அடக்க முயல்கிறார் நம்மாழ்வார். "வேலும் அம் சேலும் இவையோ?" என்று வேல் என்பதும் சேல் என்பதும் இவைதானோ? என்றும் வியக்கிறார்.

"வேற்படையும் வாளுமே கண்ணா"

என்றனர் புகழேந்தியார். நளவெண்பா. அடியனேன் உரைநூல் பக்கம் 42 காண்க.

'வாட்டடங் கருங்கட் கூற்றை"

என்றனர் அதிவீரராமபாண்டியனார், நைடதம் அடியனேன் உரைநூல் பக்கம் 654 காண்க. வேல்விழியாள் என்பர். வேல்போன்று காளையர் நெஞ்சில் பாய்ந்து தாக்கி அவர்கள் உயிரைப் பறிக்கும் வன்மை மிக்க கண்கள் என்பதாம். "சேலும்" என்றதை "அம் சேலும் என அடை கொடுத்துக் கூறியது, அழகிய கெண்டை மீன் போன்று என்பதாம். கெண்டை மீன்களில் சேல் கெண்டை மிகவும் கவர்ச்சியானது பருத்து நீண்டு இருக்கும். மகளிரின் நீண்டகன்ற

விழிகளுக்கு சேல் கெண்டையை ஒப்பிட்டுப் சிறப்ட் பது இயல்பு. அதனால்தான் வேலும் "அம் சேலுப் இவையோ" என்று வியக்கிறார்.

"குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து
கொலைத் தொழின் மறலியைப் பயிற்றி
யமிழ்தினின் விளர்த்து ஞஞ்சினிற் கருகி
யையரி சிதறிமை நோய்ந்து
கமலமென் மலரை வனம் புகுத்தியவேற்
கண்ணினை மான்மரு ணோக்கந்
தமதெனக் கவர்ந்து கொண்டவோ மடமான்
றடங்கணின் செயல்கவர்ந் தனவோ"

என்றனர் அதிவீரராமபாண்டியனார். நைடதம் அடியனே உரைநூல் பக்கம் 127 காண்க. தமயந்தி யின் கண் எழிலைச் சிறப்பிக்கவே பாடப்பட்ட பாடல். நம்மாழ்வார் தலைவியின் கண்களை, "இச் செழுங் கயலே ஈர்வன" என்றும், "வேலும் அம் சேலும் இவையோ" என்றதும் எவ்வளவு அமிர்தமான சொற் கள் என்பதை ஒப்பு நோக்கின் உணரலாம். இச்சொற் களால் தலைவியினிடத்துத் தலைவனுக்குள்ள ஈடுபாடு வெளிப்படை. எம்பெருமானிடம் ஒன்றெனக் கலந்த அடியார்களை எப்படி ஆட்கொள்கிறான் என்பதும் இதனால் அறியப்படுவதாகும். "உயிர்மேல் மிளிர்ந்து பேர்வனவோ அல்ல" என்று தலைவியின் மேற் கொண்டுள்ள அன்புப் புணர்ச்சியை மேலும் வெளிப் படுத்துகிறார்.

உயிர்மேல் மிளிர்ந்து என்றது எனது உயிரின்மேல் உரிமை கொண்டாடி என் உயிரை வயப்படுத்தி என்பதாம். உயிரை வயப்படுத்தினாலும் விட்டுவிடுமா என்றால் "பேர்வனவோ அல்ல" என்கிறார். என் உயிரைப் பறிக்காமல் நீங்குவதாகத் தெரியவில்லை

என்றபடி கண்ணுக்குத் தெரியாத கூற்று என்றானது காண்க.

"பண்டு அறியேன் கூற்று என்பதனை, இனி அறிந் தேன்" என்றனர் வள்ளுவரும். காமத்துப்பால். தகை அணங்கு உறுத்தல். 3. வள்ளுவர் வாக்கினையே,

"கண்ணினா லின்று கண்டாங் கூற்றினைக் காமர் செவ்வாய்
ஒண்ணுத லுருவக் கோலத் தொருபிடி நுசும்பிற் றீஞ் சொல்
வண்ணித்த லாவதில்லா வருமுலை மதர்வை நோக்கிற்
பெண்ணுடைப் பேதை நீர்மைப் பெருந்தடங் கண்ணிற்றம்மா"

என்றனர் திருத்தக்கதேவர். சீவக சிந்தாமணி. இலக் கணையாரிலம்பகம் 81. உயிரின்மேல் மிளிர்ந்து பேர் வதல்லாத இவள் கண்கள் என்பதாகக் காண்க: என் உயிர் தலைவிக்கே உரித்தானது என்றபடி. இது எம் பெருமான் அடியார்களிடத்து வைத்துள்ள பேரன்பை அருளை வெளிப்படுத்துவதாகும். எம் உயிர்மேல் தங்கி நீங்காதிருப்பதானது. "தெய்வம் நல்வேள் கணை பேர் ஒளியே சோர்வன" என்கிறார் "தெய்வம் நல்வேள்" என்பது மன்மதன். "வேள்" என்ற சொல் மன்மதனையே குறிக்கும். தெய்வத்தன்மையான காதல் அரும்பச் செய்பவனாதலின் "தெய்வ நல் வேள்" தெய்வத்தையும் விட்டு வைக்காத நல்வேள் என்றாலும் அமையும்

"தேங்கமழ் துளவினானு நான்முகத் தேவு நாளுந்
தாங்கருங் காமவெம்மை தரிக்கிலராகிய யன்றோ
வாங்குதண் டிரையிற் றண்ணென் மலர்வயின் வதிந்தார் மன்ன
னீங்கரு நிழலிற் றோன்று மதனையெவ் வாறு நீங்கும்."

என்று மன்மதன் வலிமையை, திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டதற்கான காரணம் யாது என்று அதிவீரராமபாண்டியனார் கூறியிருப்பது காண்க. நைடதம் அடியனேன் உரைநூல் பக்கம் 72 காண்க.

''தெய்வம் நல்வேள் கணை பேர் ஒளியே சோர்வன'' என்றது தெய்வத்தன்மை மிக்க அல்லது தெய்வத்தையும் விட்டு வைக்காத மன்மதனது கணை அதாவது மலரம்பு என்பதாம். ''பேர் ஒளியே சோர்வன'' என்றது சிறந்த அழகு, வலிமை இவற்றை யெல்லாம் சோர்வடையச் செய்வன என்பதாம். எவ்வளவு வலிமை மிக்கவரும் மன்மதனது ஐங்கணைக்குத் தப்பார் என்றபடி. எம்பெருமான் வயப்பட்டவர் எத்தகு தன்மையராயினும் அவனைச் சரணடையாது தப்பார் என்பதுவுமாம்.

இதனையே ''நீலம்சுடர் விடுமேனி அம்மான் விசும்பூர் தேர்வன தெய்வம் அன்னீர் கண்ணோ'' என்கிறார். நீல ஒளிவீசும் இரத்தினமணி போன்ற திருமேனியன் எம்பிரான் திருநாடான் பரமபதத்தை தேடும் பெண் தெய்வம்; பெண் தெய்வத்தை யொத்த கண்களோ! என்பதாம். எம்பெருமான் மேனி அழகைச் சித்தரிக்கையில்; ''நீலம் சுடர்விடும் மேனி'' என்கிறார். நீல ஒளிவீசும் இரத்தனக்கல் அது சுடர்விட்டு எரிந்தால் எப்படியிருக்குமோ அப்படியிருக்குமாம். கோலவண்ணன், கோகுலவாசன் கோபாலன், நர அயணன் அதாவ்து நாராணன் திருமேனி.

''அம்மாள் விசும்பு ஊர் தேவன்'' என்றது, என்னப்பன் எம்பிரான் வானத்தில் கருடாழ்வார்மேல் அமர்ந்து செல்லும் பரமபதம் தேடுவார் என்பதாம். தேரவன என்றது தேடும் அடியார்கள். ''தெய்வம் அன்னீர கண்ணோ என்றனர். ''தெய்வம் அன்னீர'' என்றதால் தெய்வத்தை ஒத்த கண்களோ என்றதாம்.

இங்கு "தெய்வம்" என்ற சொல் பெண் தெய்வம் என்று காணல் சிறப்பு. எம்பெருமானுக்கு அடியார்கள் அனைவரும் பிராட்டித் தன்மையடைகின்றன ராதலின் பெண் தெய்வத்தின் கண்கள் போன்றதோ என்பதாம். சிலர் "இச்செழுங்கயலே" என்பதை இங்கு சேர்த்தும் பொருள் காண்பர். பெண் தெய்வத்தின் கண்கள் போன்றதோ இச்செழுங்கயல்கள் எனப் பொருள் காணினும் அமையும்.

அரும்பதவுரை : ஈர்வன - அறுப்பன. சேல்-கெண்டை, சேல்கெண்டை. மிளிர்ந்து-ஒளிவீசி, தங்கி-பாய்ந்து. பேர்வன-நீங்குவன. வேள்-மனமதன்., கணை-மலரம்பு. ஐங்கணை. சோர்வன-சோர்ந்து போவன. தளர்வன. நீலம்-நீலக்கல்' அம்மான்-கடவுள், என் அப்பன். விசும்பு-ஆகாயம், தேர்வன-தேடுவன, அன்னீர-அத்தகைய. கயல்-கெண்டை.

(தலைமகன் கருத்தறிந்த தோழி அவனை நோக்கி உரைத்தல்)

**கயலோநும கண்களென்று களிறு வினவிநிற்றீ
ரயலோரறி யிலுமீதென்ன வார்த்தை கடல்கவர்ந்த
புயலோடுலாங்கொண்டல் வண்ணன் புனவேங்கடத்
தெம்மொடும்
பயலோ விலீர்கொல்லை காக்கின்ற நாளும்
பலபலவே. 15**

விளக்கவுரை : யானையோ எனக்கேட்டு, உமது கண்கள் கயல் மீன்களோ என்று எங்கள் கண்களைக் கொண்டாடி அப்படியே நின்று போனீர். அயலோர் அறிந்தார்களானால் இது என்ன பொருந்தாத சொல், கடல்நீரை முழுவதும் அள்ளிக்கொண்டு உண்டதும், மழையுடன் மேகமாகச் சஞ்சரிப்பதும் காளமேகம் போன்ற குளிர்ந்த திருநிறத்தையுடைய எம்பெருமானது

கொல்லை நிலத்தையுடைய திருவேங்கட மலையிலே நாங்கள் கொல்லை காத்து வருகின்ற மிகப் பலநாளில் ஒன்றிலும் எம்மோடு நீர் சேர்ந்து இன்பம் நுகர்தல் செய்யவில்லை. கொல்லை காத்துத் தனித்திருந்து தேடிவந்து புணர்ந்தின்பம் துய்க்கவில்லை.

திறனாய்வு : "இச்செழுங்கயலே ஈர்வன"என்றும் "வேலும் சேலும் இவையோ" எனக் கூறிய தலைவ னின் கருத்தறிந்த தலைவியின் தோழி தலைவனை நோக்கிக் கூறும் பாசுரம். தலைவனும் திருவேங்கடத் தமர்ந்தவன். நாங்கள் வேறுயாருமல்ல, நாளுட கொல்லை காப்பவர். "கடல் கவர்ந்த புயலோடு உலாம் கொண்டல் அவ்வண்ணன் புனம்" காப்பவ எனினும், "எம்மொடும் பயலோ இலீர்" என்கிறார்

இவ்வளவு நாட்கள் நாங்கள் உன்னையே எண்ண எண்ணி ஏங்கிக்கிடப்பது கண்டும் காணாதவர் போல இருந்து விட்டீர் என்றபடி. புயல், நீரைக் கடலிலிருந் மொண்டு வந்து உலாவரும் மேகமுட்டம் கொண் அழகிய அந்த நீலவண்ணன் கண்ணபிரானின் வய காப்பவர் நாங்கள். எனினும் எங்களுடன் பயில நின்றீர் என்றனர் என்பதாம். "கடல் கவர்ந்த" என்ற கடல் நீரைக் கவர்ந்த என்பதாம். கடல்நீர் ஆவியா மேலே சென்று மேகமாக மாறும் அறிவியல் செய்திை இங்கு கூறுவது காண்க. "புயலோடு உலாவு கொண்டல்" என்றது, காற்றும் மழையும் சேர்ந் உலாவும் மேகம் என்பதாம். புயல் என்றது இங் மழை. புயலோடு என்றது காற்றுடன் சேர்ந்த என்பதாம். கொண்டல் என்ற சொல் இங்கு மேக என்ற பொருளில் வரும். "வண்ணன்" என்ற கார்மேக வண்ணன் எம்பெருமான் திருவேங்கடத்தா என்பதாம். "புனம்" என்றது மலையைச் சார்ந்த வயு

களைக் குறிப்பதாகும். புனல், மலர்ச்சோலை இவை யிரண்டும் ஒருங்கமைந்த எழில் தோற்றம் என்பதாம்.

"வேங்கடத்துக் கொல்லை நாளும் காக்கின்ற எம் மொடும்" என்றது திருவேங்கடத்து கொல்லைப் புறத்து வயல்களை நாளும் காக்கின்ற எங்களோடும் என்பதாம். "பயலோ இலீர்" என்றது எங்களைப் பயின்றதாகத் தெரியவில்லை; வேங்கடத்துக் கொல்லை நாளும் காக்கின்ற எங்களோடு பழகவே இல்லை பராமுகமாய் இருந்தீர், உங்கள் கொல்லையில் காத்துக் கிடந்த எங்களை வந்தடைந்து புணர்ந்தின்பம் நுகரவில்லை என்பதாகிறது.

"புனம்" என்ற சொல்லும், "கொல்லை" என்ற சொல்லும் "வயல்" என்ற பொருளில் வருபவை. ஆனால் கொண்டல் வண்ணன் புனம் என்று வேங்கட மலையின் நீர்வளத்தையும் மலர்ச்சோலையின் வனப் பையும் கூறிவிட்டு, ஆன்மாக்கள் எம்பெருமானுக் காகக் காத்துக் கிடப்பது அவன் எழுந்தருளியிருக்கும் வேங்கடத்துக் கொல்லைப்புறம் என்பதை அழகுபட "நாளும் கொல்லை காக்கின்ற எம்மொடும்" என்றனர். "கொல்லை" என்பது புறக்கடைத்தோட்டம் என்ப தாம். புறக்கடையில் காத்துக்கிடந்த எம்மொடும் இவ்வளவுகாலம் "பயலோ இலீர்" பழகவே இல்லை; எங்கள் ஏக்கத்தைப் புரிந்து கொள்ளவே இல்லை; பயன்தரு ஒரு சொல்லும் சொல்லவே இல்லை என்ப தாம். எம்பெருமான் திருத்துழாய் மாலையில் புறண்டு வரும் வாடைக்கு இலக்கான, 'எனது உடல் மெலிந்து கைவளைகள் கழன்று விழாது காப்பார் ஆர் எனவும், ஊழிகள் ஈர்வனவே என்றும் கூக்குறள் எழுப்ப இப் பொழுதுதான் மனம் இரங்கியதோ' என்றபடியுமாம்.

"கயலோ ஈர்வன" என்றது மட்டுமல்லாமல் "களிறு" என "வினவிநிற்றீர்" இது என்ன ஞாயம்

என்கிறார். "கயலோநும் கண்கள்" என்றது சரி. என் கண் அழகைக் கயல்மீன்களுக்கு ஒப்பிட்டுப் பெருமைபடுத்தியதோடு நில்லாமல், "களிறு" என "வினவி நின்றீர்". அயலார் அறிந்தால் இதென்ன வார்த்தை என்று எள்ளுவரே என்பதாம். மகளிரின் மென்முலைகளை இருமடி யாகுபெயராய்க் களிறுக்கு ஒப்பிடுவர் புலவர்.

> "கடாஅக் களிற்றின்மேல் கண்படாம் — மாதர்
> படாஅ முலைமேல் துகில்"

என்றனர் வள்ளுவரும், காமத்துப்பால். தகை அணங்கு உறுத்தல். 7. "குவிமுலைக்களி நல்யானை" என்றனர் பிறரும். "களிறு" என வினவியது தலைவியின் தடமுலைகளைப் பார்த்து என நன்குணர்ந்த தோழி 'களிறு என வினவியதுமல்லாமல் அதனைப் பார்த்து நிலைபெறாது நின்றீர், என்பதாம். "அயலோர் அறியிலும் ஈதென்ன வார்த்தை" என்றது கேட்பதற்கு இனிமையான சொல்லானாலும் பிறர் காதில் விழுந்தால் இது என்ன வார்த்தை என்று ஏளனம் செய்வர். எம் தலைவியின் அங்கங்களின் எழில் கண்டு அலை பாய்ந்துநிற்காது போம் என்றபடி யுமாம். எம்பெருமான் தன் அடியார்களிடத்து மோகம் கொண்டு காத்து நிற்பவன் என்பதுவும் இதனால் புலப்படும்.

திருவள்ளியை மணம்புரிய விரும்பிய முருகக் கடவுள் வேடன் உருக்கொண்டு, "மான்வரக் கண்ட துண்டோ புள்ளி மான்வரக்கண்டதுண்டோ...சாயாத கொம்பு இரண்டிருந்தாலும் அது தலை நிமிர்ந்து பாயாத மான்" என்று மனைத்தேடி வருபவர் போல் வந்து, மான்வினவி நின்றது போன்று இப்பாசுரத்தின் முதல் வரிக்குப் பொருள் கொள்வாருமுண்டு. "களிறு வினவி" என்ற சொல்லுக்கு யானை இங்கு வரக்கண்ட

துண்டோ என்பதாகப் பொருள் கொள்வதாம் "களிறு வினவி நீற்றீர்" என்ற சொற்களாலும் "அயலோர் அறியிலும் ஈதென்ன வார்த்தை" என்றதாலும் தலை மகளின் அழகிய கொங்கைகளையே "களிறு" என வினவி வைத்த கண்வாங்காது நின்ற நிலையும், பிறர் கேட்டால் எள்ளுவதற்கான சொல்லாகவும் இது அமைந்திருத்தலால் களிறு தேடி வந்தாகப் பொருள் கொள்ளுதல் அமையா. பிடியைத் தேடும் களிறு எனக் கூறின் அமையும். மேலும் "பலபலவே" என்ற தால் தலைவன் கண்களை "கயல்" என்றும் முலை களைக் "களிறு" என்றும் பலவாகவும் கூறி மகிழ்ந் தான். ஆகவே ஆழ்வார் "பலபலவே" என்ற சொல்லைப் பயன்படுத்தினார் என்பதே சாலப் பொருந்தும் எனக. இச்சொல்லை "கொல்லை காக்கின்ற நாளும் பலப்பலவே" எனச் சேர்த்துப் பொருள் காணினும் அமையும்.

இப்பாசுரத்தால் எம்பெருமானுக்கும் அடியார் மற்றும் ஆழ்வாருக்கும் உள்ள பற்றின் மிகுதிப் பாடு புலனாகிறது. எம்பெருமான் திருவேங்கடத்தன் அவனது அடியார்கள் அவன் புறக்கடைக் கொல்லையில் அவ னுக்காக ஏங்கிக் காத்துக் கிடப்பவர்கள். ஆண்டாண்டு காலமாக அவன் திருவடிச் சேவையையே விரும்பிக் கிடந்தும் அவன் அருள் ஒளி படாது ஏங்கியிருந்த ஆன்மாக்களுக்கு; அடியார்களை அருள்பாலித்து அவர்களின் தோற்றத்தை மனதைப் பதித்து நீங்காது நிலைத்து நின்று அருள்பவன் என்பதாக இப்பாசுரம் உணர்த்துகிறது. "களிறுவினவி" என்றதனால் மனம் எனும் மதயானையை தமது அறிவால் வயப்படுத்தி யிருத்தலையும். "நீற்றீர்" என்றதால் எம்மை இனி ஒரு போதும் பிரியாது நீற்றீர் என்பதும், "அயலோர் அறியிலும்" என்றதால் பிறரால் அறியத்தகாததான

அறிய இயலாததான ஞானத்தை பிறர் அறிந்தாலும்; "ஈது என்ன வார்த்தை" என்றது நம்மாழ்வாரின் பேரறிவைப் போற்றுதலாகவும் அமைந்ததாகிறது. தலைமகன் கருத்து இன்னதென தலைவியின் தோழி கூறுவதாக அமைந்த பாசுரம் பெரிதும் சுவை மிக்கதாக உள்ளது. பெருமைக்குரியது.

அரும்பதவுரை : கயல் - கெண்டை. களிறு இரு தந்தங்கள் போன்ற முலைகள், யானைக்காகி முலை களை உணர்த்திற்று. வினவி-கேட்டு. நிற்றீர்-நின்றீர். அயலோர்-மற்றவர். கடல்கவர்ந்த-கடலிலிருந்து நீரை உறிஞ்சி, ஆவியாக மேலே ஏற்றி. புயல்-நீர். கொண்டல்-மேகம், மழைமேகம். வண்ணன்-மேக வண்ணன், கண்ணன். புனம்-மலையைச் சார்ந்த வயல் மலர்ச்சோலை. பயல்-பழக்கம், பயன்தரு செயல். கொல்லை-புறக்கடைத் தோட்டம். கயலோ, புயலோ என்பனவற்றிலுள்ள ஒகாரம் முதலது வினா கடையது தெரிநிலை.

(தலைவனைப் பிரிந்த தலைவி பாங்கியை நோக்கி இருளை வியந்துரைத்தல்)

பலபல ஊழிகளாயிடுமன்றி யோர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறாயிடுங் கண்ணன்
விண்ணனையாய்
பலபல நாளன்பர் கூடிலு நீங்கிலும் யாமெலிதும்
பலபல சூழலுடைத்தம்மவாழி யிப்பாயிருளே. 16

விளக்கவுரை : எம்பெருமான் கண்ணபிரானது பரமபதம் போன்றவளே! இந்த இருட்பொழுது தலைவனைப் பிரிந்து வாடுவதால் பல கல்பங்களாக இருக்கும். அதுவுமின்றி தலைவன் வந்து புணர்ந்திடு

மாகில் இதே இரவு ஒருநொடிப் பொழுதாகும். பல நாட்கள் அன்பர் கூடியிருப்பின் காலம் மிகச் சுருங்கு தலால் புணர்ந்து துய்க்கும் இரவும் இன்னமும் நீடிக்காதா என்று நாம் வருந்துகிறோம். ஆதலால் இந்தப் பரந்த இருட்பொழுது சிறுமைக்கும் பெருமைக் கும் காரணமாக இருக்கின்றது. அந்தோ இருட் பொழுதே நீ எப்படியிருப்பினும் வாழி.

திறனாய்வு : இங்கு பதிமூன்றாம் பாசுரத்தின் கடைசி வாக்கியத்தை நினைவு கொள்க. தலைவி இருளுக்கு அஞ்சி "ஊழிகள் ஈர்வனவே" என்றது இப்பாசுரத்திற்குச் சிறந்த பொருளைக் காண உதவுவ தாகும். புணர்ந்து பிரிந்த தலைவிக்கு இரவு ஊழிக லாகும். பலப்பல ஊழிகளாகும். இருளின் தன்மையை இப்பாசுரத்தில் விளக்குகிறார். இரவின் கால அளவு மணந்தார் கூடினவர்க்கும், கூடிமுயங்கிப் பிரிந்தார்க்கும் எத்தன்மையது என்பதனை,

பணந்தாழல்குற் பைந்தொடியீர் பதுமத்திறைக்கும்
வானவர்க்குங்
கணஞ்சேருலகின் மன்பதைக்குங் காலங்கணித்த
கலைவல்லோர்,
மணந்தார்தமக்கோ ரிமைப்பொழுது மாறாக்காதன்
மகிழ்நர்புயந்
தணந்தார்க் கூழியாகு மெனச் சாற்றா திருந்த
தகையென்ன"

என்பர் அதிவீரராமபாண்டியனார். நைடதம் அடியனேன் உரை நூல் பக்கம் 289 கண்டு தெளிக. பிரம்மாவுக்கு ஒருநாள் மனிதர்கட்குப் பிரளயமும், தேவர்கட்கு ஒருநாள் மனிதர்க்கோர் வருடம் எனக் கால அளவைக் கணித்தனர், தலைவர் புயத்தைக் கூடினவர்களுக்கு ஒரு இராப்பொழுது ஓர் இமைப்

பொழுதாய் இருந்த காலம்; அப்புயங்களைப் பிரிந் தார்க்கு ஊழிக்காலமாகுமென்று சொல்லாதிருந்ததன் முறை யென்ன எனும் வினாவை எழுப்புவதை இப் பாசுரத்துடன் ஒப்பு நோக்க நல்கும்.

"கண்ணன் விண்ணனையாய்" என்று தலைவி பாங்கியை விளிக்கிறாள். "பாங்கி" என்றது பக்கம் இருப்பவள். எப்பொழுதும் தலைவியுடன் அருகில் இருந்து கொண்டு ஆவன செய்பவள். பாங்குடன் நடந்து கொள்பவளாதலின் பாங்கியானாள். கண்ண பிரானின் விண் நகரான பரமபதம் போன்றவளே! என்பதாம். "பலபல ஊழிகன் ஆயிடும்" என்றது பதின்மூன்றாம் பாசுரத்தில் சொன்னபடி என்பதாம். தலைவன் புயங்களைத் துறந்தார்க்கு ஓர் இரவு பலப் பல ஊழிகளாயிடும் என்கிறார். அப்படியின்றேல் தலைவனைப் புணர்ந்தாற்கு அதே நேரமான ஓர் இரவு "ஓர் நாழிகையை பலபல கூறு இட்ட கூறு" என்றது ஒரு நாழிகையைப் பல கூறுகளாக ஆக்கினால் அதன் ஒரு பங்கு நேரம் கூட ஆயிருக்காது அத்தகு நொடிப் பொழுது காலமே தலைவனைக் கூடியிருந்த காலம் என்பதாம். தலைவன் மார்பில் பொதிந்த மங்கை இரவு முழுதும் அவன் இன்பம் துய்த்திட அவ்விரவு ஒரு நொடிப்பொழுதெனக் கழிந்திடுமாதலின், "நாழி கையை பலப்பல கூறிட கூறாயிடும்" என்றனர். இதனையே அதிவீரராம பாண்டியனார். 'மணந்தார் தமக்கோரிமைப் பொழுது, மாறாக் காதன் மகிழ்நர் புயந்தணந்தாக் கூழியாகும்" என்றனர். இரவின் இக்கொடுமையை,

> "கொடியார் கொடுமையின் தாம் கொடிய—இந்நாடு
> நெடிய கழியும் இரா"

என்றனர் வள்ளுவரும். படர்மெலிந்து இரங்கல். 9. கம்பநாடனும்.

"உரவு ஏதும் இலார் உயிர் ஈதும் எனா
கரவே புரிவார் உளரோ? கதிரோன்
வரவே, எனை ஆள் உடையான் வருமே!
இரவே—கொடியாய், விடியாய், எனுமால்"

என்றனர். கடிமணப்படலம். 3. தலைவன் புயங்கள் இல்லாமல் இரவு கழிதற்கரியதாகிறது என்று பிரிவை ஆற்றாது, "பல பல நாள் அன்பர்" எம்காதலர் "கூடிலும், நீங்கிலும் யாம் மெலிதும்" என்கிறார். தலைவனோடு கூடியிருக்கும் இரவுகளில் இரவு சுருங்குதலால் பொழுது இவ்வளவு சீக்கிரம் புலர்ந்துவிட்டதே என வருந்தி உடல் மெலிந்து துன்பத்தையடைகிறோம். புணர்ந்து பிரிந்த தலைவன் இல்லாத இரவுகள் பற்பல ஊழிகளாய்ச் சுடுவதாலும் உடல் மெலிந்து போகிறோம் என்பதாம். கணவனைப் புணர்ந்திருக்கையில் இரவு விடியவேவேண்டாம் என்று ஏங்கும் நெஞ்சம், அவன் இல்லாத இரவில் எப்பொழுது விடியுமோ என்ற ஏக்கம் தாக்குகிறதே என்பதாம். இரண்டு நிலையிலும் "பல பல சூழலுடைத்து அம்மா இருளே வாழி" என்றனர். பலவிதமான சுழல்களையுடையது அம்மா என்று அதிசயிக்கிறார். "இபாய் இருளே" என்றது இப்பரந்த இருளே என்றபடியும் நெஞ்சில் பாயும் இருளே என்றபடியுமாம். "வாழி" என்றது நீ வாழ்வாயாக என்று எதிர்மறையில் கூறியது காண்க.

"பலபல நாள் அன்பர் கூடிலும் நீங்கிலும்" என்றதில் "அன்பர்" என்ற சொல் காதலர் என்ற பொருளில் வந்தாலும், இங்கு 'நீங்கினும்' என்றதால் அன்பர் எனும் சொல்லைக் கையாண்டனர் எனலாம். தலைவன் என்றும் நீங்காது உடனிருந்து உயிரும் உடலும் ஒன்றாக இருப்பவன். இவன் நீங்குபவனாதலின் அன்பர் என்ற சொல்லைப் பயன்படுத்தி நீங்கினும்

நீங்கா அன்பு செலுத்தும் காதலர் என்பதாகும். இப் பாசுரத்திலும் ஊழிகள் பல பல என்பதைக் குறிப்பிடு கின்றார் என்பது பல கற்பங்களைக் குறிப்பதாகும். கூடியிருக்கையில் பலகற்பங்கள் ஒரு நொடிப் பொழு தாகவும் பிரிந்திருக்கையில் ஒரு நொடிப்பொழுது பல கற்பங்களாகவும் கூறப்பட்டிருத்தல் காண்க..

''தெருளா வினை தீயவர் சேர் நரகோ!
அருளான் நெறி ஓடும் அவாவதுவோ?
கருள்ஆர்கடலோ? கரைகாண்பு அரிதால்!
இருளானதுதான்—எனை ஊழிகொலாம்''

என்றனர் கம்பரும். பாலகண்டம். கடிமணப்படலம். 9

அரும்பதவுரை ; நாழிகை - ஒருகால அளவை. நாடிகா எனும் வடசொல்லின் திரிபு. ஊழி - ஜலப் பிரளய காலம். உலகம் முடிவு. விண்ணனையாய் - பரமபதம் போன்றவளே! மெலிதும் - நோய்வாய்ப் பட்டு உடல்மெலிந்துபோகும். மெலிதும் என்பதில் 'தும்' விகுதி. மெலியும் தன்மையை உணர்த்திற்று. சுழல் - சூழ்ச்சி. நெடிது நீளுவதும், நொடியெனச் சிறுகுவதுமான சூழ்ச்சி. அம்மா - வியப்பு. இடைச் சொல். பாயிருளே - பரந்த இருளே, பாயும் இருளே. இதன் ஏகாரம் தேற்றம். ''பாயிருள் வாழி'' எனப் பிரித்து ஏகாரத்தை அசையென நீக்கிப் பொருள் காண் பாரும் உண்டு.

(தலைவி கடலை நோக்கித் தேர்வழிதூரலென்றல்)

இருள் விரிந்தாலன்ன மாநீர்த்திரை கொண்டு
வாழியரோ
விருள்பிரிந்தாரன்பர்தேர்வழி தூரலரவணைமே
விருள் விரிநீலக்கரு ஞாயிறு சுடர்கால்வதுபோ
லிருள்விரி சோதிப்பெருமானுறையுமெறி
கடலே. 17

விளக்கவுரை :— இருளைக் கக்கும் நீல இரத்தினம் போன்ற கருமை நிறமுடைய ஞாயிற்றின் ஒரு பகுதி ஒளிவீசுவதே போன்று கருமை நிறமுடைய திருமால் பாம்பணைமேல் தங்கியருளும் அலை வீசும் கடலே! நீ எம்பெருமானைத் தாங்கியுள்ளதால் நீ வாழி. இருள் பரப்பினது போன்று கறுத்த நீரையுடைய அலைகளால் இருளில் பிரிந்து சென்றவரது தேர் சென்ற வழியை மூடிவிடாதே.

திறனாய்வு : இப்பாசுரம் களவொழுக்கத்தினால் புணர்ந்தார் பிரிந்ததால் தலைவி தன் ஆற்றாமையைக் கூறும் தன்மையது. களவொழுக்கம் என்பது, பிறப்பு, குடிமை, ஆண்மை, ஆண்டு, உருபு, பருவம், நிறை, அருள், உணர்வு, திரு ஆகிய பத்து இயல்புகளில் ஒத்த தலைவனும் தலைவியும் காதல் கொண்டு திருமணம் புரிந்துகொள்வதற்கு முன்பே பிறர் அறியாமல் கூடி இன்புறுவதாகும்.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காமவாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறை மறக் கிளந்த ஒப்பினது வகையே"

என்று தலைவன் தலைவிக்கான ஒத்த இயல்புகளை அமைத்துத் தந்துள்ளது தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல் 25. இது போன்ற களவுப் புணர்ச்சி ஊழான் விளைவது என்பர். இதற்கு இயற்கைப் புணர்ச்சி என்றும் பெயர்; இதன்பின் தலைவன் தலைவியை முறைப்படி திருமணம் செய்து வாழ்வர்.

பகற்காலத்திலும் இரவுக் காலத்திலும் களவுப் புணர்ச்சி நடைபெறும். பகற்காலத்தில் இல்லத்தின்

எல்லைக்கு அப்பால் சந்தித்துக் கூடும் இடமாகப் பார்த்துக் கூடுவர். இதற்குப் பகற்குறி எனப்படும். இரவின் இல்லத்தின் எல்லைக்கு உட்பட்டே கூடுவர். இதற்கு இரவுக்குறி என்பர். இக்களவொழுக்கத்தினைப் பின் தொடர்வதே மடல் ஏறுதல். திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடல் பெரிய திருமடல் இவ்வகைப் பட்டதே. இப்பாசுரத்தில் இரவுக்குறி வயப்பட்ட தலைவனும் தலைவியும் தாங்கள் புணர்ந்து நின்றது ஊரெங்கும் பரவுவதற்கு முன் தலைவன் சில நாள் பிரிந்திருக்கக் கருதி, அதனைத் தலை மகளுக்குக் கூறாமல், தெரிந்தால் வருந்துவளென்று அவளறியாதபடி இருளிலேயே பிரிந்து செல்ல; பின்பு அவன் பிரிந்து சென்றதையறிந்து, அவன் தேரின் சக்கரச் சுவடுகள் கண்டு அதனையே தன் உயிராகக் கருதி, அவள் பிரிந்து சென்று இறங்குமிடம் நெய்தல் நிலமாதலால் அத்தேர்க்காற் சுவட்டைக் கடலலைகள் வந்து தூரே லென்று கடலை நோக்கி வணங்குவதாக அமைந்த பாசுரம்.

''உள்ளுமுருகியுரோமஞ்சிலிர்ப்ப வுடையவனாட்
கொள்ளு மவரிலோர் கூட்டந்தந்தான் இனிக்கும் புலியூர்
விள்ளும் பரிசு சென்றார் வியன்றேர்வழிதூரல் கண்டாய்
புள்ளுந் திரையும் பொரச்சங்கமார்க்கும் பொருகடலே''

என்றனர் திருக்கோவையார். 185.

''இருள் விரி நீலம் கருஞாயிறு சுடர் கால்வது போல்'' என்றது இருளைப் பரப்பும், இருளை வெளியே கக்கும் நீல இரத்தினம் போன்று கருமை நிறமுடைய சூரிய மண்டலத் தொருபகுதி ஒளி வீசுவது

போல் என்பதாம். நீலஇரத்தினக்கல் இருண்ட ஒளியைப் பரப்புமாதலின் ''இருள்விரி நீலம்'' என்றனர். இது எம்பெருமானது திருமேனியும் அது வீசும் ஒளியும் என்பதாம். இதனை இல்பொருள்வைப் புவமை அணி என்பர். எம்பெருமான் திருமேனிகரிய நிறமுடையது ஆதலின்'' இருள்விரிநீலம்'' என்றனர்.

''இந்திர நீலம் ஒத்த இருண்ட குஞ்சியும்
சந்திரவதனமும் தாழ்ந்த கைகளும்...''

என்றனர் கம்பநாட்டாழ்வாரும். பாலகண்டம், மிதிலைக் காட்சிப் படலாம், 57. எம்பெருமான் நீல நிறத்தனாதலின் ''இருள்விரி நீலம்'' என்று எம்பெருமானை மனதில் கொண்டு பின்னப்பட்ட சொற் களாகும். ''கருஞாயிறு சுடர்'' என்று கருமை நிறமுடைய தூரிய மண்டலம் என்பதாகக் கூறுகிறார். இருள்தூழ் உலகுக்கு ஞாயிறு ஒரு விளக்கு என்று முன்பே கூறினது இங்கு நினைவு கொள்க. ஞாயிற்றின் ஒளியில் அதனைச் சுற்றிவரும் இருண்ட கோளங்கள் ஒளி பெறுகின்றன என்றபடி.

''கரு நாயிறு போல்பவர் காலொடுபோய்''
வருநாள் அயலே வருவாய்;

என்பதும் கம்பன் சொல்லோவியம். பாலகாண்டம், கடிமணப்படலம் 4. கருஞாயிறு என்று எல்லோராலும் போற்றப்பட்ட 'ஞாயிறு சுடர்கால்வதுபோல்' என் கிறார். சுடர் கால்வது போல் என்றது ஒளி வீசுவது போல் என்பதாம். ''காலுதல்'' என்றால் கக்குதல் என்பதாம். ஒளிக்கதிர்களைக் கக்குதல் எனினுமாம், ''இருள்விரிசோதி பெருமான்'' என்றது இருள்படர்ந்த மேனியன் என்பதாம்.

"காக்கைச் சிறகினிலே நந்த லாலா?—நின்றன்
கரிய நிறந் தோன்று தையே நந்த லாலா!"

என்றனர் மகாகவி. கார்மேகவண்ணன் "இருள்வி
சோதி பெருமான்" ஆனார். கருமைநிறமுடைய ஒ
கமழ் திருமால் என்றபடி. "கருமாணிக்க மலைமே
மணித்தடம் தாமரைக் காடுகள் போல்" என்றன
நாம்மாழ்வாரும், திருவாய்மொழி 8-9-1

"கருவுடைமுகில் வண்ணன் காயாவண்ணன்
கருவிளைபோல் வண்ணன் கமலவண்ணத்"

திருவுடைமுகம், திருக்கண்கள் என்றனர் நாச்சியா
தையொருதிங்களும் 6. பெருமான் பள்ளி கொஎ
டிருப்பதுவோ, 'அர அணை மேல்" ஆதிசேடாழ்வா
மிது எம்பெருமான் பள்ளிகொண்டதை "அர அணை
மேல் உறையும் எறிகடலே" என்கிறார், அர அணை
என்பது பாம்புப் படுக்கை. உறையும் என்றது என்று
தங்கியிருத்தல்; உறைந்து போதல், இறுகிப்போத
நீங்காத நிலைத்த நித்திரை செய்தல், கள்ள நித்தி
செய்தல்.

"வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன்மேல்
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்"

என்றனர். பெரியாழ்வார். திருமொழி 5-9-7 எம்பெ
மான் அரஅணை மேல் பள்ளி கொள்ளுதல் ஒ
மார்க்கம் என்பது காண்க. அர அணைமேல் பள்
கொள்ளும் "எறி கடலே" என்றது கடலுக்குச் சிறப்
"வெள்ளை வெள்ளத்தின் மேல்" எனப்புழி. கட
அலைகள் கரையை நோக்கி எறியப்படுவதால் "எ
கடல்" என்றாயிற்று. கடல் போன்ற அருள்வெள்ள
எம்பெருமான் உள்ளமாதலின் "எறி கடலே" என்
உவமைப் படுத்திக் கூறினர் எனவும் பொருள் கொள்

லாம். ஆனால் இங்கு, "எறிகடலே வாழி" என வாழ்த்தி, "மாநீர் திரை கொண்டு" அதாவது கறுத்த நிறமுடைய அலைகளால், இருள் பிரிந்தார் அன்பர் தேர்வழி தூரல்" என் காதலர் ஊர்ந்த தேரின் சக்கரத் தடயங்களை எறிகடலே! உன் அலைகளைக் கொண்டு மோதி அழித்துவிடாதே என்பது காண்க. "மாநீர்" என்றது பெருங்கடல். திரை என்றது அலைகளை. "இருள் பிரிந்தாரன்பர்" என்றது இருளில் வந்து இயற்கைப் புணர்ச்சி செய்து மீண்ட காதலர் என்பதாம். "தேர்வழி" என்றது தலைவன் ஊர்ந்து சென்ற தேரின் சக்கரச்சுவடு. "தூரல்" என்பது தூர்த்து விடாதது. தூர்தல் என்பது இயற்கையாய் நிகழும் நிகழ்ச்சியின் விளைவால் ஏற்படுவதாம். கிணறு தூர்ந்துவிட்டதென்றால் தானாகவே தூர்ந்து போவது என்பதாம், இராமபிரான் காடு சென்ற பொழுது அவன் தேரூர்ந்தது இங்கு நினைவிலோடுகிறது.

"அன்ன தாயர் அரிதின் பிரிந்தபின்
முன்னர் நின்ற முனிவனைக் கைதொழா
தன்னது ஆர் உயிர்த்தம்பியும், தாமரைப்
பொன்னும், தானும், ஓர்தேர்மிசை போயினான்."

அயோததியா காண்டம். நகர்நீங்குபடலம் 234. தலைவன் தேர்மிசை சென்றதும் இராமபிரான் கானகம் சென்றதும் இரவிலேயாதலின் இராமபிரான் தேரூர்ந்தது போன்று எனவும் இங்கு பொருள் கொள்ளலாம். "இருள்விரி நீலக்கருஞாயிறு சுடர் கால்வது போல்" என்றதால் இங்கு இராமபிரான் வனம் சென்றதை ஆழ்வார் நினைவு கூர்ந்தருளினர் என்பதுவுமாம்.

"கண்தாம் அவை ஆயிரமும் கதுவ,
கண் தாமரைபோல் கருஞாயிறு என."

என்றனர் கம்பநாட்டாழ்வாரும். ஆரண்ய காண்டம் சரபங்கன் பிறப்பு நீங்கு படலம் 24, "கருஞாயிறு"

என்றால் கதிரவன் கருமை நிறத்தவனா என்ற ஐயம் மேலோங்கி நிற்கும். கதிரவனிடம் கரும்புள்ளிகள் இருப்பதாகத் தொலை நோக்குக் கருவிகள் மூலம் இன்று அறிவியல் கண்டறிந்த உண்மை. தொலை நோக்குக் கருவி கண்டு பிடிக்கப்படாத காலத்திலேயே நம்முன்னோர் தொலைநோக்குடன் "கருஞாயிறு" என்றனர் என்பதைக் காணும் பொழுது பெரும் வியப்பை அளிக்கிறது. "கால்வது போல்" எனக் கூறி "இருள்விரி சோதி பெருமான்"என்று எம்பெருமானுக்கு அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கிறார்.இருள் பரப்பும் சோதியான எம்பெருமான் என்பதாம். இருள் இவனிடத் தன்றோ தன் நிறம் பெற்றது என்றபடி. "சோதி" என்பது ஒளிக்கானது. இங்கு இருள்விரி சோதி என்று இருள் ஒளிப்பிழம்பாய் எழுந்தருளும் எம்பிரான் என்பதாகக் கூறுகிறார். "உறையும் எறிகடல்" எனாமல், "எறிகடலே" என்று ஏகாரக் குறியால் வியப்பை உணர்த்துகிறார். "எறிகடலே இருள் பிரிந் தாரன்பர் தேர்வழி தூரல்" என்பதை மையமாகக் கொண்டு அமைக்கப்பட்ட பாசுரம். தேர்வழி என்றது இங்கு உள்ளத்தைக் குறிக்கும்.

"மைந்தர் போர்விதங் கண்டுகண்டு தார்மருவும்
புயத்திரு வங்களித்
துந்துமாநெடுந்தேரி ரண்டும் வந்துள்ளமானதே
ரொத்துலாவவே"

என்றனர். வில்லிப்புத்தூரார். பாரதம் பதினேழாம் போர்ச் சருக்கம் 59. தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள உணர்வின் சின்னமாக விளங்கும், "தேர்வழி" அவ்விருவரின் ஒத்த மனத்தை உள்ள உணர்வை எடுத்துரைப்பதாக அமைந்தது. அதனை உலகின் மாயைகள் அழித்து விடக்கூடாது பாதுகாத்திட வேண்டும் என்பதாகும், உலகின்பால் உள்ள பற்று

கடல்நீர் போன்றது. எம்பெருமானிடமுள்ள ஈடுபாடு தேர்வழி போன்றது.

"முற்றத்தூடு புகுந்து நின்முகம் காட்டிப்
புன்முறுவல் செய்து
சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்கக்
கடவையோ? கோவிந்தா?"

என்ற நாச்சியார் திருமொழியும் காண்க. இரண்டாந் திருமொழி. 9 "அரவணைமேல் இருள் விரிநீலக்கரு ஞாயிறு சுடர்கால்வது போல் இருள்விரி சோதிப் பெருமானுறை எறிகடலே! இருள் பிரிந்தாரனபர் தேர் வழி தூரல்" என்பதுடன் நாச்சியார் வாக்கையும் ஒப்பிட்டுக் காண்க.

அரும்பதவுரை: இருள் விரித்தல் - இருளைப் பரப்புதல். மாநீர் - கருமை நிறமுள்ள நீர். கடல் நீர் நிலநிறமுடையது. கண்ணன் பாற்கடலில் பள்ளி கொள்வதால் அவன் பள்ளிக் கொள்ளும் கடல் கருமை நிறமடைந்தது. மா - கருமை. திரை - அலை. தூரல் - மூடுதல். அரவு அணை - ஆதிசேடன். கால்வது - ஒளி வீசுவது. பெருமான் - பெருமைக்குரியவன். எறி - அலை வீசும். தேர்வழி - உள்ளம் எனும் தேர்வழி. மனோரதம்.

(கார்காலங் கண்டழிந்த தலைவியின் ஆற்றாமை
கண்டு பரங்கி இரங்கல்)

கடல் கொண்டெழுந்தது வானமவ் வானத்தையன்றிச்
சென்று
கடல் கொண்டொழிந்த வதனாலிது கண்ணன்
மண்ணும் விண்ணுங்

**கடல் கொண்டெழுந்தவக் காலங்கொலோ**
**புயற்காலங்கொலோ**
**கடல் கொண்ட கண்ணீரருவி செய்யா நிற்கும்**
**காரிகையே 18**

விளக்கவுரை: வானம் கடலைக் கவர்ந்து சென்றது என்பதல்லாமல் கடல்தான் வானைக் கவர்ந்தது சென்று விட்டதென்று சொல்லலாம்படியானால், இந்நிலை எம்பெருமானது உடைமையான மண்ணுலகத்தையும் விண்ணுலகையும் பிரளயகாலப் பெருங்கடல் ஆக்கிக் கொண்டு மேலே எழுந்த அந்த கல்ப காலந்தானோ? அன்றி மழைக் காலம்தானோ? இந்தக் கார் காலத்தில் அழகு மயமான இவள் கடல் போன்று கண்ணீர் நீர் அருவி சொரிந்து நிற்கின்றாள்.

திறனாய்வு: பதினைந்தாம் பாசுரத்தில் "கடல் கவர்ந்த புயலோடு வாங்கொண்டல் வண்ணன்" என்று எம்பெருமானுக்கு அடைமொழி கொடுத்துக் கூறியிருத்தல் இங்கு நினைவுகொள்க. "கடல் கவர்ந்த" என்றதனை இப்பாசுரத்தில் "கடல் கொண்டெழுந்தது வானம்" என்கிறார். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" எனப் புழி, வானம் என்பது மேகங்கள் சூழ்ந்ததே, கடல் கொண்டெழுந்ததே என்பதாம்.

தலைவன் சொல்லிச் சென்ற கார்காலம் தான் வந்ததோ என ஐயம் கொண்டு வாழும் தலைவியின் நிலை கண்டு தோழி கூறுவதாக அமைந்த பாசுரம். இதுவும் கால மயக்கு எனவும் கருதற்கு இடமுண்டு.

"கடல் கொண்டெழுந்தது வானம்" என்றும், "வானம் கடல் கொண்டெழுந்தது" என்றும் பிரித்துக் காணலாம். வான் கடலைக் கொண்டது

கடல் வானைக் கொண்டது. வானே கடலானது கடலே வானானது என்றபடி.

"நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்"

என்றனர் வள்ளுவரும் 17. வான் பொய்த்துப் போனால் நெடுங் கடலும் வளங்குறைந்து போகும் என்றதாலும் அறியலாம்.

கடல் நீரின்றி அமையாவான் நீர். வான் நீர் இன்றி அமையாகடல் நீர் என்றபடி. அடுத்து, "கடல் கொண்டெழுந்தது வானம்" என்பதனை மேலும் சிறக்க "அன்றி கடல் அவ்வானத்தைச் சென்று கொண்டு ஒழிந்த அதனால்" என்கிறார். புயற் சின்னம் உருப்பெற்ற காலத்தில் கடலும் வானும் ஒன்றாகக் காட்சியளிக்கும். கடலே வானில் உயர்ந் ததோ எனும் தோற்றத்தை உருவாக்கும். நம்மாழ்வார் இந்நிலையை மனக்கண் குளிரக் கண்டு களித்து இப் பாசுரத்தில் இச்சொற்களைக் கையாண்டுள்ளார் என்பது தெளிவு.

நம்மாழ்வார் புளிய மரத்தடியை விட்டு எங்கும் நகராதவர். எல்லாமே அகக் கண்ணால் கண்டு பாடியனவை என்பதை யாரும் மறந்துவிடக் கூடாது.

இது கார்காலமோ என்ற ஐயத்தை முழுமையாக நீக்கி விடுகிறது. தலைவன் தன்னைச் சேர வருவ தாகக் கூறிச் சென்ற காலம் இதுவே எனத் தலைவி ஐயம் நீங்க வானும் கடலும் ஒன்றென எழுந்த கோலம். கடல் வானம் கடல் கொண்டெழுந்த கோலம். கடல் அவ்வானத்தில் சென்று ஒழிந்ததால் கடல் இன்றி வான மாகக் காட்சியளித்தது என்பதாம். இக்காட்சியை வானம் கடல் கொண்டெழுந்ததை, "கண்ணன்

மண்ணும் விண்ணுங் கடல் கொண்டெழுந்த அக்காலம் கொல்ஓ'' என்று வியக்கிறார்.

''கண்டவர் தம்மனம் மகிழ மாவலிதன் வேள்விக்
களவின் மிகுசிறு குறளாய் மூவடியென்று
இரந்திட்டு
அண்டமும் இவ்வலை கடலும்
அவனிகளுமெல்லாம்
அளந்தபிரான்........''

என்றனர் திருமங்கையாழ்வார். பெரியதிருமொழி 3-10-5 ''மண்ணும் விண்ணும் கடல் கொண்டெழுந்த'' என்பதனையும் ''அண்டமும் இவ்வலைக் கடலும் அவனிகளுமெல்லாம் அளந்த'' என்பதனையும் ஒப்பிட்டுக் கண்டு மகிழ்க. ''அக்காலம்'' என்பதற்கான விளக்கம் திருமங்கையாழ்வார் அமுதமொழிகள் தந்தருள்வது காண்க. ''அக்காலம் கொல்ஓ'' என்றதால் கடலும் வானும் ஒன்றான காட்சியோ அல்லது எம்பெருமான் தான் எழுந்தருளினனோ, கார்காலம் வருவேன் என்று சொல்லிப்போந்த எம்பெருமான் எழுந்தருளி விட்டானோ என்ற எண்ணக் களிப்பும் இங்கு மிளிர்கிறது.

''காண்கின்ற நிலமெல்லாம் யானேயென்னும்
காண்கின்ற விசும்பெல்லாம் யானேயென்னும்
காண்கின்றவெந்தீ யெல்லாம் யானேயென்னும்
காண்கின்ற இக்காற்றெல்லாம்
யானேயென்னும்
காண்கின்ற கடலெல்லாம் யானேயென்னும்
காண்கின்ற கடல் வண்ணனேறக் கொலோ?''

என்பது நம்மாழ்வார் அமுதமொழிகள் (திருவாய்மொழி 5-6-3) இங்கு நினைவுகூர நல்கும். புணர்ந்து பிரிந்த தலைவனின் தோற்றமாக கண்ணன் தோற்றமே அனைத்துமாகக் காட்சியளித்தருள்வது காண்கிறார்.

''நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின், சுரத்தலு வண்மையு மாரியுல
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமு மொண்மையும் பூவையுள
நின், தோற்றமு மகலமு நீரினுள
நின், உருவமு மொலியுமா காயத்துள
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள
அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவு
மேம மாந்த நிற்பிரிந்து...
மேவல் சான்றன வெல்லாம்''

என்று கடுவனிள வெயினனார் ஓங்கு பரிபாடல் நான்காம் பாடலில் தெளிவுபடுத்தியிருத்தல் காண்க. இதற்கான விளக்கவுரையை அடியனேன் ''இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து'' பக்கம் 55.58 கண்டு தெளிக.

''அகாலம் கொலோ'' என்றது அந்தக் காலமும் வந்து விட்டதோ. அல்லது அந்தப் பிரளய காலம் தான் வந்து விட்டதோ என்றபடியுமாம். தலைவனைப் பிரிந்த காலம், ஊழிகள் பலவாதலின் தலைவன் வருவான் வருவான் எனக் காத்திருந்து ஊழிக் காலந் தான் வந்ததோ எனினுமாம். எம்பெருமானது லீலா விபூதியும் நித்ய விபூதியுமாகிய இரண்டையும் ஒழிக்கும் படியான ஒரு காலம் வந்து விட்டதோ எனினுமாம். பாசுரத்தின் இப்பகுதி காண்கின்றதனைத்தும் அவனே என்று உணர்த்துவதாகவும் அமைந்ததாகும். ''அக்காலம் கொல்ஓ புயற்காலங் கொல்ஒ'' என்று கார் காலத்தையும் கண்ணன் உலகளந்த காலத்தை ஒருங்கு சேர்த்து, வியப்பொடு வியப்பாய் இரு ஓகாரங் கொடுத்துச் சிறப்பித்திருத்தல் காண்க. புயற்காலம் என்றது மழைக் காலம் என்பதாம்.

"புயற்காலங் கொலோ" என்று கண்ணீர் அருவி யாக நிற்கும் காரிகையாக நமக்குக் காண்பிக்கிறார். "கடல் கொண்ட கண்ணீர்" என்றதில் "கடல் கொண்ட" என்றதைக் கண்ணீருக்கு அடைமொழி யாக்கிப் பொருள் கொண்டால் கடலன்ன கண்ணீர் என்றாகும். "கடல் கொண்ட கண்" என்று கண்ணுக்கு அடை மொழியாக்கிக் கூறுமிடத்து கடல் போன்ற நீண்ட கன்ற நீல விழிகள் என்பதாம். அத்தகு கண் உதிர்க்கும் 'நீர் அருவி செய்யா' என்றது அருவியெனப் பாய்ந்து ஓடும் என்பதாம். செய்யா எனும் வினை யெச்சம் செய்து எனும் பொருளது. "காரிகை" என்றது அழகை உணர்த்துவது. அதனை உடைய பெண்ணுக் கானது. ஆகுபெயராய் பெண்ணைக் குறிப்பது. ஏகாரத்தை அசையெனத் தள்ளாது தேற்றமாகப் பொருள் கொள்க.

அரும்பதவுரை : அன்றி - அல்லாமல். புயற்காலம் - மழை காலம். கடல்கொண்ட கண் - கடல் போன்ற கண். அருவி - நீரோடை. செய்யா - செய்து. காரிகை - பெண் அழகு.

**(செவிலி பழிக்கு இரங்கல்)**

**காரிகையார் நிறைகாப்பவர் யாரென்று**
**கார்கொண்டின்னே**
**மாரிகையேறி யறையிடுங் காலத்தும் வாழியரோ**
**சாரிகைப் புள்ளரந்தண்ணந் துழாயிறை கூயருளார்**
**சேரிகையேறும் பழியாய் விளைந்தென்**
**சின்மொழிக்கே 19**

விளக்கவுரை : மகளிருள் எம்முன் தங்கள் கர்ப்பை அழியாமல் காத்துக்கொள்ள வல்லவர் யாருளார்? என்று கருதிச் செருக்குற்று மேகங்கள்

கருமை நிறங்கொண்டு இவ்வாறு வானத்தின் மீதேறி நின்று அறைகூவும் காலத்திலும், விரைந்து செல்லத் தக்க கருடாழ்வானையுடைய இவளது தலைவன் அழகிய குளிர்ந்த தனது திருத்துழாயை இவளுக்குச் சிறிது கொடுத் தருளுகிறாரில்லை. ஆகவே சிறிதே பேசும்; என் மகளான இவளுக்கு அவர்மேல் கொண்ட காதல்தான் இவ்வூர் முழுதும் பரவிப் பழியாய் முடிந்தது. வாழ்ந்திடுவாளாக.

திறனாய்வு: பிரிந்து சென்றதன் தலைவன் சொல்லிப் போந்த "காலங்கொலோ புயற்காலங் கொலோ" என்று "கடல் கொண்ட கண்ணீர் அருவி செய்யா நிற்கும் காரிகை"யின் நிலையினைக் கண்ட தாயின் ஆற்றாமை கூறும் பாசும் இது. தலைவியின் ஆற்றாமை கண்டு தாய் தன் மனக் கவலையை எடுத்துரைப்பதாக அமைந்தது. 'என்சின் மொழிக்கே' என்றதால் அன்னைமாரில் ஒருவள் அல்லது தன் அன்னையே மகளைத் தேற்றுவிக்க இயலாது புலம்பியதாகக் கூறும் பாசுரம் எனலாம். "என்சின் மொழிக்கு சேரிகை ஏறும் பழியாய் விளைந்தது" என்று தன் மனவேதனையை செவிலித் தாய் கூறுவது காண்க. "கண்ணீர் அருவி" தன் மகளின் கண்களில் கண்ட தாயின் உள்ளத் துடிப்பை உணர்த்துவது இப்பாசுரம்.

"கடல் கொண்ட கண்ணீரருவி செய்யா நிற்கும் காரிகை"யைக் கண்டு "சேரிகையேறும் பழியாய் விளைந்தது" காண்கிறாள் அன்னை. தன் தலைவன் வருவதாகச் சொன்ன, "கடல் கொண்டெழுந்த அக்காலம் கொலோ, புயற் காலங்கொலோ" என்று வியந்து மேலே எதுவும் பேசாது உள்ளத்துள் நினைந்து கிடப்பவளாதலின், "என் சின்மொழிக்கே" என்று தாய் தன் மகளின் நிலை பற்றிக்கூறியதாகும். இது செவிலித்தாய் எனினுமாம்.

"தாய் எனப்படுவோள் செவிலி ஆகும்"

என்பது தொல்காப்பியம். களவியல் 33. செவிலி என்ற சொல் பெற்றெடுத்த தாயினும் வளர்த்த தாயையே கூறிப்பதாகும். எனவே ஈன்ற தாயினும் களவின் கட்சிறந்தாள் என்றனர். எனவே இப்பாசுரம் செவிலி கூறியவாறு காண்க. எம்பெருமான் எழுந் தருளக் காத்திருக்கும் ஆழ்வார்கள் அப்பெருமான் விரைந்து அருள் செய்யாது இருக்கக் கண்டு அவன் துளசி மாலைக்கு ஏங்கிய ஆழ்வார்கள் படும்பாட்டைக் கண்ட அவர்தம் உற்றார் உறவினர் கூறியதாகவும் கொள்ளவது இதன் உட்கருத்தாகும்.

இப்பாசுரம், தன் மகளின்மேல் விழுந்த பழிக்கு இரங்கும் தாயின் மனநிலையை உணர்த்துவதாகும். "காரிகையார் நிறை காப்பவர் யார்" என்றது மகளிருள் கற்பு காப்பவர் தம் கற்பு நெறியை அழியாமல் காத்துக் கொள்பவர் யார் என்று சொல்லிக் கொண்டு என்றபடி.

"நீரார்கமலம் போல் செங்கண் மாலெனன்
றொருவன்
பாரோர்களெல்லாம் மகிழ்ப்பறை கறங்க
சீரார்குட மிரண்டேந்தி—செழுந்தெருவே
ஆராரெனச் சொல்லி ஆடுமது சண்டு"

என்றனர் திருமங்கையாழ்வார். சிறிய திருமடல் ஆடுவது கண்டும் நிறைகாப்பார் "ஆர் ஆர்" என்ற படியூமாம் என்பதை நினைவு கொள்க. "கடல் கொண் டெழுந்தவக் கோலங்" கண்டும், "காரிகையார் நிறை காப்பவர் யார்?" என்றபடி. காரிகை என்றால் அழகு என்பது பொருள். பெண் அழகே உருவானவள் ஆதலின் காரிகையானாள். காரிகை என்ற சொல் இங்கு மகளிர்க்கானது. மகளிரிருள், "நிறை காப்பவர் யார்" என்றது தம் கற்பைக் காத்துக் கொள்ளும்

வலிமையுடையார் யார் என்றபடி. "நிறையெனப் படுவது மறைபிறரறியாமை" என்பதும் காண்க. கலித் தொகை 16. இதுகாறும் கண்ட பாசுரங்களின் அமைப்பை இங்கு நினைவு கூறுக.

"முனிவஞ்சப் பேய்ச்சி முலை சுவைத்தான் முடிசூடு துழாய்ப்
பனிநஞ்ச மாருத மெய்ம்மதாவி பனிப்பியல்வே"

என்று நான்காம் பாசுரத்திலும்

"கடாவிய வேகப்பறவையின் பாகன் மதன செங்கோ
ணடாவிய கூற்றங் கண்டீருயிர் காமின்கண் ஞாலத்துள்ளே"

என்று ஆறாம் பாசுரத்திலும்.

"ஈர்கின்ற சக்கரத்தெம் பெருமான் கண்ணன்றண் ணந்துழாய்"

என்று பனிரண்டாம் பாசுரத்திலும்

"துனிவளர் காதற்றுழாயைத் துழாவு தண்டவாடைதடிந்
தினிவளை காப்பவராரெளை யூழிகளீர்வனவே"

என்று பதிமூன்றாம் பாசுரத்திலும், கூறியிருத்தலாலும் "காரிகையார் நிறைகாப்பவர் யார்" என்றனர் என்க. "யார் என்று கார்கொண்டு இன்னே மாரிகை ஏறி அறை யிடும் காலத்தும்" என்றது, யார் என்று மேகங்கள் கருமை நிறங்கொண்டு இவ்விதமாக வானத்தின் மீதேறி என்பதாம். "யார்" என்றது காரிகையர் நிறைகாப்பது யார் என்பது முன்பே கூறினோம். "என்று" என்றது என்று தன்னைக் கருதிக்கொண்டு என்பதாம். "கார் கொண்டு இன்னே மாரிகைஏறி" என்றது கார்மேகங்கள்

கொண்டு இவ்வாறு மழை மேகம் மேல் ஏறி என்ப தாம். இங்கு மேகங்கள் கருமை நிறம் பெற்றபின்பே அவை குளிர்ந்து மழை மேகங்களாகி மழை பொழியும் என்பதை ஆழ்வார் அழகுபட அடுக்கியிருத்தல் காண்க. ''கார்'' என்றது கருமையென்னும் பண்பின் விகாரம்; ''கையேறி'' என்ற சொல்லால் படையணி வித்தல்போல் ''கார் கொண்டின்னே மாரி'' என அமைத்திருத்தல் காண்க. மாரி என்பது மழை. ஈன்ற அன்னை பாலூட்டுவது போன்று மழை பொழிந்து உயிரினங்களின் வாழ்வை வளம் மிக்க தாக்கும். எவ்வளவு மழை பெய்தாலும் நல்ல மண் வலம் இல்லையேல் தாவரங்கள், தானியங்கள் விளையாது. ஆதலின் மாரியும் மண்ணும் மக்கள் நலம் காப்பவை. ஆகவே மழைக்கு தெய்வம் மாரியம்மன் என்றும் மண்ணுக்குத் தெய்வம் காளியம்மன் என்றும் வைத்து வழிபட்டனர். ஆதலால் நம் ஊர்களில் மாரி யம்மன் காளியம்மன் கோயில்கள் மட்டுமே இருப்பது காணலாம். இவையிரண்டும் இயற்கை வழிபாட்டில் வருபவை.

''பாரி பாரி என்றுபலர் ஏத்தி
ஒருவன் புகழ்வர் செந்நாப்புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டுலகு புரப்பதுவே''

என்று மாரியைச் சிறப்பிக்கும் முகத்தான் பாரியைச் சிறப்பித்தனர் கபிலர் புறம். 107. மாரியென்றால் பாரியை மறக்கமுடியுமா? அதனால் இச்செய்யுள் இங்கு எடுத்தாளப்பட்டது.

''கார் கொண்டின்னே மாரி'' என்றதை ''மாரிகார் கொண்டு இன்னே கையேறி'' எனப் பிரித்தும் பொருள் காண்பர். இங்கு ''மாரி'' என்பதற்கு மேகம்

எனப் பொருள் கொண்டு, "மேகங்கள் கருமை நிறம் கொண்டு ஏறி" என்பதாலும் அமையும். "கார் கொண்டு இன்னே கையேறி" என்றதை "கடல் கொண்டெழுந்த அக்கோலம்" என்ற பதினெட்டாம் பாசுரத்துடனும் ஒப்பிட்டுக் காண்க. "அறையிடும் காலத்தும்" என்றது ஒலிக்கும் காலத்தும் அறைகூவும் காலத்தும், "ஆராரெனச் சொல்லி" ஆடும் காலத்தும் என்றபடி.

எம்பெருமானது திரு உருவையும் அவன் சங்கம் முழக்கத்தையும் நினைவூட்டி "அறையிடும் காலத்தும்" என்றனர். எம்பெருமானை அனுபவித்தற்குரிய காலம் இதுவென்று ஆழ்வார்களின் ஆற்றாமையை, காலம் வரினும் அவன் விரைந்து வந்து அருளாததால் மென் மேலும் அதிகப் படுத்துவதைக் குறிப்பதாகும். "கார் கொண்டு இன்னே மாரிகை ஏறி அறையிடும் காலத்தும்" வந்து அருளாததால், அவன் அருள் பாலிக்காதிருந்தும்" "என் சின்மொழிக்குச் சேரிகை ஏறும் பழியாய் விளைந்தது" என்கிறார். "என்சின் மொழிக்கு" என்றது எனது மென் மொழியாளுக்கு என்பதாம்.

தலைவன் எழுந்தருளாதிருந்தும் அவனை மனத்தில் கொண்டவளாய் மென்மையான சில மொழி களே பேசும் என் மகள் என்கிறார். எம்பெருமான் எழுந்தருளவில்லையெனத் தெரிந்தும் மனத்தில் அடக்கி வெகுளாமையைக் குறிப்பதாகவும் கொள்ள லாம். அவன் வருவான் வருவான் என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும் நிலை கண்டு "சேரிகை ஏறும் பழியாய் விளைந்தது" என்கிறார். "சேரி" என்பது சேர்ந்து வாழும் இடம். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றனர் பிறரும். உயர்ந்தோர்

சேர்ந்து வாழ்தற்கிடமானது ஆதலின் ''சேரி'' என்றனர். முல்லை நிலத்து மக்கள் வாழ் இடத்திற்கும் சேரி எனப் பெயர் உண்டு. ''சேரி'' என்றது 'ஊர்' என்ற பொருளிலும் வரும். ''கையேறும்'' என்றது முழுமை யாகப் பரவும் என்பதினும் இதே எல்லோருடைய பேச்சாக இருந்தது என்பதாம். ''கையேறுதல்'' என்ற சொல் மிகுதியைக் குறிக்கும். எல்லோரும் பேசும் ஒரே பேச்சாய் இருந்து எம்மகள் மேல் பழியாய் விளைந்ததே என்பதாம். இந்த நிலையிலும் மன மிறங்கி ''சாரிகைப் புள்ளர் அம்தண்ணம் துழாய் கூய் இறை அருளார் வாழியரோ''என்றதை சேரி கையேறும் பழியாய் விளைந்த என் சின் மொழிக்கு, சாரிகைப் புள்ளர் அம்தண்ணம் துழாய் கூய் இறை அருளார் ''அவர் வாழ்க. எனக் காண்க.

''சாரிகைப் புள்ளர்'' என்றது விரைந்து செல்லும் கருடாழ்வாரை வாகனமாகக் கொண்ட எம்பெருமான் என்பதாம். ''சாரிகை'' என்ற சொல்லுக்குக் காற்று. சுழல் காற்று என்றும் பொருள்படும். காற்றில் மிதந்து வரும் பறவையை வாகனமாயுடைய எம்பிரான் எனினுமாம். ''அம் தண் அம் துழாய்'' என்றது அழகிய மிகவும் குளிர்ந்த துழாய் மாலை என்பதாம். ''அம்'' என்றது முதலில் வந்தது அழகு என்ற பொருளிலும், பிறகு வந்தது ''தண்'' என்ற சொல்லொடு குளுமையின் மிகுதிப்பாட்டையும் உணர்த்த வந்தது என்பது காண்க. தண்ணம் என்ற சொல்லும் குளிர்ச்சி என்றே பொருள்படும் மாதலின் ''அம் தண்ணம் துழாய்'' என்று பொருள் காணினும் அமையும்.

''கூய் இறை அருளார்'' என்றது கூப்பிட்டுச் சிறிது அருளார் என்பதாம். ஊரே இதே பேச்சாய் இருக்கை யில் ''கூய்'' என்ற சொல்லை. அழைத்து என்றோ, கூப்பிட்டு என்றோ பொருள் கொள்வது சரியன்று.

இரகசியமாக அழைத்து என்று பொருள் கொண்டால் சிறப்புறுமாதலின் இரசியமாகக்கூட அழைத்துச் சிறிது அருளவில்லை என்றபடி. "இறை" என்ற சொல் இங்கு சிறிது என்ற பொருளில் வந்தது. இதனையே "இறை கூய் அருளார்" எனவும் சொல் அமைப்பிலேயே பொருள் காணலாம். இறைவனாகிய எம்பிரான் இரகசியாகக் கூப்பிட்டும் அருளவில்லை எனப் பொருள்படும். கூய் என்ற சொல்லுக்குக் "குசுகுசு" என்று பொருள் கொண்டால் மிக இரகசியமாக வேறு யாருக்கும் கேட்காதபடி அழைத்து அருளார் என்பதாம். தலைவியின் ஆற்றாமை கண்டும் ஊரார் இழிச் சொல்லுக்கும் பழிச் சொல்லுக்கும் ஆட்பட்டு எதுவும் கூறாத சின்மொழிக்கு, "இறை அருளார்" அத்தலைவன் "வாழியரோ" என்கிறார். "வாழி" என்றது வஞ்சப் புகழ்ச்சியாய் அமைந்தது. "அரோ" அசை.

இப்பாசுரத்தை "காரிகையார் நிறைகாப்பவர் யார் என்று மாரி கார்கொண்டு இன்னே கை ஏறி அறையிடும் காலத்தும், சாரிகை புள்ளர் எம் தண்ணம் துழாய் கூய் இறை அருளார் என்சின் மொழிக்கே சேரிகை ஏறும் பழி ஆய் விளைந்தது வாழியரோ" எனவும் பிரித்துப் பொருள் காண்பர். இதில் "வாழியரோ" என்றது வஞ்சப் புகழ்ச்சியில் தலைவனைக் குறிக்காமல் இரங்கல் குறிப்பில் தலைவியை வாழ்த்துவதாகவும் அமையும்.

அரும்பதவுரை : காரிகையர் - அழகியர், மகளிர், நிறை - கற்பு நிறைவு. கார் - கருமை. மாரி - மழை, மேகம். கையேறி - மென்மேலும் உயர்ந்து. அறையிடுதல் - கூப்பிடுதல். சாரிகை - காற்று, சுழல் காற்று, வேகம் புள்ளர் - பறவையை வாகனமாக உடையவர். அம் - அழகிய. தண் அம் - மிகக் குளிர்ந்த. தண்ணம் - குளிர்ந்த. இறை - இறைவன். சிறிது கூய - கூப்பிட்டு.

அழைத்து. இரகசியமாக அழைத்து. யாருக்கும் கேட்காதபடி குசுகுசு எனக் கூப்பிட்டு. சேரி - உயர்ந் தோர் வாழும் இடம். கையேறும் - ஒவ்வொரு வரும், எல்லோரும். சேரிகையேறும் - ஊர் முழுவதும். சின்மொழி - சிறிதளவே பேசும் மொழியாள். நிறை என்பது தொழிற்பெயர். நிறுத்துதல் கையேறும் என்றது கைகூடும் என்பது போன்றது.

(வெறி விலக்கு)

சின்மொழி நோயோகழிபெருந் தெய்வமிந்
நோயினதென்
றின்மொழி கேட்குமிளந் தெய்வமன்றிது வேல்நின்னி
யென்மொழி கேண்மினென்னம் மனைமீருளகேழு
முண்டான்
சொன்மொழி மாலையந் தண்ணந்துழாய் கொண்டு
சூட்டுமினே. 2(

விளக்கவுரை: சில சொற்களையே உதிர்க்கும் இவளது நோயோ தேவர்களுக்கெல்லாம் தெய்வமான எம்பெருமான் சம்பந்தமாக உண்டானது. இந்நோய் இப்படிப்பட்டதென்று வரையறுத்துச் சொல்ல இயலாத மொழிகளைப் படைத்துச் சொல்லக் கேட்க தக்க சிறு தெய்வம் சம்பந்தமாக இது வந்ததன்று வெறியாட்டு ஆட்டுவிப்பவனே! நீ விலகி நிற்பாயாக எனது அம்மையர்களே! நான் சொல்வதைக் கேளுங் கள். எழு உலகத்தையும் பிரளய காலத்தில் தன் திரு வயிற்றில் உண்டு காத்தருளிய எம்பெருமானது திருப் பெயரைச் சொல்லிக் கொண்டு அவனது மாலையாகிய திருத்துழாயை எனக்குக் கொண்டு வந்து சூட்டுங்கள்

திறனாய்வு: சாரிகைப் புள்ளர் அந்தண்ண துழாய் இறை கூயருளார்" என்பது சேரிகையேறு

பழியாய் விளைந்தன என்சின் மொழிக்கே'' என்கிற நிலையில் ஊரார் எல்லோரும் கூடி விட்டனர். தலைவி யின் நிலை கண்டு அந்தப் பித்துப் பிடித்த நிலையி னின்றும் அவளை விடுவிக்க வெறியாட்டக்காரனும் வந்துவிட்டான். பேய் பிடுத்திருக்கிறாள் என்பதாக முடிவாகிவிட்டது. அவள் உடலில் மெலிந்து போவ தற்கான காரணம் என்ன என்று கவலைப்பட்டு அவள் உடலில் புகுந்து கிடக்கும் பேயை அல்லது சிறு தெய் வத்தை ஓட்டிவிட வேண்டும் என அனைவரும் கூடி நிற்கின்றனர். தலைவியின் உண்மை நிலை தோழிக்கு மட்டும்தான் தெரியும்.

புணர்ந்து பிரிந்து சென்ற தலைவன் கார் காலம் கண்டும் வராததன் காரணமாக இவ்வாறு இளைத்து மெலிந்து அவதியடைகிறாள் என்பதை உணர்ந்தவள் முதன் முதலில் தலைவியை அந்த வெறியாட்டக்காரனி டமிருந்து விடுவிக்கவேண்டும்''.வெறியாட்டக்காரனை ''வேலநின்னீ'' என்கிறார். ''வேலன்'' என்பது வேல் கொண்டு ஆடுபவன். முருகன் வேலேந்தி ஆடும் வெறியாட்டக்காரானாதலின் ''வேல நின்னீ'' என்ற னர். வெறியாட்டம் ஆடும் பொழுது பேய் பிடித்த பெண்டிரை மிகவும் கொடுமைப் படுத்துவர். எருக்கன் குச்சியால் அடிப்பர். பறை கறங்க சுழன்றாட வைப்பர். இத்தகு கொடுமைகட்டு ஆளாகதபடி அவளைக் காக்க முதன் முதலில் வெறியாட்டக் காரனின் செயலை நிறுத்துகிறார். இத்தகு வெறியாட் டத்திற்குக் காரணமானவர்கள் தலைவியின் அன்னைமார் என்பதால் ''என் அம்மனை மீர்! என் மொழிகேண் மின்'' என்கிறார். நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேளுங்கள் என்றபடி. தோழியின் தாய் தனக்கும் தாயானதால் ''என் அம்மனை மீர்'' என்ற னர். சிறிதளவே பேசும் எம்தலைவிக்கு நோயாய்

அமைந்தவன் எம்பெருமானே என்பதாக "சின்மொழி நோயோ கழி பெருந்தெய்வம்" என்கிறார்.

"........எம்பெருமான்
பேராயிர முடையான் பேய்ப் பெண்டீர்நும்
மகளைத்
தீரா நோய் செய்தா னெனவு ரைத்தாள்"

என்றனர் திருமங்கையாழ்வார். சிறிய திருமடல். அடியனேன் உரை நூல் பக்கம் 36-37 காண்க.

சிறிதே பேசும் மொழியாள் இவளுக்குத் தீராத நோய் செய்தான் "பெருந்தெய்வம்" என்கிறார். பேர் ஆயிரமுடையான் எம்பெருமான் அந்தப் பெருந் தெய்வமே இவளுக்கு நோய் செய்தான் என்பதாம். இங்கு "பெருந்தெய்வம்" என்றதோடு "கழிபெருந் தெய்வம்" என்றது மிகப் பெருந்தெய்வம் என்பதாம். "கழி" என்ற சொல் மிகுதியைக் குறிப்பது. பெருமாள் யாவற்றிற்கும் முதன்மையானவன். நாரஅயணன், அந்த நாராயணன் என்றபடி. "எம்பெருமான் பேராயிர முடையான்;' எனப்புழி. "இன்நோய் இனது என்று இன்மொழி கேட்கும் இளம் தெய்வம் அன்று" என்றது. இந்நோய் இத்தன்மையது என்று வரையரையில்லாத மொழிகளைக் கூறும் சிறு தெய்வம் அன்று என்கிறார். இவ்விடத்தை நன்கு காண்க. ஆங்காங்கு இருக்கும் தெய்வங்கள் சிலரை ஆட்கொண்டு அவர்கள் மேல் வந்து பேசும். பேய் பிடித்தாடுவதும் சாமி பிடித்து ஆடுவதும் ஆங்காங்கு இன்றும் காணலாம். அது போன்று இப்பொழுது தலைவியின் இத்தகைய நிலைக்கு ஆங்கு உள்ள சிறு தெய்வம் எதுவும் காரண மன்று என்பதாகக் கூறுவது காண்க.

களவொழுக்கத்தில் புணர்ந்து பிரிந்த தலைவன் வராதது கண்டு உடல் மெலிந்து பிரிவாற்றாமையால்

நொந்து கிடக்கும் மகளின் நிலை இன்னதென அறியாத செவிலியர் கட்டுவச்சி கொண்டு குறிபார்த்துக் சொல்லுவிப்பதும் வழக்கு

"காரார் குழற் கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர் விதிரா மெய்சிலி ராக்கைமோவாய்
பேராயிரமுடையான் என்றாள்..."

என்று கட்டுவிச்சிவந்து குறி சொன்னதை சிறிய திருமடலில் திருமங்கையாழ்வார் கூறியிருத்தலும், கட்டு விச்சி யாரும் கூப்பிடாமலே வந்ததும் அடியனேன் சிறிய திருமடல் பெரிய திருமடல் உரை நூல் பக்கம் 14—17 காண்க.

தலைவியின் இந்நிலைக்கு, நோயின் இன்ன தன்மைக்குக் காரணம் ஊரில் உள்ள சிறுசிறு தெய்வங் களில் ஒன்று அன்று என்கிறாள்

"திசைக்கின்றதே இவள் நோய் இதுமிக்க
பெருந்தெய்வம்
இசைப்பின்றி நீரணங்காடும் இளந்
தெய்வமின்றிது"

என்றும்,

இது காண்மின் அன்னைமீர்! இக்கட்டுவிச்சி சொற்
கொண்டு நீர்
எதுவானும் செய்து அங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவேன்மின்

என்றும்,

"மருந்தாகுமென்று அங்கோர் மாயவலவை சொற்
கொண்டுநீர்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் களனிழைத்
தென்பயன்"

என்றும் நம்மாழ்வார் திருமொழி நான்காம் பத்து ஆறாம் திருவாய்மொழியில் கூறுவதும் காண்க. களவொழுக்கத்தில் வெறிவிலக்குத் துறைக்குப் பதினோறு பாசுரங்கள் நம்மாழ்வார் அருளியிருப்பது முழுமையாகப் பயின்று இன்புறத்தக்கது. இப்பாசுரங்களில் நோய்க்கும் மருந்து யாதென விளக்குகிறார்.

''மதுவார் துழாய்முடி மாயப்பிரான் கழல்
வாழ்த்தினால்
அதுவே இவளுற்ற நோய்க்கும் அருமருந்தாமே''

என்பதாலும்;

''ஒருங்சாகவே உலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட
பெருந்தேவன் பேர் சொல்லகிற்கில் இவளைப்
பெறுதிரே''

என்றதாலும், நோய்க்கு மருந்தானவன் அப்பெருந் தேவனே என்று கூறியிருத்தலை இங்கு நினைவு கொள்க. திருவாய் மொழியில் அருளியதையே இப்பாசுரத்திலும். ''உலகேழுமுண்டான் சொன் மொழி மாலை அம் தண்ணம் துழாய் கொண்டு சூட்டுமினே'' என்கிறார். இத்திருவிருத்தத்திற்கும் திருவாய் மொழிக்கும் சொல் வேறுபாடு கூடக் குறைவாகவே அமைந் துள்ளது காண்க. இவளுக்கு நோய் செய்தான் பெருந்தெய்வம். உலகம் ஏழும்உண்டு உமிழ்ந்த அந்த எம்பெருமான் ஆதலின் அவன் திருநாமத்தையே சொல்லிப் பிதற்றிக் கொண்டிருக்கிறாளாதலின் ''சொன் மொழி கொண்டு'' என்றனர். அவள் பிதற்றும் மொழிகளிலிருந்து அவளுக்கு வேண்டியது ''அம்தண்ணம் துழாய்'' என்பது தெளிவாகிறது.

''உலகம் ஏழும் உண்டான் சொல் மொழி கொண்டு'' என்றதால் நோய் செய்தான் அந்த நாரணனே என்றபடி. ஆதலின் அவன் திருமார்பில்

சூடிக்கிடந்த திருத்துழாய் மலையில் ஒரு சிறு பகுதி இவளுக்குத் தந்தருளானோ அப்படித் தந்தருளானாகில் ''மாலை அம் தண்ணம் துழாய் சூட்டுமினே'' என்கிறார்.

''கோலால் நிரைமேய்த்து ஆயனாய்க் குடந்தைக் கிடந்த குடமாடி
நீலார் தண்ணந் துழாய்கொண்டு என்நெறி மென் குழல்மேல் சூட்டீரே''

என்றும்,

''அஞ்சேலென்னான் அவனொருவன் அவன் மார் பணிந்த வனமாலை
வஞ்சியாதே தருமாகில் மார்பில் கொணர்ந்து புரட்டீரே''

என்ற நாச்சியார் பதின்மூன்றாம் திருமொழியிலும் அம்மையாரின் ஆற்றாமைக்கு அவன் மார் பணிந் திருந்த மாலையே மருந்தானது காண்க.

களவொழுக்கத்தில் வெறியாட்டு என்பது ஒரு துறை. தலைவனைப் பிரிந்த காதலியின் உடல் மெலிந்து போகும். அவர்தம் களவொழுக்கத்தை ஊரார் அறிந்து கொள்வாரோ என்ற அச்சமும் மேலோங்கி நிற்பதாலும் உடல் மெலிந்து உண்ணாது உறங்காது இருக்கக் கண்டதாய் உண்மையான காரணம் யாது எனக் கண்டறிய கட்டுவச்சியின் உதவியை நாடுகிறாள். தெய்வக்குற்றம் என அஞ்சியும் முருகனால் வந்தது என்று நம்பி முருக பூசை செய்யத் துணி. முருகக் கடவுளுக்குப் பூசாரி வேலன் உதவியை நாடுகின்றனர். அவன் கள்ளும் இறைச்சியும் படைப்பான். தினையைக் குருதியில் கலந்து எறிந்து ஆவேசமாக ஆடுவான். இங்ஙனம் முருக பூசாரி வெறியுடன் ஆடிப் பூசை செய்தற்கு

வெறியாட்டு எனப்பெயர். இது ஒரு தனித் துறை யாகவே கருதப்படுகிறது. இந்த வெறியாட்டத்தை வேண்டாம் என்று விலக்குவது வெறிவிலக்கு. நோய் செய்தான் யாரெனத் தோழி அறிவளாதலின் வெறி யாட்டு வித்தலைத் தடுத்துவிடுகிறாள் என்பது பற்றிய பாசுரம் இது.

அரும்பதவுரை: சின்மொழி - பேசாமடந்தை, வாய்விட்டு ஒரு வார்த்தை கூடப் பேசாது இருப்பவள், ஒரு சில சொற்களே மழலை என மொழிபவள். நோயோ - இதில் ஓகாரம் இரக்கத்தைக் குறிப்பது. நோயின் வருத்தத்தைக் குறிப்பது. கழி - மிகுதியைக் குறிப்பது. கழிபெருந்தெய்வம் - தெய்வம் யாவற்றிற் கும் மிகப்பெருந்தெய்வம். இனது என்று - இன்ன தன்மையது. இன்னநிதானத்தில் உள்ளது, நிலையில் உள்ளது. இல்மொழி - இல்லாத சொற்கள். இளந் தெய்வம் - நாட்டிலுள்ள சிறுசிறு தேவதைகள். வேலன் - முருகன் பூசாரி. வெறியாட்டுவிப்பவன். நன்னீ - நிறுத்து. என்மொழி - எனது சொல்லை - உலகேழு முண்டான் - திருமால். சொல் - அவன் பெயர் சூட்டுமின் சூட்டுவீர்களாக. ஏகாரம் அசை.

(ஏறுகோள் கூறி வரைவு கடாதல்)

சூட்டுநன் மாலை கடுயன வேந்தி விண்ணோர்
கணன்னீ
ராட்டியந் தூபந்தரா நிற்க வேயங்கோர் மாயை யினா
லீட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்தி
மிலேற்றுவன் கூன்
கோட்டிடை யாடினை கூத்தடலாயர்தங்
கொம்பினுக்கே. 21

விளக்கவுரை: அங்கு அந்த நித்ய விபூதியாகிய பரமபதத்தில் நித்திய சூரிகள் புனித நீரால் திருமஞ்சனம்

செய்வித்து பரிசுத்தமானவற்றை எனக்குச் சூட்டு வதற்குத்தக்க அழகிய மாலைகளை ஏந்தி நின்று, அழகிய தூபத்தைச் சமர்ப்பித்துக் கொண்டு நிற்க, ஒரு மாயையினால் இங்கு இந்தத் திருவாய்ப்பாடியிலுள்ள ஆய்ச்சியர் தினமும் கடைந்து சேர்த்த வெண்ணெயை எடுத்து அமுது செய்ய விரும்பி வந்து, வலிமையுடைய இடையரது குலத்திற் பிறந்த மலர்க்கொடி போன்ற மகளான நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் செய்து கொள்வதற்காக, சினம் கொண்ட ஏழு எருது களின் வலிமைமிக்க வளைந்த கொம்புகளினிடை கூத்தாடினை.

திறனாய்வு: இப்பாசுரம் நப்பின்னைப் பிராட்டிக் காக பரமபதத்தைத் துறந்து வெண்ணெய் எடுத்து அமுது செய்ய விரும்பி அடல் ஆயர்தம் கொம்பு நப்பின்னைப் பிராட்டியை மணம் செய்து கொள்ள ஏழெருதுகளின் வலிமை மிக்க வளைந்த கொம்புகளுக் கிடையில் கூத்தாடினது. உணர்த்துகிறது. களவொழுக் கத்தால் புணர்ந்து நீங்கிய தலைமகனைப் பார்த்து முல்லை நிலத்து மரபின்படி வெளிப்படையாகத் விரைந்து வந்து ஏறு தழுவி மணந்து கொள்ளும்படி தோழி தலைவனுக்குக் கூறுதல் இத்துறையின் இலக்கணம்.

> "எழுந்தது துகள்
> ஏற்றனர் மார்பு
> கவிழ்ந்தன மருப்பு
> கலங்கினர் பலர்"

ஏறு தழுவக்கண்ட சுற்றத்தார் கலங்கினதை இம்மொழி களால் முல்லைக் கலி 102 கூறுவது காண்கிறோம். ஒரு தம்பதியருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தால். அப் பெண்ணைப் பெற்றோர் தம் மாட்டுத் தொழுவில் அன்று பிறந்த கன்று ஒன்றுக்கு தன்னூட்டியாக விட்டு

வளர்த்து, அவ்வாறு வளர்ந்த காளையைத் தழுவும் ஆடவனுக்கே அப்பெண்ணைக் கொடுப்பது முல்லைத் திணைக்கு மரபு.

இயற்கைப் புணர்ச்சியாலும் பிரிந்த தலைவனைத் தோழியேனும் அல்லது தலைவியேனும் குறிப்பால் உணர்த்தி ஏறுதழுவி மணந்து கொள்ள வரைவுபடுத்து தல் இத்துறையின் சிறப்பு ஆகும். இதனை "ஏறு கொள் கூறி வரைவு கடாதல்" என்பதாம். எம்பெருமா னுக்கு எல்லாம் அங்கு இருக்க நப்பின்னைப் பிராட்டிக் காக இங்குவந்து ஏறு தழுவினது இப்பாசுரத்தில் சிறப்பிக்கப்படுகிறது. "விண்ணோர்கள் நல் நீராட்டி தூயன சூட்டு நன்மாலை" என்றது திருவடிகளில் சூட்டுதற்காக பக்தர்கள் பொழிந்தமாலை எம்பெரு மான் திருமுடியில் சூடுவதற்காகத் தேர்ந்தெடுக்கப் பட்ட திருத்துழாய்மாலை. சூட்டுவதற்கு தகுந்த நன் மாலை என்பதாம். எம்பெருமானுக்கு ஏற்புடைத்தான் மாலை.

"தொழுதுமுப்போதும் உன்னடி வணங்கித்
தூமலர்தூய்த் தொழுதேத்து கின்றேன்"

என்றனர் நாச்சியாரும். திருமொழி 1. 9. அது போன்று "சூட்டு மலர்" என்றது தூயமலர்.

"பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக்கொடுத்தாளைச் சொல்லு"

என்றும்,

"சூடிக்கொடுத்த சுடர் கொடியே!"

என்று நாச்சியார் பற்றிய தனியன்கள் நாச்சியா ருக்குப் புகழாரம் சூட்டுவதால் "சூட்டு நன்மாலை" என்றது எம்பெருமானுக்கு ஏற்றமாலை என்பதாம். அவன் ஏற்றுக் கொள்ளத் தக்க மாலை அடியார்கள்

மனத்தணிந்த மாலை எனினுமாம். அதனால்தான் அடுத்து "தூயன ஏந்தி" என்கிறார். பழுதுபட்டு விடுமோ என அஞ்சியே அம்மாலையை ஏந்தி நிற்கின்றனர். எம்பெருமானுக்கு ஏற்புடைத்தான மாலையை ஏந்தியே நிற்பராதலின் "தூயன ஏந்தி" என்றனர். அவ்வாறு ஏந்திநிற்பது யார் எனின் விண்ணோர்கள். நித்தியசூரிகள் அனைவரும் அவனுக்கு மாலை சூட்டக் காத்துக் கிடக்கின்றனர். தேவர்கள் சிலர் நல்நீராட்டிய சூட்டு நன்மாலைகள் ஏந்தி நிற்கின்றனர். சிலர் "அம் தூபம் தர" நிற்கின்றனர். "அம்தூபம்" என்றது மிகுந்த மணம் கமழ் தூபம் என்பதாம். தூபம் என்றது வாசனைத் திரவியங்கள். இவையனைத்தும் தாங்கி "அங்கு நிற்க" என்றனர். "விண்ணோர்கள் நல்நீர் ஆட்டி தூயன சூட்டு நல்மாலைகள் அம்தூபம் தரா அங்கு நிற்க என்பதாம் த்ரா அங்கு நிற்க" என்றது அங்கு காத்துக்கிடக்க என்றபடி. அங்குஅவர்கள் காத்துக் கிடக்க, எம்பிரானுக்கு எண்ணமெல்லாம் நம்பின்னையைக் சுற்றிக் கடக்க, "ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ண போந்து" கண்ணன் வெண்ணெய் களவாடல் முதலிய பால கிரீடைகளை நினைவு கூறுகிறார்.

> "வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை
> வெற்பிடையிட்டு........."

என்றும் (திருவாய்மொழி 2. 9. 1.)

> "பொத்தவுரவைகவிழ்த்து அதன்மேலேறி
> தித்தித்தபாலும் தடாவினில் வெண்ணெயும்
> மெத்தத்திருவயிறார விழுங்கிய
> அத்தன்..........."

என்றும் பெரியாழ்வார் போற்றியிருத்தல் காண்க. திருவாய்மொழி 1. 9. 7. "ஓர் மாயையினால்" என்றது

ஒரு ஒப்பற்ற மாயையினால் என்றபடி. அங்கு தேவர்கள் காத்திருக்க இங்குவெண்ணெய் திருடி உண்ணும் மாயம்தான் என்னே! என்றபடி. ஓர் என்றது ஒப்பற்ற எனும் பொருளைத்தாங்கி ஒப்பற்ற மாயை செய்து என்பதாகப் பொருள் கொடுப்பது. ''ஈட்டிய வெண்ணெய்'' என்றது திரட்டிய வெண்ணெய் என்பதாம்.

> ''.........ஆங்கொருநாள் ஆய்ப்பாடி
> சீரார்கலையல்குல் சீரடிசெந்துவர்வாய்
> வாரார்வனமுலையாள் மத்தாரப் பற்றிக் கொண்டு
> ஏராரிடைநோவ எத்தனையோர் போதுமாய்
> சீரார்தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை
> வேரார் நுதல்மடவாள் வேறோர் கலத்திட்டு
> நாராருறியேற்றி நன்கமையவைத்ததனை
> போரார்வேற்கண் மடவாள் போந்தனையும்
> பொய்யுறக்கம்
> ஓராதவன்போல் உறங்கியறிவுற்று
> தாரார்தடந்தோள்கள் உள்ளளவும் கைநீட்டி
> ஆராத வெண்ணெய்விழுங்கி — அருகிருந்த
> மோரார்குடமுருட்டி.........''

என்பர் திருமங்கையாழ்வாரும் சிறிய திருமடலில். அசோதைப் பிராட்டி இடைநோவ வெண்ணெய் கடைந்ததும் அதனை எம்பெருமான் அமுதுண்டதும் சிறப்பாகக் கூறியிருத்தல் காண்க. அடியேன் சிறிய திருமடம் பெரிய திருமடல் உரை நூல் பக்கம் 18 கண்டு இன்புறுக.

''ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ண போந்து என்றது திருவாய்ப் பாடியில் நாள்தோறும் அசோதைப் பிராட்டியும் அம்மனை மீரும் தினமும் கடைந்து சேர்த்த வெண்ணெயை அமுது செய்ய விரும்பி

எழுந்தருளி என்பதாம். "தொடு உண்ணப் போந்து என்றது "தாரார் தடந்தோள்கள் உள்ளளவும், கை நீட்டி ஆராத வெண்ணெய்" விழுங்கி என்பதாம். "போந்தி" என்றது எழுந்தருளி என்றபடி. எழுந்தருளி நப்பின்னையை மணம் முடித்திட, முல்லைத் திணை மரபுக்கு ஒப்ப, "அடல் ஆயர் தம் கொம்பினுக்காக இமில் ஏறுவல் கூன் கோட்டிடை கூத்து ஆடினை" என்கிறார். ஆயர் மக்களை "அடல் ஆயர்" என அடை கொடுத்துச் சிறப்பிக்கிறார். போரிட்டு வெற்றி கொள்வதில் வல்லவர்கள், பசுக்களை மேய்த்து வாழும் தொழிலைக் கொண்டிருந்தாலும் போரிடுவதிலும் வல்லவர் என்பதாம்.

> "கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
> செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
> குற்றமொன் றிலாக் கோவலர் தம்பொற்கொடியே"

என்றனர் திருப்பாவை தந்த திருஆண்டாள் 11-ம் பாசுரம். "ஆயர்தம் கொம்பினுக்கு" என்றது கோவலர் தம் பொற்கொடியே போன்றது. பூத்துக் குலுங்கும் மலர்கொம்பு போன்றவள் என்பதாம். "ஆயர்தம் கொம்பினுக்கு" என்றது நப்பின்னை எனப் பொருள் காணினும் அமையும் கண்ணபிரான் ஏழு எருதுகளை அடக்கியது. கோசல நாட்டு மன்னன் நக்னஜித் மகளான சத்யாவுக்காக என்று பாகவதத்தில் பத்தாவது காண்டத்திலிருந்து தெரிய வருவதாகும்.

கண்ணபிரான் பல்லாயிரக் கணக்கான மனைவியரை மணந்திருந்தும் தன்னை மணக்கக் கண்ணபிரான் கோசல நாடு வந்துள்ளார் எனக் கேட்டு மகிழ்ந்து; தந்தை விதித்தபடி ஏழுஎருதுகளை கயிறிட்டு அடக்கிய பொழுது பெரிதும் மகிழ்ந்து அவரைத் திருமணம் செய்து கொண்டாள். கண்ணபிரானின் 16108 மனைவியருள் முதல் எட்டு ராணியரில் நான்காவது இடத்தைப்

பெற்றவர் சத்யா. முதல் எட்டு மனைவியரின் பெயர்கள் வருமாறு: ருக்மணி, சத்யபாமா, ஜாம்பவதி, சத்யா, காலிந்தி, லட்சமனா, மித்ராவிந்தா, பத்ரா ஆகிய எண்மருமாம். கண்ணபிரானின் 16108 மனைவியரும் அரசகுமாரிகள். ஒவ்வொருவருக்கு பத்து ஆண் குழந்தைகள் பிறந்தனர். இவ்வாறு கண்ணபிரானின் குடும்பம் பெரிய ஆலமரமாகப் பரவிப் பெருகியிருந்தது என்பது பாகவதம். ஈண்டு கண்ணன் ஏழு எருதுகளை அடக்கி மணத்தது சத்யாவா, நப்பின்னையா என்பது ஆய்ந்து காணத்தக்க ஒன்று என்றாலும் 'ஆயர்தம் கொம்பு' என்றதை நப்பின்னை என்றே தொடர்ந்து பொருள் காண்போம்.

"காம்பணைதோள் பின்னைக்கா
ஏறுடனேழ் செற்றதுவும்"

என்று நம்மாழ்வார். கூறியிருப்பதும் காண்க. திருவாய் மொழி 2—5—7.

ஆயர்தம் கொம்பு நப்பின்னைப் பிராட்டியை மணம் முடித்தல் பொருட்டு "இமில் ஏறுவல் கூன் கோட்டிடை கூத்து ஆடினை" என்றனர். "இமில் ஏறு" என்றது திமில் உடைய எருதுகளின் வலிமைமிக்க வளைந்த கொம்புகளின் நடுவில் நர்த்தனம் ஆடினை கூத்தாடி அருளினை என்றபடி. ஏறுதழுவி முல்லைத் திணைக்கு முறன்பாடு வராதபடி நப்பின்னையை மணந்தருளினை என்பதாம். எம்பெருமான் குடமேந்திக் கூத்தாடினது பற்றிய செய்தி ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களில் ஆங்காங்கு காணலாம்.

"பாரோர்களெல்லாம் மகிழப்பறை கறங்க
சீரார்குட மிரண்டேந்தி—செழுந்தெருவே
ஆராரெனச் சொல்லி ஆடும்"

என்றனர் திருமங்கையார். சிறிய திருமடல் இப்பாசுரத்தில் "ஏறுவல் கூன் கோட்டிடை ஆடினை கூத்து"

என்று எம்பெருமான் ஏறுதழுவி கொம்புகளுக்கிடையில் கூத்தாடினதாகக் கூறப்படுவது சிறப்பு. கொம்புகளுக்கிடையே புகுந்து எருதுகளை அடக்குவது என்பது மிகுந்த தேர்ச்சி பெற்றவர்களாலேயே இயலும். யானையுடன் போர் செய்யும் திறனை சீவக சிந்தாமணியில் திருத்தக்கதேவர் விளக்குகிறார்.

"வேலுடைத் தடக்கை யார்கள் வேழமேற் சென்றபோழ்திற்
காலிடைக் கரக்கு மாறுங் கையிடைத் திரியுமாறும்,
வாலிடை மறியுமாறு மருப்பிடைக் குளிக்கு மாறும்
நூலிடைக்கிடந்தவாறே நுனித்தவன் கொடுப்பக் கொண்டார்"

கனகமாலையர் இலம்பகம் 121. ஏறுதழுவும் பொழுது இதுபோன்ற தந்திரங்களை கையாண்டே வெற்றி கொள்ளமுடியுமாதலின் "கோட்டிடைக் கூத்தாடினை" என்றனர். இது பிராட்டித்தன்மை அடைந்த ஆழ்வாரது இனிய பக்தயை விரும்பி அங்கிருந்து இங்கு வந்து அவருடன் கூடுவதற்கு இடையூறாக உள்ள ஏறுகளை வென்று அவரை அனுபவித்தலாகாதோ என்று குறிப்பிடுதல் இப்பாசுரத்தின் கருப்பொருளாம்.

"பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் மலர்மகள் விரும்பும் நம்
அரும்பெறலடிகள்
மத்துறுகடை வெண்ணெய் களவினில்
உரவிடையாப்புண்டு
எத்திறம்! உரலினோடு இணைந்திருந்தேங்கிய
எளிவே"

என்பது திருவாய்மொழி 1-3-1.

அரும்பதவுரை :- சூட்டு நன்மாலை - எம்பெருமான் பாதங்களில் சமர்ப்பிக்கும் நன்மாலை. தலையில் சூட்டத்தகுந்த மாலை. தூபம் தராநிற்க - தூபம்

தருவதாகக் காத்துக்கிடக்க. ஓர்மாயை-ஒப்பற்றமாயை ஈட்டிய - திரட்டிய. தொடு உண்ண - கைமுழுவது மாக எடுத்து உண்ண. போந்தி - எழுந்தருளி. இமில் - திமில். ஏறு - காளை எருது. கோட்டு - கொம்பு. கூன்கோட்டு வளைந்த கொம்பு. அடல் - போர். கொம்பினுக்கு - மலர்க் கொம்பு போன்ற நப்பின்னைக்கு சத்யாவுக்கு. கொம்பு அதில் பூக்கும் மலருக்காகி பெண்ணுக்கானது. இருமடியாகு பெயர். மும்மடியெனினுமாம்.

(தோழி தலைவனை நகுதல்)

கொம்பார் தழைகை சிறுநாணெறிவிலம் வேட்டை
கொண்டாட்
டம்பார்களிறுவினவவதையர் புள்ளூர்ந்தங்கள்வர்
தம்பாரகத்தென்று மடாதனதம்மிற்கூடாதன
வம்பார் வினாச் சொல்லவோவெம்மை வைத்த
திவ்வான்புலினத்தே. 22

விளக்கவுரை : ஐயர் இவரது கைகளில் உள்ளது மரக்கிளையிலிருந்து எடுக்கப்பட்ட தழையாகும். இவர் கையில் வில் இல்லாமையால் சிறு நாண் ஏற்றி வீசுதல் கேட்டிலோம். இவருக்குக் கொண்டாட்ட மாவது வேட்டையாடுதலாம். இவர் நம்மைக் கேட்பது அம்போடு பொருத்திய யானையாகும். கருடாழ்வரை ஏறி நடத்துகின்ற மாயவனாள திருமாலின் உரிய பொருளாகிய இவ்வுலகில் எக்காலத்திலும் நடவாதனவும் தம்முடன் கூடாதனவாகவுள்ளன புதுமைமிக்க வினாக்களுக்கு விடைகூறும்பொருட்டோ நம்மை இந்தப் பெரிய கொல்லையில் வைத்தது?

திறனாய்வு : ''ஏறு வன் கூன் கோட்டிடை கூத்து ஆடினது அடல் ஆயர் தம் கொம்பினுக்கே'' என்று

சென்ற பாசுரத்தில் கண்டோம். ஏறுகொள்தலும் எம்பிரானுக்கு ஏற்ற விருப்பமான விளையாட்டு. அதுமட்டுமன்று, நப்பின்னைக்காக வேட்டையாடு வதும் தமக்கு மிகவும் பிரியமானதாகக் காட்டிக் கொள் வதன் உள்நோக்கம் யாது என நன்கு அறிந்து கொண்ட தலைவியின் தோழி அவன் கள்ள மனம் கொண்டவன் என்பதை வெளிப்படையாகவே நகுதல் செய்யும் பொருட்டு "புள் ஊரும் கள்வர்" என்கிறாள். தேவர்கள் அங்கு காத்துக் கிடக்க நப்பின்னைக்காக ஒரு மாயையால் இங்கு வந்து "கோட்டிடை ஆடிய கூத்தன்" என்பதாக முன்னமே சொன்னது இங்கு நினைவு கொள்க.

ஒரு மாயை செய்து வந்ததனால் இவர் "கள்வர்" என்றனள். இவரின் பிற செய்கைகளும் இவர் கள்வர் என்பதை மேலும் வலியுறுத்துகிறது. இவர் "கொண் டாடுவது வேட்டை". வேட்டையாடுவதற்காக வந்த தாகச் சொல்கிறார். வேட்டையாட வந்த இவர் இங்கு வந்து வினவுவது அம்பு தைய்க்கப்பட்ட களிறு. "அம்பு ஆர் களிறு" இங்கு வந்ததா என்று வினவுவது வியப்பையளிக்கிறது என்றபடி. ஏனெனில் "சிறு நாண் எறிவு இலம்" என்றதால் இவர் கையில் வில்லும் இல்லை சிறிய நாண் ஏற்றி விடுதல் ஒலியும் கேட்டிலம் என்பதாம். கையில் உள்ளதோ "கொம்பு ஆர்தழை" என்கிறார்.

மரக்கிளைகளில் உள்ள தழைகளையல்லவா ஏந்தி வந்துள்ளார். இப்படியிருக்க இவர் எப்படி யானை யின் மீது நாண் தொடுத்திருக்க முடியும்? இவர் கொண்டாடுவது எப்படி வேட்டையாக இருக்க முடியும்? இவர் நம் தலைவியின் வேட்கையால் இங்கு எழுந்தருயிருக்கிறார் என்பதாம்.

கள்ளத்தனமாகப் புள்ளேறி வந்தவர் இவர் என்று தோழி தெரிந்து கொள்கிறாள். தேவர்கள் அனைவரும் அங்கு காத்துக்கிடக்க தலைவியின்பால் மோகம் கொண்டு எழுந்தருளியது ஆழ்வார்களின் அன்புக்கும் பாசத்துக்கும் கட்டுப்பட்டு பறந்தோடி வந்த பிரான் எனினுமாம். இதனால் ஆழ்வார்கள் தேவர்களிலும் எம்பெருமானுக்குச் சிறந்தவர்கள் என்றபடி. அவர்கள் அங்கு மாலையிடக் காத்துக் கிடக்க இவர் இங்கு பறந் தோடிவந்தது தன் காதல் மிகுதியால் என்பதை உணர்த்துவதற்காக எழுந்த பாசுரமாகும். கள்ளத்தன மாக இங்கு எழுந்தருளினார் என்றது; எம்பெருமானுக்கு ஆழ்வார்களிடத்திருக்கும் ஈடுபாடு ஒப்பற்றதாக எடுத்துக்காட்டுகிறது இப்பாசுரம். வந்தவர் அதாவது மாயை செய்து வந்தவர் சொல்லுக்கும் தோற்றத்துக் கும் வேறுபாடு கண்ட தலைவியினது தோழியின் நகுதலுக்கு ஆளானதும் காண்க.

தலைவிக்குக் கொடுக்க "கொம்பார் தழை" கையில் இருக்க, "வேட்டை கொண்டாட்டம்" "அம்பு ஆர் களிறு" வினா. இவருக்கென்ன தலைவி யின் மீது பயித்தியமா? என்பதாக அமைத்து பிராட்டித் தன்மையடைந்த ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் உள்ள உள்ளப் பிணைப்பை எடுத்துக் காட்டுகிறார்.

அடியார்களுக்கு ஆண்டவன் அடிமை என்பதை யும் காட்டுகிறது. எம்பெருமானுக்குப் பரமபத சுகத் தைக் காட்டிலும் அடியார்கள் உள்ளமே பேரின்பத் தைக் கொடுக்கிறது என்பதூமாம். அடியார்கள் உள்ளமே எம்பெருமானுக்குப் பரமபதம் என்பதாகக் கூறும் இப்பாசுரம் கற்போர் மனதைக் கலங்க வைக்கும். எம்பெருமான் அடியார்களிடத்து பயித்தியம் கொண்ட வனாகி அவர்களிடம் எழுந்தருளி விடுகிறான் என்ப தாம். இதனை எம்பெருமானிடத்து நீங்காத பயித்

தியத் தன்மையடைந்தவர்களாலேயே உணர முடியும். ஆடவரான நம்மாழ்வார் பிராட்டித் தன்மையை நாடியது எம்பெருமானிடத்து ஆழ்வாருக்குள்ள பயித்தியத் தன்மையான ஈடுபாட்டின் எல்லையாகும்.

"கண்ணனென்னும் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பேனை
புண்ணில் புளிப்பெய்தாற் போலப்புறம் நின்று அழகு பேசாதே
பெண்ணின் வருத்தமறியாத பெருமானரையில் பீதக
வண்ண வாடை கொண்டு என்னை வாட்டம் தணியவிசிரே"

என்றனர் நாச்சியாரும். பதின்மூன்றாம் திருமொழி. நாயகன் நினைவால் நாயகி படும்பாட்டை ஒரு பெண் கூறினால் அது மிகப் பொருத்தமாக இருக்குமாதலின் திரு ஆண்டாளின் பாசுரம் இங்கு எடுத்தாளப்பட்டது. பிராட்டித்தன்மை பெற்ற நம்மாழ்வார் நிலையும் இப் படிப் பட்டதே. எம்பிரானும் புள்ளூர்ந்தெழுந்தருளியதும் பிராட்டியின் இன்னல் தீர்க்கவே என்பதறிக.

இத்தகு பெருமான், கருடார்வாழ்வான் மீது எழுந்தருளி இவ்வுலகைக் காக்கும் ஐயன் ஆதலின் "ஐயர்" என்கிறார். "தம்பார் அகத்து" என்றும் ஆடாதன" என்றது தமது உலகில், திருமாலினது உலகில் என்பதாம்.

"உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்
நிலை பெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார்...

அவர்" தம் உலகில் என்பதாம். இங்கு "அவர்" என்றது கம்பர் தரும் எம்பெருமான். கடவுள்

வாழ்த்து பாலகாண்டம். ''தம்பார் அகத்து'' என்றபடி. ''தம் பார்'' என்று சிறப்பித்தல் இவ்வுலக எம்பிரானுக்கே உரித்தானது எனக்காண்க.

''என்றும் ஆடாதன'' என்றது என்றும் நடக்காதது; எம்பெருமான் எழுந்தருளுவது என்பது சாதாரண காரியமா? கண்ணீரால் உடல் நனைத்து பக்தி என்னும் தீ மூட்டி அதில் வெந்து உருகும் உள்ளங்களுக்கு பன்னீராய்ப் பொழிந்து எழுந்தருளுவன். சிலருக்கு உருவெளித் தோற்றமாய்க் காட்சியளிப்பன். அந்த நிலையை எட்டுவது என்பதும் சாதாரண ஆன்மாக்களால் இயலாத ஒன்று. அதனால் தான் ''என்றும் ஆடாதன'' என்றனர். கொல்லையில் ஆயலோட்டிக் கொண்டிருக்கும் பெண் தன் கடமையைச் சரிவரச் செய்து கொண்டிருப்பவள். முழுமையாகக் கண்ணன் அருள் வெள்ளத்தில் மூழ்கிப் போனவள் ஆதலின் 'பாரகத்து என்றும் ஆடாதன'' அவளுக்கு நடக்கிறது. 'ஆடாதன'' என்பது ஆடுவன என்பதன் எதிர் பொருளில் வருவது. நடவாதன என்பதாம்.

''தம்மில் கூடாதன'' என்றது தமக்கு ஏற்புடையதாக இல்லாத, தமக்கு சம்பந்தப்படாத ஒன்று. வில்லும் அம்பும் இல்லாது, தழையும் கண்ணியும் கையுறையாகக் கொண்டு செய்வது வேட்டுவத் தொழில் அன்று. அம்பு தைத்த யானைவரக் கண்டீர்களா என்பதும் வினா. இவையெல்லாம் நமக்கெதற்கு என்றபடி. வேடன் என்றான் 'வில் எங்கே' எனக் கேட்டதற்கு தழைகள் தோய்ந்த கையைக் காட்டுகிறான். அம்பு எங்கே என்றதற்கு களிறுள் பாய்ந்தது என்கிறான். பதினைந்தாம் பாசுரத்திலும்,

"கயலோநும்கண் களென்றும் களிறுவினவி
நிற்றீர்"

என்பது காண்க. களிறுவினவி நிற்றதற்கான விளக்கம் இங்கும் பொருந்தும். "அம்பு ஆர் களிறு" என்றது, தன் கண்களாகிய அம்புகள் பதிந்த தலைவியின் முலைகள் என்பதாம்.

"கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅமுலைமேல் துகில்"

என்ற வள்ளுவன் வாக்கை மீண்டும் நினைவு கொள்க.

"அம்பு ஆர் களிறு" என்றது எம்பெருமானது பார்வையாகிய அம்புகள் தைத்த முலைகளையுடைய பிராட்டி என்றபடி.

"புருவவிற் கோலியுள்ளம்போழ்ந்து கட்கணை
களோட
வுருவத்தாருடைய வொற்றை வலம்புரி யொலிப்ப
விம்மி
வரிமுலைக் களிநல் யானை...

என்றனர் அதி வீர ராமபாண்டியனாரும். நைடதம் அடியனேன் உரை நூல் பக்கம் 665 காண்க.

ஆதலின் எம்பெருமான் தேடுவது தன் கண்களாகிய அம்பு தைத்த பிராட்டியின் முலைகளாகிய யானைகள் இரண்டும் என்பதாம். அடியார்களிடம் எம்பெருமான் முழுமையாகப் பதிந்து அடியார்களின் நலனிலேயே நாட்டங்கொண்டிருப்பான் என்றபடியுமாம். "தம்மில்கூடாதன" என்பதன் பொருளும் இதுவே. அடுத்து, "வம் ஆர்வினா சொல்லவோ" என்பது இதனை முழுதும் உறுதிப்படுத்துகிறது. கேட்கக் கூடாத கேள்விகளைக் கேட்பது, அதாவது

உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசும் உத்தமர், "புள் ஊரும் கள்வர்" என்றபடி "வம்பு ஆர்வினா சொல்லவோ" என்றது வம்பான வினாக்களுக்கு பதில் சொல்லிக் கொண்டு நிற்கவோ என்பதாம். "அம்பு ஆர்களிறு" என்றது. "வம்பு ஆர்வினா" ஒரு பெண் ணிடம் என்னதான் இருந்தாலும் இப்படிக் கேட்க லாமா என்றபடி. இத்தகு வினாக்களுக்கு விடை பகன்று கொண்டிருக்கவோ, "எம்மை இவான்புனத்தே வைத்தது?" என்று தனக்குள்ளே ஒரு வினாவை எழுப்புகிறார். "எம்மை"யென்றது தோழியரையும் சேர்த்து. "இவ்வான் புனம்" என்பது இப்பெரிய கொல்லை, தோட்டம், வயல் என்பதாம்.

இப்பெரிய கொல்லையில் அந்த ஐயன் சூழ்ச்சி யால் இவளைக் காவலுக்கு வைத்தனர் போலும் என்பதாம். திருவள்ளி திருமணத்தில் முருகக் கடவுள் "காயாத கானகத்தில் நின்றுலாவும் நற் காரிகையே! பாயாத மான் சாயாத கொம்பு இரண்டி ருந்தாலும் தலைநிமிர்த்து பாயாதமான்" என்றதில் 'சாயாத கொம்புடைய மான்' என்றதும் "அம்பு ஆர் களிறு" என்று இப்பாசுரத்தில் கூறினதும் ஒரே பொருளில் வருபவை. "சாயாத கொம்பு" உடைய மான் என்று பெண்ணுக்கு ஆகு பெயராய் அமைந்தது போல் இப்பாசுரத்திலும் "களிறு" என்பது இரு கொம்புகளையுடைய யானைக்காகி பெண்ணுக்கானது. இருமடியாகு பெயர்.

"மோட்டிளங் குரும்பையன்ன
முலைக்கடாக் களிறுமுத்தரு"

என்றும், (சீவக சிந்தாமணி கனகமாலையாரிலம் பகம்—132)

"பொன்வரை பொருத யானைப்
புணர்மருப் பனைய வாகி
தென்வரைச் சாந்து மூழ்கித்
திரள்வடஞ் சுமந்து வீங்கி
மின்வளர் மருங்கு செற்ற
வெம்முலை......"

என்றும், (சீவக சிந்தாமணி சுரமஞ்சரியிலம்பகம் 88) வருவது காண்க.

"அம்பு ஆர் களிறு" என்று எம்பெருமானார் அருளியது தன் கண்கள் எனும் அம்பு பாய்ந்த முலைகளையுடைய தலைவியையே என்பதுணர்க.

இப்பாசுரத்தில் "ஐயர்" என்ற சொல்லையும் "புள்ளூருங்கள் வன்" என்ற சொற்களை இடம்மாற்றிப் பொருள் கொண்டாலும் அமையும்.

அரும்பதவுரை : கொம்பு ஆர்தழை - தழைத்த கொம்பு. சிறுநாண் - சிறிய அம்பு. வேட்டை கொண்டாட்டம் - வேட்டையாடும் தொழிலில் நாட்டம். அம்பு ஆர் களிறு - அம்பு பாய்ந்த யானை. கண்கள் எனும் அம்பு பாய்ந்த முலைகளையுடைய பெண், பிராட்டியார். ஐயர்-எம்பெருமான். புள் ஊரும் கள்வர்-கருடாழ்வார் மீதமர்ந்து வந்த கள்ளமனத் தெம்பெருமான். பாரகத்து - உலகில். ஆடாதன - நடவாதன, கூடாதன, பொருந்தாதன. வம்பு - வம்பு மிக்க சொற்கள். சொல்லத் தகாத. கொல்லை - வயல்.

(தலைமகன் குறையுறவுரைத்தல்)

புனமோ? புனத்தயலே வழிபோகு மருவினையேன்
மனமோ? மகளிர்! நுங்காவல் சொல்லீர் புண்ட
ரீகத்தங்கேழ்

வனமோரனைய கண்ணான் கண்ணன் வானாட
மருந் தெய்வத்
தினமோரனை யீர்களாயிவையோநும்
மியல்வுகளே. 23

விளக்கவுரை : மகளீர்! திணைப்புனமோ, இப் புனத்தின் அருகில் செல்லும் அரிய தீ வினையுடைய எனது மனமோ உங்கள் காவலுக்குகந்தது? சொல்லுங் கள். தாமரைக் காடு பூத்ததே ஒத்த திருக்கண்களை யுடையவனாகிய கண்ணன் பரமபதத்தில் அமர்ந்தரு ளும் தெய்வீக இனம் ஒருங்கு சேர்ந்தவர்களாய், பிறர் மனதைக் கொள்ளை கொள்ளுதல் முதலானவை உமது இயல்புகளோ?

திறனாய்வு : சென்ற பாசுரத்தில் இந்த வம்புப் பேச்சுக்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருக்கவோ "எம்மை இவான் புனததே வைத்தது" என்று நொந்து கொண்ட தலைவிக்குப் புனம் காத்தல் பற்றிய ஐயம் மேலும் விரிவடைகிறது என்பது ஒரு பொருள். மற்றைய ஒன்று தலைமகன் மகளிரை நோக்கி புனத்து அருகில் செல்லும் எனது நெஞ்சத்தை காத்து நிற்றல் உங்கள் காவலுக்கு உரிய பொருள் என்பதாம். இப்பாசுரத்தின் தலைப்பு "தலைமகன் குறையுற வுரைத்தல்" என்பதால் இரண்டாவதே சிறந்ததாக அமையுமென்பதறிக. முதற்பொருளில் தலைவி தம் தோழியரை அழைத்துக் கூறுவதாக அமைவது. அதன் படி "மகளிர்" என்றது தம் தோழியரை. ',நும் காவல்" என்றது நீங்கள் காவல் காத்து நிற்பது "புனமோ" என்றனர். நீங்கள் காவல் காத்து நிற்பது இந்தக் கொல்லை தானோ அல்லது "புனத்தயலே வழி போகும் அருவினையேன் மனமோ" என்கின்றனர். "பாரகத்து என்றும் ஆடாதன, தம்மிற் கூடாதனவம்பு

ஆர்வினா சொல்லவோ எம்மை இவான் புனத்தே வைத்தது'' என்று தலைவி சொல்லக் கேட்ட தலைவன் செல்வழி தன் மனம் செல்வது கண்டு, ''புனத்து அயலே வழிபோகும் அருவினையேன் மனமோ'' என்கின்றனர் என்பதாக மற்றுமொரு பொருள். புனங் காத்திருந்த தலைவியையும் தோழியரையுங் கண்டு தலை மகன்தான் கூற வேண்டுவதைக் கூறிய துறை இது. தன்மனம் இம்மகளிர் வயப்பட்டதால் அதனைக் குறிப்பால், தன் கருத்தைப் புலப்படுத்தினவனாவான் என்பதாம். நீங்கள் புனத்தை விட்டு நீங்காதது போல் என் மனத்தை விட்டு நீங்குவதில்லையென்றும் புனம் போலவே என்மனமும் உங்கள் பாதுகாப்புக்கு உரித்தானதென்பது இதன் கருத்து. ''மகளீர்! நும் காவல் புனமோ? அல்லது ''புனத்து அயலே போகும் அருவினையேன் மனமோ'' என்றது, மகளிர் காவல் காப்பது புனம் மட்டுமன்று, புனத்திலுள்ள உங்களை நாடியே அலைந்து உங்களையே சுற்றித்திரியும் என் மனமும் என்றபடி. ''புனத்து அயலே'' என்றது புனத்தையே சுற்றிச் சுற்றி என்பதாம். ''அயலே'' என்ற சொல்லுக்குப் பக்கம், வேறு பக்கம் என்ற பொருளிலும் வரும். ''அருவினையேன்'' என்றது அரிய வினையினன் என்றபடி. ஆயலோட்டும் மகளிர் அழகில் சிக்கி மீளமுடியாது அவர்களையே சுற்றித் திரியும் மனத்தினன் என்றபடி. ''சொல்லீர்'' என்றது எமக்குரைப்பீர்களாக என்பதாம். இது எம்பெருமா னுக்கு ஆழ்வார்களிடத்துள்ள ஈடுபாடு சிறப்பிக்கப் படுகிறது. ''கண்ணன் வான் நாடு அமரும் தெய்வத்து இனம்'', தவிர்த்து ஈங்கு எழுந்தருளினவனாதலின் இம்மகளிரை வானவரினும் சிறந்தவராகக் காண்கிறான். ''தலைவன்'' என்று சென்ற பாசுரத்தில் சொன்னதை இப்பாசுரத்தில் மேலும் சிறப்பிக்கிறார். ''புண்டரீகத்து அம்கேழ்வனம் ஓர் அனைய கண்ணான்'' என்றது செந்தாமரை மலர்வனம் ஒருங்கு பூத்ததே போன்ற

கண்களையுடையவன் என்பதாம். "அம்கேழ்வனம்" என்றது அழகிய ஒளி வீசும் காடு. காடு என்றது மலர்க்காடு. ",ஓர் அனைய" என்றது ஒன்றே ஆனது போன்று என்பதாம். "கண்ணான்" என்றது அழகிய கண்களையுடைய "கண்ணன்" கண்ணபிரான் என்பதாம்.

"அப்பொழுது. அலர்ந்த செந்தாமரையினை
வென்றதம்மா"

என்றனர் கம்ப நாட்டாழ்வாரும். அயோத்தியா காண்டம் கைகேயி சூழ்வினைப் படலம் 112.

"புண்டரீகத்து அம்கேழ்வனம் ஓர் அனைய கண்ணான்", அந்தக் "கண்ணன்" வாசம் செய்யும் இடம் பரமபதம். அதனை "வான் நாடு" என்கிறார். அந்த வான் நாட்டில் அமர்ந்து எம்பெருமானை என்றும் தரிசித்து இன்பம் துய்ப்பவர்கள் போன்றுள்ளீர் என்று அந்த ஆயலோட்டும் மகளிரை நம் தலைவன் காண்கிறான். இதனை, "கண்ணன் வான் நாடு அமரும் தெய்வத்து இனம் ஓர் அனையீர்கள்" என்று சிறப்பிக்கிறார். "வான் நாடு அமரும் தெய்வத்து இனம்" என்றது நித்திய சூரிகளை. தெய்வத்துடன் தெய்வமாய் ஒருங்கு இணைந்தவர்கள் தேவர்கள் என்றபடியுமாம்,

"ஓர் அனையீர்கள்" என்றது ஒருமையுடைத்த வராயினீர், ஒருமைப் பாடுடையவர்களானீர் என்ப தாம். "நும் இயல்புகள் இவையோ ஆய்" என்றது, "வான் நாடு அமரும் தெய்வத்து இனம்" தான் உங்களுது இயல்போ? நீங்களும் அந்த இனத்தைச் சேர்ந்தவர்களோ? நீங்கள் புனத்துடன் ஒருமைப் பட்டது போல் என்மனமும் உங்களை விட்டுப் பிரியாது உங்கள் பாதுகாப்புக்கு உட்பட்டுக்

கிடக்கிறதே! என்றபடி. இது "புனத்து அயலே வழி போகும் அருவினையேன்" என்றதால் விளங்கும்.

நீங்கள் புனத்தைச் சுற்றி வந்து புனம் காப்பது போல் என்மனம் உங்களைச் சுற்றிச் சுற்றி வந்து உழல் கிறதே என்றபடி. அதனால் தான் "அருவினையேன்" என்றனர். ஊழ்வினைப் பயனால் உங்கள் அழகில் ஈர்க்கப்பட்டுத் தப்பமுடியாமல் தவிக்கிறேன், என்ற படி இப்பாசுரத்தில் கண்ணனின் கண்களின் சிறப்பு கூறியிருத்தல் காண்க. கம்பனின் கவி நயத்துக்கும் மேன்மையுடைத்தான எண்ணக்குவியல் இங்கு குவிந்து கிடப்பது காண்கிறோம். "புண்டரீகத்து அம்கேழ்வனம் ஓர் அனைய கண்ணான்" என்றது சிறப்பு.

இது திருமாலின் அடியார்களிடத்தில் தமது நெஞ்சு முழுமையாக உடன்பட்டதைப் பற்றிக் கூறும் பாசுரம். எம்பெருமானே ஆழ்வார்களிடத்தில் முழுமையாக மனதைப் பறி கொடுத்து அவர்களையே சுற்றித் திரிந்த தாகவும் கூறலாம். எம்பெருமானைக் கவரும் ஆன்மாக்களை எம்பெருமான் என்றும் விட்டு நீங்குதல் செய்யார் என்பதுவுமாகும். "மகளிர் நும் காவல்" என்றதால் ஆழ்வார்களின் காவலுக்குட்பட்ட எம்பிரான் அவர்களிடமிருந்து நீங்குதல் வழியறியாத வனாகி, "புனத்து அயலே வழி போகும் அருவினை யேன்" என்பது காண்க, "அயலே" என்றது இங்கு வெளிப்புறத்தே எனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆழ்வார்கள் போன்று எம்பெருமான்பால் ஈடுபாடு கொண்டவர்களாலேயே இந்நிலையை உணர்ந்து அனுபவிக்க முடியும்.

அரும்பதவுரை : புனம் - வயல். அயல் - வெளிப் புறம். உட்பகுதி எனினுமாம். அருவினை—அரிய வினை. மகளிர் - மகளிரான ஆழ்வார்கள் எனினுமாம்.

புண்டரீகம் - செந்தாமரை. கேழ் - ஒளி. வனம் - காடு. வானாடு - தேவர் வாழும் நாடு. வானத்து வாழும் தேவர்கட்கானது. தெய்வத்து இனம் - தேவர் போன்றோர். இயல்புகள் - தன்மைகள். ஆய் அசை யெனத் தள்ளுக.

(பிரிவாற்றாத தலைமகளீடுபாடுகண்ட
செவிலி இரங்கல்)

இயல்வாயின வஞ்ச நோய் கொண்டுலாவு மொரோ
குடங்கைக்
கயல் பாய்வன பெருநீர்க்கண் கடம் மொடுங் குன்ற
மொன்றாற்
புயல்வாயின நிரைகாத்த புள்ளூர்திகள் ளூநந்
துழாய்க்
கொயல் வாய் மலர் மேன்மனத் தொடென்னாங்கொ
லெங்கோல் வளைக்கே 24

விளக்கவுரை : இயல்பானதும், வஞ்சமும், காதல் நோயை உடையவையாய், ஆற்றாமையின் தன்மை யினால் பரவும், ஒவ்வொன்றும் ஒரு உள்ளங்கை அளவுள்ளதான கயல் மீன் போன்று பிறழ்வதுமாகிய மிகுந்த நீர் சிந்தும் கண்களுடன், கோவர்தன மலையை ஒரு விரலில் தாங்கி நின்று கடும் புயலிலிருந்து பசுக் கூட்டங்களைப் பாதுகாத்தருளியவனும், கருடனை வாகனமாயுடையவனுமான கண்ணபிரானது தேன் சிந்தும் திருத்துழாய் பறிக்கப்படுதல் பொருந்திய மலரின் மேல் ஆசைப்பட்டுச் சென்ற மனத்தோடும் அழகிய வளையல்களையுடைய என் மகளுக்கு இன்னமும் என்ன நேருமோ?

திறனாய்வு : நம் தலைவிக்கு நோய் செய்தான் "புள்ளூரும் மாயன்" என்பது முந்தய பாசுரங்களால்

தெரிய வந்ததாகும். "குன்றம் ஒன்றால் புயல் வாய் இனம் நிரை காத்த புள் ஊர்தி கள் ஊரும் துழாய் கொயல் வாய் மலர் மேல் மனத்தொடு" என்கிறார். "குன்றம் ஒன்றால்" என்றது கோவர்தன மலையை ஒரு விரலால் தாங்கி என்பதாம்.

"காலிகளுய்ய மழை தடுத்து
கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்தனத்து........"

என்றனர் நாச்சியார். திருமொழி 12.8.

"மன்றில் மலிந்து கூத்து வந்தாடி மால்விடையேழு மடர்ந்து ஆயர்
அன்றுநடுங்க ஆனிரைகாத்த ஆண்மை கொலோ?..."

என்றனர் திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி10.9.2 குன்றம் ஒன்று எடுத்து ஆயர் அன்று நடுங்க ஆநிரை காத்தஆண்மையை இப்பாசுரத்தால்நமக்குநினைவூட்டு கிறார் நம்மாழ்வார். "புயல் வாய்" என்றது பெரும் புயல் மழையினின்றும் என்றபடி. "புயல் வாய் இனம் நிரை" என்றது, "புயல்வாய் நிரை இனம்" எனக் காண்க. ஆனிரையின் கூட்டம் என்றபடி. புயல் மழை பொழிந்து நாடு செழிப்பதுபோல் அதன் இனமாக பசுவும் பால் சொரிந்து செல்வம் கொழிக்கச் செய்யும் என்றபடியாதலின் "புயல்வாய் இனம் நிரை" என்றனர் எனலாம். "நிரைகாத்த புள் ஊர்தி" என்றது ஆநிரை காத்த கருடாழ்வாரை ஊர்தியாகவுடைய என்பதாம். "கள்ளூரும் துழாய்" என்றது தேன் கமழும் திருத் துழாய் மலர்களைச் சூடிய "புள் ஊர்தி" என்பதாம்.

"நால்திசை நடுங்க அஞ்சிறைப் பறவை யேறி"

என்றனர் திருமங்கையாழ்வார். திருவெழுக் கூற்றிருக்கை. 'புள்ளூர்தி' என்பதும் 'பறவையேறி"

என்பதும் ஒரே பொருளில் வருவதும் காண்க. "கள் ஊரும் துழாய் கொயல் வாய் மலர்மேல் மனத்தோடு" என்றது துழாய் மலரில் மனதைப் பறி கொடுத்து என்பதாம். எம்பெருமான், திருமேனியில் சாத்திப் பெருமைபட்ட அத்திருத்துழாய் மாலையின் மேல் மனதைப் பறிகொடுத்து, என்பதாம். "கொயல்வாய் மலர்மேல்" என்றது கொய்து எடுக்கக் கூடிய மலர் மேல் மனதைப் பறிகொடுத்து என்பதாம். மலர் வேண்டின் செடியினின்றும் பறித்தெடுத்துக் கொள்ள லாம். ஆனால் எனக்கு அவன் திருமேனியை அழகு படுத்திய தூழாய் மாலையின் மேல் மனம் சென்றதால் அதனை அவ்வளவு சுலபமாக எடுத்துவிட முடியாது. அவன் அருள் இல்லாவிடில் அடைய முடியாது என்பதால் "கொயல்வாய் மலர்மேல்" என்றனர். அவன் மார்பை அலங்கரித்த தேன்கமழும் துழாய் மாலையில் மனதை இழந்துவிட்டதனால் அதுவே ஒரு பெரு நோயானது. மனத்துள் எழுந்த நோயான தால் அது "வஞ்சநோய்" என்றனர். பிறர் அறியாமல் மனத்துள் புதைந்து கிடக்கும் நோய்.

"மால் இனந்துழாய் வரும் என் நெஞ்சகம்
மாலின் அந்துழாய் வந்து என்னுள் புக"

என்றனர் திருமங்கையாழ்வார். பெரியதிருமொழி 11.1.8. மாலின் அழகிய துழாய் மனத்துள் புகுந்ததால் எழுந்த நோய் ஆதலின் அது "வஞ்ச நோய்." அந்த "வஞ்ச நோய் கொண்டு" அந்த வஞ்ச நோயை மனதில் தாங்கிக் கொண்டு "ஒரோ குடங்கைக் கயல் பாய்வன பெருநீர் கண்கள் தம்மொடும் எம் கோல் வளைக்கு என் ஆம் கொல்" என்கிறார். என் மகளுக்கு என்ன நேரிடுமோ என்று அஞ்சுகிறார் செவிலி. அவள் கண்கள் துழாய் மாலை வேண்டி நின்ற ஆவலினால் குடங்கையளவு அகன்று அதில் கயல் மீன் பாய்வது போல் விழிகள் விழித்து விழித்துப் பார்த்த வண்ணம்

கண்ணில் நீர் பெருக் கெடுத்து ஓட உலாவும் என் மகளுக்கு, "எம் கோல் வளைக்கு என் ஆம் கொல்" என்று திகைக்கிறார். "ஓரோ குடங்கை" என்றது ஒவ்வொரு கண்ணும் ஒரு குடங்கை போன்று அகன்று இருந்தது என்பதாம். "கயல் பாய்வன பெரு நீர் கண்கள்" என்றது கண்களில் நீர் பெருக்கெடுத்தோட அதில் விழிகள் சுழல்வது கயல் மீன்கள் பாய்வது போன்று இருந்தன என்பதாம். "தம்மொடும்" என்றது பெருநீர் கண்களுடன், "உலாவும் இயல்பு ஆயின எம் கோல் வளைக்கு என் ஆம் கொல்" என்கிறார். வஞ்ச நோயைமனதில் தாங்கியதால் கண்களில் நீர் பெருக்கெடுத்தோடுகிறது. அதினின்றும் விடுபட இயலாமையால் அங்கும் இங்குமாக அலைபாய்கிறாள். அலைந்து திரியும் இயல்பையுடையவளானாள். அலைந்து திரியும் இயல்பை அடைந்ததனால் அவள் அதனின்றும் மீளுதல் இல்லை என்றபடி. ஆதலின் "எம் கோல் வளைக்கு என் ஆம் கொல்" என்ன ஆகுமோ என்று ஏங்கித் தவிக்கிறது தாயின் உள்ளம். "எம்கோல் வளை" என்றது அழகிய வளையல்கள் அணிந்த எமது மகள் என்றபடி. "என் ஆம் கொல்" என்ன ஆகுமோ? யாம் அறியோம் என்றபடி. இந் நோய் நீங்கும் பொருட்டு நாச்சியாரும்.

> "அஞ்சே லென்னான் அவனொருவன் அவன்
> மார்பணிந்த வனமாலை
> வஞ்சியாதே தருமாகில் மார்பில் கொணர்ந்து
> பூட்டீரே"

என்றும், திருமொழி 13.3.

> "நீலார் தண்ணந்துழாய் கொண்டு என்நெறிமென்
> குழல் மேல் சூட்டீரே"

என்று வேண்டியிருப்பதும் காண்க. திருமொழி 13.2. நாச்சியார் தன் நோய்க்கு என்ன மருந்து என

நன்குணர்ந்தவர். ஆனால் இப்பாட்டுடைத் தலைவி "சின் மொழியாள்" பேசாமடந்தையாதலின் தன் உள்ளத்துள் பூட்டி வைத்து உலவுகிறாள் என் ஆமோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது என்றபடி.

அரும்பதவுரை : இயல்பு - சுபாவம். ஓரோ - ஒவ்வொரு. ஓ-அசை. குடங்கை - உள்ளங்கை. கயல் - கயல்மீன். புயல் - பெருமழை அல்லது புயல்மழை. நிரை - பசுக்கூட்டம். புள் - பறவை. ஊர்தி - சவாரி செய்பவன். கள் - தேன். கொயல் - கொய்தல் தொழிற் பெயர். கோல்வளை - அழகிய வளையல் களணிந்தவள். ஊர்தி - ஊரப்படுவது ஊர்தி. கோல்- கோலம் என்பதன்விகாரம், அழகு.

(தலை மகனது தாரில் ஈடுபட்ட
தலைவி ஆற்றாது கூறல்)

எங்கோல்வளை முதலாக் கண்ணன் மண்ணும்
விண்ணுமளிக்குஞ்
செங்கோல் வளைவு விளைவுவிக்கு மாறிறல் சேரமரர்
தங்கோனுடைய தங்கோனும்ப ரெல்லாயவர்க்குந்
தங்கோ
னங்கோனுக்குந் துழாயென் செய்யாதினி
நானிலத்தே. 52

விளக்கவுரை : வலிமைமிக்க தேவர்களது தலைவனான பிரமனுக்குந் தலைவனானவனும், தேவர்கள் அனைவருக்கும் தலைவனும், நமக்கு இறைவனும் ஆகிய எம்பெருமான் விரும்பி அணிந்துள்ள திருத் துழாயானது, எமது கையிலுள்ள அழகிய கைவளையின் காரணமாகக் கண்ணபிரானின் இம் மண்ணுலகை விண்ணுலகையும் ஆளும் செங்கோலுக்கு வளைவை உண்டாக்கும். இனி இந்த உலகில் வேறு எந்தத் தீங்கைத்தான் செய்யாது?

திறனாய்வு: கண்ணனின் செங்கோலின் பெருமையை விளக்க உயர்வு நவிற்சி அணியாக அவன் செங்கோல் வளைந்தது பற்றிக் கூறும் பாசுரம். கண்ணன் செங்கோல் வளையாதது. ஆனால் அவன் துழாய் மாலையால் வளைந்தது எனச் சாடும் பாசுரம். செங்கோலுக்கும், துழாய் மாலைக்கும் அடைமொழியாக அமைந்த சொற்களே இப்பாசுரத்தை நிரப்பியிருப் பதைக் காண்கிறோம். "செங்கோல்" எனும் பொழுது விண்ணும் மண்ணும் அளிக்கும் செங்கோல் என்கிறார். அவன் துழாய்பற்றிக் கூறும் பொழுது, "திறல் சேர் அமரர் தம் கோனுடைய தம் கோன்", என்றும், "உம்பர் எல்லாயவர்கட்கும் தம் கோன்" என்றும், "நம்கோன்" என்றும் கூறி, "உகக்கும் துழாய்" என்கி றார். துழாய் அணிந்த ஈசனை மூன்று அடுக்குகளில் பெருமைப்படுத்துகிறார். அது அவன் அணிந்த துழாய்மாலைக்கு மேலும் பெருமை சேர்க்கிறது. அதனால் அவன் செங்கோல் வளைந்ததோ எனும் ஐயப்பாட்டை விளக்குவதற்காகத் துழாயை அவ்வளவு சிறப்புச் செய்தனரோ என எண்ணத்தோன்றுகிறது. கண்ணன் செங்கோலினும் துழாய் வலிமை பெற்றது எனச் சிறப்பித்தல் காண்க.

"கண்ணன் செங்கோல் விண்ணும் மண்ணும் அளிக்கும்;" என்றது கண்ணன் செங்கோல் லீலா விபூதியையும், நித்திய விபூதியையும், பாது காக்கும் தன்மையது. அவன் செங்கோல் அந்த விண்ணையும் தரும்; இந்த மண்ணையும் தரும் வலிமை மிக்கது. வானவர் உலகையும் பெற்றுத்தரும். இப்பூவுலகை யும் பெற்றுத்தரும். அநீதி எத்தன்மைத்தாயினும் வளையாது காக்கும் என்பது இதன் உட் பொருள். ஆனால் அவன் தழாய் விஷயத்தில் அத் தன்மைத்தல்ல் என்பதாம். "திறல் சேர் அமரர்தம்

கோனுடைய தம் கோன்'' என்றது வலிமை மிக்க அமரர்களின் அரசனான, தேவர்களின் தலைவனான பிரம்மனுக்குத் தலைவன் என்பதாம், இதனை;

''மூவரில் முதல்வனாய ஒருவனை, உலகம்
கொண்ட
கோவினைக் குடந்தை மேய குருமணித்திரளை...''

என்றனர், திருமங்கையாழ்வார். திருக்குறுந்தாண்டகம்6 மூவரில் முதல்வன் அந்த பிரம்மாவுக்கும் தலைவன். இது சிவபெருமானையும் சேர்த்து என்றபடி. அமரர் தம்கோன் பிரம்மன், ''தம் கோன்'' என்றது பிரம்மா வுக்கு அரசன் என்பதாம். அடுத்து உம்பர் எல்லா மவர்க்கும் கோன். இது பரமபதத்தில் உள்ள நித்திய சூரிகளெல்லோருக்கும் தலைவன் என்பதாகும். ''உம்பர்'' என்றது உயர்ந்தோர், தேவர் உலகை அடைந்தோர். இவர்களையே திருவைணவம் நித்திய சூரிகள் எனச் சிறப்பிக்கிறது. ''நம் கோன்'' என்றது இவ்வுலகத்தில் உள்ள நமக்கும் தலைவனான எம்பெரு மான், ''உகக்கும் துழாய்'' என்றது விரும்பி அணிந்து கொள்ளும் துழாய், ''எம்கோல் வளைமுதல் ஆ'' என்றது, அழகிய என் கையில் உள்ள வளையல்கள் நிமித்தமாக அதாவது அவை கழன்று விழும்படி செய்த கொடுமையைத் தடுக்கும் வலிமையற்றதாய் கண்ணன் செங்கோல் வளைந்தது என்றபடி. துழாய் மாலை என் வளையல்கள் கழன்று விழக் காரணமாயிருந்தும் மண்ணும் விண்ணும் அளிக்கும் செங்கோல் பாராமுக மாய் இருந்துவிட்டது'' என்கிறார். ''இனி நானிலத்து என் செய்யாது'' என்றது இனி இந்த உலகில் என்னதான் கண்ணன் துழாய்மாலை செய்யாது? வேறு எந்தத் தீங்கைத்தான் செய்யமாட்டாது? என்றபடி:

''தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்
முடிமேலும்
தாளிணைமேலும் புணைந்த தண்ணந்துழா
யுடையம்மான்''

என்றனர் நம்மாழ்வார். திருவாய்மொழி 1-9-7. திருத்துழாய் திருமாலுக்கு, திருமால் விரும்பித் தரிக்கும் மலர் மாலையாதலின் கண்ணனின் செங்கோல் அவன் அணியும் திருத்துழாய் செய்யும் துன்பத்தில் நீதி வழுவியது; அடியார்களை அம்மலர்மாலை என்ன பாடு படுத்துகிறது? என்றபடி.

> "இவள் இராப்பகல் வாய்வெரீஇ தன
> குவளையொண் கண்ணநீர் கொண்டாள்வண்டு
> திவளும் தண்ணந்துழாய் கொடீர் என
> தவளவண்ணர் தகவுகளே"

என்பதும் நம்மாழ்வாரே. திருவாய்மொழி 2-4-5. தண்ணந்துழாய் சிறிதேனும் கொடாது இவ்வாறு கொடுமை செய்தும் கண்ணன் திருச்செங்கோல் பாராமுகமாய் இருந்து விட்டது என்றபடி. எம்பெருமான் விரும்பி அணியும் துழாய் மலர் மீது அடியார்களுக்கு அவா அதிகம் என்றபடியுமாம்.

> "கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளைகள்
> என்னோ கழன்ற? இவை என்ன மாயங்கள்?"

என்றனர் திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி 11-3-7 நம் தலைவியின் துன்பமும் இதுவே. செங்கோல் என்பது மக்களைத் துன்பத்தினின்றும் பாதுகாப்பது. ஆனால் கண்ணன் செங்கோல் இத் துன்பத்தினின்றும் பாதுகாக்கத் தவறியது என்பதாம். எம்பெருமான் மீதுள்ள மிகுதியான பற்றினால் எழுந்த சொற்கள். "திறல் சேர் அமரர் தம் கோனுடைய தம் கோன் உம்பரெல்லாயவர்க்குந் தங்கோன் நம்கோன் உகக்கும் துழாய்" என்று துழாய்க்கு எத்தனை அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கிறார் என்பதை முன்னமேயே சொன்னோம் என்பதனை இங்கு நினைவு கூறுக. விண்ணும் மண்ணும் அளிக்கும் செங்

கோல், எம் கோல்வளைமுதலா வளைந்தது எனும் பொழுது தலைவியின் சிறப்பு இங்கு மென்மேலும் பன் மடங்கு பளிச்சிடுகிறது. ஆண்டவனிடம் அடியார்கள் அடிமையாகின்றனர். அதே போன்று அடியார்களிடம் ஆண்டவன் அடிமையாகிறான்; அவர்களுக்குத் தொண்டு செய்கிறான் என்பதே உண்மை. "இன் நானிலத்து என் செய்யாது" என்றதையும் எம்பெருமா னின் கருணை உள்ளத்தை விரிவுபடுத்தியே காண்பிக் கிறது. எம்பெருமான் அடியார்களுக்கு இரங்கி எதுவும் செய்வான் என்றபடியுமாம்.

அரும்பதவுரை : எம் கோல்வளை முதல் ஆ — எமது அழகிய வளையல்கள் காரணமாக. செங்கோல் - செம்மையான கோல். வளைவு விளைக்கும் - நேர்மை தவறும். கேடு செய்யும். அநீதியுண்டாக்கும். திறல் சேர் அமரர் - வலிமை மிக்க அமரர்கள். அமரர்தம் கோன் - பிரம்மா. உம்பர் - தேவர்கள். நம்கோன் - நமக்கு அரசன். தலைவன். உகக்கும் - விரும்பித் தரிக்கும். நானிலம் - பூமி, நான்கு நிலம், முல்லை, மருதம், குறிஞ்சி, நெய்தல் என்றபடியுமாம்.

(நகர்காட்டல்)

நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று
கோதுகொண்ட
வேனிலஞ்செல்வன் சுவைத்துமிழ் பாலைகடந்த
பொன்னே
கானிலந் தோய்ந்து விண்ணோர் தொழுங்
கண்ணன் வெஃகாவு தம்பூந்
தேனிளஞ்சோலையப் பாலதெப்பாலைக்குஞ்
சேமத்ததே 26

விளக்கவுரை : குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நானிலங்களையும் தனது ஒளிக்கதிர்

கள் எனும் வாயிற் கொண்டு நல்ல நீர் முற்றிலும் அற்றுப்போம்படி மென்று பயனற்றது என அறிந்து வெப்பத்தைத் தனக்குரிய பொருளாகக் கொண்ட ஞாயிறு சுவைத்து உமிழ்ந்த பாலை நிலத்தைக் கடந்து வந்த பொன் போன்றவளே! தேவர்களும் நிலத்தில் படாத தமது கால்களை நிலம் தோயும்படி நின்று வணங்கும் படியான கண்ணபிரானது புனித நாடான திருவெஃகாவானது அடுத்துள்ளது. தேன் ததும்பும் அழகிய மலரையும் இளந்தளிர்களையுமுடைய சோலை அப்பாலுள்ளது. அது நமது எல்லாத் துன்பங்களுக்கும் இன்பம் தருவதோரிடமாகும்.

திறனாய்வு :

''கொன்னவிலும் வெங்கானத்தூடு—
கொடுங்கதிரோன்
துன்னுவெயில் வறுத்த வெம்பரல்மேல்பஞ்சடியால்
மன்னனிராமன் பின்வைதேகி யென்றுரைக்கும்
அன்னநடையணங்கு நடந்திலளே...''

இது திருமங்கையாழ்வார் திருவாயமுதுர்த்த ''சிறிய திருமடல் பெரிய திருமடல்'' என்னும் திவ்யப்பிரபந்தத்தில் பெரிய திருமடலில் ஒரு பகுதி. இத்திவ்ய பிரபந்தத்துக்கு உரையெழுதும் பொழுது நம்மாழ்வாரின் இப்பாசுரம் என்னைக் கவர்ந்தது. இப்பாசுரத்தின் இருவரிகளை எடுத்தாண்டு அதற்கான விளக்கம் (பக்கம் 100) கண்டு மகிழ்க. ''பாலை நிலத்தைப் பற்றி வேறு எங்கும் இத்தகு சிறப்பாகச் சொல்லக் கேட்டதில்லை'' என்ற வியப்பை அந்நூலில் கொட்டியுள்ளது காண்க. இப்பாசுரத்துக்கு முழுமையாக உரையெழுத வாய்ப்புக் கிடைத்தது என் பெற்றோர் செய்த புண்ணியம் என்றே கருதுகிறேன். தமிழை தித்திக்கத் தித்திக்க அள்ளி அள்ளிப் பருகப் படைத்திருப்பது சிறப்பு. வெங்கானகத்தைப் பற்றிப் பேசும் பொழுதும்

தமிழ் இன்பத் தேனாய்ப் பாய்கிறது. ''வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை'' என்றது வேனிலஞ் செல்வன் சுவைத்த அமிழ்து தமிழ் என்பதாக என் செவியுள் பாய்வது காண்கிறேன். ஆழ்வார்கள் எம்பெருமான் மேல் காமுற்றுப் பிராட்டி நிலை அடையாதிருந்திருந்தால் இத்தகு பாசுரங்கள் தமிழ் கூறும் நல்லுலகுக்குக் கிட்டாது போயிருக்கும். கதிரவனை ''வேனிலஞ் செல்வன்'' எனச் சிறப்பிக்கி றார். ''வேனில்'' என்றது வெப்பம். ''அம்'' என்ற சொல் ''அழகு'' என்ற பொருளில் வருவது. உலகுக்கு அழகு சேர்ப்பது அந்த வெப்பமே, கதிரவனின் வெப்பமே கதிரவனின் வெப்பக் கதிர்கள் பாயாவிடின் உலகம் அழகிழந்து போமாதலின் ''வேனில் அம் செல்வன்'' என்றனர். ''செல்வன்'' என்றதால் அவன் உலகம் யாவையும் தன்னுள் கொண்டவன் என்பதாம். ''வேனிலஞ் செல்வன் நானிலம் வாய்க்கொண்டு சுவைத்து நல்நீர் அற மென்று'' என்றது உலகம் நான்கு வகை நிலங்களால் ஆனது என்பதை இங்கு நயம்பட உரைப்பபற்கே என்றாகிறது. நானிலம் என்றால் உலகு என்று பெயர். அது நான்கு வகை நிலங்களால் அமைந்தது ஆதலின் அது நானிலம் ஆனது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகை நிலத்தான் அமைந்ததே உலகு. பாலை என்பது அவ்வப்போது ஆங்காங்கு தோன்றி மறைவது.

''மாயோன்மேய காடு உறை உலகமும்
சேயோன் மேய மை வரை உலகமும்
வேந்தன் மேயதீம் புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், எனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே''

என்றனர் தொல்காப்பியர். பொருள் அதிகாரம். அகத் திணை இயல் 5. ''வேனிலஞ் செல்வன்'' இந்த நான்கு வகை நிலங்களையும், ''வாய்க் கொண்டு நல்நீல் அறமென்று'' என்று வெப்பத்தின் வலிமையை உணர்த்துகிறார். பாலை நிலம் தோற்றுவித்தலைக் குறிப்பிடுகிறார்.

''வாய்க்கொண்டு'' என்றது வாயில் போட்டுக் கொண்டு என்பதாம். யானை வாயில் சிக்கிய கரும்பு போன்று என்புழி. ''நல்நீர் அறமென்று'' என்பதாம் ''நல்நீர்'' என்றது உலகின் உயிரினங்கள் உயிர் வாழக் காரணமான நல்லநீர் என்பதாம். ''அற'' என்றது முற்றிலும் வற்றிப் போகும்படி, ''மென்று'' உறிஞ்சி என்பதாம். ''வாய்க்கொண்டு'' என்றதால் ''மென்று'' என்ற சொல்லைப் பயன்படுத்தினார் என்பது காண்க. ''கோது கொண்ட உமிழ் பாலை'' என்றது சக்கை யென உமிழப்பட்ட பாலை நிலம் என்பதாம். ''கோது'' என்பது சக்கை என்பது பொருள். நல்நீர் ஒருதுளிகூட இல்லையென்று மென்று சக்கை என உமிழ்ந்த நிலம் பாலை நிலம். இதுபாலை நிலத்துக்கு இலக்கணம். பாலை நிலம் பயனற்றதாதலின் நானிலத்தில் இடம்பெற வில்லை ''உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே'' என்றதால் பாலை நிலம் நானிலத்தில் இடம் பெற வில்லை போலும். எனினும் ''வேனிலஞ் செல்வன் நானிலம் வாய்க்கொண்டு நன்னீரற மென்று கோது கொண்டது உமிழ்பாலை'' என்று நீண்டதொரு அடை கொடுத்துச் சிறப்பிக்கிறார். பாலை என்பது இயற்கை யின் மாற்றங்களால் அமையும் நான்கு வகை நிலங் களுள் அடங்கிய ஒன்று என்பதாகும். முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலம் பாலை என்பர். பாலை என்ற சொல்லும் வெப்பத்தையே குறிக்கும்.

''கோத்தொழிலாளரொடு கொற்றவன் கோடி
வேத்திய லிழந்த வியனிலம் போல

வேனிற் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலந் திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து
நல்லியல் பிழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்''

என்று சிலப்பதிகாரம், காடுகாண்காதையில் வருவதும் காண்க. பாலையென்பதோர் நிலம் எப்படி வடிவம் கொள்கிறது என்பதை இளங்கோவடிகள் சிறப்புறக் கூறியிருப்பதை நம்மாழ்வாரின் இப்பாசுரத்துடன் ஒப்பிட்டுக் காண்க. கம்ப நாடானும்,

''பருதிவானவன் நிலம் பசை அறப் பருகுவான்''

என்றனர். பாலகாண்டம் தாடகை வதைப்படலம் 5. தொடர்ந்து பன்னிரண்டு செய்யுள்களில் பாலையின் தன்மையை விரிக்கிறார்.

''கண் கிழித்து உமிழ்விடக் கனல் அரா-அரசுகார்
விண் கிழித்து ஒளிரும் மின் அனையபல்மணி, வெயில்
மண் கிழித்திட எழும் சுடர்கள், மண்மகள் உடல்
புண் கிழித்திட எழும் குருதியே போலுமே''

என்கிறார் பத்தாம் செய்யுளில். இத்தகு பாலை நிலத்தைக் கடந்த ''பொன்னே'' என்று பெண்மையைப் போற்றுகிறார். ''பாலை கடந்த பொன்னே'' எப் பாவைக்கும் சேமத்து உதம்பூதேன் இளம் சோலை, விண்ணோர் கால் நிலம் தோய்ந்து தொழும் கண்ணன் வெஃகா அப்பாலது'' என்கிறார். பாலை கடந்த பெண்ணே ''கண்ணன் வெஃகா'' எங்குள்ளது எனத் தேடிவரும் பெண்ணே! கண்ணன் வெஃகா அடுத்துளது என்கிறார்.

''கண்ணன் வெஃகா'' எனும் பொழுது ''எப் பாலைக்கும் சேமத்து'' என்கிறார். எத்தகைத்

துன்பத்தினின்றும் பாதுகாத்தருளும் என்பதாம். "சேமத்து" பத்தினின்றும் பாதுகாத்தருளும் என்பதாம். "சேமத்து" என்றது "சேமம்" என்ற சொல்லின் திரிபு "எப்பா லைக்கும்" என்றதிலுள்ள 'பாலை' என்பது துன்பத்தைக் குறிப்பது.

"எப்பாலைக்கும்" என்றதால் எம்பெருமான் எத்தகைய துன்பத்தினின்றும் அடியாரை மீட்பவர் என்பதாம். "சேமத்து" என்றது. சேமம் தரவல்லது என்பதாம். "உதம் பூ தேன் இளம் சோலை" என்றது நீர்வளம் மிக்க மலர்ச்சோலை என்பதாம்.

"உதம்" என்ற சொல்லுக்கு நீர் என்பது பொருள். குளிர்ச்சி மிக்க தேன் கமழ் மலர்களைக் கொண்ட சோலை என்பதாம். "இளம் சோலை" என்றது அன்றலர்ந்த மலர்கள் நிறைந்த சோலை என்பதாம்.

"விண்ணோர்கள் கால் நிலம் தோய்ந்து தொழும் கண்ணன் வெஃகா" என்றது கால் நிலம் தோயாத விண்ணோர்கள் ஓடி வந்து நின்று தொழுது கிடக்கும் இடமான திருவெஃகா என்றபதாம். பரமபதத்தில் என்றும் எம்பெருமானைத் தரிசித்துப் பூஜிக்கும் தேவர்கள் அவ்வுலகை விட்டு இவ்வுலகில் வந்து திருவெஃகாவில் எம்பெருமான் தரிசனத்துக்குக் காத்துக் கிடக்கின்றனர் என்பதாம்.

"கால்நிலம் தோய்ந்து" என்றது நிலத்தில் படாத கால்களையுடை தேவர்களும் திருவெஃகாவில் கால் கடுக்க நிலத்தில் நின்று காத்துக் கிடக்கின்றனர் என்பதால் திருவெஃ தேவர் உலகிலும் மிகச் சிறந்தது என்பதாம். முதற்பாதியில் பாலை நிலத்திற்கு நீண்டதோர் அடைமொழி கொடுத்து சிறப்பித்தது போன்று "எப்பாலைக்கும் சேமத்து" என்றும் "உதம் பூ தேன் இளம் சோலை" என்றும் விண்ணோர்கள் கால்

நிலம் தோய்ந்து தொழும்'' என்றும் அடை கொடுத்து இத்தகு சிறப்பு மிக்க வெஃகா ''அப்பாலது'' என்கிறார். ''அப்பாலது'' என்றது ''அப்பால் உளது என்பதாம், அடுத்துளது என்பதுவுமாம்.

இப்பாசுரம் தலைவன் தலைவியை நீண்டதோர் வழிப்பயணத்தில் ஈடுபடுத்தி அழைத்துச் சென்று தன் நாடு சேர்ந்ததைக் காட்டுவதாக அமைந்தது.

இப்பாசுரம் உலகியல் வாழ்வினின்றும் விடுபட்டு எம்பெருமானடியில் சரண் புகுதலை உணர்த்துவதாகவும் அமைந்தது. பாலை நிலம் உலகியல் துன்ப வாழ்க்கைக்கும் வெஃகாவில் பரமபதமடதலையும் கூறுவதாகும். இராம இலக்குணர் பாலை நிலத்தைக் கடக்க விசுவாமித்திரர் உபதேசித்த மந்திரம் போன்று, பாலை நிலத்தின் துன்பங்கள் தாக்காதிருக்கும் பொருட்டு தலைவிக்கு உபதேசித்த மந்தரம் போன்றது இப்பாசுரம் எனினுமாம்.

அரும்பதவுரை : நானிலம் - உலகம். நான்கு நிலங்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகியவற்றால் அமைந்த உலகு. வாய்க்கொண்டு - வாயில் போட்டுக் கொண்டு. வெப்பக் கதிர்களால் நீரை உறிஞ்சி. கோது - சக்கை. வேனிலஞ் செல்வன்- வேனில் அம் செல்வன். வெப்பம் மிகுந்த கதிரவன். அம் அசையெனத் தள்ளினும் தள்ளுக. பொன்னே - பொன்போன்ற பெண்ணே! பொன் பெண்ணுக்கானது தோய்ந்து - அமர்ந்து நிலைத்தில் நின்று. உதம் - நீர் குளிர்ச்சி. அப்பாலது - அப்பால் உள்ளது. எப்பாலைக்கும் - எத்தகைய துன்பத்துக்கும் சேமத்து - சேமம் உடைத்து. வெஃகா - பிரமன் செய்த வேள்வியை அழிக்க ஓடி வந்த வேகவதி நதியைத் தடுக்க அதன் குறுக்கே அணையாக எம்பெருமான் பள்ளிகொண்ட

ருளியதால் வேகா. சேது என்ற வடசொல் வேக வணை என்று தமிழில் பின் திரிந்து வெஃகாவானது என்பர்.

(தலைவி தார் பெற்று மகிழ்தல்)

சேமஞ்செங்கோனருளே செறுவாரு நட்பாகுவரென்
றேமம் பெறவையஞ் சொல்லு மெய்யே
பண்டெல்லாமறைகூ
யாமங்கடோறெரிவீசு நங்கண்ணனந் தண்ணந்
துழாய்த்
தாமம் புனையவவ்வாடை யீதோ வந்து
தண்ணென்றதே. 27

விளக்கவுரை : எல்லாப் பொருள்கட்கும் நிகரில் தலைவனான எம்பெருமானது திருவருளே நம்மைக் காத்தருள்வது என்று கொள்ளப் பகைவரும் நட்புக் கொள்வர் என்று உறுதி பொருந்த உலகத்தோர் கூறும் உண்மை மொழியின்படி முன்பு எல்லாம் பகைத்து எதிர்வந்து போருக்கு அழைத்து இரவுகளில் என் மீது வெப்பத்தை வீசும் தன்மையுள்ள அக்காற்று நமது கண்ணனது அழகிய குளிர்ந்த திருத்ளமாய் மாலையை யாம் பெற்று அணிந்ததால், அந்த இரவு வெப்பம் குளிர்ந்து போனது.

திறனாய்வு ; இங்கு இருபத்தைந்தாம் பாசுரத்தை 'எம்கோல்வளை முதல் ஆ மண்ணும் விண்ணும் அளிக்கும் கண்ணன் செங்கோல் விளைவு விளைவிக்கும்; இனி நானிலத்து என் செய்யாது'' என்று தலைவி ஆற்றாது கூறியதை நினைவு கொள்க. ''துனி வளர் காதல் துழாயை துழாவு தண்வாடை தடிந்து வளை காப்பவர் ஆர்? ஊழிகள் எனை ஈர்வனவே'' என்று நொந்து கொண்ட பதிமூன்றாம் பாசுரத்தில் தலைவியின் கூற்றையும் இங்கு நினைவு கூறுக,

இவ்விரு பாசுரங்களிலும் தன் ஆற்றாமையைக் கொட்டிய தலைவி இப்பாசுரத்தில் தன் துயர் நீங்கப் பெற்றதைக் கூறி மகிழ்கிறார். கிடைக்காத ஒன்றுக்காக ஏங்கித் தவத்த தலைவிக்கு "அம் தண்ணம் துழாய் தாமம் புனைய" பெற்றதனால் வேண்டியது கிடைத்து விட்டது. முன்பெல்லாம் "ஊழிகள் எனை ஈர்வனவே" என்றும் வாடை பனிப்பு இயல்பு எல்லாம் தவிர்த்து எரி வீசும் "என்று வாடிய மங்கைக்கு, "அவ்வாடை "ஈதோ தண்ணென்றதே" என்கிறார். இவையனைத் தும் "நம் கண்ணன் திருவருளே" எனப் போற்றுகிறார். இதுவே இப்பாசுரத்தின் சாரமாம்.

"பண்டு எல்லாம் அறை கூய்யாமங்கள்" என்றது முன்பெல்லாம் பேய்க் கூச்சலிடும் இரவுகள் என்ப தாம். "அறை கூய்" என்றது அறை கூவுதல் என்ப தன் போலி. அறை கூவுதல் என்பது போருக்கு அழைத்தல் என்பதாகும். இங்கு தலைவியை அழிக்க அழைத்ததாகக் கொள்ளலாம். "யாமங்கள்" என்றது இரவுகள் எனினும் "ஊழிகள் எனை ஈர்வனவே" என்று இரவைக் குறிப்பிட்டதால் "யாமங்கள் என் பதை யுகங்கள் என்றே பொருள் கொளல் நலம்.

"யாமங்கள் தோறும் எரிவீசும் அவ்வாடை" என்றது ஊழிகள் தோறும் ஈர்க்கும் அவ்வாடை என்ப தாம். "எரி வீசும்" என்றதால் சுட்டுப் பொசுக்கும் அவ்வாடைக் காற்று என்றபடி, "அவ்வாடை" என்றது "துளிவளர் காதல் துழாயை துழாவு தண் வாடை" என்பதறிக. "அவ்வாடை அம்தண்ணம் துழாய் தாமம் புனைய ஈதோ வந்து தண் என்றதே" என்றது, அத்தகைய வாடைக் காற்று அழகிய குளிர்ந்த துழாய் மாலையை அணிய, எம்பெருமான் மார்பில் அணியப் பெற்ற மாலையை என் மார்பில் அணிய, இதோ வந்ட் குளிர்ந்து வீசியது என்பதாம்.

"அம்தண்ணம் துழாய் தாமம் புனைய" என்றது அந்த அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலை அணிந்து கொள்ள என்பதாம். "தாமம்" என்பதற்கு "மாலை" என்பது பொருள். "புனைய" என்றது சூடிக் கொள்ள அணிந்து கொள்ள என்பதாம். அணிந்து கொண்ட வுடன் "ஈதோ வந்து தண்ணென்றதே" என்கிறார். "ஈதோ வந்து" என்றது காற்று வீசாத அமைதியான நிலையிலும் திடீரென வந்து என்றபடி. வந்த காற்று முன்பு போல் எரி வீசாது "தண்ணென்றதே" என்று தெளிவுபடக் கூறுவதால் ஏகார ஈற்று தேற்றமாம். இது வியப்பையும் வெளிப்படுத்துவதாக அமைந்த ஏகாரம். இதுகாறும் எரிவீசும் வாடை எம்பெருமான் அணிந் திருந்த துழாய் மாலையை உடலில் தரித்தவுடன் "ஈதோ வந்து தண்ணென்றதே" என்று வியந்ததாக வும் பொருள் கொள்ளலாம். இவ்வாறு எரிவீசும் வாடை தண்ணென்றதனால் இனி எமக்கு எல்லாம் நன்மையாகவே முடியும். வாடையே பகை நீங்கி நட்பு கொண்டதனால், "செறுவரும் ஏமம் பெற நட்ப ஆகுவர் என்று வையம் சொல்லும் மெய்யே" என்றனர்.

"செறுவாரும்" என்றது பகைவரும் என்பதாம். வாடையினுமிக்கதோர் கொடிய பகை இல்லையாதலின் கொடிய பகைவரும்,"ஏமம் பெற நட்பு ஆகுவர்"என்றனர் ஏமம் பெறுதல் என்பது மகிழ்ச்சியடைதல். "நட்பு ஆகுவர்" என்றது அன்பராவர் என்பதாம். "செறு வாரும் நட்பு ஆகுவர்" என்று "வையம் சொல்லும் மெய்யே" என்றதால் திருத்துழாய் மாலை கிடைக்கப் பெற்ற ஒருவருக்கு பகைவர் நீங்கி மகிழ்ச்சிதரும் நண்பர் ஆவர் என்று கூறும் இவ்வுலகியல் வாக்கு உண்மை, பொய்யன்று என்பதாம்.

எம்பெருமான் திருத்துழாய் மாலை கிடைக்கப் பெற்றவர் எல்லாத் துன்பத்தினின்று விடுதலை பெற்று

இன்புற்று வாழ்வர் என்று உலகத்தோர் சொல்லும் சொல் முற்றிலும் உண்மை என்பது புலனாகிறது என்பதாம். இவையனைத்தும் "செம்கோன் எம் கண்ணன் அருளே" என்கிறார். இவ்வையத் துயாம் பெரும் இன்பமனைத்தும், துன்பம் நீங்கப் பெற்றுயாம் பெரும் இன்பம் எம்பெருமான் செம்கோன் பெருமை மிக்க அரசன் எம்இறைவன், எம்பெருமான் கண்ணன், கண்ணபிரான் திரு அருளினாலேயே என்பதாம்.

அரும்பதவுரை : சேமம் - செம்மையான வாழ்வு. செங்கோன்-செம்கோன் - நிகர்இல்தலைவன். செம்மை யாக ஆட்சி நாடாத்துபவன். செறுவார் - பகைவர். ஏமம் - மகிழ்ச்சி இன்பம். வையம் - உலகம், வைக்கு மிடம். பண்டு - பழங்காலத்து, முன்பு. அறைகூய - அறைகூவ, பேய்க்கூச்சலிட. யாமம் - காலம் யுகம். எரிவீசும் - வீசி எரியும். தாமம் - மாலை. புனைய - அணிய. அருளே, தண்ணென்றதே இவற்றின் ஏகாரம் தேற்றம். செறுவார் - எதிர்கால வினையாலணையும் பெயர். அறைகூய் இறந்தகால வினையெச்சம். ஈதோ - இதோ என்பதன் நீட்டல்.

(தலைவனைப் பிரிந்த தலைவி வாடைக்கு வருந்தி இரங்கல்)

தண்ணந்துழாய் வளைகொள்வது யாமிழப்போ
நடுவே
வண்ணந்து ழாவியோர்வாடை யுலாவும்வள்
வாயலகாற்
புண்ணந்து ழாமே பொருநீர்த்திருவரங்காவருளா
யெண்ணந்து ழாவு மிடத்துளவோபண்டு
மின்னன்னவே 28

விளக்கவுரை : கூர்மையான தனள வாயின் அலகால் பறவைகள் தன்னிடத்தே உள்ள சங்கைக் கொத்தாதபடி அலைகள் வந்து மோதும் காவிரி நீர் சூழ்ந்த திரு அரங்கா! குளிர்ந்த அழகிய உனது திருத் துழாய் மாலை எனது கைவளைகளைக் கொள்ளை கொள்வதும், உன்பக்கம் ஈடுபாடு கொண்ட நாம் வளைகளை இழக்கக் கடவோம். இவ்வாறிருக்க, ஒரு வாடைக் காற்றானது, எந்தவிதமான தொடர்பும் இல்லாத எங்களிடையே புகுந்து எமது மாமை நிறத்தைக் கவருதற்கென்று தடவிச் செல்கிறது. அதற்கு யாம் மாமை இழக்காதபடி எமக்கு நீ கருணை செய்து என்னிடம்வந்து சேர்ந்தருள்வாய். மனம் தடுமாறு மிடத்தும் முன்பும் இப்படிப்பட்ட நிலைமைகள் உள்ளனவோ?

திறனாய்வு : சென்ற இருபத்தாறு பாசுரங் களில் தலைவியின் ஆற்றாமையைப்பாடி இருபத் தேழாவது பாசுரத்தில் தலைவி துழாய் பெற்று மகிழ்ந்தது கூறப்பட்டது. இப்பாசுரம் முதல் தலைவி யின் ஆற்றாமையை வேறு வேறு கோணங்களில் கண்டு எம்பெருமானுக்கும் ஆழ்வாருக்கும் உள்ள ஈடுபாட்டை எடுத்துரைக்கும் பாங்கு பெரிதும் சிறப்புடையனவாகத் திகழ்வது காண்கிறோம். இப்பாசுரம் எம்பெரு மானுக்கும் தலைவிக்கும் திருத்துழாய் இருக்க இடையே வாடை வந்து புகுதல் என்ன ஞாயம் என்று கேட்பதாக அமைந்தது.

"புள் வள்வாய் அலகால் நந்து உழாமே பொருநீர் திருஅரங்கா!" என்றது திருஅரங்க நாதனைப் போற்றும் பகுதியாகும். பறவைகள் தம் கூர்மையான அலகால் சங்குகளைக் கொத்தாதபடி அலைமோது கின்ற காவிரி நீர் சூழ்ந்த திரு அரங்கநாதனே! என்பத தாம். "புள்" என்றது பறவையினத்தை. "வள்" என்ற

சொல் பெருமை, கூர்மை என்ற பொருட்களில் வருவது ஆதலின் பெருமைமிக்க வாய் அல்லது கூர்மையான அதன் அலகால் என்பதாம். "வள் வாய்" என்றது அகன்றவாய் என்ற பொருளிலும் வரும். நீண்டு அகன்ற அலகு ஆதலின் "வள் வாய் அலகால்" என்றனர். "நந்து உழாமே பொரு நீர்" என்றது சங்குகள் வருந்தாமல் அலைமோதும் நீர் என்பதாம்.

புள்ளின் வாய் அலகால் கொத்தப்பட்டு சங்குகள் துன்புறாமல் அலைகள் வந்து மோதும் நீர்வளமிக்க காவிரியாற்றின் மத்தியில் எழுந்தருளியிருக்கும் "திரு அரங்கநாதனே" என்கிறார். "திரு அரங்கா!" என்றது திருஅரங்கத்து எம்பெருமானே! என்பதாம்.

"சந்தினோடு மணியும் கொழிக்கும் புனல்காவிரி
அந்தி போலும் நிறத்தார்வயல்சூழ்
தென்னரங்கமே"

என்றவர் திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி 5.4.1 திருமங்கையாழ்வார் திருவரங்கத்தை ஐந்துப் பத்து பாசுரங்களில் போற்றி மகிழ்ந்திருக்கிறார். திருவரங்கமென்பது திருமாலின் திவ்ய தேசங்கள் நூற்றெட்டினுள் தலையாயது. "கோயில்" என்றும் "பெரிய கோயில்" என்றும், "பூலோக வைகுண்டம்" எனும் மகிமையுடையது. "போக மண்டபம்" எனுப் படுவதாகிய இடம் இத்திருத்தலத்தைப் பற்றிய விரிவான செய்தியை எமது சிறிய திருபுடல் பெரிய திருமடல் உரை நூல் பக்கம் 58 காண்க.

"அரங்கம்" என்பது கூத்தாடும் இடம். "அரங்கநாதன்" என்றது. "அரங்கத்துநாயகன்" கூத்தாடுபவர் தலைவன். எம்பெருமான் குடக்கூத்தாடிப் பாரோரை மகிழ்வித்த இடம். எம்பெருமானது திருக்கல்யாண குணங்களைப் போற்றிப் பாடியும் ஆடியும் மகிழ்ந்து கூலாவிய இடம். எம்பெருமானுக்கு உகந்த

தொரு இடமானது பற்றித் "திருஅரங்கம்" என்றானது. இத்தகு சிறப்புமிக்கு திருத்தலத்து "எம்பெருமானே!" என்று விளிக்கிறார். "தண் அம் துழாய் வளை கொள்வது யாம் இழப்போம்" என்றது தண்ணந்துழாய்க்கும் எமக்குமிடையேயான உறவின்முறை என்பதாம். "துனிவளர் காதல் துழாயை துழாவு தண்வாடை தடிந்து வளை காப்பவர் ஆர்" என்றதை மீண்டும் இங்கு நினைவு கூறுக. இதனை இப்பாசுரத்திலும் வலியுறுத்துகிறார், "தண் அம் துழாய் வளை கொள்வது" என்றது தண் அம் துழாய் கிடைக்கப் பெறாமையால் யாம் வளைகள் இழந்து வாடுவது இயல்பு என்பதாம். "வளை இழப்போம்" என்பதால் தண்ணந்துழாய்க்காக எம் உடல் மெலிந்து வளையல் களை இழக்கக் காத்துக் கிடக்கும் இவ்வேளையில் "நடுவே ஓர்வாடை வண்ணம் துழாவி உலாவும்" என்கிறார். எம்பெருமானுக்கும் எமக்கும் உள்ள இடைவெளியில் ஓர் வாடைக்காற்று நுழைந்து உலாவு வதன் மாயம்தான் என்ன? என்பதாம். துழாய் மாலை யில் நுழைந்து வந்து அதன் மணம் பரப்பி எம்மை வாட்டுவது கண்டும் காணாது இருப்பது சரியோ?என்ற படியுமாம். "உலாவும்" என்றதால் வாடை காளை யென வந்து பேதையாகிய என்னை அலைகழிக்கிறதே என்பதாம். எம்பெருமான் மார்பில் அணிந்த துழாய் வளை கொள்வதை யாம் ஏற்போம். ஆனால் இந்த வாடை எங்கிருந்தோ வந்து இடையில் புகுந்து இன்னல் செய்வதும் காணவில்லையோ? என்ப தனையே "பண்டும் எண்ணம் துழாவும் இடத்து இன்னன் உளவோ?" என்கிறார். 'பண்டும்' என்றது இதற்கு முன்பும் என்பதாம். "எண்ணம் துழாவும் இடத்தும்" என்றது எண்ணம் அலை கழிக்கப்படும் பொழுதும் என்பதாம். "இன்னன்ன உளவோ"

என்றது இப்படித்தான் இரங்காது இருந்தனையோ? என்று வேண்டி "அருளாய்" என்கிறார். "அருளாய்" என்ற சொல்லைப் பிரித்துக் கடைசியில் வைத்ததன் நோக்கம் பண்டு நீ இவ்வாறு இரங்காது இருந்தாலும் இப்பொழுது எமக்கு இரங்கி அருள்வாய் என்பதை வலியுறுத்தவே என்பது காண்க.

அரும்பதவுரை : துழாவி - தடவி. புகுந்து உழன்று, தேடிக்கொண்டு. வள்வாய் - கூர்மையான வாய். அலகு - பறவையின் வாயின் நீண்ட கூர்மை யான பகுதி. புள் - பறவை. நந்து - சங்கு. உழாமல் - கொத்த இயலாதபடி. பொருநீர் - அலைமோதும் நீர். எண்ணம் துழாவும் - எண்ணம் அலைகழிக்கப்படும். இன்னன்னவே - இது போன்றே. "இன்ன அன்ன" என்றதன் தொகுத்தல்.

(தலைமகள் அன்னப்பறவையை வெறுத்துரைத்தல்)

இன்னன்னதூ தெம்மையாளற்றப்பட்டி
ரந்தாளிவளென்
றன்னன்ன சொல்லாப் பெடையொடும் போய்வரு
நீலமுண்ட
மின்னன்ன மேனிப்பெருமானு லகிற் பெண்டூது
செல்லா
வன்னன்ன நீர்மை கொலோகுடிச்சீர்மை
யிலன்னங்களே. 29

விளக்கவுரை : உயர் பிறப்பு எனும் சிறப்பில்லா அன்னப் பறவைகள், வேறுதனக்கு ஆள் இல்லாமை யால் இத்தகைய தூதாக என்னை கூவி அழைத்து வேண்டிக் கொண்டாள் என்று நினைத்துச் சொன்ன தூது மொழிகளைத் தலைவனிடம் சென்று சொல் லாமல், தன் பேடையுடன் சென்று உலவித் திரி

கின்றது. இதற்குக் காரணம் நீல நிறத்தையுடைய மின்னல் போன்ற திருமேனியையுடைய எம்பெருமானுக்குச் சொந்தமான இந்த உலகில் பெண்களுக்குத் தூது செல்லக் கூடாது எனும் சட்டம் உளதோ?

திறனாய்வு : ஆழ்வார்கள் எம்பெருமான் மேனி அழகை எப்படியெப்படியெல்லாம் போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள் என்பதற்கு இப்பாசுரம் ஒரு உதாரணம், "மின் அன்ன மேனி" "நீலம் உண்டு மின் அன்ன மேனி" என்கிறார்.

"இருளிரியச்சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தியணி பணம் ஆயிரங்களார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்த னென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை யணையை
மேவி
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு
கொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும்
நாளே?"

என்றனர் குலசேகரப் பெருமாள். பெருமாள் திருமொழி 1.1. நீலம் உண்டதால் அது கருமணி மேனி. அம்மேனி மின்னல் போன்று ஒளி வீசுவது. மின் ஒளி கண்களைக் கவர்ந்து இழுப்பது போன்று அவன் கரிய மேனியும் அடியார்களைக் கவர்ந்து இழுக்கும் வன்மையுடைத்து என்பதாம்.

காக்கைச் சிறகினிலே நந்த லாலா!—நின்றன்
கரியநிறந் தோன்றுதையே நந்த லாலா!
பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா—நின்றன்
பச்சைநிறந் தோன்றுதையே நந்த லாலா!

என்றனர் மகாகவி. கருமை மின்னல் போன்று ஈர்த்து இழுக்கும் வலிமையுண்டு. ஆதலின் "மின்னன்ன மேனி" என்றனர். எம்பெருமான் பிராட்டியை மார்பில் தரித்தவன். ஆதலின் மின்னல் கொடியை மார்பிலே தாங்கிய நீலமேக வண்ணன் என்றனர். "மின் உண்ட நீலம் அன்னமேனி" எனவும் பிரித்துக் கண்டு இன்புறுக. இவ்வுலகம் எம்பெருமானுடையது ஆதலின் "நீலம் உண்ட மின் அன்னமேனிப் பெருமான் உலகு" என்றனா். "ஆள் அற்றப்பட்டு" என்றது யாரும் இல்லாமல் ஒருவரும் கிடைக்காமல் என்பதாம். "அற்றப்பட்டு" என்ற சொல்லைப் பயன்படுத்தியிருத்தல் காண்க. உலகில் ஒருவர் கூட இல்லாதநிலை இங்கு கூறியிருத்தல் காண்க.

"இன்னன்ன தூது எம்மை இரந்தாள் இவள்" என்றது, யாரும் கிடைக்காததால் இப்படிப்பட்ட காரியத்திற்குத் தூதாக எம்மைத் தேர்ந்து வேண்டிக் கொண்டாள் என்பதாம் "தூது" என்றாலும் "இன்னன்ன தூது" என்னும் பொழுது இத்தூதின் இழிவுத்தன்மை கூறப்படுகிறது. "எம்மை இரந்தாள் இவள்" என்பதிலும் தூதின் தன்மை வெளிப்படை. இரத்தல் என்பது வேண்டிப் பெறுவது. "இரவாமை கோடி உறும்" என்பதை உணராதது போல் "எம்மை இரந்தாள் இவள்" என்று சொல்லிக் கொண்டு "போய் வரும் குடிச் சீர்மையில் அன்னங்களே" என்கிறார்.

"அன்னன்ன சொல்லா" என்றது இவ்விதமாகப் பேசிக் கொண்டு என்றும் தூது மொழிகளைப் போய்ச் சொல்லாமல் எனவும் பொருள் கொள்ளலாம். தூதுக்காகச் சொன்ன சொற்களை அசட்டை செய்துவிட்டுத் தன் பேடையுடன் "போய்வரும் குடிச்சீர்மையில் அன்னங்களே!" என்றது உலவித்திரியும் உயர்குடிப் பிறப்பான சிறப்புக்களற்ற அன்னங்களே! என்பதாம்.

"போய் வரும்" என்றதால் தன்பேடையுடன் போவதும் வருவதுமாய் இருக்கும் அன்னங்கள் என்பதாம். போவதும் வருவதுமாயிருத்தலால் அவை தூது சொன்னதை முற்றிலும் மறந்து விட்டன என்பதாகிறது. அவை தூது சொல்லியும் போகாததால் அவை "குடிச்சீர்மையில்" அன்னங்களாயின என்பதும் காண்க. தூது சென்றிருந்தால் அவை சீர்மிகு அன்னங்கள் எனப் போற்றப்பட்டிருக்கலாம். தூது செல்லாததால் அவற்றின் மேல் எழுந்த வெறுப்புணர்ச்சியை குடிச் சீர்மையில் அன்னங்கள் எனச் சாடுகிறார் என்பதுணர்க.

"குடிச்சீர்மை" என்றதற்கு உயர்குடி, தாழ்குடி எனப் பாகுபடுத்தி அன்னத்தை தாழ்குடிப்படுத்திப் பொருள் கொள்வது சரியாக அமையாததொன்று என்பதனையும் இங்கு தெரிவித்துக் கொள்கிறேன். அன்னங்கள் தனக்காகத் தூது செல்லாததன் காரணம் "பெண்தூது செல்லா அன்னன்ன நீர்மை கொலோ" என்கிறார். பெண்களுக்காகத் தூது செல்வது என்பது வழக்கில் இல்லாத ஒன்று. பெண் தூது அனுப்புவதில்லை ஆதலின் "பெண் தூது செல்லா அன்னன்ன நீர்மை கோலோ?" என்றனர். "அன்னன்ன நீர்மை கொலோ?" என்றது அத்தகு தன்மையுடையதோ என்ற ஐயப்பாட்டையும் தலைவி வெளியிடுகிறார்.

நளனுக்காக அன்னம் தமயந்தியிடம் தூது செல்கிறது. நளன் கதை பாடிய அதிவிரராம பாண்டியனார் "அன்னத்தைத் தூதுவிட்ட படலம் என்றே ஒரு தனிப் படலத்தைப் படைத்திருக்கிறார். அடியனேன உரை நூல் பக்கம் 113—226 கண்டு தெளிக. இந்நூலுக்கு முந்திய நூலான புகழேந்தியாரின் நளவெண்பாவில் அன்னம் தூது சென்ற செய்தி சுயம்வர காண்டத்தில் ஒரு பகுதியாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அடியனேன்

உரைநூல் பக்கம் 50—61 காண்க. நம்மாழ்வாரும்,

"தகவன்வென்றுரையீர்கள் தடம்புனல் வாயிரை
தேர்ந்து
மிக வின்பம்படமேவும் மென்னடைய அன்னங்காள்!
மிகமேனி மெலிவெய்தி மேகலையும் ஈடழிந்து என்
அகமேனியொழியாமே திருமுழிக்களத்தார்கே"

என்று அன்னத்தைத் தூது விடுவர். திருவாய்மொழி 9-7-10.

அரும்பதவுரை : இன்னன்ன - இத்தன்மைய. ஆள் அற்றப்பட்டு - ஆள் யாரும் இல்லாமல். வேறு கதியின்றி. இரத்தல் - வேண்டுதல். அன்னன்ன - அப்படிப்பட்ட. பெடை - பெண் அன்னம். போய் வரும் - உலவும். நீலம் உண்ட - நீலநிறத்தை முழுமையாக உடைய. மின்னன்ன - மின்னல் போன்ற ஒளியுடைய. மின்னல் கொடிபோன்ற பிராட்டியை மார்பில் தரித்த. நீர்மை - தன்மை. கொலோ - உடையதோ.

**(பிரிந்த தலைவி அன்னங்களையும் வண்டானங்களையும் தூது வேண்டுதல்)**

அன்னஞ் செல்வீரும் வண்டானஞ் செல்வீருந்
தொழுதிருந்தேன்
முன்னஞ் செல்வீர்கள் மறவேன்மினோ
கண்ணன் வைகுந்தனோ
டென்னஞ்சினாரைக் கண்டாலென்னைச்
சொல்லியவரிடை நீ
ரின்னஞ் செல்லீரோவிது வோதகவென்றிசை
மின்களே. 30

விளக்கவுரை : வானில் பறந்து செல்லும் அன்னமாகிய உங்களையும், உங்களுடன் வரும் வண்டானம் பறவைகளையுமாகிய உங்களைத் தொழுது வேண்டி

னேன். உங்களில் முதலில் செல்பவர்கள் என் வேண்டுகோளை மறவாது செய்வீர்களாக. எம்பெருமான் கண்ணன் வைகுந்தனுடன் முன் சென்ற எனது மனதை நீங்கள் அவனுடன் கண்டால், என்னைக் குறிப்பிட்டு என் நிலை எத்தகையது என்று விளக்கிக் கூறி இன்னமும் உன் தலைவியிடம் திரும்பிச் செல்லா திருக்கிறீரோ? இது தகுமோ? என்று சொல்லுங்கள்.

திறனாய்வு : தலைவன் பின் தொடர்ந்து சென்ற தன் மனதை மீண்டும் பெற இயலாத தலைவியின் ஆற்றாமையைத் திருமங்கையாழ்வார்.

"வாராய் மடநெஞ்சே வந்து மணி வண்ணன்
சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித்
தாரான் தருமென் றிரண்டத்தி லொன்றதனை
ஆரானு மொன்னாதார் கேளாமே சொன்னக்கால்
ஆராயு மேலும் பனிகேட் டதன்றெனிலும்
போராதொழியாதே போந்திடுநீ யென்றேற்குக்
காரார் கடல்வண்ணன் பின்போன நெஞ்சமும்
வாரதே யென்னை மறந்ததுதான்......"

என்று பாடுவர். சிறியதிருமடல், அடியனேன் உரைநூல் பக்கம்42-45 காண்க. கடல்வண்ணன்பின் போன நெஞ்சமும் வாராதே மறந்த நிலையில் நம்மாழ்வார் இப்பாசுரத்தில் அன்னங்களையும் வண்டானங்களையும் தூதாக அனுப்புகிறார். "அன்னம் செல்வீரும் வண்டானம் செல்வீரும்" என்றது பறந்து செல்லும் அன்னங்களே! வண்டானங்களே! என்பதாம், வண்டானம் என்பது ஒருவகை நாரையைக் குறிக்கும்.

"செவித்தலை வன்னியிற்சூடுண்ட வேயிசை
தீப்பதும் யான்
றவித்தலைவன் மயலுந்தமர் காப்புந்தமிழ்க்கலியன்

கலித்தலை வன்றிருவேங்கடத்தான் முன்கழறு
மின்பொன்
குவித்தலை வந்துந்து கோனே ரிவாழுங்
குருகினமே''

என்று திருவேங்கடத்தந்தாதியில் வருவதும் காண்க.78. ''செல்வீரும்'' என்றது பறந்துசெல்லும் என்பதாம்.

ஆனால் இங்கு தலைவன் வருவான் என்று ஏமாந்த தலைவி அவன் பின் சென்ற அவளது மனதை மீட்கத் தூது விடுவது இப்பாசுரத்தின் கரு ஆகும். எம்பெருமானிடம் மனதையிழந்த ஆன்மாக்கள் எம்பெருமானை அடைய முடியாத நிலையில் அவனிடம் சென்ற தன் மனதை மீட்க வேண்டுவது எம்பெருமானிடம் ஆழ்வாருக்கு உள்ள ஈடுபாட்டை உணர்த்துவதாகும். பிராட்டித்தன்மை பெற்ற நம்மாழ்வார், ''அன்னம் செல்வீரும் வண்டானம் செல்வீரும் தொழுது இரந்தேன்'' என்கிறார். இரத்தல் என்பது இறைஞ்சிவேண்டினேன் என்பதாகும். தொழுதல் என்பது உடலால் செய்யப் படுவது. காயிகம் இரத்தல் என்பது. சொல்லால் நிகழ்வது வாசிகம். காயிகமும் வாசிகமும் சேர்ந்த வேண்டுகோள் என்பதாம்.

''.........இளங்குயிலே! என்
தத்துவனைவரக் கூகிற்றியாகில்
தலையல்லால் கைம்மாறிலேனே''

என்றனர், நாச்சியாரும், திருமொழி 5.6. நாச்சியாரின் சொல்வளத்துடன் ''தொழுது இரந்தேன்'' என்பதை ஒப்பிட்டுக் காண்க. ''முன்னம் செல்வீர்கள் மறவேன்மினே'' என்றது அன்னங்களே' வண்டானங்களே! உங்களுள் முதன்முதலாகச் செல்பவர் எனது வேண்டுகோளை மறவாதறிவிப்பீர்களாக என்பதாம். ''செல்வீர்கள்'' என்றது செல்பவர்கள் என்பதாம்.

"மறவேன்மினோ" என்றது மறவாதொழிவீர்களாக, நீங்களாகிலும் மறவாதிருப்பீர்களாக என்பதாகும், "மறவேன்மினோ" என்றதால் இதற்குமுன் சென்றவர் சொல்ல மறந்தனர் என்பதாகிறது. அல்லது என் மனம் திரும்பி வரமறந்ததுபோல் நீங்களும் மறந்தொழிந்து அவனுடன் தங்காதீர் என்றபடியுமாம். "கண்ணன் வைகுந்தனோடு" என்றது கண்ணன் எனும் எளிமை யையும் வைகுந்தனெனும் பரத்துவ வாசத்தையும் ஒருங்கு கூறும் பகுதியாகும். கண்ணனானக என் முன் தோன்றி என் மனதைக் கவர்ந்து சென்ற அந்த வைகுந்த வாசன் என்பதாம். தனது பரத்துவத்தால் இன்றும் என்னைவந்து புணர்ந்திடாத அவனிடம் சென்று திரும்பாது அவனிடமே நிலைத்து நின்றுவிட்ட என்மனம் என்றபடி. "என்நெஞ்சினாரை" என்றது என் மனதை என்பதாம். தலைமகனிடத்துச் சென்ற அவள் மனமும் மணம் பெறுகிறதாதலின் "நெஞ்சினாரை" என்று உயர்த்திக் கூறினார் என்க, எம்பெருமானுள் ஒன்றாய் விட்ட மனமும் எம்பிரானோடு ஒன்றானதால் "நெஞ்சினார்" என்றனர் என்பதாகும். அவனுடன் ஒன்றாகி விட்ட தன் மனதைக் காண இயலாத நிலை யில் எம்பிரானைத் தன்னுள் கண்டு "நெஞ்சினார்" என்றனர் எனினுமாம். எம்பிரானுள் கலந்து விட்ட என் நெஞ்சைக் காண இயலாது எனினும் "கண்டால் என்னைச் சொல்லி அவரிடைநீர் இன்னம் செல்லீரோ" என்று கேட்கிறார். "கண்டால்" என்றது காண இயலாத என் மனதைக் கண்டால் என்பதாம். "என்னைச் சொல்லி" என்றது என் நிலையை எடுத்துச் சொல்லி, என்னைக் குறிப்பாகச் சொல்லி என்பதாம். அந்த நெஞ்சுக்கு உரியவள் நான் என்பதை எடுத்துக் கூறி, நான் தனியே தவிக்கும் நிலையை எடுத்துக்கூறி, என்பதாம். "அவரிடை நீர் இன்னம் செல்லீரோ"

என்றது ஆற்றாமையின் காரணமாக அவர் துயரை அறிந்து துயர்நீக்காமல், தூது சென்ற காரியத்தை முடிக்காமல் உம் பொருட்டு ஒரு தூதுவிடும்படியும் செய்து இன்னமும் தூது செல்லாதிருக்கிறீரோ அல்லது தூது சென்று திரும்பாதிருக்கிறீரோ என்பதாம். "இதுவோ தகவு" என்றது இது தகுமோ என்பதாம். இப்படிச் செய்யலாமா? என்றபடி. "இசைமின்களே" என்றது சொல்லுங்களே என்பதாம். "நெஞ்சினார்" என்றதால் இங்கு "இசைமின்களே" என்று பன்மையில் கூறியது காண்க.

அரும்பதவுரை : மறவேன்மினே - மறந்திடவேண்டாம். மறவேல் என்றதன் ஏவல் ஒருமை. மின் ஏவற் பன்மை விகுதி. வண்டானம் - நாரையின் ஒரு இனம். கொக்கின் வகை. ஓ - அலங்கார அசை. வைகுந்தம் - வைகுண்டம் என்பதன் சிதைவு. சொல்லீர் - எதிர்மறை. தகவு - தகு எனும் பகுதியினடியாகப் பிறந்த தொழிலாகு பெயர். தகுதியோ.

(தூது செல்லாத மேகங்களைக் குறித்துத்
தலைவி இரங்கல்)

இசைமின்கடுதென் றிசைத் தாலிசையில
மென்றலைமே
லசை மின்களென் றாலசையுங் கொலாமம்
பொன்மாமணிக
டிசைமின் மிளிருந்திருவேங்கடத்து
வன்றாட்சி மய
மிசைமின் மிளிரியபோவான் வழிகொண்ட
மேகங்களே.

விளக்கவுரை : அழகிய பொன்னும், சிறந்த இரத்தினமணிகளும் திசைகள் தோறும் மின்னி ஒளிரும்

திருவேங்கட மலையினது வலிமைமிக்க அகன்ற அடிவாரத்தையுடைய சிகரத்தின் மீது மின்னல் விளங்கச் செல்லும் பொருட்டு பயன்பட்ட மேகங்களே! எமக்காக நீங்கள் தூது செல்லுங்கள் என்று சொல்லி வேண்டிக் கொண்டால் அதற்கு உடனே உடன்பட்டுச் செல்வதைக் காணவில்லை. ஆனால் என் தலையின் மீது அசைந்து செல்லுங்கள் என்றால் அத்திருமலைக்குச் செல்லும் அடியார்கள் தலைமீது அசைந்து செல்லும்.

*திறனாய்வு :* சென்ற பாசுரத்தில் அன்னப் பறவையையும் நாரையையும் தூது விட்ட எம் தலைவி இப்பாசுரத்தில் மேகத்தைத் தூதுவிட்டு இரங்கிய செய்தி கூறப்படுகிறது.

''விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்!
தெண்ணீர் பாய்வேங்கடத்து என் திருமாலும்
போந்தானே?''

என்றனர் நாச்சியாரும். திருமொழி 8.1. இப்படிப்பத்துப் பாசுரங்களில், நாச்சியார் மேகவிடு தூதைச் சிறப்பிக்கிறார். இப்பாசுரங்கள் நம்மாழ்வார் மேகங்களைத் தூதாக அனுப்பத் தேடும் தலைமகளின் வார்த்தைகளாக அமைந்தவை. திருவேங்கட மலையின் உச்சியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைச் சென்றடையும் மேகங்களைத் தன் நிலைமையைக் கூறுமாறு தனக்குத் தூதாக அமைய மேகங்களை வேண்டும் பாசுரம். அவன் எழுந்தருளிய இடத்துக்குச் செல்லும் பாக்கியம் பெற்ற மேகங்களைத் தான் அவ்விடம் செல்ல இயலாமையால் அவன் இருக்குமிடம் செல்ல மாட்டாத என் தலையிலேனும் உங்கள் பாதங்களை வைத்துச் செல்லுங்களே! என வேண்டுவதாகும். அப்படி வேண்டியும் அவள் தலைமேல் தங்கிநிற்றற்கும் இசையாத மேகங்களைக் கண்டு இரங்கும்

முகத்தான் அமைந்ததும் இப்பாசுரத்தில் காண்கிறோம். இந்த மேகங்களை, ''அம்பொன் மாமணிகள் இசையின் மிளிரும் திருவேங்கடத்துவன் தாள் சிமயமிசை மின் மிளிரியபோவான் வழிக் கொண்ட மேகங்களே!'' என்று சிறப்பிக்கிறார். ''அம்பொன்'' என்றுது அழகிய பசும்பொன் என்பதாம். ''மாமணிகள்'' என்றது சிறந்த பெரிய மாணிக்கமணிகள் என்பதாம். ''திசை மிளிரும்'' என்றது எத்திசையும் ஒளிபரப்பும் என்பதாம்.

''திருவேங்கடத்தவன் தாள் சிமயம் மிசை''என்றது திருவேங்கட மலையினது வலிமை மிக்க அகன்ற அடிவாரத்தையுடைய சிகரத்தின் மேல் என்பதாம். 'தாள்'என்றது இங்கு மலையின் அடிவாரத்தை. 'சிமயம்' என்றது சீகரத்தை. ''சிமயம் மிசை'' என்றது சிகரத்தின் சிறப்பும் கூறுவதாம்.

> ''பொன்னு மணியும் பொலிந்தோங்கிப் பார்மகட்கு
> மின்னு மணிமுடியாம் வேங்கடமே...''

என்பது திருவேங்கட மாலை 1. பார்மகட்கு மின்னும் மணிமுடியாய் விளங்குவது அச்சிகரம் என்பதுணர்க.

''மின் மிளிரிய போவான்'' என்றது மின்னல்கள் ஒளிக்க மிதந்தேகும் என்பதாம். மிளிருதல் என்பது ஒளி வீசுதல். ஆதலின், ''மின் மிளிரிய போவான்'' என்றனர். ''போவான்'' என்றது போகும் தன்மையுள்ள என்பதாம். ''மேகங்களே!'' என்று மேகக்கூட்டங்களை விளிப்பது காண்க.

> ''ஓடும் மேகங்களே ஒருசொல் கேளீரோ''

என்று திரைக் கூத்து ஒன்றில் வந்த பாடலும் நினைவில் ஓடுகிறது. ''தூது இசை மின்கள் என்று இசைத்தால்'' என்றது எமக்காக விரும்பித் தூது செல்லுங்கள் என்று சொன்னாள் என்பதாம்.

"இசைமின்கள்" என்றது இசைந்து, விரும்பி என்பதாம். ஏவல் பன்மை, "இசைத்தால்" என்றது சொன்னால் என்பதாம். "இசையிலம்" என்றது உடன்படவில்லை யென்பதாம். விரும்பியோ விரும்பாமலோ செல்லவில்லை என்பது இதன் பொருள். மேகங்கள் பிரதிபலன் எதிர்பாராமல் மழைபொழியு மாதலின் அன்னத்தையும் வண்டானங்களைத் தூது செல்ல வேண்டி நின்ற தலைவி இப்பொழுது தூது செல்ல மேகங்களை நாடுகிறார்.

மேகங்கள் தூது சொல்ல "இசையிலம்" என்பது கண்ட தலைவி "என் தலைமேல் அசை மின்கள்" என்றதால் எம்பெருமான் திருச்சிகரத்தையடையும் மேகங்காள்! எம்தலையின் மேல் உங்கள் பாதத்தைப் பதித்துச் செல்லுங்கள் என்று வேண்டினதாகக் கொள்ளல் வேண்டும் அப்படியாகிலும் எம்பெருமன்· மாட்டு எழுந்த ஆற்றாமை சற்றுத் தணியும் என்றபடி.

"எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும்
செங்கால மடநாராய்! திருமூழிக்களத்துறையும்
கொங்கார்பூந்து ழாய்முடி எங்குடக் கூத்தர்க்குஎன்
தூதாய்
நுங்கால்கள் என்தலைமேல் கெழுமீரோ
நுமரோடே"

என்றதும் நம்மாழ்வாரே. திருவாய்மொழி 9.7.1. எம்பெருமான் தாள்சேர அன்னங்களையும் வண்டானங்களையும் மேகத்தை தூதுவிட்டும் அவை உடன்படாமையால், இவர் தமது தலையின் மேல் அடியை வைத்தலும் பெருமை சேர்ப்பதே என்று மேகங்களை வேண்டுதல் இதன் உட்பொருளாம்· திருமலைக்குப் போகிறவர்கள் தலைமேல் வைத்துப் போற்றப் படுபவர்கள் என்பதுவுமாம்.

"வாழ்ந்த வருக்கங்களைந்தான் வடமலை
மாலடிக்கீழ்
வீழ்ந்த வருக்கன்பருக் கொப்பரோ வண்டர்
மெய்த்தவரே"

என்று திருவேங்கடத்தந்தாதி 69. கூறுவதும் காண்க. தேவர்களும், முனிவர்களும் வடமலை மால் திருவடிக் கீழ் வீழ்ந்த அடியார்க்கு ஒப்பாவரோ? என்பது காண்க. திருவேங்கட திருமலை சென்று வழிபடுவோர் தேவ ரினும் மேலானவர் என்பது பொருள்.

அரும்பதவுரை : இசைமின் - இசைந்து, விரும்பி இசைத்தல் - சொல்லுதல். இசையிலம் - உடன்பட வில்லை. தலைமேலசைமின் - தலைமேல் வந்து பாதம் வைத்துச் செல்லுங்கள். அசைமின் - பொருந்தி யிருத்தல். அசையும் கொல் ஆம் - சொல்லக் கூடுமோ. அம்பொன் - பசும்பொன். மாமணி - சிறந்த மாணிக்க மணி. திசை - திக்கு எங்கும், மின் மிளிரும் - மின்னல் போல் ஒளிரும். வன்தாள் - சிறந்த அடிவாரம். மலை யடிவாரம். சிமயம் - சிகரம்.

(தலைவி போலி கண்டு உரைத்தல்)

மேகங்களோ வுரையீர் திருமாறிருமேனி யொக்கும்
யோகங்களுங்களுக் கெவ்வாறு பெற்றீருயிரளிப்பான்
மாகங்களெல்லாந் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்த
மாகங்கணோவ வருத்துந்தவ மாமருள் பெற்றதே 32

விளக்கவுரை : மேகங்களே! திருமாலின் திரு மேனியை ஒத்த நிறத்தைப் பெற்றதன் உபாயத்தைச் சொல்லுங்கள் உங்களுக்குக் கிடைக்கும்படி எவ்வாறு பெற்றீர்கள்? உயிர்களைப் பாதுகாக்கும் பொருட்டு உலகின் கடல் முதலான நீர்நிலைகளிலிருக்கும் நல்ல நீரைச் சுமந்து அகன்று வானமெங்கும் பரவி அலைந்து

திரிந்து உங்கள் மேக உடம்பு நோகும்படி வருத்திச் செய்த தவப்பயன் அந்தப் பெருமானது நிறத்தைப் பெறுதற்கான அருளைத் தந்தார் போலும்.

திறனாய்வு : மேகங்களைப் பற்றியெழுந்த ஐயம் இப்பாசுரத்திலும் தொடர்கிறது. "அம் பொன் மாமணி கள் திசை மின் மிளிரும் வன்தாள் சிமயம் மிசை மின் மிளிரிய போலான் மேகங்கள் தூது இசை மின்கள்" "என்று இசைத்தால் இசையிலம். என்தலைமேல் அசை மின்கள் என்றாலும் அசையும் கொல் ஆம்" இதற்கு என்ன காரணம் என்பதை சற்று சிந்தித்தவ ராய், "திருமால் திருமேனியொக்கும் யோகங்களை" உடையதால் செருக்குக்கொண்டு இம்மேகங்கள் என் வேண்டுகோளை அசட்டை செய்தன என்பதாக ஓர் எண்ணம் தலைவியின் மனத்தில் எழுகிறது. திருமால் திருமேனி யொக்கும் யோகங்கள் இம் மேகங்கள் எவ்வாறு பெற்றன என்பதற்கு இங்கு விடை காண முயல்கிறார் தலைவி. "திருமால் திருமேனி ஒக்கும் யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர்?" என்பது வினா.

"நீலமுண்ட மின்னன்ன மேனிப் பெருமானுலகில்" என்றனர் முன்னமே. திருவிருத்தம் 29. உலகம் அனைத்தும் எம்பெருமான் தோற்றம்.

"உலகம் யாவையும் தாம் உளவாக்கிய" எம்பெரு மானின் தோற்றம் சிறப்பாக இந்த மேகங்களுக்கு மட்டும் எப்படி யோகம் அடித்தது? என்று வியக்கிறார். "யோகங்கள்" என்ற சொல்லுக்கு அதிர்ஷ்டம், பேறு என்ற பொருளில் வருபவை. இந்த மேகங்கள் என்ன பேறு பெற்றன என்பதைக் காண்போம். "உயிரளிப் பான் நன்னீர்கள் சுமந்து மாகங்கள் எல்லாம் திரிந்து நும்தம் ஆகங்கள் நோவ வருத்தும் தவம் மா அருள் பெற்றதே மேகங்களோ!" அதாவது மேகங்கள்

என்பவை பெருந்தவத்தால் பெற்ற பேரருளினால், என்பதாகக் கூறுகிறார். "உயிர் அளிப்பான் நல்நீர்கள் சுமந்து" திரிவது மேகங்களின் இயல்பு.

"விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது"

என்பது வள்ளுவம் 16. உலகுக்கு உயிர் அளிப்பதே மேகங்கள் சுமந்து வரும் நல்நீர்கள் என்பதனை, எவ்வளவு சிறப்பாக "உயிர் அளிப்பான் நல்நீர்கள் சுமந்து" என்கிறார். மேகம் பொழியும் நீர் தூய்மை யானது. ஆதலின், "நல்நீர்" என்றனர். "மாகங்கள் எல்லாம் திரிந்து" என்றது திக்குகள் எங்கும் அலைந்து திரிந்து ஆங்காங்கு மழை பொழிந்து உயிர்காக்கும் என்றபடி.

"நும் தம் ஆகங்கள் நோவ" என்றதால் மேகங் களுக்கும் உடம்பு உண்டு என்பதாம். ஆகங்கள் என்பது உடம்பு. காற்றால் அலைகழிக்கப்பட்டு உடல் நோக "வருந்தும் தவம்" என்றது உடலை வாட்டும் தவமியற்றுதல். ஆகங்கள் நோவ அலைந்த மேகங்கள் மலை உச்சியில் தங்கி ஒற்றைக் காலில் நின்று தவம் இயற்றுவதால் கண்ணனின் மிகப் பெரிய அருளைப் பெற்றனவைகளாய் அவன் திருமேனி அழகு கொண்ட மேகங்கள் எனப் பெயர் பெற்றனவோ என்பதாகிறது.

"வருத்தம் தவம் இயற்றி மிகப் பெரிய அருளைப் பெற்றதனால் பேரருளைப் "பெற்றதே மேகங்களோ?' என்றனர் என்பதாம். "உரையீர்" என்றது சொல்லுங் கள் என்றபடி. உரையீர் என்று மேகத்தை நோக் கியே கூறியதாகக் கொள்ளலாம்.

"கரும்பெருமேகங்கள் காணில் கண்ணனென்றேறப்
பறக்கும்"

என்றும்;

நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தா
னென்று ஆலும்"

என்றும் திருவாய் மொழியில் இவ்வாழ்வார் கூறி யிருத்தல் காண்க. 4ம் பத்து 4ம் திருமொழி 9, 4. தவம் மேற்கொண்டு உருப்பெற்றதே மேகங்கள் ஆனதால் தானும் அதே உபாயத்தை மேற்கொண்டு எம்பிரானை அடையும் வழியை ஆழ்வார் கருதினது புலனாம். மேகங்கள் எம்பெருமான் திருமேனியழகைத் தம் மேனி யில் பூண்டிட உடல் வருந்தித் தவம் இயற்றின என்ப தாம். உலகெங்கும் திரிந்து மெய்வருத்தம் பாராது கைமாறு கருதாது உலக உயர்வு காக்கும் தொழில் நடாத்தும் மேகங்களுக்கு எம்பெருமான் தன் திருமேனி யழகையே பரிசாக ஈந்தான் என்பதுஆமாம். எம்பெரு மான் மேனியழகை மேகங்களில் கண்டதால் தலைவி ஆற்றாது இகழ்ந்துரைத்தாள் என்பது பொருள்.

அரும்பதவுரை : மேகங்களோ - மேகங்கள் தாமோ! இவை தான் மேகங்கள் எனப்படுபவைகளோ? ஓகாரம் தேற்றம். திருமால் - திருவை விரும்பிப்புணர்ந்தவன். திருவிடத்து மால் கொண்டவன். மால் - மிகுந்த ஆசை. யோகங்கள் - செய்த தவப்பயன். மாகங்கள் - திசைகள். நும் தம் - உங்களுடைய. ஆகங்கள் - உடல். தவம் மா அருள்பெற்றதே - தவம் இயற்றிய தால் பெற்றபேறு. கைமாறு கருதாது உதவும் இயல் புடைய மேகங்களுக்கு எம்பெருமான் அருளியது. உரையீர் - கூறமாட்டீர்களா சொல்லுங்கள்.

(தலைவியின் ஆற்றாமை கண்டதோழி தலைவனை வெறுத்துரைத்தல்)

அருளார் திருச்சக்கரத்தால கல்விசும்புந்நிலனு
மிருளார் வினைகெடச் செங்கோனடாவுதிரீங்கொர் பெண்பா
பொருளோ வெனுமிகழ்வோவிவற்றின் புறத்தா ளென்றெண்ணே
தெருளோமரவணையீரிவள் மாமைசிதைக் கின்றதே. 3

விளக்கவுரை : பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேல் பள்ளி கொண்டவரே! அருள் நிறைந்த திருவாழியைக் கொண்டு பரந்த விண்ணுலகத்திலும் இம்மண்ணுலகிலும் இருள் போன்ற கொடிய செயல்கள் நிகழாதபடிச் செங்கோல் செலுத்துகிறீர். அப்படி யிருக்க, இவளுடைய உடல் அழகை அழிப்பது, இந்த உலகில் ஒரு பெண்ணைக் காத்தல் இகழ்வான செயலோ? அல்லது உமது பாதுகாப்புக்கு உட்படாத விசும்புக்கும்; நிலத்துக்கும், வெளியில் இருப்பவள் என்ற எண்ணமோ? அறியவில்லை.

திறனாய்வு : தலைவியின் ஆற்றாமை நிலைகண்டும் ஓடோடி வந்து புணராத தலைவன் எம்பெரு மானைத் தலைவியின் தோழி வெறுத்துரைத்தல் ஈங்கு கூறப்படுகிறது. ஆழ்வாருடைய ஆற்றாமையைக் கண்ட அன்பர்கள் இகழ்ந்துரைத்ததாகக் கொள்வது இதன் உட்பொருள். எம்பெருமான் அரவு அணையில் பள்ளி கொண்டு விண் உலகையும் இந்த மண் உலகையும் அரசோச்சி யாது பயன்? என்று தலைவியின் தோழி ஒரு வினா எழுப்புகிறார்.

"அரவு அணையீர்" என்றது பாம்பின்மேல் பள்ளி கொண்ட எம் தலைவா! எம்பிரானே! என்பதாம்.

"வெள்ளை வெள்ளத்தின்மேல் ஒரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன்மேல்
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்"

என்று சிறப்பிப்பர் பெரியாழ்வார். திருமொழி 5-1.7. எம்பெருமான் ஆதிசேடன் மேல் பள்ளி கொண்ட மார்க்கம்தான் என்னே என்கிறார். தலைவியின் ஆற்றாமை கண்ட தோழி. "அருள் ஆர் திருசக்கரத் தால் அகல் விசும்பும் நிலனும் இருள் ஆர் வினை கெட செங்கோல் நடாவுதிர்" யாது பயன் என்பதாம். "சக்கரம்" என்றது எம்பெருமான் கையில் எழுந் தருளிய திருச்சக்கரம். அது அருள் புரிவதால் "அருள் ஆர் திருச்சக்கரத்தால்", என்றனர். "அகல் விசும்பு" என்றது வானும் விண்ணுலகுமாம். "நிலனும்" என்றது மண்ணுலகு. மானிடர் வாழும் இவ்வுலகு. விண்ணும் மண்ணும் ஆளும் இறைவன். "இருள் ஆர் வினைகெட செங்கோல் நடாவுதிர்" என்கிறார். "இருள் ஆர் வினை" என்றது இருள் மூடிக்கொண்டது போன்று எங்கும் தீவினைகளே பரவியுள்ள நிலை. பரவிக்கிடக்கும் தீவினைகள் என்றபடி. இருள் ஆர் வினைகள் கெட, "செங்கோல் நடாவுதிர்" என்றது செங்கோல் செலுத்துகிறீர் என்பதாம். "நடாவுதிர்" என்றது நடாத்துகிறீர் என்பதாம். விண்ணுலகிலும் மண்ணுலகிலும் "இருள் ஆர் வினை கெடச் செங்கோல் நடாவுதிர்" என்றாலும் ஈங்கொரு பெண் உன்னை நினைந்து நினைந்து சிதைந்து போதல் காண்கிலீர்; இவள் ஒருபெண் என்றதால் இப்படி ஒரு பாகுபாடோ? என்று அறியாத நிலையில், "ஈங்கு ஓர் பெண்பால் பொருளோ எனும் இகழ்வோ?" என்கிறார். பெண்

என்றால் இகழ்ச்சிப் பொருளா? என்று அன்றே கேட்பது நம்மாழ்வார். 'பெண் என்ற இகழ்ச்சியினால் உந்தன் செங்கோல்ஆட்சி இங்கு நீதியை நிலை நாட்டத்தயங்குகிறது என்றபடி,

"கண்ணன் மண்ணும் விண்ணும் அளிக்கும்.
செங்கோல் வளைவு விளைவிக்கும்......"

என்று 25ம் பாசுரத்தில் கூறியிருத்தலை நினைவுகொள்க. பெண் தானே என்ற எண்ணத்தாலோ அல்லது இவள் நம் ஆட்சியின் எல்லைக்கு அப்பாற்பட்டவள் என்ற எண்ணத்தாலோ என்பதனை "இவற்றின் புறத் தாள் என்ற எண்ணோ? தெருளோம்" என்கிறார். "இவற்றின்" என்றது விண்ணுலகும் மண்ணுலகுமாகிய இவற்றின் புறத்தாள் என்பதாம். "புறத்தாள்" என்றது இவற்றிற்குப் புறத்தே உள்ளவள். தன் ஆட்சிக்குப் புறம்பானவள் என்றபடி. "தெருளோம்" என்றது தெரியவில்லை, யாமறியோம், என்பதாம். எம்பெருமான் இப்படி அருள்பாலிக்காதிருப்பதால் "இவள் மாமை சிதைகின்றதே" என வருந்துகிறாள் தோழி "மாமை" என்பது மேனி அழகு. "சிதைகின்றதே"; என்பது அழிந்து போகின்றதே என்று இரங்குகிறார். வருந்தித் தலைவனை வெறுத்துக் கூறுகிறாள் எனக் காண்க.

அரும்பதவுரை : அருள் ஆர் - அருள் மிகு. மிகுந்த அருள். சக்கரம் - சக்ராயுதம். திருவாழி. அகல் விசும்பு - அகன்றவான். இருள் ஆர் - இருண்ட. நடாவுதிர் - நடாத்துகிறீர். இவற்றின் - விண், மண் இவற்றின். புறத்தாள் - புறத்தே உள்ளவள். தெருளோம் - தெரிந்திலோம். அரவு அணை - பாம்பு மெத்தை. மாமை - அழகு. உடல். சிதைதல் - அழிதல், சிதைகின்றதே - இதில் ஏகாரம் தேற்றம்.

(கூடலிழைத்து வருந்துந் தலைவியின்
நிலையைப் பாங்கிதலைவற்கு உணர்த்தல்)

சிதைக்கின்றதாழி யென்றாழியைச் சீறித்தன்
சீறடியா
லுதைக்கின்ற நாயகந்தன்னொடுமாலேயுனது
தண்டார்
ததைக் கின்ற தண்ணந்துழாயணிவானதுவே
மனமாய்ப்
பதைக் கின்ற மாதின்றிறத்தறியேன்
செயற்பாலதுவே 34

விளக்கவுரை : எம்பெருமானே! உன்னைக் கூடுவனோ கூடமாட்டேனோ என்று இழைக்கப்பட்ட ஆழிவட்டம் கூடாமல் சிதைந்து போகிறதே என்ற காரணத்தால் அக்கூடல் வட்டத்தைச் சீறித் தனது சிறு கால்களால் உதைக்கின்ற பெருமையுடன் உனது வாடாத குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலையினைச் சூடும் பொருட்டு அதின்மேலேயே கண்ணும் கருத்துமாய் வருந்திக்கொண்டிருக்கும் இந்தப் பெண்ணுக்குச் செய்யத்தக்க பரிகாரத்தை நான் அறியேன்.

திறனாய்வு : பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருவானா என்பதையறியத் தலைவி மணலில் கூடலிழைத்துக் காண்பது மரபு. இது ஒருவகை ஆருடசோதிடம். கூடலிழைத்தல் என்பது இடத்துக்கு இடம் மாறுபடும். மணல், மண்தரை இவற்றில் இவ்வாருடம் செய்து காண்பர். தரையில் ஒரு வட்டமான கோடு வரைந்து அந்த வட்டத்திற்குள் சிறு வட்டங்கள் அல்லது சுழிகளாகக்கீறி அவற்றின் எண்ணிக்கை இரட்டையாகக் கணக்கிட்டால் பிரிந்த தலைவர் வந்து கூடுவர். சில இடங்களில் நீண்ட கோடிட்டு இருபக்க

மும் கோடு வரைந்து அந்த இருகோடுகளுக்கிடையில் கண்ணை மூடிக்கொண்டு கோடுகள் இழைப்பர். இவற்றின் கூட்டு இரட்டையாகவரின் பிரிந்தவர் கூடுவர். மற்றுமொருமுறை; கண்ணை மூடிக்கொண்டு ஒரு வட்டமாக சுழியிழைப்பர். ஆரம்பித்த இடத்திலேயே இழைக்கப்பட்ட கோடு ஒன்றாகச் சேர்ந்தால் பிரிந்த தலைவன் வந்து சேருவான் என்பதாகும். இந்த ஒத்தை இரட்டை பார்ப்பதில் சில இடங்களில் ஒத்தையாக வந்தால் நன்மையாகவும் இரட்டையாக வந்தால் கூடாது என்றும் சொல்வர். எப்படியிருப்பினும் கூடலிழைத்தல் என்பது வேதனையின் வெளிப்பாடு ஆற்றாமையால் எழும் செயல். அது தலைவியின் மனக்கொந்தளிப்பை உணர்த்துவது. நாச்சியார் கூடலிழைத்தல் என்றதலைப்பில் பதினோறு பாசுரங்களைப் படைத்து பயில்வோர் மனதைப் பரவசப் படுத்தியிருக்கிறார்.

> ''தெள்ளியார் பலர் கைதொழும்தேவனார்
> வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்
> பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிட
> கொள்ளுமாகில் நீ கூடிடுகூடலே''

என்பது முதற்பாசுரம். நம்மாழ்வார் இப்பாசுரத்தில் ''ஆழி சிதைக்கின்றது'' என்கிறார். கூடலிழைத்தலுக்கு ''ஆழி'' என்பது மறுபெயர் எனலாம். 'சிதைக்கின்றது' என்றதனால் கூடலிழைத்துப் பார்த்து அது கூடவில்லை யென்பதாகிறது. நாச்சியார், ''சிற்றில் வந்து சிதையேலே'' என்று பத்துப் பாசுரங்களில் சிற்றில் சிதைக்க வேண்டாமெனத் தோழியர் வேண்டியதாகப் பாடியருளினார். ''சிதைக்கின்றது'' என்பது பிறர் வந்து சிதைப்பதாகக் கொள்ளாது தானே சிதைந்துப் போவதாகவே கொள்ள வேண்டும். ''கூடிடு கூடலே''

என வேண்டினும் கூடாமையினால் எழுந்த ஆற்றாமை யில் "சிதைக்கின்றது" என்ற சொல்லைப் பயன்படுத்து கிறார். "மாலே ஆழி சிதைக்கின்றது" என்றது கூடிடு என்று வேண்டினும் கூடாமையால் தலைவன் எழுந் தருளி என்னைப் புணர்ந்து இன்புறுவான் என்கின்ற எண்ணத்தைச் சிதைக்கின்றது என்பதாம்; கூடல் இழைத்துப் பார்த்துப் பார்த்து அது கூடாமை கண்டு ஆழிமேல் எழுந்த சீற்றத்தினால், "சிதைக்கின்றது என்று ஆழியைச் சீறித் தன் சிறு அடியால் உதைக் கின்ற" என்கிறார். தோல்வியைத் தாங்க மாட்டாமல் கையால் இழைத்த ஆழியை கால்களால் சீறிச் சிதைத்து என்றபடி. கூடாததால் எழுந்த ஏமாற்றம் ஆழியைச் சீற வைக்கிறது, கைகள் ஓய்ந்து போகக் கால்கள் விரைந்து செயல்படுகிறது. கூடல் இழைக்கப் பட்ட மணல் அல்லது மண் இவள் சீற்றத்துக்கு இலக்காகிறது. இழைக்கப்பட்ட பகுதி அழிக்கப்படுவ துடன் உதைக்கப்படுகிறது. இது சீற்றத்தின் எல்லை. இதற்குமேல் அதை ஒன்றும் செய்யமுடியாது என்பதை உணர்த்தவே, ஒரு "சிறு அடியால் உதைக்கின்ற" என்றனர். இதைச் "சீர்மிகு அடிகள்" எனவும் பொருள் கொள்ளலாம். இவ்வாறு உதைக்கும் சிறப்பை "நாயகம் தன்னொடு" என்று நயம்பட உரைக்கிறார். "நாயகம்" என்றது பெருமைமிக்க இவள் செயல் என்பதாம். மேன்மைத் தன்மையுடைய எம்பெரு மானே உனக்கு இது தகுமோ? என்றபடியுமாம். உம்பால் எழுந்த வேட்கைக்கு ஆற்றாதவளாய் ஆழி சிதைத்து மனம் சிதறும். இம்மங்கையின் ஆற்றாமையை நீக்கலாகாத என்றபடியுமாம். "உனது தண்தார் ததைக்கின்ற தண்அம் துழாய் அணிவான் அதுவே மனம் பதைக்கின்ற ஆய் மாதின் திறத்த செயற் பாலதுவே" சிதைக்கின்றது என; ஆழி உதைக்கின்ற இவள் செயற்பாலது இதுவோ அல்லது வேறு எதுவோ

அறியேன் என்பதாகும். "உனது தண்தார் ததைக்கின்ற தண் அம் துழாய் அணிவான்" என்றது உனது குளிர்ந்த அழகிய துழாய் மாலையைச் சூடுவதன் பொருட்டு அதாவது சூடிக்கொள்வதே என்றபடி. "அதுவே மனம் பதைக்கின்ற ஆய்மாதின் திறத்த செயற்பாலது இதுவே" என்றது மனம் பதை பதைப்புக்கு அழகிய இம்மங்கையின் அசைக்க முடியாத செயலாயமைந்தது துழாய் சூடுவதே என்ப தாகும். "அறியேன்" என்றதால் இதுவோ அல்லது வேறு எதுவோ அறியேன் என்றபடி. "செயற்பால துவே" என்றதன் ஏகாரத்தை அசையெனத் தள்ளி இவளுக்கு இந்நிலையில் செய்யத்தக்க பரிகாரம் யாது என அறியேன் எனப் பொருள் காணினும் அமையும்.

அரும்பதவுரை: சிதைக்கின்றது - அழிக்கின்றது. ஆழி - கூடல் வட்டம். சீறடி - சிறு அடி. சிறுமையெனும் பண்புப் பெயர் ஈறுகெட்டு ஆதி நீண்டது. நாயகம் - பெருமை. நாயகன் - பெருமை மிக்கவன். மால் - திருமால். பெருமைமிக்கவன். தார் - மாலை. தண்தார் - குளிர்ந்த மாலை, வாடாமாலை. ததைக்கின்ற - தகிக்கின்ற. ஆய்மாது - அழகிய பெண். திறத்த - வலிமைமிக்க, அசைக்கமுடியாத எண்ணம். செயற்பாலதுவே - செய்யத்தக்க பரிகாரம். செய்யத் தக்கது இதுவே் என்றபடியுமாம்.

(மாலைக்கு ஆற்றாமையின்மேல் வாடகைக்குத்
தலை மகள் இரங்கல்)

பால்வாய்ப் பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு
பகலிழந்த
மேல்பாற்றிசைப்பெண் புலம்புறு மாலை யுலகளந்த

மால்பாற்றுழாய்க்கு மனமுடை யார்க்கு நல்கிற்றை
யெல்லாஞ்

சோல்வான் புகுந்திது வோர் பனிவாடை
துழாகின்றதே. 35

விளக்கவுரை : பால்போன்ற வெண்மையான ஒளி வீசும் இளம் பிறை நிலவு எனும் பால் மணம் மாறாப் பாலகனைத் தனது இடுப்பின் பக்கம் வைத்துக் கொண்டு, கதிரவனாகிய தன் கணவனை இழந்த மேற்திசைப் பெண் வருந்தியழும் மாலைப் பொழுதானது உலகளந்த பெருமாலிடமிருந்த திருத்துழாய்க்கு ஆசைப்பட்ட மனதையுடைய தேவியர்க்கு அருள் செய்த உதவியை முழுவதும் கவர்ந்து கொள்ளும் பொருட்டு புகுந்த இந்தக் குளிர் காற்று என்மேல் துழாவுகின்றது.

திறனாய்வு : நாயகனான அந்த நாராயணனைக் கூடுதற்குக் கூடலிழைத்து அது கூடாதது கண்டு சிதைந்த மனத்தினளாய் மாலை கண்டு மருண்ட நிலையில் அமைந்த பாசுரம். மாலையுடன் மதியும் எழுந்தது. எழுந்த மதியோ மூன்றாம்பிறை. அந்த மூன்றாம், "பிறை பால் வாய்ப்பிள்ளை ஒக்கது" என்கிறார். தாயின் முலையில் வாயைக் கவ்விக் கொண்டுள்ள இளம் பிள்ளை போன்ற சந்திரன் என்கிறார். இது சந்திரனின் இளமைத் தோற்றத்தையே சிறப்பிப்பதாகக் கொள்ள வேண்டும். பிறை என்றது மூன்றாம் பிறைச் சந்திரன். "பால்வாய்ப் பிள்ளை ஒக்க" என்றது பால் மணம் மாறாப் பச்சிளம் குழந்தை போன்று என்பதாம். தாயின் முலைப்பாலும் வாயுமாக உள்ள குழந்தை. தாய் முலைப்பால்ப் பிள்ளையும் மூன்றாம் பிறையும் வளர்ச்சிக்கு உதாரணம். "பிள்ளை ஒக்க" என்றது பிள்ளையைப் போன்று என்பதாம். "கலை கொண்டு" என்றது

சந்திரகலைகள் பதினாறும் கொண்டு பிறைச்சந்திரனா யினும் அதன் ஒளி அதன் பதினாறு கலைகளையும் கொண்டது என்பதாம். சந்திரன் ஒளி பதினாறு வகை ஒளி அமைப்பால் ஆனது ஆதலின் "கலை மதியே" என்று சிறப்பிப்பர்.

"கன்று குணிலாக் கனியுகுந்தோன் கடலி
 னமுதங் கடைந்தெடுப்பக்
குறை மிடலுங் கலை யனைத்துந்
 தகர்ந்துள் ளாவி குறைந்திலையே
துன்றுகதிர்வெண் கலைமதியே......"

என்றனர் அதிவீரராம பாண்டியனார், நைடதம் அடியனேன் உரைநூல் பக்கம் 278-279 காண்க. இச் செய்யுளில் கலையனைத்தும் என்றது சந்திரனின் பதினாறு கலைகளை. "கலைக் கொண்டு" என்றது பதினாறு கலைகளையும் கொண்டு எழுந்தது என்றபடி. "பிறை பால்வாய்ப் பிள்ளை ஒக்க" என்றதைக் "கலை கொண்டு" எனக் காண்க. பிறைச் சந்திரனாயினும் அதன் ஒளி பதினாறு கலைகளையும் கொண்டது என்பதாகிறது. "கலைக் கொண்டு" என்றது கலைக்கொண்டு ஒளி வீசியது என்றபடி. அவ்வாறு எழும்பொழுது "பகல் இழந்த மேல் பால் திசைப்பெண் புலம்ப உறும் மாலை" என்கின்றனர். "பகல்" இங்கு கதிரவனைக் குறிக்கும். "பகல் இழந்த" என்றது கதிரவனாகிய தன் கணவனை இழந்த என்பதாம். "மேல்பால் திசைப்பெண்" என்றது மேற்குத் திசையாகிய பெண் என்பதாம். உதாரணமாக அதிவீரராம பாண்டியனார்.

"செய்ய வெங்கதி ரிறத்தலு மவனுழைச் சிறந்த
 மொய்கொள் பேரொளி வனிதைக்கு மூட்டு
 செந்தழலின்..."

என்பர். நைடதம், அடியனேன் உரைநூல் பக்கம் 254, 255 உணர்த்துவது காணலாம். கதிரவனை மேற்பாற்றிசைப் பெண்ணின் மணாளனாகக் காட்டியிருத்தல் காண்க. "புலம்பு உறும் மாலை" என்றது வருந்தி, அழுது புலம்பும் மாலைப் பொழுது என்பதாம். "உலகு அளந்த மால் பால்" என்றது உலகளந்த பெருமானிடத்து என்பதாம். திருமாலிடத்துள்ள, "துழாய்க்கு மனம் உடையார்க்கு நல்கிற்றையெல்லாம்" என்றது, திருத்துழாயில் மனதைப் பறிகொடுத்த தலைவியருக்கு அருளியதனைத்தையும் என்பதாம். மயக்கும் மாலைப் பொழுது ஏனோ தன் கணவனாகிய கதிரவன் மறைந்தான் என்பதால் அழுது புலம்பி திருத்துழாய்க்கு ஆசைப்பட்ட தலைவியர் மனதை வாட்டாது அருள் செய்து உதவியதனைத்தையும் எடுத்துக் கொண்டதுபோன்று "சோல்வான் இது ஓர் பனி வாடை துழாவுகின்றதே" என்கிறார். "சோல்வான்" என்றது சோரல் என்றதன் சிதைவு. தளர்தல், கெடுதல், வஞ்சனை செய்தல் என்றபடியாம். "இது ஓர் பனி வாடை" என்து இது ஓர் பனி வாடை என்று அதன் தன்மையைக் கூறியிருத்தல் காண்க. "துழாகின்றதே" என்றது உள்ளும் புறமும் பாய்ந்து துழாவுகின்றதே" என்பதாம். இதன் ஈற்றேகாரம் தேற்றம். அஞ்சினமை தோன்றுதலால் இரக்கம் துழாவுகின்றது என்பது உயிருள்ள இடத்தையெல்லாம் நாடிச் சென்று உயிர் இல்லையென உறுதிப்பாட்டுடையதாக வெளியேறியது என்பதாம்.

அரும்பதவுரை : பால்வாய் - பால் மணம் மாறாத. ஒக்க - ஒத்த. கலை - சந்திரனின் பதினாறு கலைகள் கொண்ட ஒளி. பகல் - கதிரவன். புலம்பு உறும் - அழுது புலம்பியழும். மால்பால் - திருமாலிடத்து. நல்கிற்றை - நல்கிய, கொடுத்து அருளிய, சோல்வான் - சோர்வான் . சோரல், சோர்வு, தளர்தல், கெடுதல்,

வஞ்சனையால் செய்தல். துழாவுதல் - நுழைந்து துழாவிப் பார்த்தல். ஒக்கலை என்ற சொல்லுக்கு இடுப்பு, இடை என்ற பொருள் கொள்வர். "பிறைப் பிள்ளை ஒக்கலை" கொண்டு என்றதைப் பால் மணம் மாறாப் பிள்ளையாகிய இளம் குழந்தையை இடுப்பிலே கொண்டு எனவும் பொருள் கொள்வர். சொல்வான் எச்சம் சோர்வான் என்பது பாடம். துழாகின்றது, துழாவுகின்றது என்பதன் விகாரம்.

(தோழி தலைவன் கொடுமை கூறல்)

துழா நெடுஞ்சூழி ருளென்று தந்தண்டாரது பெயரா
வெழாநெடுவூ ழி யெழிந்த விக்காலத்து மீங்கிவளோ
வழாநெடுந் துன்பத்த ளென்றி ரங்காரம்மனோ
விலங்கைக்
குழா நெடுமாட மிடித்த பிரானார் கொடுமைகளே. 36

விளக்கவுரை : கண்ணுக்குப் புலப்படாத கைகளால் தடவித் தேடும்படியான நீண்ட இருட்பொழுதென்று முன்பு இது போன்று தோன்றிடாத நீண்ட கல்பம் தோன்றியது எனும் இந்த நேரத்திலும், இவ்விடத்துத் தனிமை தாங்க மாட்டாதிருக்கும் இவளோ தமது குளிர்ந்த திருத்துழாய் மாலைக்காக அதை நீங்காது செபித்துக் கொண்டு தவறுதலில்லாத மிகுந்த முடிவில்லாத் துன்பமுடையவள் என்று இவள் நிலையைத் திருவுள்ளத்திற் கொண்ட தலைவர் இரக்கம் கொண்டு வந்து அருளுகிறாரில்லை. அந்தோ! முன்பு இலங்கையிலுள்ள மாட மாளிகைகளை இடித்துத் தள்ளின தலைவரது கொடுமைகள் இருந்தபடி இருக்கின்றதே!

அரும்பதவுரை : நெடுங்காலம் தலைவன் வருகையை எதிர் நோக்கி ஏமாந்து போன தலைவியின்

ஆற்றாமை கண்டு தலைவனை அவன் செய்த கொடுமைகளை நினைந்து இகழ்ந்துரைத்த பாசுரம், பெரியதிருமடலில் ஈசுவரன் கிருட்டிண அவதாரத்திலும் இராம அவதாரத்திலும் நிகழ்த்திய நிகழ்ச்சிகளைத் தலைவன் எத்தகைய கொடிய மனத்தினன் என்பதை;

''மின்னிடை யாச்சியர்தம் சேரிக் களவின் கண்
தன்னு படல்திறந்து புக்குத்—தயிர் வெண்ணெய்
தன் வயிறார விழுங்கக் கொழுங்கயல் கண்
மன்னு மடவோர்கள் பற்றியோர் வான் கயிற்றால்
பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும்
அன்னதோர் பூதமா யாயர் விழவின்கண்
துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை
முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்
மன்னர் பெருஞ் சபையுள் வாழ்வேந்தர் தூதனாய்
தன்னை யிகழ்ந்துரைப்பத் தானமுனநாள் சென்றதுவும்
மன்னு பறைகறங்க மங்கையர்தம் கண்களிப்பக்
கொன்னவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடமாடி
என்னிவ னென்னப் படுகின்ற வீடறவும்
தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப்பாவை
மன்ன னிராவணன்றன் நல்தங்கை—வாளெயிற்றுத்
துன்னு கடுசினத்துச் சூர்பணகாச் சோர்வெய்திப்
பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்து மூக்கரிந்து
மன்னிய திண்ணெனவும் வாய்த்த மலைபோலும்
தன்னிக ரொன்றில்லாத தாடகையை—மாமுனிக்காத்
தென்னுலக மேற்றுவித்த திண்டிறலும் மற்றிவைதான்''

என்று எம்பெருமான் பெண் இனத்துக்குச் செய்த கொடுமைகளையும் கண்ணனின் பிறலீலைகளையும் எடுத்துரைப்பதை இப்பாசுரத்துடன் ஒப்பிட்டுக் காண நல்கும். அடியனேன் சிறிய திருமடல் பெரிய திருமடல் உரை நூல் பக்கம் 164 முதல் 174 கண்டு தெளிக.

இத்தகு நிலையில் இங்கு பிராட்டியார் நம்மாழ்வார் நிலை கண்ட தோழி, தலைவன் கொடுமை கூறுவதாக அமைந்த பாசுரம். "எழாநெடு ஊழி துழா நெடுஞ் சூழ் இருள்" என்று தலைவி எம்பிரான் துழாய் மாலையினிமித்தம் தாக்குண்ட நிலையை எடுத்துக் கூறுகிறார். "எழா நெடு ஊழி" என்றது, என்றும் தோன்றியிராத நீண்ட ஊழிக்காலம் என்பதாம். "துழா நெடுஞ் சூழ் இருள்" என்றது தேடித்துழாவும் படியான கரிய இருள் என்பதாம். துழாவித் துழாவித் தேடும் இருள் சூழ்ந்த நிலை என்பதாம். எம்பெருமான் எழுந்தருளா நிலையில் இருள்சூழ்ந்தது மட்டுமன்று கண் இருண்டுபோனது என்பதுவே உண்மை என்பதுணர்க. எம்பெருமானைக் காணாத இக்கண் களுக்கு எல்லாமே இருண்டு காணப்பட்டது என்றபடி. இவ்வாறு தோன்றிய இந்நிலையிலும் அதாவது "என்று எழுந்த இக்காலத்தும்" என்கிறார். தன் வாழ்க்கையே இருண்டுபோனது என்ற சூழ்நிலையிலும், "ஈங்கு இவளோ தம் தண் தார் அது பெயர் ஆ" என்று வாடுகி றார். "ஈங்கு இவளோ" என்றது இங்கு தனிமையை நாடி இருண்டு கிடக்கும் இவள் என்பதாம். "தம் தண் தார் அது பெயர் ஆ" என்றது தனக்கே உரித்தான தாகக் கருதிக் கொண்டு எம்பிரான் திருமார்பை அலங் கரிக்கும் குளிர்ந்த திருத்துழாய் மாலையையே, அதன் பெயரையே மனதில் கொண்டு உளறிக்கொண்டு, துன்புறுகின்றாள் அதாவது "வழா நெடு துன்பத்தள்" என்கிறார். "வழா" என்றது வழுவல் இல்லாத நிலை, நீங்கா நெடுந்துன்பமடைந்திருக்கிறாள் என்பதாம். துன்பத்தினின்றும் வழுவா நிலை. அத்தகு துன்ப மடைந்தவள் என்று இவள் தலைவன் இரங்கார்" இரக்கம் கொண்டு வந்து அருளுவாரில்லை. "அம்மனோ" அந்தோ பரிதாபம் என்பதாம். இக் கொடுமையைச் செய்த அக்கொடிய தலைவன் "இலங்கை நெடுமாடி குழாம் இடித்த பிரானார்" என்கி

றார். இலங்கை நீண்ட மாடிகள் அமைந்த குழாம் நகர் என்கிறார். இலங்கையைப் பொடிப் பொடியாக்கிய பிரான் என்கிறார்.

“ஆராலிலங்கை பொடி பொடியா வீழ்ந்தது?...”

சிறிய திருமடல். அடியனேன் உரைநூல் பக்கம். 18-19 காண்க.

“இலங்கை நெடுமாடிக்குழாம் இடித்தபிரானார்” செய்த, “கொடுமைகளே” இவைகள் என்பதாம். “கொடுமைகளே” என்றது எம்பெருமான் நினைவால் தலைவி அடையும் துன்பங்கள் என்றபடி.

அரும்பதவுரை: துழா - துழாவுதல் என்பதன் விகாரம். நெடுஞ்சூழ் இருள் - முடிவில்லாது சூழ்ந்து கொண்ட இருள். சூழ் இருள் - தப்பிப் பிழைக்க முடியாதபடி சூழ்ந்து கொண்ட இருள். தம்தண்தார் - தமக்கென்றாக்கிக் கொண்ட குளிர்ந்த மாலை. துழாய் மாலை திருத்துழாய். அது பெயர் ஆ - அதன் பெயராகக் கொண்டு. எழா நெடு ஊழி - முன்பு தோன்றாத நீண்ட ஊழிக்காலம். எழா - எழாத. ஈங்கு இவளோ - இந்நிலையில் இவள். இவளோ என்பதில் ‘ஓ’ தெரிநிலை, இரக்கமுமாம். வழா - வழாத, வழுவாத - தவறாத. துன்பத்தள் - துன்பத்தில் மூழ்கியவள். அம்மனோ - அந்தோ பரிதாபம் என்று இரங்கும் ஓசை. இதனை அசையெனத் தள்ளினும் பொருள்படும். பிரான் - தலைவன். கடவுள். “கொடுமைகளே” என்றதன் ஏகாரம் தேற்றம்.

(நாற்றாய் தன் மகள் சென்ற
சுரத்தருமைகூறி யிரங்கல்)

கொடுங்காற் சிலையர் நிரைகோளுழவர்
கொலையில் வெய்ய
கடுங்காலிளைஞர் துடிபடுங்கவ்வைத்தரு வினையே

நெடுங்காலமுங் கண்ணனீண் மலர்ப்பாதம்
பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடையிளமான் சென்ற
சூழ்கடமே. 37

விளக்கவுரை : அரிய தீவினைப் பயனையுடைய நான் நீண்ட காலம் கண்ணபிரானது நீண்ட தாமரைத் திருவடிகளை வழிபட்டு அதன் பயனாகப் பெற்றெடுத்த தொட்டால் ஒடியும் இடையையுடைய இளம் மான் போன்ற பார்வையுடைய என் மகள் சென்ற பரந்த பாலை நிலமானது வளைந்த வில்லைத் தாங்கியவர் களும், பசுக் கூட்டங்களைக் கவர்ந்து செல்தலையே தொழிலாகக் கொண்டவர்களும், கொலைத் தொழிலில் கொடியவர்களும் விரைந்து நடப்பவர்களுமாகிய இளம் வீரர்களது பறைகள் ஒலிக்கும் ஆரவாரமுடையது.

திறனாய்வு : இது களவொழுக்கத்தில் பாலை நிலத்தது. இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைக் கூடிய தலைவன், தலைவிக்கு நேர்ந்த பழி அடங்கும் மட்டும் காத்திருந்து தலைவியை ஒரு வழிப் பிரித்து வாழ்தலும், உடன் கொண்டு தன் ஊர் செலுத்துதலும் தோழியால் வரைவு முடுக்கப்பட்டு, அரிய அணிகலன் செலுத்தி வரை கொள்ளுதலும் என்னும் இம்மூன்றினுள் தலைவன் தலைவியை இடச்சுர நெறியாக உடன் கொண்டு போனமை கண்டு நற்றாய் மகள் சென்ற பாலை நிலத்தின் தன்மையைக் கூறிப் புலம்பும் பாசுரம். தன் மகளின் துன்ப நிலையை நினைந்து ''அருவினையேன்'' என்று தன்னையே நொந்து கொள்கிறார்.

''அருவினையேன்'' நெடுங்காலம் கண்ணன் நீள் மலர் பாதம் பரவிப் பெற்ற தொடுங்கால் ஒசியும் இடை இளமான்'' என்று தன் மகள் கண்ணன் பேரருளால்

பிறந்தவள் என்பதனைக் கூறுகிறார். நெடுங்காலம் குழந்தையில்லாதிருந்து, மழலைச் செல்வம் இல்லாதிருந்த அந்த நீண்ட நெடுங்காலமும் கண்ணன் நீள் மலர்ப்பாதம் போற்றி அவன் அருளால் தொட்டாலே இடை ஒடியும் எனும் கொடியிடையாளாய் ஒரு மகள் பிறந்தாள் என்பதை இப்பாசுரத்தில் சிறப்பிக்கிறார். "நெடுங்காலமும் கண்ணன் நீள் மலர்பாதம் பரவிப் பெற்ற என்றது நீண்ட காலம் கண்ணன் மலர்ப்பாதங் களையே போற்றிப் பெற்ற என்பதாம்.

'நீள் மலர்'என்றது நீண்ட தண்டையுடைய தாமரை மலர் என்பதாம். அடியார்கட்கு வேண்டியபடி நீண்டு அருள் புரியும் மலர்ப் பாதங்கள் என்பது இதனுட் பொருள். தேடுவாருக்கு அவர் கண்முன் வந்து நிற்கும் மலர்ப் பாதங்கள் என்பதுவுமாம். "பரவிப் பெற்ற" என்றது போற்றிப் பெற்ற எனபதாம். எம்பெருமானை இடைவிடாது அவன் மலர்ப்பாதங்களையே சரண் இருந்ததால், கண்ணன் திருவுள்ளம் மகிழ்ந்து அருளிய என்பதாம். "பெற்ற" என்றது அவன் அருளியதால் கிடைக்கப் பெற்ற என்பதாகும். அவன் அருளால் பிறந்த என்பதாம். பெற்ற எனபதும் பிறந்த என்பதும் ஒரே பொருளில் வருவதுணர்க. பெற்ற மகளின் இடை யழகை "தொடுங்கால் ஒசியும் இடை இளமான்" என்று சிறப்பிக்கிறார். இதனை,

"சில்இயல் ஓதி கொங்கைத் திரள் மணிக்கனகச்
செப்பில்
வல்லியும் அனங்கன் வில்லும் மான்மதச்
சாந்தின் தீட்டி,
பல்இயல் நெறியின் பார்க்கும் பரம்பொருள்
என்ன, யார்க்கும்
'இல்லை', 'உண்டு', என்ற நிறை இடையினுக்கு
இடுக்கண் செய்தார்"

என்று கம்பன் சீதையின் இடையழகைச் சிறப்பிப்ப
காண்க. பாலகாண்டம் கோலங்காண் படலம் 12 இங்
தாய் தன் மகளின் இடை "தொடுங்கால் ஒசியும்
என்கிறார். ஒசியும் என்றது ஒடியும் என்பது மட்
மன்று. நாணும், வருந்தும், சாயும், வளையும் எனவு
பொருள் படுமாதலின், தன் மகளின் இடையழ
"ஒசியும்" என்று சொல்லால் மேலும் சிறப்பிக்கிறா
அத்தகு சிறப்பான இடையையுடைய, "இளம் மான்
என்றதால் மான்போன்ற மருண்ட பார்வையுடை
என்மகள் என்பதாம். தொட்டாலே ஒசியும் இடை
யுடைய என்மகள் சென்றது, தலைவன் பின் சென்ற
தலைவன் என் மகளைத் தன்றுடன் கொண்டு சென்
இடம்,

"கொடுங்கால் சிலையர் நிரைகோள் உழவர்"
அதாவது வளைத்த வில் எந்திய உழவர் வாழிட
என்கிறார். "கொடு" என்றது வளைந்த என்பதாம்.

"கூன்பிறைக் கோட்டுவில்லிற்
குழைத்ததுங் குழைத்துத் தெவ்வ..."

என்றனர் அதிவீரராம பாண்டியனார். நைடத
உரை நூல் பக்கம் 606 காண்க.

"கொடு கால் சிலையர்" என்றது வளைந்த வ
ஏந்தியவர்கள், வில் ஏந்தி நிற்பவர்கள் என்பதா
பாலை நிலத்தவர் எப்பொழுதும் நின்று சண்
யிடத் தயாராய் இருப்பவர் ஆதலின் "கொடு கெ
சிலையர்" என்றனர்.

"நிரை கொள் உழவர்" என்பது பசுக்கூட்டங்க
வளர்க்கும் தொழிலைக் கொண்டவர்கள்.

"கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்......"

என்றனர் நாச்சியார். திருப்பாவை. 11. நாச்சியார் ஈங்கு "செருச் செய்யும்" என்ற சொல்லுடன் "குற்ற மொன்றில்லாத" என்றும் சேர்த்திருத்தலையும் காண்க. இப்பாசுரத்துடன் ஒப்பிடுகையில் "நிரை கொள் உழவர்" என்றது நிரை கொள்ளை கொள்ளும் உழவர் என்றும் பொருள்படும் என்பதனை இது பாலை நிலத்துக்கானதால் உணரப்படும். "உழவர்" என்ற சொல் போர் வீரரையும் குறிப்பதாகும். தன் மகள் தலைவன் பின் சென்ற இடம், "கொடு கால் சிலையர், நிரை கொள் உழவர், மட்டுமன்று "கொலையில் வெய்ய கடுங்கால் இளைஞர்துடி படுங்கவவைத்த சூழ் கடமே" என்கிறார். கொலையில் வெய்ய" என்றது அந்நிலத்தாற்குரிய போர், சூறையாடல் கொள்ளை கொலை முதலியன செய்தல் என்பதாம். "கடு கால்" என்றது விரைந்து செல்லும் கால்கள். அவர்கள் செய் யும் தொழிலுக்கேற்ப அவர்கள் விரைந்து செல்லும் கால்களையுடையவர்கள் என்பதாம். இத்தகு கொடிய செயல்களால் பாலை நிலம் ஆங்காங்கு பறை கள் ஒலித்துக் கொண்டிருக்கும் தன்மையுடையது. ஆதலின் "துடிபடும் கல்வைத்த" என்றனர். "துடி" என்றது பாலை நிலத்துப் பறை, போர்ப்பறை, ஊரெறி பறை ஆகிய இரண்டும் பாலை நிலத்துக்குரிய பறை களாம். "துடிபடும்" என்றது பறை ஒலித்தல். "கவ் வைத்து" என்றது பேரொலியையுடைய ஆரவார முடைய என்பதாம். "கவ்வை" என்ற சொல், ஒலி, பழிச்சொல், துன்பம் எனும் பலபொருட் கொண்டது. அத்தனை பொருளும் "கல்வைத்த" என்ற சொல்லுக் குப் பொருந்தும். இவ்வளவும் சூழ்ந்த நிலமே தன் மகள் சென்ற நிலம் என்பதனை "சூழ் கடமே" என்கிறார். "சூழ்" என்றது பரந்துகிடக்கும், ஒலி, துன்பம், கவலை ஆகியவை சூழப்பெற்ற, கடம் அதாவது பாலை நிலம்.

இதில் ஏகாரம் தெளிவை உணர்த்துவது ஆதலின் தேற்றம்.

அரும்பதவுரை : கொடு - வளைவு. கொடுகால் சிலையர் - வில் ஏந்தி நின்றவர். நிரை - பசு. வெய்ய. கொடிய. கடுகால் - விரைந்து செல்லும் கால். துடி - பாலை நிலத்து உள்ள ஒரு விதப்பறை. கவ் வைத்த - ஒலியுடைய, கவலை, துன்பம். அருவினை - அரிய தீவினையேன். பரவி - போற்றி. தொடுங்கால் - தொட்டவுடனே. ஒசியும், ஒடியும், வளையும். சூழ் - சூழப்பட்ட. கடம் - பாலை நிலம்.

(தலைவனைப் பிரிந்த தலைவி போலிகண்டு மகிழ்தல்)

கடமாயினகள் கழித்துத் தங்கால் வன்மையாற் பல
நாட்
டடமாயின புக்குநீர் நிலைநின்ற தவமிது கொல்
குடமாடியிம் மண்ணும் விண்ணுங்குலுங்கவுலகளந்து
நடமாடிய பெருமானுரு வொத்தன நீலங்களே. 38

விளக்கவுரை : காடுகளைக் கடந்து, தடாகங்களுள் புகுந்து அங்கு தனது கால் வலிமையினால் நீண்ட காலம் நீரில் நிலைத்து நின்று செய்த, தவத்தினால், நீலோற் பல மலர்கள், குடக்கூத்தாடி திரிவிக்கிரமாவ தாரத்தில் இந்த மண்ணுலகும் விண்ணுலகும் குலுங்க உலகங்களை அளந்து திருவிளையாடல் செய்தருளிய தலைவனான எம்பெருமானது திருமேனி நிறம் பெற்றன,

திறனாய்வு : முப்பத்திரண்டாம் பாசுரத்தில், "நும் தம் ஆகங்கள் நோவ வருத்தும் தவம் மாஅருள் பெற்றதே மேகங்களோ!" என்று வியக்கும் தலைவி, இப்பாசுரத்தில், எம்பெருமான் திருமேனி நிறம்

கொண்ட நீலோற்ப மலர்களைக் கண்டு மகிழ்கிறார்... முன்பு மேகங்கள் தன் தலைவன் நிறம் கொண்டிருத் தலைக் கண்டு வியந்த தலைவி இப்பாசுரத்தில் எம் பெருமான் மேனி எழிலை நீலங்களில் கண்டு மகிழ்கி றார். "கடம் ஆயின கள் கழித்து" என்றது பாலை நிலம் கடந்து என்பதாம். "கடம் ஆயின கள்" என்ற தால் ஒருவன் அனுபவிக்க வேண்டிய தீவினைகளை யெல்லாம் அனுபவித்துக் கடந்து என்பது இதன் உட்பொருள் எனக் காணினுமாம் "தடம் ஆயினபுக்கு" என்றது தடாகங்களில் நின்று கிடந்து. "தடம்" என்றது தடாகம், தாடாகங்களில் எங்கும் நிறைந்து என்பதாம்.

"புக்கு" என்றது நுழைதல், அடைதல்,உட்படுதல் என்ற பொருளில் வரும். தடாகங்களில் நிறம்பிக் கிடந்து, "தம் கால்வன்மையால்" என்றது தமது கால் களின் வலிமையால் என்பதாம் "பல நாள் நீர் நிலை நின்ற தவம் இது கொல்" என்றது நீண்ட நாட்களாக நீர்நிலைகளில் தவம் செய்ததன் பயன் இதுவோ என்ப தாம். நீர் நிலையென்பது தடாகம். "நின்றதவம்" என்றது ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தலாம்.

"முருகவிழ் செய்ய கமலமுண் ணெகிழ்ந்து
முகமலர்ந் துறுகணீர் சிந்தி
யொருபசுந் தாளின் வனத்தினின்றரிதி
னுஞற்றிய தவத்தினா லன்றோ..."

என்றனர் அதிவீரராம பாண்டியனார். நைடதம் அடியனேன் உரைநூல் பக்கம் 139 காண்க. இச்செய்யுளில் "முருகவிழ் செய்யகமலம்" என்ற தனை "கடம் ஆயின கள்" எனப் பிரித்து ஒப்பிட்டுக் காண்க. "நின்ற தவம் இது கொல்' என்றது

என்றது தவத்தின் பயன் இதுவோ என்பதாம். அது யாது எனின், "குடம் ஆடி இ மண்ணும் விண்ணும் குலுங்க உலகு அளந்த நடம் ஆடிய பெருமான் உரு ஒத்தன நீலங்களே!" என்றனர். ஒற்றைக் காலில் நின்று தவம் இயற்றியதின் பயனே இந்த நீலோர்ப்ப மலர்களின் நிறம் என்பதாம். இந்நீலோர்ப்ப மலர்களின் நிறம் "குடம் ஆடி இ மண்ணும் விண்ணும் குலுங்க உலகு அளந்த பெருமான் உருஒத்தன" என்கிறார். குடம் ஆடுதல் என்பது திருமாலுக்கே உரிய ஆட்டங்களுள் ஒன்று என்பது முன்னமே கண்டோம். "குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாடவல்ல யெங்கோவே" என்றனர் பெரியாழ்வார். திருமொழி 2.7.7. "இடவல குடவல கோவல" என்று பரிபாடலில் வருவதும் காண்க. இதற்கான விளக்கம் அடியனேன் "இலக்கியத்தில் கடவுள் வாழ்த்து" பக்கம் 54 காண்க.

"குடமாடு கூத்தன் கோவிந்தன் கோமிறை செய்து எம்மை
உடைமாடு கொண்டான் உங்களுக்கு இனி யொன்று போதுமே"

என்றனர் நாச்சியார். திருமொழி 10.7. "குடம் ஆடி இ மண்ணும் விண்ணும் குலுங்க அளந்த நடம் ஆடிய பெருமான்" என்று சிறப்பிக்கிறார். உலகளந்த பெருமாள் பற்றிய பெரிய திருமடலின் விரிவான செய்தியை இங்கு காண்போம்.

"தன்னுருவ மாரு மறியாமல் தானங்கோர்
மன்னும் குறளுருவின் மணியாய்—மாவலிதன்
பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து போர் வேந்தர்
மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருகி
என்னுடைய பாதத்தால் யானைப்பமூவடி மண்
மன்னா! தருகென்று வாய்திறப்ப—மற்றவனும்

என்னால் தரப்பட்டது என்றலுமே
அத்துணைக்கண்
மின்னார் மணிமுடிபோய் விண்தடவ—மேலெடுத்த
பொன்னார் கனைகழற்கால் ஏழுலகும் போய்க்
கடந்து அங்கு
ஒன்னா வசுரர் துளங்கச் செலநீட்டி
மின்னிவ் வகலிடத்தை மாவலியை வஞ்சித்துத்
தன்னுலம் ஆக்குவித்த தாளானை...''

என்கிறார் திருமங்கையாழ்வார். நாலாயிரதிவ்யப் பரபந்தத்தில் வேறு எங்கும் இவ்வளவு விரிவாகக் கூறப்படவில்லை யென்பதையும் ஈங்கு நினைவு கூற நல்கும். இதற்கான விளக்கம் எமது ''சிறிய திருமடல் பெரிய திருமடல்'' உரை நூல் பக்கம் 135-138 காண்க. ''மண்ணும் விண்ணும் குலுங்க உலகளந்து நடமாடிய பெருமான்'' என்றது.

''கேட்டு முணர்ந்தவர் கேசவற் காளன்றி யாவரோ?
வாட்டமிலா வண்கை மாவலி வாதிக்க
வாதிப்புண்டு
ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந்தார்க்கு இடர்
நீக்கிய
கோட்டங்கை வாமனனாய்ச் செய்த கூத்துக்கள்
கண்டுமே''

என்ற திருவாய் மொழியானும் பெறப்படும். திருவாய் மொழி 7.5.6. ''நடமாடிய பெருமான்'' என்றதும் ''கூத்துக்கள் கண்டுமே'' என்பதும் எம்பெருமானைத் துதித்துப் பாடியதாகும். ''மன்றில் மலிந்து கூத்து வந்தாடி'' என்று பெரிய திரு மொழியில் வருவதும் காண்க. 10.9 2. ''உருவொத்தன நீலங்களே'' என்றது எம்பெருமான் மேனி நிறத்தையுடை நீல மலர்களே! என்பதாம். பலநாள் ''நீர் நிலை நின்ற தவம் இது கொல்'' என்றது பெருமானுரு ஏத்தன நீலங்களே!

எம்பெருமான் மேனி நிறம் பெற இருந்த தவம் இத கொல் என்பதாம்.

அரும்பதவுரை : கடம் - பாலை நிலம் கழித்து - நீங்கி தடம் - தடாகம். குடமாடி - பெருமால் குடக் கூத்தாவது தலையில் அடுக்குக் குடமிருக்க இரண்டு தோள்களிலும் குடமிருக்க குடங்களை ஏந்தி ஆகாயத்தில் எறிந்து விளையாடுதல். பரிபாடல் பரிமேலழகர் உரையினின்றும் எடுக்கப்பட்டது. நீலம் நிறத்தின் பெயர் மலருக்கு ஆனதால் பண்பாகு பெயர்.

(தலைவனது உருவெளிப் பாடுகண்ட தலைவி தோழிக்குக் கூறல)

நீலத் தடவரை மேற்புண்டரீக நெடுந்தடங்கள்
போலப் பொலிந் தெமக்கெல்லா விடத்தவும்
பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான் விசும்புக்கும் பிரான்மற்று நல்லோர்
பிரான்
கோலங் கரிய பிரானெம்பிரான் கண்ணின்
கோலங்களே 39

விளக்கவுரை : நீல இரத்தின மலையின் மீது பெரிய செந்தாமரை மலர்த் தடாகங்கள் போன்று விளங்கி, எம் கண்கள் பார்க்குமிடமெல்லாம்; பொங்கும் மூன்று நீர்கள் கொண்ட மண்ணுலகத்துக்குத் தலைவனும், விண்ணுலகத்துக்குத் தலைவனும், மற்றும் நல்லவர் யாவர்க்குந் தலைவனாகவுள்ள, திருமேனி கருமை வாய்ந்த நிறமும் உள்ள பிரான் எம்தலைவனுமானவனது கண்களின் அழகே.

வியாக்கியானம் : கண்ணனின் திருக்கோலத்தை எங்கும் கண்டு மகிழ்ந்த தலைவியின் எண்ண எழுச்சியைக் கூறும் பாசுரம். எங்கும் கண்ணனின் திருக்கோலங்களே என்பதாகக் கண்டு களிக்கிறார்.

மகாகவி சுப்ரமணிய பாரதியாரும்,

"காயிலே புளிப்பதென்னே கண்ண பெருமானே! நீ
கனியிலே இனிப்ப தென்னே கண்ண பெருமானே
நோயிலே படுப்பதென்னே? கண்ண பெருமானே! நீ
நோன்பிலே உயிர்ப்பதென்னே கண்ண பெருமானே! நீ
காற்றிலே குளிர்ந்த தென்னே? கண்ண பெருமானே! நீ
கனலிலே சுடுவதென்னே? கண்ண பெருமானே!
சேற்றிலே குழம்ப லென்னே கண்ண பெருமானே!—நீ
திக்கிலே தெளிந்ததென்னே? கண்ண பெருமானே!"

என்றும்,

"..................இவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில் வான
வெளியிலே, கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா! நினைக்கண்டு
நின்னோடுநான் கலப்ப தென்றோ?"

என்றும் பாடுவர். கோவிந்தன் பாட்டு "காக்கைச் சிறகினிலே நின்றன் கரியநிறந் தோன்றுதையே,

பார்க்கும் மரங்களெல்லாம், நின்றன் பச்சை நிறம் தோன்றுதையே நந்தலாலா'' என்ற பாரதியின் பாடல் முன்னமே எடுத்தாண்டிருத்தலை இங்கு நினைவு கூறுக.

"நீலத் தடம் வரைமேல் புண்டரீகம் நெடும் தடங்கள் போல் பொலிந்து'' என்கிறார். "நீலம் தடம் வரைமேல்'' என்றது. என்றது நீல நிறமான பெரியதொரு மலையின் மீது என்பதாம். "தடம்'' என்றது உயர்ந்த, உயர்ந்தோங்கிய என்பதாம். "வரை என்றது மலை, எம்பெருமான் திருவேங்கட மலையெனினுமாம் "புண்டரீகம் நெடு தடங்கள் போல பொலிந்து என்றது பெரிய தாமரை மலர்த்தடாகங்கள் போல் பொலிந்து என்பதாம். புண்டரீகம் என்பது வெண் தாமரையைச் சிறப்பாகவும் தாமரை எனப் பொதுவாகவும் கூறப்படும்.

'பங்கயக் கண்ணானைப் பாடேலோரெம் பாவாய்' என்றனர், திரு ஆண்டாள். திருப்பாவை 14. "நீலத் தடவரை'' எம்பெருமான் திருமேனிக்கும், "புண்டரீக நெடு தடங்கள்'' அவனது திருக்கண் மலர்களுக்கும் உவமை. "பொலிந்து'' என்றது ஒளிர்ந்து, விளங்கி என்பதாம். எம்பெருமான் திருமேனியும் திருக்கண் களும் பொலிவது நீலத்தடவரையும் புண்டரீக நெடு தடங்களுமாம். "எமக்கு எல்லாம் இடத்தும்'' என்றது நாம் காணும் இடமெல்லாம் என்பதாம். மேலே குறிப் பிட்டுள்ள மகாகவியின் பாடல்களையும் இங்கு நினைவு கொள்க.

"வானிடைக் காற்றுங் காற்றிடை நெருப்பும்...''

"நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்...

"நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மே லுயிர்பும்...''

"புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பும்...''

"புகுதிவான் வெளியிற் படர்ந்தமா பூத...
வகல் வெளி வகுத்த..."

என்றனர் இராமலிங்க அடிகளார். திருவருட்பா ஐம்பூதக் கலப்பின் விரி.

"எமக்கு எல்லா இடத்தும்" என்றது எல்லாமே எம்பெருமானாய் எம்பெருமானே எல்லாமாய் என்றபடியாம். "பொங்கும் முந்நீர் ஞாலம் பிரான்" என்றது பொங்கி எழும் மூன்றுவகை நீர் அமைந்து இவ்வுலகத் தெம்பிரான் என்றபடி. "முந்நீர் ஞாலம்" என்றது கடலால் சூழப்பட்ட உலகு என்பதாம். முந்நீர் என்றது நீரின் குணங்களை உணர்த்துவது, குண ஆகுபெயராய் கடலைக் குறிப்பது. நீரினின்றும் உயிர்கள் தோன்றுவதும், அதே நீர் காப்பதும் அழிப்பதுமாகிய மூன்று குணங்களையுடைதாதலின் முந்நீர் என்றனர். "நால்தோள் முந்நீர் வண்ண" என்றனர் திருமங்கையழ்வார் திருவெழு கூற்றிருக்கை.

"சிறுகா லுயிர்க்குந் தமிழ்வரையை
முந்நீரகத்திற் சேர்த்தியவே..."

என்பது நைடதம். அடியனேன் உரைநூல் பக்கம் 298 காண்க.

வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர்
மல்லையாய்! மதிள் கச்சியூராய் பேராய்!

என்று திருமங்கையாழ்வார் முந்நீர் மல்லையாய் எனக் கூறியிருத்தலும் காண்க. திருநெடுந்தாண்டகம். 9.

"வீசும்புக்கும் பிரான்" என்றது விண்ணுக்கு தலைவன் என்பதாம். 'மற்றும் நல்லோர் பிரான்' என்றது நல்லவர் யாவருக்கும் தலைவன். 'கோலங்கரிய பிரான்' என்றது கரிய கோலமுடைய எம்பிரான் என்பதாம். கரிய திருமேனிநாதன் என்றபடி. 'கண்ணின் கோலங் களே' என்றது எல்லாம் அவன் திருக்கண்களின் தோற்றங்களே என்றபடியுமாம்.

காண்கின்ற நிலமெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற விசும் பெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற வெந்தீ யெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற இக்காற்றெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற கடலெல்லாம் யானே யென்னும்
காண்கின்ற கடல்வண்ண னேறக் கொலோ?
காண்கின்ற உலகத்தீர்க்கு என் சொல்லுகேன்?
காண்கின்ற என் காரிகை செய்கின்றவே.

என்று திருவாய் மொழியிலும் நம்மாழ்வார் போற்றி யிருத்தல் காண்க. 5.6.3

அரும்பதவுரை: தடவரை - உயர்ந்த மலை. புண்டரீகம் - தாமரை. தடங்கள் - தடாகங்கள். முந்நீர்- கடல். முத்தொழிலையும் செய்யும் நீர். ஞாலம் - உலகு. விசும்பும் - ஆகாயம்.

(இருள் கண்டிரங்கிய தலைமகள் தோழியர்க்கு வரைவு விருப்பு ரைததல)

கோலப்பகற் களிறொன்று கற்புய்யக் குழாம் விரிந்த
நீலக் கங்குற் களிறெலா நிரைந்தன நேரிழையீர்
ஞாலப் பொன் மாதின் மணாளன் றுழாய் நங்கள்சூழ்
குழற்கே
யேலப் புனைந்தென்னை மாரெம்மை நோக்குவ
தென்றுகொலோ, 40

விளக்கவுரை: அழகிய பகல் எனும் யானை ஒன்று மாலையில் மறைய, இரவு எனும் யானைகளின் கூட்டம் பரந்து விரிந்து இருளைப் பரப்பி எங்கும் நின்றன. தேர்ந்தெடுத்த ஆபரணங்களை அணிந்த வர்களே! பூமகளுக்கும், திருவுக்கும் கணவனான எம்பெருமான் திருத்துழாய் மாலையை எமது அடர்ந்த

கூந்தலுக்குத் தகுதியாக அணிந்து கொள்ள எமது தாய்மார் அழகு பார்ப்பது எந்நாளோ?

திறனாய்வு : பகல் முழுதும் காத்திருந்து இருள் சூழ்ந்த நிலையில் இரங்கின தலைமகள், உற்றார் வரைந்து கொடுப்பது என்றோ என்று பாங்கியர்க் குரைத்தபாசுரம். "வரைந்து கொடுப்பது" என்பது திருமணம் செய்து கொடுத்தல். மலர்சூடி மணாளனைச் சேர்வதன் விருப்புரைத்த பாசுரம் எனினுமாம். "நேரிழையீர்" என்றதால் பாங்கியர்க்குரைத்தாகக் கொள்வதே சிறப்பு. இப்பாசுரத்தில் மயக்கும் மாலைப் பொழுதைப் 'போ, போ' என்று விரட்டி இனிக்கும் இன்ப இரவை எதிர்பார்த்த தலைவி தன் தோழியர்க் குரைத்தாகக் கூறப்படுகிறது. மாலைப் பொழுதினை ஒரு களிறுக்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. "கோலப் பகற் களிறு ஒன்று" என்கிறார். அலங்காரம் செய்யப் பட்ட களிறு என்பதாகிறது. மாலையில் கதிரவனின் தோற்றம் அலங்காரம் செய்யப்பட்ட களிறு போன்றது என்பதாகக் கூறுகிறார். அதன் முகப்படாம் ஒளிவீசுவது மாலைக் கதிரவனின் ஒளிக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. செம்புள்ளிகள் கதிரவனின் செங்கதிர்களை நினை வூட்டுவன. "ஒன்று" என்றதால் கதிரவனின் தனித் தன்மையைச் சிறப்பிக்கிறார். அழகிய முகப்படாம் அணிந்த செம்மைபடர்ந்த வெண்புள்ளிகளையுடைய களிறு ஒன்று அதாவது களிறு ஆகிய கதிரவன் என்ப தாம். 'கல்புய்ய' என்றது மேற்கு மலைகளில் மறைந்து போக என்பதாம் 'கல்' என்றது மலை இதனையே,

"கல்லெடுத்துக் கன்மாரி காத்தா யென்னும்..."

என்றனர் திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகம் 13 ஆதலின் "கல்"என்றது மலையையே குறிக்குமாதலின் 'கல்புய்ய' என்றனர். "புய்தல்" மறைதல். கதிரவன்

மறைந்த அதே நேரத்தில், "விரிந்தநீலம்" என்றது நீலநிறம் பரந்து விரிந்ததே போன்று என்பதாம். "கங்குல் களிறு குழாம் எல்லாம்" என்றது இருள் எனும் யானைக் கூட்டம் எல்லாம் என்பதாம். இருள் சூழ்வதற்கு முன் கதிரவன் மறைந்து நிற்கும் நிலையில் உள்ள ஒரு தோற்றத்தை "நீலம் துரிந்த" அதாவது, "துரிந்த நீலம்" என்கிறார். அதனையடுத்து "கங்குல் களிறு குழாம் எல்லாம்" என்று இருள் கவ்விக் கொண் டதைச் சிறப்பிக்கிறார். கரிய யானைகள் ஒன்று சேர்ந்து இருக்குமாயின் அவ்விடம் முழுமையாக இருள் சூழ்ந்தது போன்று இருக்குமாதலின் "கங்குல் களிறு குழாம் எல்லாம்" என்றனர். கங்குல் என்றது இரவு, இருள். "நிறைந்தன" என்றது முழுமையான இருள் சூழ்ந்தது என்பதாம். "ஞாலப் பொன் மாதின்" என்றது நிலமகளை. எம்பெருமானுக்கு நிலமகளும் பிராட்டியாதலின் "ஞாலப்பொன் மால" என்றார். நிலமகளைப் "பொன் மாது" எனச் சிறப்பித்திருத்தல் காண்க. "ஞாலப் பொன்மாதின் மணாளன்" என்பது அந்த நாராயணன் பூதேவிக்கும் திருதேவிக்கும் கணவன் எம்பிரான் என்பதாம். "துழாய்" என்பது பெருமால் விரும்பி அணியும் திருத்துழாய் மாலையைக் குறிப்பதாகும். "நங்கள் சூழ்குழற்கே" என்பது எங்கள் குழலினுக்கு என்பதாம். "சூழ்குழல்" என்றது அடர்ந்த நீண்ட கூந்தலையுடையவள் என்பதாம்.

"ஏலப் புனைந்து" என்றது தகுதியாகச் சூடி, மிகுதியாகச் சூடி என்பதாம். "ஏல" என்ற சொல் முதலில் என்றும், மிதியாக என்றும் பொருள்படும். "ஏலப்புனைந்து" என்றது முதலில் வந்து சூடி எனி னும் மிகுதியாக அவன் மார்பில் அலங்கரிக்கும் அத்த னையும் அப்படியே கொணர்ந்த சூடி என்பதாம். துழாய் மாலையின்பால் ஏற்பட்ட மிகுதியான

ஆசையை இங்கு ''ஏல'' என்ற சொல் ஒன்றாலேயே கொட்டி விடுகிறார்.

''என்னைமார்'' என்றது என் அன்னைமார் என்பதாம் ''எம்மை நோக்குவது'' என்னை அழகு பார்ப்பது என்பதாம். மகளின் திருமணம் முடிக்கக் கருதி அன்னைமார் மகளுக்கு அலங்காரம் செய்து பார்க்கத் துடிப்பர். என் மகளை என்று திருமணக் கோலத்துடன் கண்டுகளிப்பது என ஏங்கும் தாய்மார்கள் நிலையில் தன் அன்னைமாரைத் தலைவி கண்டு 'எம்மை நோக்குவது என்று கொலோ'' என்கிறார்.

''எம்மை நோக்குவது என்றுகொலோ'' என்றது எம்மைப் பெருமாளுக்கே மணம் முடிக்க அலங்கரித்துக் காண்பது என்று கொலோ? என்பதுவுமாம். இது அன்னைமார் கொண்டிருந்த ஆவலக்குத் தன் மகள் திருமணம் காணவேண்டுமே என்று ஏங்கிய நிலைக்குத் தலைவி இரங்கிக் கூறியதாகவும் பொருள்கொள்ள அமையும்.

அரும்பதவுரை : கோலம் - அலகு. பகல் களிறு - ஞாயிறு. கல் - மலை. பகல் ஞாயிற்றுக்கும், கல் மலைக்கும் ஆனது. புய்ய - மறைய. புய்தல் - மறைதல் ''புய்'' என்னும் வினைப் பகுதியடியாய்ப் பிறந்தது. குழாம் - கூட்டம். கங்குல் - இரவு. நேரிழையீர் - பெண். தேர்ந்த அணிகலன் பூண்டவள். நேரிழை என்றதன் விளி. ஞாலம் - உலகு. மாது - மாதர் என்பதன் விகாரம். மணாளன் - மணவாளன் என்பதன் மரூஉ. நங்கள் - எங்கள். குழற்கே - குழலுக்கே. கூந்தலுக்கு. புனைந்து - புனைய என்றதன் எச்சத்திரிபு. என்னை - எம் அன்னை. நோக்குவது - மாலையிட்டு அழகு பார்ப்பது. திருமணக் கோலத்தில் காண்பது.

(வாடைக்கு வருந்தின தலைமகள் வார்த்தை)

என்றும் புன்வாடை யிது கண்டறிதும் மிவ்வாறு
வெம்மை
யொன்று முருவுஞ் சுவடுந் தெரியில மோங்கசுரர்
பொன்றும் வகை புள்ளையூர்வானருளாத விந்நாண்
மன்றினிறை பழிதூற்றி நின்றென்னைவன்
காற்றடுமே 41

விளக்கவுரை : எப்பொழுதும் கொடுமையே செய்யும் இந்த வாடையைக் கண்டறிவோம். இப்படிப் பட்ட இதன் வெப்பத்தின் கடுமையும் அதன் அடியும் ஒன்றும் தெரியிலோம். ஓங்கு அசுரர்கள் அழிந்து போகும்படி கருடாழ்வான் மீது அமர்ந்து செல்லும் எம்பெருமான் இக்காலத்திலே வன்மையான வாடையானது வெளியிலே பரவி நிறையும் பழியை அயலாரை விட்டுத் தூற்றுவித்து அற்பாப் போகாமல் அழிக்கிறது.

திறனாய்வு : தலைவனைப் பிரிந்ததால் என்றும் உள்ள வாடை புன்வாடையானது. இப்பொழுது வீசும் இக்காற்று "புன் வாடை இது" எனக் "கண்டு அறிதும் என்கிறார். "புன் வாடை" என்பது துன்பத்தைத் தரும் வாடை. புன்மை புன் எனக் குறுகிற்று. புன்மையுடைய வாடை இதுவெனக் கண்டு கொண்டோம் என்றபடி. "உன்னை அறிந்து கொண்டேன் உனக்கு அஞ்சுவேன் அம்மம் தரவே" எனப் புழி. "வாடை இது கண்டறிதும்" என்கிறார்.

"இவ்வாறு வெம்மை ஒன்று உருவும் சுவடும் தெரியிலம்" என்பது இது போன்ற வெம்மையென்பது, ஒன்று உண்டா இல்லையா என்பது தெரியவில்லை. அதன் உருபும் தெரியவில்லை அது வந்து சென்ற

சுவடும் தெரியவில்லை என்பதாம். "ஒன்று" என்பது அதன் தனித் தன்மையை உணர்த்துவது. "ஓங்கு அசுரர்" என்றது வலிமை மிக்க அசுரர்கள். "ஓங்கு பரிபாடல்" எனப்புழி. அசுரர் வணங்காமுடியினராய் நிமிர்ந்து நடைபோட்ட ஒரு இனத்தவராதலின் ஓங்கு அசுரர் எனச் சிறப்பிக்கிறார். "பொன்றும் வகை" என்றது அசுரர்கள் வலிமை மிக்கவராயினும் அவர் களை அழிக்கும் பொருட்டு அவர்களை அழித்திடும் வகை நாடி என்பதாம்.

"புள்ளை ஊர்வான்" என்றது கருடாழ்வாரின் மேல்அமர்ந்து வருபவனான எம்பெருமான் என்பதாம். "அருள் அருளாத" என்றது அருளிச் செய்யாத என்ப தாம். அருளைக் கொடுக்காத என்றபடி. "இநாள்" என்றது இந்த நாளிலே, இக்காலத்தில் என்பதாம், "வன்காற்று" என்றது வலிமை மிக்க காற்று; வாடை கொடியது செய்வதாலின் "வன் காற்று" என்றனர். "என்னை" என்றது பாவியாகிய என்னை என்பதாம். "மன்றில் நிறைபழி தூற்றி" என்றது பொது இடத்தில் சபையில் நிறைய பழிசுமத்தித் தூற்றி என்பதாம். "மன்று" என்பது சபை வெளியிடம். "மன்றாடும் ஐயன்" என்று சிவபெருமானைப் போற்றுவர் சேக் கிழார் பெருமான். திருஞான சம்பந்தர் புராணம் எனது உரை நூல்பக்கம் 133 காண்க. அயலாரிடம் என்னைப் பற்றி இழிவாகக் கூறி "நின்று என்றும் இடும்" என்றது நிலைத்துநின்று எம்பொழுதும்,சுடும் துன்புறுத் தும் என்பதாம். அடுமே என்றதன் ஏகாரம் இரக்கத் தைக் குறிப்பது.

அரும்பதவுரை : புன் - இழிவு - துன்பம் - வறுமை. கண்டறிதும் - தெரிந்து கொண்டோம். சுவடு - அடிச்சுவடு. அசுரர் - ஒரு இனத்தவர். சுரர் - கள்

கள் உண்பவர்கள். அசுரர் - கள் உண்ணாதவர்கள் பொன்றும் - அழிக்கும் மன்று - சபை. வெளிப்புறம் அடும் - சுடும்.

(தலைவனது நோக்கில் ஈடுபட்ட தலைவி வியந்து உரைத்தல்)

வன்காற்றறைய வொருங்கே மறிந்து கிடந்தலர்ந்த
மென்காற் கமலத்தடம் போற்பொலிந்தன மண்ணும் விண்ணு
மென் காற்களவின்மை காண் மினென்பானோத்துவ ளிமிர்ந்
தன்காற் பணிந்த வென்பாலெம்பிரான் தடங் கண்களே 4

விளக்கவுரை : "மண்ணுலகும் விண்ணுலகுமாகி பரந்த இடமிரண்டும் எனது இரண்டு பாதங்களி அளவுக்கு இல்லாமை பாருங்கள்" என்று கூறி வானை நோக்கி வளர்ந்து தன்னுடைய திருவடிகளி வணங்கின என்னிடத்து வலிமையான காற் வீசுதலால் ஒரு பக்கம் சாய்ந்து கிடந்த மலர் மென்மையான நாளத்தையுடைய தாமரைத் தடாக போல எம்பிரானது பெரிய அகன்ற திருக்கண்க பொலிந்தன.

திறனாய்வு : இப்பாசுரத்தைப் பயிலும் பொழு நாச்சியார் திருமொழியில் ஒரு பாசுரம் நினைவி ஓடுகிறது:

"கஞ்சைக் காய்ந்த கருவில்லி கடைக்கணென்னு சிறைக்கோல
நெஞ்சூடுருவ வேவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை..

என்று பாடியருள்வர்.

பதிமூன்றாம் திருமொழி, மூன்றாம் பாசுரம். எம்பிரான் கடைக்கண் பார்வைக்கு ஏங்கிக் கிடக்கும் ஆழ்வார்கள் அவன் தி அரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் நிலையில் கமலக் கண்களைத் திறந்து அருளானோ என்பதாக அமைந்த பாசுரம். "மண்ணும், விண்ணும் என்காற்கு அளவு இன்மை காண்மின் என்பான்." என்றது, வாமன அவதாரத்தை நினைவூட்டுவது.

"அடியால் படி கடந்த முத்தோ? அதன்றேல்
முடியால் விசும்பளந்த முத்தோ?—நெடியாய்
செறிகழல்கள் தாள் நிமிர்த்துச் சென்று
உலகமெல்லாம்
அறிகிலமால் நீயளந்த அன்று."

என்பதும் நம்மாழ்வாரே. பெரிய திருவந்தாதி 27 கம்பர் இதனை மிக அழகாக.

நின்ற கால் மண் எலாம் நிரப்பி; அப்புறம்
சென்று பாவிற்றிலை, சிறிது பார் எனா;
ஒன்ற வானகம் எலாம் ஒடுக்கி, உம்பரை
வென்ற கால மீண்டது. வெளி பொறாமையே

என்றும்;

உலகு எலாம் உள்ளடி அடக்கி, ஓர் அடிக்கு
அலகு இலாது, அவ் அடிக்கு, அன்பன்மெய்யதாம்
இலை குலாம் துழாய் முடி ஏக நாயகன்—
சிலை குலாம் தோளினாய்—"

என்றும் சித்தரித்துக் காட்டுவர். பாலகண்டம் வேள்விப் படலம் 35, 36.

"மண்ணும் விண்ணும் என்காற்கு அளவின்மை காண்மின்" என்று உலகளந்த பெருமான் திருவடிகளுக்கு இம் மண் உலகும் விண் உலகும் ஒன்றும்

இல்லை பாருங்கள் என்பதாம், "என்பான் ஒத்துவான் நிமிர்ந்த தன் கால்" என்று கூறிக் கொண்டு என்றது உலகத்தனைவருக்கும் அறிவித்து விட்டு என்பதாம்.

அந்த உலகளந்த பெருமான் திருவடிகளில் "பணிந்த என்பால்" என்றது வணங்கின என்னிடத் தில், திருவடிகளைச் சரண் அடைந்த என்னிடத்தில் என்பதாம். "வன் காற்று அறைய" என்றது வலிமை யான காற்று அடித்துத் தள்ள, "ஒருங்கே மறிந்த கிடந்த" ஒரு பக்கமாய்ச் சாய்ந்து கிடந்து, "அலர்ந்த மென் கமலம் தடம் போல்" பூத்துக் கிடந்த மென்மை யான காம்பினையுடைய தாமரைத் தடாகம் போன்று 'பொலிந்தன' மிளிர்ந்தன என்பதாம் "எம்பிரான் தடங் கண்களே" என்றது. எம்பிரானுடைய பெரிய திருக்கண் களே என்பதாம். இது படம் கொண்ட பாம்பணை மேல் பள்ளி கொண்டருளிய கோலம். திரு அரங்கத் தெம்மான் பள்ளிகொண்டு திருக்கண்கள் மலர்ந்தருளிய கோலம். "ஒருங்கே மறிந்து கிடந்து அலர்ந்த மென் கால் கமலம்" என்றது எம்பெருமான் ஒரு பக்கமாக சாய்ந்து கிடந்தருளிய கோலத்துக்கு உவமை. "கமல தடம்போல் பொலிந்தன" என்பெருமான் பள்ளி கொண்ட நிலையில் திருக்கண் மலர்ந்தருளியதற்கு உவமை.

அரும்பதவுரை : வன் - வலிமை, அறைய - வீச ஒருங்கே - ஒருபக்கமாக. மறிந்து - சாய்ந்து. அலர்ந்த மலர்ந்த. கமலத்தடம் - கமலத்தண்டு. வான் நிமிர்ந்த - மேல் உலகை நோக்கி வளர்ந்த.

(தலைமகனுரு வெழிலுரைந்த தலைமகள் வார்த்தை)

கண்ணுஞ் செந்தாமரை கையுமவையடியோவ
வைவே

வண்ணங் கரிய தோர் மால்வரை போன்று மதி
விகற்பா

விண்ணுங் கடந்தும் பரப்பான் மிக்கும் மற்றெப்பால் யவர்க்கு
மெண்ணு மிடத்ததுவோ வெம்பிரான தெழில் நிறமே. 43

விளக்கவுரை : கண்ணும் செந்தாமரை, கையும் செந்தாமரை, அடியோ அவையே. எம்பெருமானது வண்ணம் ஓர்மால் வரை போன்று கரியது. மதி விகற்பால் விண்ணும் கடந்து சுவர்க்க லோகத்துக்கு அப்பால் சென்று மற்று எப்பாலும் யாவர்க்கும் நித்திய சூரிகளுக்கும் எண்ணும் இடத்ததுவோ எம்பிரானது எழில் நிறமே.

திறனாய்வு : எம்பெருமான் திருஉருவுக்கு ஒப்பாக இவ்வுலகில் எதையாகிலும் கூற இயலுமா? இயலாது என்பது யாவரும் அறிந்ததே. அப்படி ஏதாகிலும் ஒன்றை உவமையாகக் கூறினால் மற்றொன்று அதற்கு ஈடாகுமா? ஆகவே ஆகாது. ஆதலின் எம்பெருமான் கண்ணுக்கு செந்தாமரையை உபமானமாகக் கூறியபின் கைகளுக்கு, அவன் பாதங்களுக்கு என்று சிந்தித்துப் பார்த்து கைகளும் செந்தாமரை போன்றதே அவன் பாதங்களும் செந்தாமரையைப் போன்றதே என்கிறார் வேறு ஒன்றை ஒப்பிட இயலாத தலைவி.

> "கைவண்ணம் தாமரை வாய்கமலங் போலும்
> கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே"

என்றனர் திருமங்கையாழ்வார். திருநெடுந்தாண்டகம் 21. தலைமகள்தன் தலைவன் உருவை நினைந்து காண்கிறாள். "கண்ணும் செந்தாமரை" என்கிறார். கையைப் பார்க்கிறார். "கையும் அவை" என்றதால் இருகைகளும் செந்தாமரை போன்று எழில் கோலமாகத் திகழ்கிறது. திருவடிகளைப் பார்க்கிறார். "அடியோ

அவையே''என்றுவியந்துகாண்கிறார். ஐயம்திரிபு அற சந்தேகம் இல்லாமல் அவன் பாதங்களும் கமலமலர் களே என்கிறார். ''அடியோ அவையே'' என்பதனை ''அடியும் அஃதே'' என்பதுடன் ஒப்பிட்டுக் காண்க.

''தோள் கண்டார், தோளே கண்டார் தொடுகழல் கமலம் அன்ன
தாள் கண்டார், தாளே கண்டார், தடக்கை கண்டாரும் அஃதே''

என்றனர் கம்பநாட்டாழ்வாரும். பாலகாண்டம். உலாவியற் படலம் 19. அவன் ''வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று'' என்கிறார். அவனுடைய மேனி அழகு கரியதோர் பெரிய மலைபோன்றது என்கிறார். இவையனைத்தும் ஆழ்வார் தம் அகக் கண்ணால் கண்டு களித்தது. ஆனால் சிலர் ''மதி விகற்பால்'' அதாவது அறிவு வேறுபாட்டால் அல்லது அறிவு மிகுதியால், ''விண்ணும் கடந்து, உம்பர் அப்பால் மற்று எப்பால் யவர்க்கும் எண்ணும் இடத்ததுவோ எம்பிரானது எழில் நிறமே'' என்கிறார். எம்பெருமானை அகக்கண்ணால் கண்டு இன்புற்றதை சிலர் மதிவிகற்பத்தால். ''வண்ணையும் கடந்து சென்று தேவர் உலகுக்கு அப்பால் சென்று அதன்மேல் பரமபதத்தில் உள்ள நித்திய சூரிகள் எண்ணிப் பார்க்கும் தன்மையுடையதுவோ எம்பிரானது எழில் கோலம் என்கிறார். ஆழ்வார்கள் இங்கு எம்பெருமான் திருமேனி அழகைக் கண்டு களித்தது போன்று நித்திய சூரிகளால் பரமபதத்தில் கண்டு இன்பமடைதல் இயலுமோ? இயலாது என்றபடி. எம்பெருமான் திருமேனி எழிலை இங்கு கண்டுகளிக்காதவன் பரமபதம் சென்று காண்பது என்பது பெரிய பொய் என்பதாம் என்க.

திருமங்கையாழ்வாரும் இதே சிந்தனையினராய்,

"ஓராமையன்றே? உலகத்தார் சொல்லும் சொல்
ஓராமையாமாறு அதுவுரைக்கேன் கேளாமே
காரார் புரவியேழ் பூண்டதனியாழித்
தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆராவமுதங் கெய்தி—அதினின்றும்
வாராதொழிவ தொன்றுண்டே? அது நிற்க
ஏரார்முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே"

என்று சிறிய திருமடலிலும்;

"...........ஈங்கு உடலம் விட்டெழுந்து
தொன்னெறிக்கண் சென்றா ரெனப்படும்
சொல்லலல்லால்
இன்னதோர் காலத்து இனையார் இது பெற்றார்
எனவும் கேட்டறிவதில்லை—உளதென்னில்
மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின்
நன்னடுவுள்
அன்னதோரில்லியினூடுபோய்—வீடென்னும்
தொன்னெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்
சொல்லாதே
அன்னதே பேசும் அறிவில் சிறுமனத்து..."

என்று பெரிய திருமடலிலும் அருளியிருத்தல் இங்கு நினைவு கூறுக. இதற்கான விளக்கம் அடியனேன் சிறிய திருமடல், பெரிய திருமடல் உரைநூல் பக்கம் 5-7; 71-76 காண்க. நம்மாழ்வார் அருளிய இப்பாசுரத்தின் உள்ளறைப் பொருளை சிறிய திருமடல் பெரிய திருமடல் உரை நன்கு தெளிவுபடக் கூறியிருப்பதைக் காணலாம். "மதிவிகற்பால்" என்றதை திருமங்கையாழ்வார் "ஓராமையன்றே" என்கிறார். "விண்ணுங்கடந்து உம்பர் அப்பால்" என்றதையே "தனியாழி தோரார் நிறை கதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு" என்கிறார் திருமங்கையாழ்வார். எம் பெருமானை ஆழ்வார் கண்டு இன்புற்று மகிழ்ந்தது

போன்று நித்திய சூரிகளும் கண்டு இன்புற இயலாது, அதாவது இங்கு, இவ்வுலகில் எம்பெருமானைக் கண்டு களிக்காதவர்கள் பரமபதமடைய முடியாது என்றபடி.

அரும்பதவுரை : மதி - அறிவு. விகற்பம் - வேறு பாடு, உம்பர் - தேவர். யாவர்க்கும் - நித்திய சூரியர் யாவர்க்கும். எண்ணுமிடத்துவோ - எண்ணிப் பார்க்கையில் இயலாதது என்றபடி.

(தலைவி தலைவன் பெருமை யுரைத்தல்)

நிறமுயர் கோலமும் பேருமுருவு மிவையிவையென்
றறமுயன் ஞானச்சமயிகள் பேசிலுமங்கங் கெல்லா
முறவுயர் ஞானச்சுடர் விளக்காய் நின்றதன்றி
யொன்றும்
பெறமுயன்றாரில்லையா லெம்பிரான
பெருமையையே. 44

விளக்கவுரை : நிறமும், சிறந்த அலங்காரமும், திருப்பெயரும் வடிவமும், இவை இவை என்று அறம் முயன்று பெற்ற ஞானசமயிகள் பேசிலும் ஆங்காங்கு எல்லாம் உறவு உயர் ஞானச் சுடர் விளக்காய் நின்றது அன்றி எம்பிரான் பெருமையை அளவிட்டுக் கூறுதற்கு முயன்றார் இல்லையால்.

திறனாய்வு : எம்பெருமானை மனக்கண்ணால் கண்டு மகிழ்ந்த தலைவி அவன் திருவடிவழகைக் கண்டவர்கள் அவனது பெருமையை முழுமையாக உணர்ந்தாரில்லை எனக் கூறும் பாசுரம்.

"வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை
முடியக்கண்டார்?
ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவு
கொண்டாரை ஒத்தார்."

என்ற கம்பன் வாக்கை ஈங்கு நினைவு கூறநல்கும். பாலகாண்டம் உலாவியற் படலம் 19. எம்பெருமானை அவரவர் மனக் கண்ணுக்கு ஏற்ப தாம் ஒவ்வொரு பகுதியை அறிந்தாரேயன்றி முழுமையாக எம்பெருமானைக் கண்டாரில்லை என்பதாகக் கூறும் பாசுரம்.

''நிறம் உயர் கோலமும்'' என்றது அவன் மேனி அழகும் அவன் உயர்ந்து நின்ற திருக்கோலமும் என்பதாம். ''பேரும் உருவும்'' என்றது அவனுடைய நாமம் ஆயிரமும் அவன் கொண்ட பல உருவங்களும் என்பதாம்.

உருவும் என்றது அவன் எடுத்த பல அவதாரத் தோற்றங்கள். ''இவை இவை என்று'' என்றது இன்னின்ன உருவம் எடுத்தான் என்பதாம். ''அறம் முயல் ஞானம் சமியிகள்'' என்றது அறத்தின் வழி நின்று ஞானம் பெற்ற முனிவர்கள் என்பதாம். ''பேசிலும்'' என்றது குறிப்பிட்டுச் சொன்னாலும் என்பதாம்''அங்கு அங்கு எல்லாம் உறஉயர் ஞானம் சுடர் விளக்கு ஆய்'' என்றது அந்தந்த திருநாமம் திருஉருவம் இவை எல்லாம் அறிவுச்சுடரினால் சிறிது விளக்கப் பெற்று என்பதாம். ''நின்றது அன்றி எம்பிரான் பெருமையை'' என்றது அறிவுச் சுடரினால் சிறிது விளக்கம் பெற்று நின்றதல்லாமல் எம்பிரான் பெருமையை, மகிமையை என்பதாம். ''ஒன்றும் பெற முயன்றார் இல்லை'' என்றது முழுமையாக எம்பெருமானை அவன் வெளித் தோற்றம் மட்டுமன்றி அவன் மகிமையை முழுமையாகத் தெரிந்துகொள்ள முயன்றவர் யாரும் இல்லை என்பதாம். குருடர் கண்ட யானைபோன்று என்றபடி.

அரும்பதவுரை : பேரும் - எம்பெருமானது ஆயிரம் திருநாமங்கள். உருவு - அவன் எடுத்த அவதார உருவங்கள். அறம்முயல்ஞானம் - அறத்தின் வழி

நின்று பெற்ற அறிவு. சமயிகள் - முனிவர்கள். ஞானம் நிறைவு பெற்றவர்கள். உறஉயர் ஞானம் - மிகுந்த உயர் அறிவு. இல்லையால் - இல்லை. ஆல் ஆசை.

**(தலைவி தலைவனது நீரிடை யுதவியை நினைந் துரைத்தல்)**

பெருங்கேழலார்தம் பெருங்கண் மலர்ப் புண்டரீக
நம்மே
லொருங்கே பிறழவைத்தாரிவ் வகால மொரு
வர் நம்போல்
வருங்கேழ் பவருளரே தொல்லை வாழியஞ்சூழ் பிறப்பு
மருங்கேவரப் பெறுமே சொல்லுவாழி
மடநெஞ்சமே 45

விளக்கவுரை : மட நெஞ்மே! பெரிய பன்றி அவதாரம் செய்த எம்பிரான் இக்காலத்தில் தமது பெரிய செந்தாமரை மலர்போலும் திருக்கண்களை நம் மேல் ஒருங்கே படும்படி பிறழவைத்தார். அவனது திருக்கண்கள் நம்மேல் படர்ந்ததனால் நம்மைப் போன்று அவனுடன் பொருந்திய சம்பந்தம் பெற்றவர் வேறு ஒருவர் உளரோ? அன்று அவனுடன் பழமை யான வாழ்க்கையையும் உடையோம். அப்படியிருக்க இறந்து இறந்து பிறக்கும் சூழ்பிறப்பு நமக்கு வரக் கூடுமோ? சொல்லுவாய்.

திறனாய்வு : இப்பாசுரம் இயற்கைப் புணர்ச்சி யைத் தலைவி நினைந்து மகிழ்ந்து கலங்குவதாக அமைந்தது. களவொழுக்கத்தில் தலைவனும் தலைவி யும் மனத்தால் ஒருவரை ஒருவர் விரும்பியதால் திருமணம் ஆகா முன்பே தனி இடத்தில் புணர்ந்து இன்புற்றதையும் பின்பு யாவரு அறியத் திருமணம்

செய்து அழைத்துச் செல்லத் தன் தலைவன் வருவான் என்று எதிர்பார்த்து நிற்கும் நிலையில் அவர்கள் இருவரும் கலந்து இன்புற்றதை நினைந்து ஏங்குதலாம். ''மட நெஞ்சமே!'' என்று தன் பேதமையை, நினைந்து வருந்துகிறாள். மடமை கொண்ட நெஞ்சமே; பேதமை கொண்ட மனமே என்பதுவுமாம். இந்த மடமை கொண்ட நெஞ்சம்தான் தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சிக்கு இடம் கொடுத்தது ஆதலின் அந்த இன்ப நிகழ்ச்சியைத் தந்த ''மடநெஞ்சமே!'' ''வாழி'' என்கிறார். எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணி எண்ணி ஓங்கும் நிலை. துன்பம் கலந்த இன்ப நினைவுகள். பிரளயகாலத்தில் கடலினுட்பட்ட பூமிப் பிராட்டியை எம்பெருமான் வராக அவதாரத்தால் காத் தருளியதும், பூமிப்பிராட்டியைப் புணர்ந்ததும் இங்கு நினைவு கூறப்படுகிறது. ''பெருங்கேழலார்'' என்று எம்பெருமான் போற்றப்படுகிறார். ''கேழல்'' என்றால் பன்றி என்பது பொருள். பெருங்கேழலார் என்றதால் பெருமைமிக்க பன்றி அவதார மெடுத்தவர். வராக மூர்த்தியை இங்கு மகாவராக மூர்த்தி எனச்சிறப்பிக் கிறார்.

> ''மின்னிவ் வகலிடத்தை மாமதுநீர்தான் விழுங்கப்
> பின்னுமோ ரேனமாய்ப் புக்குவளை மருப்பின்
> கொன்னவிலும் கூர்நுதிமேல் வைத்தெடுத்த
> கூத்தனை''

என்று சிறப்பிக்கிறார் திருமங்கையாழ்வார். பெரிய திருமடல். இதற்கான விளக்கம் எமது சிறிய திருமடல் பெரிய திருமடல், உரை பக்கம். 129-130 காண்க. ''பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர் புண்டரீகம் நம்மே ஒருங்கே பிறழ வைத்தார்'', என்கிறார். ''பெருங் கண் மலர்'' என்றது பெரிய மலர்க்கண்கள் என்பதாம். பெருங்கேழலார் கண்களும் பெரியதாகத்தான் இருக்க

முடியுமாதலின் "பெருங்கண் மலர்" என்றனர். "புண்ட ரீகம்" என்பதும் தாமரை மலரையே குறிக்கும். தாமரை மலர் போன்று மலர்ந்த கண்கள் என்றபடி. "நம்மேல் ஒருங்கே பிறழுவைத்தார்" என்பதில் 'ஒருங்கே'என்றது முழுமையாக என்பதாம். மலர்ந்த கண்கள் நம்மேல் ஒளிர்ந்து சென்றது என்றபடி. "பிறழுதல்" என்றது இங்கு ஒளிருதல் எனப்பொருள் படும். கண்கள் பிறழு வதால் எழும் ஒளியை இங்கு "பிறழ" எனக் கூறினார். நம்மேல் எம்பெருமான் அருள் விழிகள் பாய்ந்து நின்றன என்பதாம். "பிறழ்தல்" என்பது ஒரு நிலையி லிருந்தும் மாறுபட்டு என்பதாம், எம்மேல் பளிச்சிட வைத்தார். இது கடைக்கண் பார்வையிலும் வேறு பட்டது. ஒளிப்பிழம்பு முழுமையாகப் பாய்ந்து சென்றதைக் குறிப்பதாகும். "இ அகாலம் நம்போல் வரும் கேழ்வர் ஒருவர் உளரே?" என்றதில் "அகாலம்" என்றது தக்க தருணம் அன்று என்பதாம். காலத்தின் எதிர் அகாலம் என்பதாம். பருவம் அடையாத நிலை எனலாம். "நம்போல் வரும்" என்றது நம்மைப்போல் வருமா என்பதாம். நம்மைப்போல் பொருத்தமானவர் என்பதுவுமாம். "கேழ்பவர்" என்பது ஒப்பாரும் மிக்காரும் என்பதாம். நம்மைப்போல் பொருத்தமான வரும் ஒப்பாரும் மிக்காருமான ஒருவர் உளரோ என்ப தாம். "உளரே" என்பது "உளரோ" என்பதன் சிதைவு. "கேழ்பவர்" என்ற சொல்லுக்கு நிறமுடையா ரென்றும், பெருமை யுடையாரென்றும், நன்மை யுடையாரென்றும் பொருள்படும். "கேழ்" என்ற சொல் ஒப்பு, நிறம் ஒளி எனும் பொருளில்வரும். "நம்போல் வரும் கேழ்பவர் உளரே?" என்றதால் ஒருவரும் இலம் என்பதாம். "தொல்லை வாழியம்" என்றது முன்பு நடந்த இன்ப நிகழ்ச்சி. தலைவனுடன் இன்புற்றிருந்த நிலையை இங்கு நினைவு கூறுகிறார். இயற்கைப் புணர்ச்சியில் இன்புற்றிருந்தது. பிரளய காலத்து

எம்பெருமானார் கடலினுள் மூழ்கிய பூமிப்பிராட்டியை மீட்டு அவளுடன் கூடிய இயற்கைப் புணர்ச்சி. "தொல்லை" என்பது தொன்மையை உணர்த்துவது" "தொல்லை வாழி அம் சூழ் பிறப்பு" என்றது தொல் வழித் தொடர்பை நினைவூட்டுவதாகும்.

"பருகிய நோக்கனும் பாசத்தாற்பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணாலும் வாள் - கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கு, இதயம் எய்தினார்"

என்றனர் கம்பநாட்டாழ்வார். பாலகாண்டம் மிதிலைக் காட்சிப் படலம் 37. மேலும் அடுத்த செய்யுளில்,

மருங்கு இலா நங்கையும், வசை இல் ஐயனும்
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர்ஒன்று ஆயினார்
கருங் கடல் பள்ளியில் கலவி நீங்கி......

என்று தொல்வழித் தொடர்பால் எவ்வாறு ஈர்க்கப் பட்டனர் எனச் சுட்டிக் காட்டுகிறார் கம்பர். இதனையே "தொல்லை வாழிஅம் சூழ்பிறப்பு" என்றனர் நம்மாழ்வார். எம்பெருமானை எல்லாப் பிறப்புகளிலும் அவதாரங்களிலும் தொடர்ந்து வரும் பிறப்புகள் யாவும் இன்பம் சேர்ப்பவையாதலின், "வாழி அம் சூழ் பிறப்பு" என்றனர். "அம்" என்பது அழகு இன்பம் இவற்றை உணர்த்தும். பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த, அவனுடன் இருந்த தொன்மை யான தொடர்பு வாழி என்பது ஒரு பொருள். "தொல்லை அம் ஆழி சூழ் பிறப்பு" எனப் பிரித்து தொடர்ந்து வரும் பிறவிப் பெருங்கடலான பிறப்பு எனவும் காண்க. "ஆழி" என்பது இங்கு கடல். "மருங்கேவரப் பெறுமே" என்றது பிறவித்துன்பங்கள் அருகில் வருமோ என்பதாகும். "சொல்லு" என்றது மடநெஞ்சமே நீ சொல்லு என்பதாகும். எம்பெருமான்

அருள் பெற்றவர் தம்மிலும் உயர்ந்தோர் யாரும் இலம் ஆதலின் பிறவித்துன்பங்கள் அருகில் வரவும் அஞ்சும் என்பதாகும். எமக்கு நிகர் யாரும் இல்லை என்றபடி.

''திறஞ்செற்று இரவும் பகலும் விடாது என்தன்
சிந்தையுள்ளே
நிறைந் தொப்பறவிருந்தான் எனக்குஆரும்
நிகரில்லையே''

என்றனர் திருவரங்கத்தமுதனார். இராமானுச நூற்றந்தாதி 47.

அரும்பதவுரை : பெருங்கேழலார் - ம கா வ ரா க அவதாரி. கேழல் - பன்றி. எம்பெருமான் பன்றி அவதாரம் எடுத்து பிறப்பில் உயர்வு தாழ்வு இன்மையை உலகுக்கு உணர்த்தியவர் ஆதலின் பெருங்கேழலார் ஆனார். பிரழுதல் - படர்ந்து செல்லு தல். அகாலம் - ஆகாத காலம். பொருந்தாக்காலம். கேழ்பவர்-பொருத்தமானவர். ஒப்பானவர். தொல்லை- தொன்மை. பழமை. மருங்கு - அருகில். மடநெஞ்சம்- பேதை மனம்.

**(நெஞ்சைத் தூது விட்ட தலைவி இரங்கல்)**

மடநெஞ்சமென்றுந்தம தென்றுமோர் கருமங்கருதி
விட நெஞ்சை யுற்றார்விடவோவமையுமப் பொன்
பெயரோன்
றட நெஞ்சங்கீண்டபிரானார் தமதடிக்கீழ் விடப்
போய்த்
திட நெஞ்ச மாயெம்மை நீத்தின்று தாறுந்
திரிகின்றதே 46

விளக்கவுரை : மடநெஞ்சம் என்றும், தமது அந்தக் கரணமென்றும் ஒரு கருமம் கருதி மனத்தைத்

தூது விடத் துணிந்தவர் அந்தத் துணிவை விடுதல் தகுதி. ஏனெனில் பொன் பெயரோன், இரணியனது அகன்ற மார்பை எளிதாகப் பிளந்தருளிய எம்பெரு மானது திரு அடிகளில் யாம்எமது மனத்தைத் தூது விட, அது விரைந்து சென்று உறுதியான மனத்துடன் எம்மை நீத்துத் தூதனுப்பிய என்னைக் கைவிட்டு விட்டு இன்றளவும் எம்பெருமானையே இனிதாகத் தொடர்ந்து சுத்திச் சுத்தித் திரிந்து கொண்டிருக்கிறது.

திறனாய்வு : தூது சென்ற மனம் திரும்பாது தலைவனையே சுற்றித் திரிவதைக் குறித்து இரங்கும் பாசுரம். தன் நெஞ்சு நீங்கித் திரும்பாததால் பிறரை இதுபோன்று தூது அனுப்பி வேதனையடைய வேண்டாமென்று ஒரு எச்சரிக்கை விடுவதையும் இங்கு காண்கிறோம் இதனையே திருமங்கைமன்னர்,

> ''வாராய் மட நெஞ்சே! வந்து—மணிவண்ணன்
> சீரார் திருத்துழாய் மாலை நமக்கருளித்
> தாரான் தருமென் றிரண்டத்தி லொன்றதனை
> ஆரானு மொன்னாதார் கேளாமே சொன்னக்கால்
> ஆராயு மேலும் பணிகேட் டதன்றெனிலும்
> போரா தொழியாதே போந்திடு நீ யென்றேற்குக்
> காரார் கடல்வண்ணன் பின் போன நெஞ்சமும்
> வாராதே யென்னை மறந்ததுதான்—
> வல்வினையேன்''

என்பர் சிறிய திருமடலில். அடியனேன் உரைநூல் பக்கம் 42-46 காண்க.

''ஒரு கருமம் கருதி'' என்றது ஒரு காரியம் நிறைவு பெற வேண்டி என்பதாம். தலைவி தன் தலைவனை அடைந்து விடக்கருதி என்பது சிறப்பான பொருள். தலைவன் வந்து தன்னைப் புணர்ந்து இன்பம் தருவான் என்ற எண்ணத்தில், 'மடம் நெஞ்சம் என்றும்'

அதாவது மடமை கொண்ட நெஞ்சமே என்றும் என்பதாம். "தமது என்றும்" என்றது என் மனமே என்பதாம். இது பேதமையின் ஒரு நிலை. தன்னைத் தானே இகழ்ந்து கொள்ளும் நிலை. மனத்தை நொந்து கொள்ளும் நிலை. பேதை நெஞ்சமே என் நெஞ்சமே என்ற துயர் நிலையை இங்கு விவரிக்கிறார். அவ்வாறு துயருறுதலை விடுத்து அவ்வாறு மனத்தை அலை கழிக்கப்படுதலை விடுத்து என்பதனை "நெஞ்சை விட உற்றார் விடவோ அமையும்" என்கிறார். "நெஞ்சை விட உற்றார்" என்றது, மனத்தைத் தூது செல்லத் துணிந்தவர் என்பதாம். மனத்தை அலைகழிக்கப் விட்டவர் என்பதாம். மனத்தைத்தூது செல்லத் துணிந்தவர் அதனை "வடவோ அமையும்" என்கிறார். மனத்தைத் தூது செல்வதினின்றும் தடுத்து ஒரு நிலையில் நிறுத்தி வைத்தால் தகுதியுடைத்து என்பதாம். நெஞ்சை விடுதல் தகுதியற்ற செயல். அதனை விட்டு நிலை நிறுத்துவது அமைதியைக் கொடுக்கும் என்று கூறி அதற்கான காரணத்தையும் விளக்குகிறார்.

இரணியன் தனக்குத் தேவர், அசுரர், மனிதர், விலங்கு முதலியவர்களாலும் அவர்களின் ஆயுதங்களாலும், பகலிலும் இரவிலும், பூமியிலும், ஆகாயத்திலும், வீட்டினுள்ளும் மரணம் வரக் கூடாது என்று வரம் பெற்றிருந்தான். தன் மகன் பிரகலாதாழ்வாரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு.

"அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்
உளந்தொட டிரணியன் ஒண்மார்வகலம்
பிளந்திட்ட............"

அந்த நாராயணன் திருவடிகளில் தூதுபோய் இன்றளவும் நீங்காது திரியும் மனத்தை இங்கு சுட்டிக் காட்டுகிறார். 'அளந்திட்ட தூணை" எனும் பாசுரம்

பெரியாழ்வார் திருமொழி 1.6.9 காண்க. பொன்னின் பெயருடைய இரண்யன் என்பதை "அ பொன் பெயரோன்" என்றனர்.

> "போரார் நெடுவேலோன் பொன்பெயரோ
> னாகத்தைக்
> கூரார்ந்த வள்ளுகிராற் கீண்டு—குடல்மாலை
> சீரார் திருமார்பின் மேற்கட்டிச் செங்குருதி
> சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி
> ஆரா வெழுந்தா னரியுருவாய்..."

என்றனர் திருமங்கையாழ்வார். சிறிய திருமடல் உரை நூல் பக்கம் 31-32 காண்க. "அபொன்பெயரோன் தட நெஞ்சம் கீண்ட பிரானார்" என்று சிறப்பிப்பது காண்க. "பொன்பெயரோன்" என்றது இரண்யன். இரண்யம் என்ற வடசொல்லுக்குப் பொன் என்று பொருள் படுமாதலின் பொன் பெயரோன் என்றனர். "தட நெஞ்சம்" என்றது அகன்ற மார்பை. "கீண்ட" என்றது கிழித்த, பிளந்த என்பதாம். "பிரானார்" என்றது எம்பிரான். "தமதடிக்கீழ் விட" என்றது அவன் கமலபாதங்களில் மனத்தையிழந்து என்பதாம். மனத்தை அவன் பாதங்களில் சூட்ட, அவன் கமல பாதங்களில் சூட்டப்பட்ட என் நெஞ்சம் ஆங்கு சென்றது சென்றதுதான். "திட நெஞ்சம் ஆய் எம்மை நீத்து இன்றுதாறுந் திரிகின்றதே" என்கிறார் "திட நெஞ்சம் ஆய்" என்றது மனம் உறுதி கொண்டு என்பதாம். "எம்மை நீங்கி இன்று தாறும் திரிகின்றதே" என்றது எம்மை நீங்கி இன்றுவரையிலும் அந்த நாராயணன் பாதங்களையே சுற்றித் திரிகின்றதே என் செய்வேன். ஆதலின் ஓர் கருமங் கருதி மடம் நெஞ்சம் என்றும் தமதென்றும் மனத்தைத் தளர விடவேண்டாம் என்றபடி.

அரும்பதவுரை : தமது என்றும் - என் நெஞ்சமே என்றும். ஓர் கருமங்கருதி - ஒரு காரியத்திற்கா எம்பெருமானை அடைந்திட வேணுமென்பதற்கா விட - தூதுவிட. விடவோ அமையும் - அவ்வாறு தூ அனுப்புவதை விட்டுவிட. அமையும் - தெளியும். தகு பெறும் - தகுந்த செயல். பொன் பெயர் - இரண்யன் இரண்யம், பொன் எனப் பொருள்படும். தடநெஞ்ச அகன்ற மார்பு. கீண்ட - கிழித்த. பிரானார் - எம்பெ மான். திட நெஞ்சம் - மனஉறுதி. தாறு - வரையி இன்றுதாறும் - இதுவரையிலும்.

(பிரிவாற்றாது வருந்துந் தலைவி நிலை கண்டு செவிலி இரங்கல்)

திரிகின்றது வடமாருதந்திங்கள் வெந்தீ முகந்து
சொரிகின்றதுவதும்மது கண்ணன் விண்ணூர்
தொழவே
சரிகின்றது சங்கந் தண்ணந் துழாய்க்கு வண்ணம்
பயலை
விரிகின்றது முழுமெய்யுமென்னாங் கொலென்
மெல்லியற்கே. 4

விளக்கவுரை : வாடைக் காற்று திரிகின்றது நிலவும் கொடிய தீயை முகந்து கொண்டு வந் சொரிகின்றது. அவ்வாடையும் தீயையே கொண் வந்து வீசித் திரிகின்றது. கண்ணபிரானது பரமபத தைத் தொழுதற்கு எழுந்த ஆசையினால் என் கைக லிருந்த வளையல்கள் கழன்று விழுகிறது. குளிர்ந் அழகிய திருத்துழாயினிடத்தில் வைத்த ஆசையினா உடல் முழுவதும் பயலை நிறம் பரவுகின்றது. இ எனதுமெல்லியளாகிய என்மகளுக்கு என்ன ஆகுமோ

திறனாய்வு : தலைவனைப் பிரிந்த தலைவியன வாட்டுவது வாடை, நிலவு, இரவு இம்மூன்றுமா

பிரிவாற்றத தலைவி வாடைக்கும், இருளுக்கும், நிலவுக்கும் வருந்தி உரைத்த பாசுரங்களை முன்பே பார்த்தோம். அவை மூன்றையும் ஒரே பாசுரத்தில் கூறி யிருத்தல் இங்கு சிறப்பு. ''வடமாருதம் திரிகின்றது'' என வாடையைத் ''திரிகின்றது'' என்ற சொல்லால் வாடை தரும் துயரை உணர்த்துகிறார். எப்படி யாகிலும் இவளின் உயிரை எடுத்துச் சென்றுவிட வேண்டும் எனத்துடிக்கும் காலன் தூதுவன் போன்று திரிகிறது என்பது காண்க. ''வாடை'' என்பதை வடக்கு நோக்கி வீசும் காற்று என்றும் கூறுவர். அதாவது தென்றல் என்பர். ஆதலின் ''வாடை'' என்றது தென்றல் எனினுமாம். ''மாருதம்'' என்றால் காற்று என்பதாம். அடுத்து, ''திங்கள் வெம்தீ முகுந்து சொரிகின்றது'' என்கிறார். காற்று வீசுவதால் ''திரி என்றது'' என்றனர். திங்கள் வானத்தினின்றும் தன் ஒளிக் கதிர்களைப் பொழிவதால் ''சொரிகின்றது'' கின்றனர். ''வெம்தீ முகந்து சொரிகின்றது'' என்கிறார். ''முகந்து'' என்றது குடம் போன்ற பாத்திரத்தில் மொண்டு கொள்தல் என்பதாம் வெம் தீயை முகந்து சொரிகின்றன என்றனர். அடுத்து ''அதுவும் அது'' என்பது வாடையும் அதுபோன்றே வெம்தீ சொரிகிறது என்பதாம். ''அது'' என்பது ''அதே'' என்றதன் திரிபு. அதே என்பது திங்கள் செய்ததையே வாடையும் செய் தது என்பதாக அமைந்தது. ''கண்ணன் விண்ணூர்'' என்றது பரமபதம். திரு வைண்டம் என்பதாம். ''தொழவே'' என்றது தொழுதற்கு ஆசைப்பட்டு என்ப தாம். எம்பெருமான் விண் உலகில் அவன் பரமபதத் தைப் பற்றி வாழ்ந்திட ஆசைப்பட்டு அதுகிட்டாத நிலையில் ''சங்கங்கள் சரிகின்றது'' என்கிறார். எம் பெருமானைக் கண்குளிரக் கண்டு பேரானந்தம் கொண்டு அவன் நிழலில் நிற்கவேண்டி இன்புற்று அவன் திருவடிகள் கிடைக்கப் பெறாமல் ''வண்ணம்

பயலை முழு மெய்யும் விரிகின்றது'' என்கிறார். அவள் மேனி அழகு சிதைந்து பயலை உடல் முழுதுவதும் பரவுகின்றது என்பதாம். ''சங்கங்கள் சரிகின்றன'' என்பதுவளையல்கள் கழன்று விழுகின்றன என்பதாம். உடல்·மெலிந்து சங்கங்கள் சரிவதாலும், மேனி பயலை நிறமடைந்து உடல் முழுதும் பரவுவதாலும் இனி என் மகள் நிலை என்னவாகுமோ என்று அஞ்சிய செவிலி, ''என் மெல்லியற்கு என் ஆம் கொல்'' என்கிறார். மென்மையான தன்மையுடைய என் மகளுக்கு இன்னும் என்னென்ன நேரிடுமோ என்று அஞ்சுகிறாள்.

அரும்பதவுரை : மாருதம் - காற்று. முகந்து - மொண்டு. சொரிதல் - பொழிதல். அதுவும் அது - அதே துன்பத்தைச் செய்யும் வாடை இதனை இரவு எனவும் பொருள் பிரித்துக் காணலாம். சங்கம் - சங்குகளினால் ஆனவளையல். வளையலுக்கு ஆகு பெயராய் அமைந்தது. தண்ணந்துழாய் - குளிர்ந்த திருத்துழாய். வாடைக்கும், நிலவுக்கும், இருளுக்கும் அஞ்சித் தண்ணந் துழாயை நாடியது காண்க. பயலை பசப்பு. சோகை விரிதல் - பரவுதல். முழுமெய் - மெய் முழுவதும். மெல்லியற்கே - மென்மையுடைய பெண். மென்மை யெனும் பண்பை அடிப்படையாகப் பிறந்தது. சங்கு வளையல்களாக அணிதல் ஒரு மரபு. எனது பாட்டி சங்கு வளையல்கள் அணிந்திருந்ததைப் பார்த்துள்ளேன்.

**(நன்னிமித்தங் கண்டு தான் ஆறியிருத்தலைத் தலைவி தோழிக்குக் கூறியது)**

மெல்லியலாக்கைக் கிருமிக் குருவின் மிளிர்ந்தந்தாங்கே
செல்லிய செல்கைத்து லகையென் காணு
மென்னாலுந் தன்னைச்

சொல்லிய சூழற்றிரு மாலவன் கவியாது கற்றேன்
பல்லியின் சொல்லுஞ் சொல்லாக் கொள்வதோவுண்டு
பண்டு பண்டே 48

விளக்கவுரை : மென்மையான உடலையுடைய புழுவானது புண்ணில் தோன்றி அங்கேயே வாழ்கின்ற செயலையுடையது. உலக நடக்கையை எவ்வாறு அறியும்? அதுபோல என்னைக்கொண்டு தன்னைச் சொல்லுவித்த சூழ்ச்சியுடைய திருமால் அவன் காட்டிய கவிதை யாது என்று அறிவேன்? பல்லியின் வார்த்தை யையும் சொல்லாகக் கொள்ளுதல் மிக வெகுகாலமாக உள்ளது.

திறனாய்வு : இதுகாறும் தலைவி தலைவனைப் பற்றித் தான் சொன்ன சொற்கள் எத்தகைத்து என எடைபோட்டுப் பார்க்கும் பாசுரம். அதற்கு முதன் முதலில் தன்னை ஒரு புண்ணில் தோன்றிய புழுவுக்கு ஒப்பிட்டுக்காண்கிறார். புண்ணிலே தோன்றிய புழு அதிலே நெளிந்து உவகையடைவது போன்று தன் செயல்களை ஒப்பிட்டுக் காண்கிறார். "மெல் இயல் ஆக்கைக் கிருமி' என்று புழுவில் தோன்றும் கிருமியின் ஒன்றும் இல்லாச் சிறுமையைக் குறிப்பிடுகிறார் சென்ற பாசுரத்தில் அமைந்த "மெல்லியல்" என்ற சொல்லுக் கும் இதற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு என்பது காண்க. "மெல் இயல் ஆக்கை" என்றது மிருதுவான புழுவின் உடல். மிகவும் சிறியது மட்டுமன்று மிகவும் மென்மையானதும் எளிதில் அழிந்து விடும் தன்மை யது ஆதலின்" மெல் இயல் ]ஆக்கைக் கிருமி" என்றனர். "கிருமிக்குருவில் மிளிர்ந்தந்து" என்று "மெல் இயல் ஆக்கை" உடைய கிருமி புண்ணில் ஒளிர்ந்து என்கிறார். புண்ணில் புழுக்கள் நெளிவது கண்ணைக் கவறும் தன்மையதாதலின்

''மிளிர்தந்து'' என்கிறார். ''தந்து'' என்று ''மளிர் தலோடு விகுதி சேர்ந்திருத்தலால் அப்புழுக்கள் மிளிரு தன்மையை உணர்த்துவதாகும். கயிறு அல்லது நூ சுருண்டு சுருண்டு கிடப்பது போன்று கிருமிகள் சேர்ந் கிடக்குமாதலின் ''மிளிர்தந்து'' என்றனர். ''ஆங்ே செல்லிய செல்கைத்து'' என்றது நெளிந்து கிட கின்ற தன்மையது என்றபடி.

''வேம்பின்புழுவேம்பன்றியுண்ணாது அடியேன்
நான்பின்னும் உன்சேவடி யன்றி நயவேன்''

என்றனர் திருமங்கையாழ்வார். பெரியதிருமொழ 11-8-7.

''செல்லிய'' என்றது செல்லுகிற நெளிந் நெளிந்து செல்லும்; ''செல்கைத்து'' தன்மை உை யது ஆதலின், ''உலகை என் காணும்?', என்கிறா அதன் இயல்பே புண்ணில் நெளிவது ஆதலின் அதற் உலகைப் பற்றி என்ன தெரியும்? என்பதாம். அ போன்று, ''என்னாலும் தன்னைச் சொல்லிய சுழ திருமால் அவன் கவி யாது கற்றேன்?'' என்கிறா புண்ணில்சுழலும் புழுவுக்குத்தன்னை ஒப்பிட்டுக்கா பது காண்க. ''என்னாலும்'' என்றது எப்பொழுது என்பதாம். ''தன்னைச் சொல்லிய சுழல் திருமாலவன் என்றது தன்னைப்பற்றியே என்னைச் சொல்ல வைத் கபட வேடதாரியாகிய அந்தத் திருமால், திருமக கணவன் தன்னைச் சொல்லுவித்த மாயையன்றி வே என்ன கவிதை கற்றேன்? புண்ணில் சுழலும் புழு போன்ற அப்புண்ணிலேயே அடங்கிவிடுவது போன் நான் அவன் பெயரையன்றி வேறு ஒன்றும் அறியே என்பதாகும். சதா அவன் பெயரையே உச்சரித்து திரிவதன்றி வேறு யாது கற்றேன் என்றபடி. எம்பெ மானை மனத்தில் ஏற்ற நான் வேறு ஒருவரையும் அ யேன் என்கிறார். நான் பிதற்றும் சொல்லுக்கும் பொரு

உண்டோ? என ஐயுற்ற தலைவி; உண்டு! உண்டு! எனத் தெளிந்தவளாய்ப் "பல்லியின் சொல்லும் சொல் ஆ கொள்வதோ"? "பண்டு பண்டே உண்டு" என்கிறார். பல்லியின் சொல்லுக்குப் பொருள் உண்டு. அது எழுப்பும் ஒலியை உலகம் சொல் என ஏற்றுக் கொள்வது பண்டு தொட்டு உள்ள வழக்கம் அப்படியிருக்க என் பிதற்றலுக்கும் பொருள் உண்டு என்பதாகும்.

தலைவன் பொருள் வயிற் பிரிந்த காலத்து அவன் பிரிவையாற்றாது தலைவி ஏங்கியிருக்க வீட்டின் ஒரு பக்கத்தில் பல்லி சொற் கேட்டு அவன் வருவான் என்று ஆறுதல் அடையும் தலைவியின் நிலையில்

"இனை நலம் உடைய கானம் சென்றோர்
புனை நலம் வாட்டுநர் அல்லர்; மனையின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல்எழில் உண்கணும் ஆடுமால், இடனே"

என்று பல்லி சொல்லிய நல்நிமித்தத்தால் ஆறுதல் அடைந்தது காணக்கிடப்பது பாலைகலி 11-20. பல்லி சொல்லுக்குப் பலன் காணவிழைவோர் எமது "இந்து சமயச் சொல் அகராதி" காண்க. "பண்டு பண்டே உண்டு" என்பதற்கு கலித்தொகையின் இப்பகுதி ஓர் எடுத்துக்காட்டு.

"கொட்டாய் பல்லிக்குட்டி!
குடமாடி உலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவனைவர
கொட்டாய் பல்லிக்குட்டி!"

என்ற திருமங்கையாழ்வார் திருமொழியும் காண்க. பெரிய திருமொழி 10-10-4.

இப்பாசுரம் அவையடக்கமாகப் நம்மாழ்வார். பாடியருளினார் எனக் காணினுமாம். தன்னைப்

புண்ணில் உழலும் புழுவுக்கும் தன் கவிதையைப் பல்லி யின்சொல்லுக்கும் ஒப்பிட்டிருத்தல் நம்மாழ்வாரின் அடக்கமுடைமை சிறப்பாக இப்பாசுரத்தில் வெளிப்படை.

அரும்பதவுரை : மெல்லியல் - எளிதில் அழியும் தன்மையுடைய ஆக்கை - யாக்கை. யாக்கையென் பதன் மரூஉ கிருமி - க்ருமி எனும் சொல்லின் தமிழாக்கம் குருவில் - புண்ணில், மிளிர்தந்து - நெளிந்து. கயிறு போல் நெளிந்து கிடந்து. செல்லிய - செல்லுகின்ற. செல்கைத்து - தன்மையுடைத்து. என் காணும் - என்ன தெரியும். என்னாலும் - எப்பொழுதும், சூழல் திருமால வன் - மாயை செய்யும்மால் திருவின் கணவன். பண்டு - பழங்காலத்து. "பண்டுபண்டே" என்றது பழமையின் மிகுதி குறிக்க எழுந்த அடுக்குத் தொடர்.

(இருளுக்கு ஆற்றாத தலைமகள் தோழிக்குக் கூறல்)

பண்டும் பலபல வீங்கிருள் காண்டு மிப்பாயிருள்போற்
கண்டுமறிவதுங் கேட்பதும் யாமிலங் காள வண்ண
வண்டுண்டு ழாய்ப் பெருமான் மதுசூதனன் றாமோதர
னுண்டுமிழ்ந்துங்கடாய பண்ணேரன்ன
வொண்ணுதலே 49

விளக்கவுரை : கருமை நிறத்தையும், வண்டுகள் மொய்த்துத் தேன் உண்ணும் திருத்துழாய் மாலையு முடைய எம்பெருமான் மதுசூதனன், தாமோதரன் என் னும் திருப்பெயர்களையுடைய திருமால் பிரளய காலத் தில் உலகெலாம் உண்டும் உமிழ்ந்தும் அதாவது உலகை அழித்தும், தோற்றுவித்தும் பாதுகாக்கப் பெற்ற இவ்வுலகின் அழகை ஒத்த ஒளிவீசும் நெற்றியை யுடையவனே! முன்பும் பெரிய ஊழிக்கால இருளைக் கண்டுள்ளோம். ஆனால் இந்த நீண்ட இருள் றுமிபோன்ாம் கண்டதுமில்லை கேட்டதுமில்லை,

திறனாய்வு : இப்பாசுரத்தில் தலைவி தோழியைக் "காளவண்ணம் வண்டு உண் துழாய் பெருமான் மது சூதனன். தாமோதரன் உண்டும் உமிழ்ந்தும் கடாய மண் ஏர் அன்ன ஒள்நுதலே!" எனச் சிறப்பிக்கிறார். தன் தோழியின் நெற்றிக்கு இந்த மண்ணும் விண்ணும் இணையாக என்பதாம். தன் தோழியை விளிக்கும் பொழுது தன் தலைவன் எம்பிரானையும், காள வண்ணன், வண்டு உண் துழாய் மார்பன், பெருமான். மதுசூதனன், தாமோதரன் என்று ஆசைத் தீரப் போற்றுகிறார். "காள வண்ணம்" என்றது கருமை நிறத்தவன் என்பதாம். "வண்டு உண் துழாய் பெருமான்" என்றது வண்டுகள் தேன் உண்ண மொய்த்துக் கொண்டிருக்கும் திருத்துழாய் அணிந்த பெருமான் என்பதாம். பெருமான் என்பது பெருமை மிக்க மான்பினன் என்பதாம். பெரும் மகத்துவம் உள்ளவன் என்பதாம். "மதுசூதனன்" என்றது மது என்னும் அசுரனை அழித்தவன் என்பதாம். "தாமே தரன் என்றது, தாமஉதரன். கண்ணன் உலகெலாம் உண்டு உமிழ்ந்தவன் காப்பவனும் அவனே.

"ஓஓ! உலகினதியல்வே! ஈன்றொளிருக்க
மணை நீராட்டி படைத்திடந்து உண்டுமிழ்ந்
தளந்து தேர்ந்து உலகளிக்கும் முதற்பெருங்
கடவுள்..."

என்ற நம்மாழ்வாரின் திருவாசிரியம் 6 காண்க. தமோதரன் உண்டும் உமிழ்ந்தும் கடாயமெனும் முத்தொழிலோன். பிரளயகாலத்து உலகெலாம் உண்டு தன் வாயிற்றடக்கியவன். பின்பு உமிழ்ந்து உலகெலாம் உயிர் பெறச் செய்பவன். "கடாய" என்பது பாதுகாத்தல், பாதுகாக்கபட்ட என்பதாம். மண் என்பது உலகு. "ஏர்அன்ன ஒள்நுதல்" என்றது அழகிய ஒளிவீசும் நெற்றியை. "மண்ஏர் அன்ன

ஒள்நுதலே'' என்றது இப்புவியின் அழகனைத்தும் ஒருங்கே சேர்த்த அழகையும் விஞ்சும் ஒளிவீசும் நெற்றியை உடையவளே! என்பதாம். ''மண்ணே ரன்ன'' என்றது நுதலுக்கு அடைமொழியாக அமைந் தது காண்க.

''கண்கவர் வனப்பிற் சிந்தூரந் தீட்டிக்
கவின்செய்பொன் னிறத்ததாய்ச் சிறந்த
தண்பிறைக் கொழுந்தொன்றுள தெனிற்றிலகத்
தையல்வா ணுதலினை நிகர்க்கும்...''

என்று தமயந்தியின் வாணுதலைப் போற்றுவார் அதி வீரராம பாண்டியனார். நைடதம் அடியேன உரைநூல் பக்கம் 126 காண்க. ஒண்ணுதல் என்பதும் வாணுதல் என்பதும் ஒரே பொருளில் வருபவை. ஒளிவீசும் நெற்றியை உடையவளே! ''பண்டும் பலபல வீங்கு இருள் காண்டும்'' என்கிறார். இப்பொழுது இருள் சூழ்ந்துள்ளது. முன்பும் பல பல வீங்கு இருள் கண்டும், பார்த்திருக்கிறோம் என்பதாம். ''வீங்கு இருள்''என்பது சூழ்ந்த இருள் மிகுந்த இருள் என்பதாம். ''காண்டும்'' என்பது கண்டோம் என இறந்த காலத்தை உணர்த்தி யிருத்தல் காண்க.

ஆனால் ''இ பாய் இருள்போல் யாம் கண்டும் அறிவதும் கேட்பதும் இலம்'' என்பது இது போன்று கண்டதும் இல்லை கேட்டதும் இல்லை என்பது போன்றமைந்ததாகும்.

அரும்பதவுரை : பண்டு - முன்பு. வீங்கிருள் - மிகுந்த இருள். காண்டும் - கண்டுள்ளோம். பாயிருள் - பரந்த இருள், சூழ்ந்த இருள். இலம் - இல்லை. காளம் - கருமை மேகம். மதுசூதனன் - மது எனும் அசுரனை அழித்தவன். தன் அடியார்களின் பகைவரை அழிப்பவன் என்பதுவூமாம். தாமோதரன் - தாம+ உதரம் தாமஉதரன், தாமம் என்பது கயிறு. உதரம்

என்பது வயிறு. கயிற்றால் வயிற்றில் கட்டுண்டவன். கண்ணி நுண் சிறுதாம்பு. குறுங்கயிற்றால் கட்டுண்டவன். கடாய - காக்க. ஏர் - அழகு, சிறப்பு. ஒள் நுதல் - நெற்றி. மண் ஏர் அன்ன ஒண்ணுதல் என்றது திருமண் தீட்டப்பட்ட ஒளிவீசும் நெற்றி எனினுமாம்.

(தலைவன் மீண்டு வருகையில்
தேர்ப்பாகனோடு கூறல்)

ஒண்ணுதன் மாமை யொளிபய வாமை விரைந்து
நந்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவகடாகின்று தேனவின்ற
விண்முதனாயகனீண்முடி வெண்முத்தவாசி
கைத்தாய்
மண்முதல் சேர்வற்றருவி செய்யா நிற்கு
மாமலைக்கே. 50

விளக்கவுரை: எம் இறைவனே! அழகிய நெற்றியை யுடையவளது மேனி எழில் பசலையடையாதபடி தேன் கூட்டம் ரீங்காரம் செய்யும் தேவர்களது தேவனான எம்பெருமானது நீண்ட திருமுடியில் அணிந்த, வெண்முத்து மாலையின் தன்மையதாய், மலை உச்சியினின்றும் அடிவாரத்தில் விழும்படியான நீர்வீழ்ச்சி செய்யும் பெரிய திருமலைக்கு நமது தேர் விரைந்து சென்று சேரவேண்டுமாதலின் வேகமாகச் செலுத்துவாயாக.

திறனாய்வு: வினைமுற்றித் திரும்பும் தலைமகன் தன் தலைவியின் நினைவு மேலீட்டால் விரைந்து செல்க எனத் தேர்பாகனுக்கு உரைத்தல் அகம் கூறும் முல்லைக் காட்சியில் ஒன்றாகும்.

"காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி;
ஓடுபரி மெலியாக் கொய்சுவற் புரவித்

தாள் தாழ்தார் மணி தயங்குபு இயம்ப
ஊரமதி-வலவ! தேரே-சீர் மிகுபு
நம் வயிற் புரிந்த கொள்கை
அம்மா அரிவையைத் துன்னுகம், விரைந்தே''

என்பர் பொதும்பிற் புல்லாளங் கண்ணியார் அகம் 154 இச்செய்யுளிலும் தேர்ப்பாகனை, ''வலவ'' என்று விளித்திருத்தல் காண்க.

''வலவ! கடாக இன்று'' என்றது தேர்ப் பாகனே! இன்று விரைந்து செல்க என்பதாம். ''கடாத்தல்'' என்பது தூண்டுதல். செலுத்துதல் என்பதாம். கடாத்தல் இங்கு ''கடாக'' எனத் திரிந்தது காண்க. ''இன்று'' என்றதால் முந்தைய நாட்கள் போல் அல்லாமல் இன்று விரைந்திடுக என்றும், இப்பொழுது என்றும் பொருள் படும்படி அமைந்தது. இது தலை மகளாற்றமையினை நினைந்து பாகனை விரைந்திடச் சொல்லும் பாசுரம். தலைவன் தன் தலைவியின் நினைவாக, ''ஒள் நுதல்'' என்று தன் தலைவியை சிறப்பிக்கிறான். ஒளிரும் நெற்றியை உடையவள் என்கிறான் ''மாமை ஒளி பயவாமை'' என்றது மேனி எழில் பசப்பு அடையாமல் இருக்க என்பதாம். ''மாமை'' என்பதற்கு அழகு என்பதும் பொருள். உடல் அழகு மங்கிப்போகாமல் இருக்க, நிறம் வேறுபடாதிருக்க என்பதாம். ''தேன் நவின்ற'' என்றது தேன் வண்டுகள் பாடப்பெற்ற என்பதாம். நவிலுதல் என்பது சொல்லுதல் என்பதாம். வண்டுகள் ரீங்காரம் செய் பவை யாதலின் தேன் வண்டினம் மொய்த்து ஒலி எழுப்பும் என்றபடி. ''விண்முதல் நாயகன்'' என்றது எம்பெருமானை. பரமபதத்துக்கு முதன்மையானவன், தலைவன் என்பதாம். ''நீள்முடி'' என்றது நீண்ட மணிமுடி என்பதாம். ''வெண் முத்தம் வாசிகைத்து ஆய்'' என்றது வெண்முத்துக்களாலான மாலையின்

தன்மையுடையதாய் என்பதாம். வாசிகை என்பது மாலை. "வெண்முத்தம் வாசிகை என்றது "வெண் முத்து மாலை. "மண் முதல் சேர்வுற்ற" என்றது. மண்ணில் விழுந்து கலந்த அடிவாரத்தில் வந்து சேரும்படியான என்பதாம். "அருவி" என்றது நீர் அருவியை;நீர் வீழ்ச்சியை. "செய்யா நிற்கும்" என்றது செய்து நிற்கின்ற என்பது. "மாமலைக்கே" என்றது பெரிய திருமலைக்கு என்பதாம். "நம்தேர் விரைந்து நண்ணுதல் வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டது நமது தேரை விரைவாகச் செலுத்துதல் வேண்டும் என வேண்டியதாம். "நண்ணுதல்" என்றதற்கு நெருங் குதல், சமீபித்தல் என்பது பொருள். "விரைந்து நம்தேர் நண்ணுதல் வேண்டும்" என்றது விரைவாகச் சென்று சேராவிடின் ஆற்றாமை காரணமாக எம் தலைவி இறந்துபடுவள் ஆதலின் விரைந்திடுக. என்பதாம்.

விரைந்து செல்லவேண்டிய இடம் "தேன் நவின்ற விண்முதல் நாயகன் நீள்முடி மண்முதல் சோர்வுற்ற அருவி செய்யா நிற்கும் மாமலைக்கு" என்பது காண்க.

இப்பாசுரம் மாமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைத் தலைவியாகப் பாவித்துப் புனைந் திருப்பதாகத் தோன்றுவதாகக் காண்க. என்றாலும் "மலை" என்றது தலைவியின் மேன்மையை உணர்த்துவதாகும். தலைவியாகிய ஆழ்வார் ஓங்கி உயர்ந்தெழுந்த நிலையை இங்கு 'மாமலை' என்கிறார்.

எம்பெருமானுடன் ஒன்றெனக் கலந்து விட்ட ஆழ்வாரின் உள்ளச் செழுமையை "மண்முதல் சேர்வுற்ற அருவி செய்யா நிற்கும் "மாமலை" எனச் சிறப்பித்திருத்தல் காண்க. மாமலையாம் திருவேங் கடத்தெழுந்தருளிய எம்பெருமானைத் தலைவியாகக் குறிப்பிடுவதுபோல் தலைவியின் உயர்வைப் போற்றி

யிருத்தல் இப்பாசுரத்தின் சிறப்பு. தலைவனைப் போன்று தலைவிக்கும் சரியாசனம் கொடுத்துப் புனைந்த பாசுரம். பெருமை மிக்கதாகவுள்ளது.

அரும்பதவுரை : மாமை - அழகு. மேனி. பயவாமை - மாறாதிருக்க. நண்ணுதல் - நெருங்குதல். வலவன் - தேர்ப்பாகன். வெற்றி பெற்றவன். கடாகட - விரைந்திடுக. தூண்டுதல் குதிரைகளை விரைந்து செல்லத் தூண்டுதலுக்குக் காடாவு; கடாத்தல் என்ப தாம், நவின்ற - சொன்ன. இங்கு பாடிய ரீங்காரம் செய்த. விண்முதல் நாயகன் - திருமால். வாசிகை - மாலை. வெண்முத்தவாசிகை - வெண் முத்து மாலை. வாசிகைத்து ஆய் - மாலையாய். மாலையைப் போன்று மண் முதல் சேர்வுற்ற - மண்ணில் சேர்ந்த. அருவி - நீர் அருவி, நீர்வீழ்ச்சி; மாமலை பெரிய மலையெனத் தோன்றும் நம்மாழ்வார்.

(கடலோசைக்கு ஆற்றாத தலைவி இரங்கல்)

மலைகொண்டு மத்தாவரவாற் சுழற்றிய மாயப்பிரா
னலைகண்டு கொண்ட வமுதங்கொள்ளாது கடற்
பரதர்
விலைகொண்டு தந்த சங்கம் இவை வேரித்துழாய்
துணையாத்
துலைகொண்டு தாயங்கிளர்ந்து கொள்வானொத்
தழைக்கின்றதே 51

விளக்கவுரை : மந்தர மலையை அச்சாகவும், வாசுகி எனும் பாம்பைக் கயிறாகவும் கட்டி சுழற்றிப் பாற்கடலைக் கடைந்த மாயன், எம்பெருமான், தன்னை அடையும்படி செய்து தன்னிடமிருந்து எடுத்துக் கொண்ட அமிருதத்தை மீண்டும் வாங்கிக் கொள்ள மாட்டாது; மணம் கமழ் திருத்துழாயைத் தனக்குத் துணையாகக் கொண்டு, ஒத்து எதிர் வந்து பங்காளி போன்று வந்து உரிமை கொண்டாடுதல்

போன்று மேலெழுந்து, நெய்தல் நிலமக்கள் வலை வாங்கிக் கொண்டு கொடுத்த இச்சங்க வளைகளை மீண்டும் வாங்கிக் கொள்ளுதல் போன்று, இந்தக் கடல் ஒலி சண்டைக்கு அழைக்கின்றது.

திறனாய்வு : பிரிவாற்றாமைத் துயர் மிகுதலால் கடலின் ஒலிகேட்டு உடல் மெலிதலால் தன் வளைகள் தானாகவே கழன்று விடுதலைக் கடல் தன் வலியால் கவர்ந்து கொள்வதாகப் பாவித்துப் பாடப்பெற்ற பாசுரம். இதில் எம்பெருமான் மந்தரமலையை மத்தாக வும் வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்ததும் அதில் அமுதம் தோன்றியதும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது காண்கிறோம்.

"மலைமத்தா அரவாற் கொண்டு கடல் சுழற்றிய மாயப்பிரான்" என்றது எம்பிரானுக்கு நீண்டதோர் அடைமொழி. "மலை "மத்தா அரவாற் கொண்டு கடல் சுழற்றி" என்றது மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்த என்பதனைச் "சுழற்றி" என்கிறார். பாற் கடலைக் கடைந்த "மாயபிரான" என்றது மாயை செய்வதில் வல்லவன் கண்ணன் என்பதாகும்.

"செருமிகு வாளெயிற்ற அரவொன்று சுற்றித்
திசை மண்ணும் விண்ணும் உடனே
வெருவர வெள்ளை வெள்ளம் முழுவம் குழம்ப
இமையோர்கள் நின்று கடைய
பருவரையோன்று நின்று முதுகில் பரந்து
சுழலக்கிடந்து துயிலும்
அருவரையன்ன தன்மையடலாமையான
திருமால் நமக்கு ஓரரணே"

என்றனர் திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி 11-4-2. எம்பெருமான் வெள்ளை வெள்ளம் முழுதும்

குழப்பியது மகாகூர்ம அவதாரத்தில். மலையை முதுகில் தாங்கியதும் அவன் செய்த மாயைகளில் ஒன்று ஆதலின் ''மாயபிரான்'' என்றனர். ''அலை கண்டு கொண்ட அமுதம் கொள்ளாது'' என்றது அலை கழிக்கப்பட்ட அமுதத்தை மீண்டும் பெற்றுக்கொள் ளாது என்பதாம்.

''அலை கண்டு'' என்றது அலைகளுக்கிடையே யிருந்து தோன்றிய என்பதாம். கடல் கடைந்த பொழுது அந்த மாயன் தந்வந்தரி என்னும் தேவ ரூபத்தை எடுத்து அமுதம் கொண்ட கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு கடலிலிருந்து தோன்ற அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அமுத கலசத் தைப் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொள்ள, எம்பெரு மான் ஓர் அழகிய பெண் உருக்கொண்டு அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக் கொண்டு அமரர் கட்குக் கொடுத்தான் என்பதை இங்கு ''அலை கண்டு கொண்ட அமுதம் என்கிறார் என்பது காண்க.

''மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்
மின்னு மிடசுடரும் விண்ணும் பிறங்கொளியும்
தன்னி னுடனே சுழல மலைதிரித்தாங்கு
இன்னமுதம் வானவரை யூட்டி அவருடைய
மன்னும் துயர் கடிந்த வள்ளலை...''

என்பர் திருமங்கை மன்னர். பெரிய திருமடல் அடிய னேன் உரை நூல் பக்கம் 129-30 காண்க.

''கொள்ளாது என்றது அத்தகு சிறப்புக்கள் பெற்ற, தன் வயிற்றில் தோன்றிய அமுதத்தை மீண்டும் பெற்றுக் கொள்ள விழையாது என்பதாம். ''வேரித்துழாய் துணை ஆ துலை கொண்டு'' என்றது என்னை வாட்டும் மணம் கமழ் திருத்துழாயையும் துணையாக அழைத்துக் கொண்டு வந்து என்பதாம்.

"வேரி" என்பது தேன், கள், வாசனைச் சரக்கு வகை யராக்கள். திருத்துழாய் இவையனைத்தும் உள் ளடக்கியதாகையால் "வேரி" என்னும் சொல்லை இங்கு பயன்படுத்தியிருக்கிறார். என்பதாம் "துலை கொண்டு" என்றது ஒத்த மனம் கொண்டு என்பதாம். திருத்துழாய்க்கும் கடலுக்கும் என்ன சம்பந்தம் உண்டு? ஆனால் எம்மை வாட்டுவதில் இவ்விருவரும் ஒருவரெனத் "துலைகொண்டு" வந்தனர் என்ப தாகத் "தாயம் கிளர்ந்து உரிய பங்காளி போன்று" சுற்றம் போன்று ஒன்று சேர்ந்தெழுந்து வந்து என்பதாம். "கிளர்ந்தெழுதல்" என்பது வீரம் கொண்டெழுதல், போருக்குக் கிளர்ந்தெழுதல் போன்று இவர்கள் இருவரும் எழுந்தனர் என்பதாம். "கிளர்ந்து பரதர் விலை கொண்டு தந்த சங்கம் இவை கொள்வான் ஒத்து அழைக்கின்றதே" என்கிறார். செம்படவர்கள் வலை வீசி மீன் பிடிக்கையில் அகப் பட்ட சங்கு இவற்றை விலை கொடுத்து வாங்கி நான் அணிந்து கொண்டுள்ளேன்; அவற்றை 'என் வயிற்றி லிருந்து தோன்றிய சங்கை எனக்கே திருப்பிக் கொடு, எனக் கேட்பது போன்று ஒலிக்கின்றதே! பகைமை காட்டி ஒலிக்கின்றதே! என அஞ்சுகிறாள் என்பதாம். 'என்னைப் பிரிந்து சென்ற அவனை வருத்தாது என்னை வருத்துவதேனோ' என்றபடியுமாம்.

அரும்பதவுரை : மத்து - கடையும் கருவி. மத்தித்தலால் மத்து ஆனது; அகுபெயர். மந்த என்பதின் திரிபு எனினுமாம். அரம் - பாம்பு. சுழற்றி - கடைத்து. அலை கண்டு கொண்ட அமுதம் - அலை களிடமிருத்து தோன்றிய அமுது. பரதர் - மீனவர். சங்கம் - வளையல். சங்கால் அமைந்த வளையல். வேரி - மனம்கமழ். தேன் - கள் மற்றும் வாசனைப் பொருட்களும் இப்பெயர் தாங்கியுள்ளன. துலை

கொண்டு - ஒத்த மனம் கொண்டு. தாயம் - பங்காளி பங்குதாரராக. தந்தையுடன் பிறந்தவர். கிளர்ந்து - விரைந்தெழுந்து. இப்பாசுரத்தின் ஈற்று ஏகாரம் இரக்கம்.

(கால மயக்கு)

அழைக்குங் கருங்கடல் வெண்டிரைக் கைக்கொண்டு
போயலர்வாய்
மழைக்கண் மடந்தை யரவணையேற மண்மாதர்
விண்வா
யழைத்துப் புலம்பி முலைமலைமேனின்று
மாறுகளாய்
மழைக்கண்ணநீர் திருமால் கொடியானென்று
வார்கின்றதே 25

விளக்கவுரை : அன்புடன் அழைக்கும், எம் பெருமான் தன்மேல் பள்ளி கொண்டதால் வெள்ளை வெள்ளக்கடல் கறுத்துள்ள திருப்பாற்கடலானது தனது வெண்மையான அலைகளாகிய கைகளாலே எடுத்துக் கொண்டு போகத் தாமரை மலரில் வாழ்பவளும் மழை போன்ற குளிர்ந்த கண்களையுடைய மடந்தை திருமகள் எம்பெருமான் பள்ளி கொண்டிருக்கும் பாம்புப் படுக்கையின் மீது ஏற; அது கண்ட மண் மகள், பூமாதேவி ஆகாயத்தில் மேக முழக்கமாகப் புலம்பி அழுது கூப்பிட்டு முலைகளாகிய மலைகளின் மேல் நின்றும் ஆறுகளாகப் பெருக விட்ட மழையாகிய கண்ணீரானது ''திருமால் கொடியவன்'' என்று பெருகுகிறது.

திறனாய்வு : இப்பாசுரம் திருமகள் ஆதிசேட சயனத்தின் மீது ஏறக் கண்ட பூமகள் அழுது புலம்பியதாகக் கூறுவது. 'கார்காலம் வருவேன்' என்று

சொல்லிப் போந்த தலைவன் மழை மேகக் கூட்டங்கள் மழை பொழிந்தும் வராதது கண்ட தலைவியின் கால மயக்கால் எழுந்த ஆற்றாமைக்குத் தோழி இரங்கிக் கூறிய பாசுரம் என்பதுவுமாகும், எம்பெருமான் பாற்கடலில் பள்ளி கொண்டதும் திருமகள் அரவணையேறியதும் இங்கு "அழைக்கும் கருங்கடல் வெண்திரை கை கொண்டு போய் அவர் வாய் மழை கண் மடந்தை அரவு அணை ஏற" என்கிறார்.

"அழைக்கும் கருங்கடல்' என்றது அழைக்கும் தன்மையுடைய கருங்கடல் என்பதாம். கடற்கரைக்குச் சென்றால் அருகில் சென்று பார்க்க வேண்டும் என்கிற அவாவைத் தூண்டுமாதலின் கடல் நம்மை அருகில் வர அழைப்பது போன்று இருக்கும். இதனை உணர்ந்தே "அழைக்கும் கருங்கடல்" என்றனர். எம்பெருமான் பள்ளி கொண்டுள்ள திருப்பாற்கடல் அவன் மேனி நிறத்தையடைந்து கருங்கடலானது என்பதனை நாற்பத்தைந்தாம் பாசுரத்தில் விளக்கியிருந்தல் ஈங்கு நினைவு கூறுக. உயர் ரக நீல இரத்தினத்தைப் பாலினுள்ளே விட்டால் அதன் ஒளியால் பால் அதன் வெண்ணிறம் மாறி இரத்தினத்தின் நிறமாகத் தோன்றுவது போல் எம்பெருமான் மேனி நிறம் பாற்கடலைக் கருங்கடலாக்கியது என்பதாம். "வெண் திரைக் கொண்டு போக" என்றது; வெண்மையாகிய அலைகளாகிய கைகளாலே என்பதாம். அலைகள் வீசும் பொழுது அதில் எழும் நுரை வெண்மையாக இருக்கும். ஆதலின் "வெண் திரை" என்றனர். வெண்மை நிறமுடைய அலைகள் எழும் கைகளால் எடுத்துக் கொண்டு போக என்பதாம். பாற்கடல் கடைந்த பொழுது அமுதத்துடன் திருமகளும் தோன்றினாள். பாற்கடலில் பிறந்தவாளதலின் அவளை அக்கடல் அலைகளெனும் கைகளால் எடுத்துச் சென்று அங்கு பள்ளி கொண்டி

ருக்கும் எம்பிரான் நாகணையில் ஏற என்பதை "அலர்வாய் மழை கண் மடந்தை அரவு அணை ஏற" என்கிறார். "அலர் வாய்" என்பது மலர் வாய் என்பதாம். மலரில் வாழ்பவள். மழை போன்ற குளிர்ந்த கண்களையுடைய மகளிருக்குரிய மடமைக் குணம் நிறைந்தவளுமான திருமகள் என்பதாம். "அரவு அணை ஏற" என்றது. பாம்புப் படுக்கையின் மீது ஏற அதைக் கண்ணுற்ற "மண் மாதர்" என்று பூமிப் பிராட்டியைக் குறிப்பிடுவது காண்க. எம்பெருமானுக்குத் திருமகள் நிலமகள் எனத் தேவியர் இருவர் இருக்கத், திருமகள் மட்டும் பாற்கடலில் பிறந்ததற்காக அக்கடல் அலைகள் உதவி பெற்று, திருவனந்தாழ்வனாகிய படுக்கையின் மீதமர்ந்து அப்பெருமானோடு சேர்ந்து இன்புறா நிற்க, அது கண்ட நிலமகள் வானத்தெழுந்து மேக முழக்கத்தால் வாய் விட்டுக் கூவி அழுது கண்ணீர் அவள் கொங்கைகளாகிய மலைகளின் மேல் பொழிய அது ஆறாக ஓடியது எனக் கூறுகிறார்.

'சோதிமதி வந்து தவழ் சோலை மலையோ
டிரண்டாய
மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடமே..."

என்பது திருவேங்கடமாலை. 2. "காரார் வரைக் கொங்கை" எனச் சிறிய திருமடலிலும் வருதல் காண்க

இதனை "மண்மாதர் விண்வாய் புலம்பி அழைத்து முலை மலை மேல் நின்றும் மழைக் கண்ண நீர் ஆறுகளாய்" என்கிறார். "விண்வாய் புலம்பி" என்றது ஆகாயத்தெழுந்து மேகமாக நின்று புலம்பி என்பதாம். "மழைக் கண்ண நீர்" என்றது கண்ணை ராகிய மழை என்பதாம். அவ்வாறு கண்ணீர் மழையாகப் பொழியக் காரணமான அத்திருமால் கொடியான் என்று வார்க்கின்றதே" என்பது இருமனைவியருக்

ஒருமனைவியிடம் மட்டும் இன்பம் நுகரும் எம்பெருமான் கொடியவன் என்று கண்ணீர் பெருக்கு அதிகமாகிறது என்பதாம்.

இவ்வாறு நிலமகள் விண்வாய் புலம்பிக் கண்ணீர் சொரியக்கண்ட தலைவி இது தலைவன் சொல்லிப் போந்த கார்காலமோ என மயங்கத் தோழி இது பருவ மன்றென்று எனக் கூறியதாக வழங்கும் ஆதலின் கால மயக்கில் வந்தது.

அரும்பதவுரை : கருங்கடல் - பாற்கடல். எம்பெரு மான் கருமேனி ஒளிபட்டுக் கருங்கடலானது. அலர்-மலர். அலர்வாய்-மலரில் வாழும். திரை-அலை. மழைக் கண் - குளிர்ந்தகண். மடந்தை - பெண். அர அணை - பாம்புப் படுக்கை. நாக அயனம். மண்மாதர் - அழகு டையவள் நிலமகள். விண்வாய் - விண்ணுலகில், ஆகாயத்தில். முலைமலை - மலைகளென்ன முலை கள். மழை கண்ணநீர் - மழையாகிய கண்ணீர். வார் கின்றது—கண் நீர் பெருகுகின்றது.

(கட்டுவிச்சி கூறல்)

வாராயின முலையாளிவள் வானோர் தலைமகனாஞ்
சீராயின தெய்வ நன்னோயிது தெய்வத் தண்ணந்
துழாய்த்
தாராயினுந்தழையாயினுந் தண் கொம்பதாயினுங்கீழ்
வேராயினு நின்ற மண்ணாயினுங் கொண்டு
வீசுமினே 53

விளக்கவுரை : கச்சு அணிந்த முலையாள், இவள் இந்நோய் தேவர் தேவனான திருமாலின் சிறப்பு மிக்க கல்யாண குணங்களால் தோன்றிய நல்ல நோயாகும். இதற்குப் பரிகாரம் தெய்வீகம் கமழும் குளிர்ந்த அழகிய

திருத்துழாய் மாலையாயினும் அத்திருத் துழாயின் ஓ
இலையையாயிகிலும்,குளிர்ந்த அதன் சிறு குச்சியாயினும்
அதன் வேரையாகிலும் அல்லது அது வளர்ந்து நிற்கு
அடி மண்ணாயினும் கொண்டு வந்து வீசுங்கள்.

வியாக்கியானம் : எம்பெருமான் வயப்பட்
"தீரா உடம்பொடு பேதுறும் தலைவியின் நிலைகண்
இவளுக்கு இந்நோய் செய்தான் யாரெனக் கட்டுவிச்
மூலம் குறி பார்த்துச் சொல் வேண்டி நினைக்க ஆங்
கட்டுவச்சி வருகிறாள். கட்டுவிச்சி குறி சொல்வதை
திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் வெகு சிற
பாகச் சித்தரிக்கிறார்.

"காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சிலநெல் பிடித்தெறியா
வேராவிதிர் விதிரா மெய்சிலிராக்கை மோவாப்
பேராயிரமுடை யான் என்றாள்—பேர்த்தேயும்
காரார் திருமேனி காட்டினாள் கையதுவும்
சீரார் வலம்புரியேயென்றாள்—திருத்துழாய்த்
தாரார் நறுமாலை கட்டுரைத்தாள் கட்டுரையா
நீரேது மஞ்சேன்மின் நும்மகளை நோய் செய்தா
ஆரானுமல்ல னறிந்தே னவனை நான்..."

என்று கட்டுவிச்சி கூறுவதாகப் பாடியிருப்பது சிறப்
இதற்கான விளக்கம் அடியனேன் சிறிய திருமட
பெரிய திருமடல் உரை நூல் பக்கம் 14 காண்க.

தலைவிக்கு நோய் செய்தான் யார் என்பது
அதற்கான பரிகாரமும் கட்டுவிச்சியின் சொல்லி
அடங்கியிருத்தல் காண்க. நம்மாழ்வாரின் இப்பாசுர
இதனை மேலும் சிறப்பிக்கிறது. தலைவியின் எழி
தோற்றத்தை "வார் ஆயின முலையாள்" எனச் சிற
பிக்கிறார். கச்சு அணிந்த முலைகளையுடைய
நம் தலைவி என்று காண்கிறார். "இவள் இது

என்றது இவளுடைய இது அதாவது சொல்ல முடியா யத இவளின் காதல்நோய் ஆதலின் "இது" என்றனர் என்க. இவளுக்கு இந்நோய் தந்தவன் "வானோர் தலைமகனாம் சீர் ஆயின தெய்வம்" எம்பெருமான் தந்த "நல் நோய்" என்கிறார்.

"வானோர் தலைமகன்" என்றது வானவர்கட்குத் தலைவன். "சீரான தெய்வம்" என்றது சிறந்த கல்யாண குணங்கள்கொண்ட தெய்வம். திருமால் தந்த "நல்நோய்" இது என்கிறார். "நீரேது மஞ்சேன்மின் நும் மகளை நோய் செய்தான் ஆரானு மல்ல னறிந்தேனவனை நான்" என்று திருமங்கையாழ்வார் கூறியிருத்தலை மீண்டும் இங்கு நினைவு கூறுக.

இந்நோய் தீர்க்கும் மார்க்கம் தான் என்னே? அதற்குக் கட்டுவிச்சி சொல்லும் பரிகாரம் யாதெனில். "தெய்வத் தண்ணந்துழாய்த் தாராயினும்", அதன், "தழையாயினும்" அதன், "தண் கொம்பதாயினும்", அல்லது அதின் "கீழ் வேராயினும்", அல்லது அத்திருத்துழாய்ச் செடி நின்ற "மண்ணாயினும்" கொண்டு வீசுமின் என்கிறார்.

கட்டுவிச்சி இப்பாசுரத்தில் கூறியது போல் நாச்சியார் எம்பெருமான் வயப்பட்டுக் கண்ணன் அணிந்த ஆடை முதலியவற்றால் தன் வாட்டத்தை தணிக்க

"………பெருமானரையிற் பீதக
வண்ணவாடை கொண்டு என்னை வாட்டம்
தணியவீசிரே"

என்றும்,

"நீலார் தண்ணந்துழாய் கொண்டு என் நெறிமென்
குழல்மேல் சூட்டீரே"

என்றும்,

"........அவன் மார்பணிந்த வன்மாலை
வஞ்சியாதே தருமாகில் மார்பில் கொணர்ந்து
பூட்டீரே

என்றும்,

"...........தன் அமுதவாயிலூறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி இளைப்பை
நீக்கீரே

என்றும்,

"குழலின் துளைவாய் நீர்கொண்டு குளிர
முகத்துத்தடவீரே

என்றும்,

"குற்றமற்ற முலைதன்னைக் குமரன்
கோலப்பணைத் தோளோ
அற்றகுற்ற மவைதீர அணைய அமுக்கிக் கட்டீரே

என்றும்,

"கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை
தன்னைக் கிழங்கோடு
அள்ளிப்பறித்திட்டு அவன் மார்பிலெறிந்து என்
முலைத் தீர்வேனே

என்றும், பலவாகவும் வேண்டுகிறார். நாச்சியார் 13
திருமொழி. நம்மாழ்வார் பிராட்டித்தன்மையடைந்தவ
நாச்சியார் பிராட்டியார் ஆதலின் பெண்மை இ
பாசுரங்களில் பொங்கி வழிகிறது. எம்பெருமான் மார்
அணிந்த திருத்துழாய் அடியார்கட்கு மிகவும் பிரியமா
தொன்று. ஆதலின் "தெய்வத் தண்ணந்துழா
தராயினும்" என்கிறார். "தார்" என்பது மாலையை
குறிக்கும். "தழை ஆயினும்" என்றதால் ஒரு சி
தழையாயினும் என்பதாம். "தண் கொம்பாயினும்
என்றதால் தழை பூ ஒன்றுமில்லாமல் அவற்றை
தாங்கியிருந்த சிறு கொம்பாயினும் என்பதாம். "கீ

வேர் ஆயினும்'' என்றதால் இவை கிடைக்காவிடில் திருத்துழாயை வளர்த்த வேராயினும் என்பதாம். வேர்கூடக் கிடைக்காவிடில் அத்திருத்துழாய் நின்ற மண்ணாயினும் கொணர்ந்து வீசி நோய் தீர்க்க வேண்டும் என்பதாம்.

''செம்பவளவாயான் திருவேங்கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு
மாவேனே''

என்று குலசேகராழ்வார் தம் திருமொழியில் வேண்டுவதும். காண்க. பெருமாள் நான்காம் திருமொழி 10.

அரும்பதவுரை: வார் ஆயின்-கச்சு கொண்டு கட்டப்பட்ட. வானோர் தலைமகன்-நாராயணன். தெய்வ நன்னோய்-கிடைத்தற்கரிய நோய். எம்பெருமான் சம்பந்தப்பட்ட நோயாதலின் நல்நோய் என்றனர். தார்-மாலை. தழை-ஓர் இலை. நின்ற மண்ணாயினும்-எம்பெருமான் சம்பந்தப்பட்ட தனைத்தும் கொண்டாடத்தக்கது என்பதாம்.

(வண்டு விடு தூது)

விசுஞ் சிறகாற் பறத்திர் விண்ணாடு நுங்கட்கெளிது
பேசும்படியன்ன பேசியும் போவது நெய்தொடுவுண்
டேசும்படியன்ன செய்யுமெம் மீசர்விண்ணோர்
பிரானார்
மாசின்மலரடிக் கீழெம்மைச் சேர்விக்கும் வண்டுகளே
54

விளக்கவுரை: நெய்யைக் களவாடி உண்டு பலரும் ஏசும்படி அத்தகைய காரியங்களைச் செய்தருளிய எமது ஈசுவரனும் விண்ணுலகில் உள்ள தேவர்கட்கு இறைவனுமாகிய எம்பெருமானுடைய மாசு

இல்லாத தாமரைத் திருவடியின் கீழ் எம்மைச் சென் றடைய வைக்க வல்ல வண்டினங்களே! நீங்கள் வீசும் சிறகால் பறந்து செல்லவல்லீர். தேவர் உலகும் நீங்கும் செல்லுதற்கு எளிது. எனக்காக நீங்கள் எம்பெருமானிடம் தூது செல்லும் போது நீங்கள் அவரிடம் என்னைப் பற்றிச் சொல்லும் சொற்களை எனக்கும் சொல்லிச் செல்ல வேண்டும்.

திறனாய்வு : பிரிவாற்றாத தலைவி வண்டுகளைப் பார்த்து சிறகுவீசிப் பறக்கும் வண்டுகளே! உங்களுக்கு விண்ணாடும் எளிதானது அந்த எம்பிரானைப் பார்த்து எம்மைச் சேர்விக்க வேண்டும்படி நாம் பேசிய பேச்சையும் சொல்லி விட்டுப் போவது சொல்லிவிட்டுப் போங்களே என்பதாக அமைந்த பாசுரம். வண்டுகள் சிறகு வீசிப் பறப்பதால் விண்ணாடு செல்வதும் அவைகட்கு எளிது எனக்கருதி பிரிவாற்றாத தலைவி அவற்றிடம் தன்னை எம்பெரு மானிடம் சேர்த்திடும் விண்ணப்பத்தை வைக்கிறார்.

"வண்டுகளே!" என்பது விளி. "சிறகாற் பறக் கின்றீர்" என்றது சிறகடித்து எங்கும் பறந்து திரி கின்றீர் ஆதலின் "விண்ணாடும் நுங்கட்கு எளிது" என்கிறார். வானவர் நாடு செல்வதும் உங்களுக்கு எளிது. நீங்கள் எளிதாக வானவர் நாடு பறந்து சென்று திரும்பிவிடலாம் ஆதலின் உங்களுக்கு ஒரு விண்ணப்பம் என்று தன் விண்ணப்பத்தை வைக்கிறார். "நெய்தொடு உண்டு" என்றது நெய்யைக் கைதொட்டு உண்டு என்பதாம் இங்கு நெய் என்றது வெண்ணெய்.

"தெள்ளிய வாய்ச்சிறியான் நங்கைகாள்!
உறிமேலைத்தடா நிறைந்த
வெள்ளி மலையிருந்தாலொத்த வெண்ணெயை
வாரிவிழுங்கியிட்டு

கள்வனுறங்கு கின்றான் வந்து காண் மின்கள்
கையெல்லாம் நெய்...''

என்பர், திருமங்கையாழ்வார். வாரி விழுங்கியது வெண்ணெய் கையெல்லாம் நெய் என்பது காண்க. பெரிய திருமொழி 10.7.3. ''நெய் தொடு உண்டு வெண்ணெய்'' என்றது.

''தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய
பேழைவயிற்றெம் பிரான்...''

என்பதாம். பெரியாழ்வார் திருமொழி 1.4.9.

''... ... ... ... ... ... ஆங்கொருநா ளாய்ப்பாடிச்
சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய்
வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக் கொண்டு
ஏரா ரிடைநோவ எத்தனையோர் போதுமாய்
சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை
வேரார் நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு
நாரா ருறியேற்றி நன்கமைய வைத்ததனைப்
போரார் வேற்கண் மடவாள் போந்தனையும்
பொய்யுறக்கம்
ஓரா தவன்போல் உறங்கி யறிவுற்றுத்
தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங்கை நீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி...''

என்று திருமங்கையாழ்வார் மேலும் விரித்திருத்தல் காண்க. சிறியதிருமடல் அடியனேன் உரைநூல் பக்கம் 18 முதல் 25 வரை பயின்று தெளிவு கொள்க. ''தாழியில் இருந்த வெண்ணெய் தடங்கையார விழுங்கி'' என்றது ''நெய் தொடு உண்டு'' எனும் இப்பகுதியை சிறப்பித்துக் காண்பிக்கிறது. ''நெய்தொடு உண்டு'' ''ஏசும்படி அன்ன செய்யும் எம்ஈசர்'' என்றது வெண்ணெய் திருடி உண்டதால்ஏச்சுக்கும் பேச்சுக்கும்

ஆளான நிலையை "ஏசும்படி அன்ன செய்யும் எம் ஈசர்" என்பதனை,

"பாலைக் கறந்து அடுப்பேறவைத்துப்
பல்வளையாள் என் மகளிருப்ப
மேலையகத்தே நெருப்பு வேண்டிச் சென்று
இறைப்பொழுது அங்கே பேசிநின்றேன்
சாளக்கிராமுடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்
ஆலைக்கரும்பின் மொழியனைய
அசோதை நங்காய்! உன் மகனைக் கூவாய்"

என்று ஆய்ச்சியர் அசோதைப் பிராட்டியிடம் கடிந்து கொள்கிறார். பெரியாழ்வார் திருமொழி 2.9-5. "அன்ன செய்யும்" என்றது இதுபோன்று பலவும் செய்யும் என்பதாம்.

"ஏழைமை யாற்றவும் பட்டோம் இனியென்றும்
பொய்கைக்கு வரோம்
தோழியும் நானும் தொழுதோம் துகிலைப்
பணித்தருளாயே"

என்று கன்னியர் கவர்ந்த கூறைகளைத் தந்திட கண்ணனை வேண்டுதல் நாச்சியார் திருமொழியில் 3.1. இது போன்று திருவிளையாடல்கள் "ஏசும்படி செய்யும் எம் ஈசர்" என்பதற்கு இப்பாசுரம் ஓர் எடுத்துக்காட்டு. கண்ணபிரான் வெண்ணெய் விழுங்கிய செய்தியை ஆழ்வார்கள் அனைவரும் போற்றியிருத்தல் காணலாம். எம்பெருமானை "ஈசர் என்றதோடல்லாமல் "விண்ணோர் பிரானார்" என்று வைகுண்ட வாசிகட்குத் தலைவனான எனக்கு உயிரானவர். "மாசு இல் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் பேசும்படி அன்னபேசியும் போவது" என்கிறார். எம்பிரான் திருவடிகள் மாசுஅற்ற மலர் போன்ற திருவடிக் கீழ் எம்மைச் சேர்த்துவிட

வேண்டும் என்பது என் விண்ணப்பம். அவ்வாறு பேசியபடி அதனை எம்பிரானிடத்துப் "பேசியும் போவது" என்று கூறுவது சொன்னதைச் செய்வார் களோ செய்யமாட்டார்களோ என்ற ஐயத்தில் "போவது" என்ற சொல்லைப் பயன்படுத்துதல் இயல்பு. அப்படிப் பேசிப்போனால், போகிற போக்கில் எம்மைப் பற்றி ஒருவார்த்தையாகிலும் சொல்லிப் போனால் எம்பிரானுக்கு என் நினைவு வந்து என்னை விரைந்து வந்து சேர்ந்திடுவான் என்பதாம்.

இதுபோன்றே திருமங்கையாழ்வாரும் வண்டைத் தூது அனுப்புவது காண்கிறோம். இப்பாசுரங்களை ஒப்பிட்டுக் காண்க.

"தேமருவு பொழிலிடத்து மலர்ந்த போதைத்
தேனதனை வாய்மடுத்து, உன் பெடையும் நீயும்
பூமருவி இனிதமர்ந்து பொறியிலார்ந்த
அறுகாலசிறு வண்டே! தொழுதேன் உன்னை
ஆமருவி நிரைமேய்த்த அமரர்கோமான்
அணியழுந்தூர் நின்றானுக்கு இன்றே சென்று
நீமருவி யஞ்சாதே நின்று ஓர்மாது
நின்நயந்தா ளென்று இறையே இயம்பிக்காணே."

திருநெடுந்தாண்டகம் 26.

அரும்பதவுரை : நுங்கள் - உங்கள். அன்ன - அதையே; சொன்ன சொற்களையே. நெய் - வெண்ணெய். தொடு - தொட்டு. அள்ளி. ஈசர் - நாராயணன். பறத்தீர் என்பது பறப்பது பற்றி எதிர் காலம் உணர்த்துவது. மாசின்மை என்றது அடியார் குற்றம் பாராமை. தான் குற்றமற்றவன் அடியார் குற்றமும் பாராதவன் என்றபடி.

(நலம் பாராட்டு)

வண்டுகளோ வம்மினீர்ப் பூநிலப்பூ மரத்தி லொண்பூ
வுண்டுகளித்து ழல்வீர்க் கொன்றுரைக்கிய மேன
மொன்றாய்

மண்டுகளாடி வைகுந்த மன்னாள் குழல்வாய்
விரைபோல்

விண்டுகள் வாரு மலருளவோநும் வியலிடத்தே. 55

விளக்கவுரை : வண்டுகளே! வாருங்கள். நீர்ப் பூவும் நிலப்பூவும், மரப்பூவும் என்று சொல்லப்படும் இவைகளிலெல்லாம், தேனை உண்டு களித்துத் திரியும் உங்களுக்கு ஒன்று உரைக்கின்றோம். ஒப்பற்ற ஒரு பன்றி உருவாய் மண் துகள் ஆடிய பிரானது வைகுந்தம் போன்று இன்பம் தருபவளாகிய இவளது கூந்தலிலே இயற்கையாக அமைந்துள்ள வாசனை போல் மலர்ந்து மணம் வீசி தேன் பெருகும் மலர் உங்கள் இடத்துக்கு உட்பட்ட பரந்த இடத்தில் உள்ளனவோ?

திறனாய்வு : இப்பாசுரம் தலைமகளைப் புகழ்ந்தும் அவளின் அழகு முதலியவற்றைப் பேசும் துறையாகும். இயற்கைப் புணர்ச்சியில் மகிழ்ந்த தலைமகன் அவளுள் இன்பம் துய்த்ததன் விளைவாக எழும் சொற்களாகவும் கொள்ள இடமுமுண்டு. ஏனெனில் புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும்ஒன்றன்பின் வருவதாகும். இப்பாசுரத்தில் இயற்கைப் புணர்ச்சியில் இன்புற்ற தலைமகன், தலைமகள் கேட்டு மகிழ வண்டுகளை நோக்கி, "நீவீர் எவ்விடத்தும் சென்று நீர்ப்பூ, நிலப்பூ, கோட்டுப்பூ என்று வெவ்வேறு பூக்களை கண்டறிவீர்கள். அவற்றில் எவையேனும் இவளின் கூந்தலின் இயற்கை மணத்தையொத்த மணமுடைய கள் பொதிந்த மலருண்டோ? என்று தனது அன்பை வெளிப்படுத்திக் காட்டுவது இத்துறையாகும்.

"கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத்தும்பி
காமஞ்செப்பாது கண்டது மொழிமோ பயிலியது
கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோநீ யறியும் பூவே"

என்ற இப்பாடலை இங்கு நினைவில் கொள்க. இது சோமசுந்தரக் கடவுள் தருமிக்குப் பொற்கிழி கிடைக்க எழுதிக் கொடுத்தது. 'திருவிளையாடர் புராணம்" எனும் திரைக்கூத்திலும் இப்பாடல் ஒலித்தது.

"வண்டுகளோ!" என்றது வண்டுகளே! என்பதன் திரிவு. 'வம்மின்' என்றது நீங்கள் எங்கெங்கோ மல ரின் மணத்தை நாடி அலைந்து திரிகின்றீர்கள். நீங்கள் தேடும் கள்ளும் மணமும் இங்கு இருக்கிறது ஆதலின் நீங்கள் தேடும் தொழிலை விட்டு விட்டு இங்கு வாருங் கள்என்பதாம். "நீர்ப்பூ, நிலப்பூ மரத்தில் ஒண்பூ" என்று மூவகை மலர்களில் வண்டுகள் தேன் நாடிச் செல்வதைக் குறிப்பிடுகின்றார். மரத்தின் மலரைக் குறிப் பிடும் பொழுது "ஒண்பூ" என்கிறார். 'ஒண்பூ' என் றது அழகிய சிறந்த பூவாகும். மரத்தில் மலர்கள் அழ காகவும் பெரியதாகவும் காணப்படுமாதலின் 'ஒண்பூ' என்றனர். தேன்வண்டுகள் நீர்ப்பூ, நிலப்பூ இவை களை மொய்த்துக் கொண்டிருப்பது போன்று மல ருள்ள மரங்களை மொய்ப்பதில்லை. சில மரங்களில் மட்டுமுள்ள மலர்களையே நாடுகின்றன என்பது மாகும். "உண்டுகளித்து உழல்வீர்' என்றது தேனுண்டு மகிழ்ந்து திரிவீர் என்பதாம். "உழல்வீர்க்கு ஒன்று உரைக்கியம்" என்றது மகிழ்ந்து திரியும் உங்க ளுக்கு ஒன்று சொல்லுவேன். இதுபோன்று மணமும் கள்ளும் எங்குமில்லை என்று மகிழ்ந்து திரியும் உங்க ளுக்கு ஒன்று சொல்லுவேன் என்பதாம். "ஏனம் ஒன்று ஆய் மண்துகள் ஆடி" என்றது வராக அவ

தாரத்தை. ஒப்பற்றவராக மாய் பூமியின் தூளியை அளைந்து பூமிப்பிராட்டியைத் தாங்கியெழுந்த எம் பெருமான் என்பதாம். ''வைகுந்தம் அன்னாள்'' என்றது எம்பெருமானது பரமபதத்தை ஒத்த இவள் என்பதாம். எம்பெருமான் பரமபதம் எல்லா நலனும் பொதிந்தது, மணம் இன்பம் எல்லையற்றுக் கிடப்பது, என்றும் அழியாதது. 'வைகுந்தம் அன்னாள்'' என்ற தால் என்னுடன் வைகுந்தத்தில் என்றும் இருக்கப் பிறந் தவள், வைகுந்தத்தையும் என்னையும் எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே இவளையும் என்னை யும் பிரிக்க முடியாது என்பதாம். இது ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் உள்ள அளவிடமுடியா ஈடு பாட்டை உணர்த்துவது. எம்பெருமான் வைகுந்தத் தில் எழுந்தருளியிருப்பதால், தனக்கு இருப்பிடமாக்கிக் கொண்டிருப்பதுபோல் ஆழ்வார் உள்ளத்தில் என்றும் எழுந்தருளியிருப்பவன் தன் இருப்பிடமாக்கிக் கொண் டவன் என்பதுவுமாம். ''குழவரய் விரைபோல்'' என் றது குழலில் இயற்கையாய் கமழும் மணம் போன்று என்பதாம். மகளிர் கூந்தலுக்குமணம் உண்டா இல்லையா என்ற சர்ச்சையில் முக்கண்ணனையே நக்கீரன் ''குற்றங்குற்றமே'' எனச்சாடுகிறான். இதனை,

''கற்றைவார் சடையா னெற்றிக் கண்ணினைச்
சிறிதே காட்டப்
பற்றுவா னின்னு மஞ்சா னும்பரார் பதிபோலாகம்
முற்றுநீர் கண்ணா னாலு மொழிந்தநும் பாடல்
குற்றங்
குற்றமே யென்றான் றன்பா லாகிய குற்றந்
தேரான்''

என்று பரஞ்சோதி முனிவர் நக்கீரன் கூறியதாகப் பாடு வார். திருவிளையாடற் புராணம், தருமிக்குப் பொற் கிழியளித்த படலம் 106.

இங்கு தலைவன் தன் தலைவியின் கூந்தலுக்கு இருக்கும் மணம்போன்று வேறு எங்கும் நுகர முடியுமா?எனும் வினாவை எழுப்புகிறார். தலைவியோ "வைகுந்தமன்னாள்" வைகுந்தத்தில் எழுந்தருளி யிருக்கும் அந்த நாராயணனுக்குள் எல்லாம் அடக்கம். அதில் மணம் கமழ் கூந்தல் விதிவிலக்கன்று ஆதலின், 'வைகுந்தமன்னாள் குழல்வாய் விரை'' என்றனர் என்பது காண்க. "ஏனம் ஒன்றுஆய்மண் துகள் ஆடி வைகுந்தம்" என்று வைகுந்தத்தைச் சிறப்பித் திருப்பது காண்க.

அரும்பதவுரை : வம்மின்-வாருங்கள். நிலம்பு-நிலத் தில் மலரும் பூ. நீர்ப்பு - நீரில் வளரும் செடிகளின் பூ. ஒண்பூ - சிறந்த பெரியபூ. மரத்தில் மலரும் மலர்களைத் தேன் வண்டுகள் அதிகமாக மொய்ப்பதில்லை. பெரிய சிறந்த மலர்களில் மட்டும் மொய்க்கும். ஏனம் - பன்றி. ஒன்று - ஒப்பற்ற என்ற பொருளில் வரும். குழல் - கூந்தல். விரை - வாசனை. விண்டு - மணம் வீசும். கள் - தேன். வியல் - அகன்ற. ஆட்சிக்கு உட்பட்ட.

(தலைவன் இரவிடைக் கலந்தமை
தலைவி தோழிக்குக் கூறல்)

வியலிடமுண்ட பிரானார் விடுத்த திருவருளா
லுயலிடம் பெற்றுய்ந்த மஞ்சலந்தோழியோர்
தண்டென்றல் வந்
தயலிடை யாருமறிந்திலரம் பூந்துழாயினின்றேன்
புயலுடை நீர்மையினாற்றடவிற்றென்
புலன்கலனே. 56

விளக்கவுரை : அகன்ற விசாலமான உலகங் களையெல்லாம் அமுது செய்து திருவயிற்றில் கொண்

டருளிய எம்பெருமான் விடுத்த திரு அருளினால் உய்தற்கான இடத்தைப் பெற்று வாழ்ந்தோம். இனி வாடை முதலியனவற்றிற்கு அஞ்சமாட்டோம். தோழி! ஒரு குளிர்ந்த தென்றற் காற்று வந்து, அருகில் உள்ளவர்கள் யாரும் அறியாதபடி அழகிய மலர்களையுடைய திருத்துழாயின் இனிய தேன் துளிகளை மழையின் தன்மையினால் எனது புலன்களிலும் அணிகலன்களிலும் தடவிற்று.

திறனாய்வு : தலைவன் வருவான் வருவான் என்று காத்திருந்த தலைவிக்கு இரவு அவன் வந்து தனது திருத்துழாய் மாலையில் உள்ள தேன்துளிகளைச் சிந்தி அவள் அணிந்திருந்த ஆபரணங்களைக் கலைந்து புணர்ந்து சென்ற இன்ப நினைவுகளைத் தன் தோழிக்குக் கூறுகிறாள். "வியல் இடம் உண்ட பிரானார்" என்றது இவ்வுலகையெல்லாம் பிரளய காலத்து உண்ட பிரானார் என்பதாம்.

"மண்ணும் மலையும் கடலும் உலகேழும்
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு"

என்பர் பெரியாழ்வார். திருமொழி 1.2.18 உலகேழும் உண்ட எம்பிரான் ஆதலின் "வியல் இடம் உண்ட பிரான்" என்றனர். "வியல்" என்ற சொல் அகண்ட என்ற பொருளில் வருவது. இங்கு உலகுக்கானது "விடுத்த திருஅருளால்" என்றது செலுத்திய அருளினால் எம்பெருமான் அருள் நோக்கினால் என்றபடி அவன்அருள் இல்லாமல் உலகில் எந்த உயிரினமும் வாழ முடியாது ஆதலின் விடுத்த திருஅருளால் "உயல் இடம் பெற்று" என்றனர். "உயல் இடம்" என்பது தங்கி வாழ ஒரு இடம், உயிர் வாழ்ந்திருக்க ஓர் இடம் "உயல்"என்ற சொல் தனக்கே உளதாதல் என்பதாம் தனக்கென்று ஒரு இடத்தைப் பெற்று என்பதாம் அவன் அருள் இல்லாதார் அனாதைகள். அவன் அருள்

பெற்றதால் "உயல் இடம்" கிடைத்துவிட்டது என்றபடி. "உய்ந்தம்" என்றது வாழ்ந்திருந்தோம், அவன் அருளால் வாழும் வகையடைந்தோம் என்ப தாம். வாழும் வகையடைந்தோம், அது எம்பரான் அருளால் வந்தது ஆதலின் "அஞ்சலம்" என்றனர், இனி அச்சமடைய மாட்டோம். என்பதாம்.

என்தோழியே! "ஓர்தன் தென்றல் வந்தது அயல் இடையாரும் அறிந்திலர்" என்கிறார். ஒரு குளிர்ந்த தென்றல் வந்ததை அருகில் இருந்தவர்கள் யாரும் அறியவில்லை. யாரும் அறியாதபடி ஒரு குளிர் தென்றல் வந்து, "அம்பூந்துழாயினின் தேன் புயலுடை நீர்மையினால் தடவிற்று என் புலன் கலனே" என் கிறார். அழகிய துழாய் மலரில் உள்ள தேனை, மழை போன்று தெளித்து எனது உடல் மீதும் அணிகலன் கள் மீதும் தடவிச் சென்றதே என்பதாம். அழகிய துழாய் மலர்களணிந்த மார்பையுடைய எம்பிரான் யாரும் அறியாதபடி என்னைத் தழுவிப் புணர்ந்து எனது அணிகலன்களைத் திருத்திச்சென்றனள் எனவும் பொருள் கொள்ளலாம். "தடவிற்று என்புலன்" என்பது என்னைப் புணர்ந்து என்றும்; "கலனே" என்ற ஏகாரத்தால் திருத்திச் சென்றது என் அணிகலன் களே என்பதாகப் பிரித்துக் காண்க. ஏகாரம் இங்கு தேற்றம். இது தோழிக்குரைத்ததாதலின் "தோழி!" விளித்ததாக முதலில் கொணர்க.

அரும்பதவுரை : வியல் - அகன்ற. விடுத்த - செலுத்திய. உயல் இடம்-உய்யும் இடம். வாழும் வழி. உய்ந்த-வாழ்ந்த, வாழவழி வகுத்த. அருசலம்-அஞ்ச வேண்டாம். தென்றல்-தெற்கு பகுதியிலிருந்து வீசும் மெல்லிய காற்று. அயல்-அருகில். அம்-அழகிய. இன்-இனிய. புயல்-மலை. நீர்மை-தன்மை. புலன்-உடல் கலன-அணிகலன்.

(தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர் மறுத்தல்)

புலக்குண்டலப் புண்டரீகத்த போர்க்கெண்டை
வல்லி யொன்றால்
விலக்குண் டுலாகின்றுவேல் விழிக்கின்றன
கண்ணன் கையான்
மலக்குண்ட முதஞ்சுரந்த மறிகடல் போன்றவற்றாற்
கலக்குண்ட நான்று கண்டாரெம்மை யாருங்
கழறலரே 57

விளக்கவுரை : அழகிய குண்டலங்களையுடைய, தாமரை மலர்போன்ற தலையின் முகத்திலுள்ள, ஆடவரைக் கண்டால் பாய்ந்து போரிடும் இரண்டு கெண்டை மீன்கள் போன்ற கணகள் மூக்கால் ன்லக்கப்பட்டு உலாவிக் கொண்டு வேல் கொண்டு பாய்ச்சினது போன்று நோக்குகின்றன. கண்ணனது கைகளால் கடைந்து கலக்கப்பட்டு அமிர்தம் சுரந்த அலைகடல் போன்று அக்கண்களால் யாம் கலக்கப் பட்டபோது பார்த்தவர் யாரும் எம்மை குற்றம் சொல்ல மாட்டார்கள்.

திறனாய்வுரை : தலைவியின் கண்களின் எழில் தோற்றத்தை இப்பாசுரத்தில் சித்தரித்திருப்பது அதிவீர ராமபாண்டியனாரின் வாக்கு இங்கு நினைவில் ஓடுகிறது.

"குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து
கொலைத் தொழின் மறலியைப் பயிற்றி"

என்பார். நைடதம் உரை நூல் பக்கம் 127 காண்க. மகளிரின் கண்கள் சுழன்று சுழன்று ஆடவ்ரைக் கொல்வதையே தொழிலாகக் கொண்டவை என்பதாகக் காண்பிக்கிறார் அதிவீரர். ஆழ்வாரும் இப்பாசுரத்தில் "புலம் குண்டலம் போர் புண்டரீகத்த கெண்டை"

என்கிறார். விழிகளைச் சுழற்றும் பொழுது அது திசை யெங்கும் சுழலும் போர்த் தொழிலில் வல்ல விழிகள்; ஆடவர் இருக்கும் இடமெங்கும் சுழன்றுபாயுமாதலின் ''புலம் குண்டலம்'' என்றனர்.

''புலம்'' என்றது இங்கு திசையெங்கும் இட மெங்கும் என்பதாம். ''குண்டலம்'' என்பது ஆடவ ரைக் குறிக்கும் ஆகுபெயராகவும் அமையும். அணியும் காதணி ஆடவருக்காக்கி ''புலம் குண்டலம்'' என்றது ஆடவர் இருக்கும் இடமெங்கும் எனினுமாம். ''புலம்'' என்ற சொல்லுக்கு 'இடம்' என்ற பொருளும் உண்டு. ஆடவர் இருக்கும் திசையெங்கும் அல்லது இடமெங் கும் என்பதாம். ''போர் புண்டரீகத்து'' என்றது போர் செய்யும் வண்டுகள் போல் என்பதாம்.

கருவண்டுகள் சுற்றித்திரியும் பொழுது அவை யாரிடமோ போர் செய்து வீழ்த்திவிடப் போவது போன்று விரைந்து பறந்தோடும் ஆதலின் ''போர் புண்டரீகத்து'' என்றனர். ''புண்டரீகத்து'' என்றது புண்டரீகம் போன்று, கருவண்டுகள் போன்ற கண் கள் என்பதாம். மகளிர் கண்களும், விரைந்து சென்று பாய்ந்து மீளும். கருவண்டுகளும் திசையெங்கும் விரைந்து பறந்து மீளும். வண்டுகள் செல்லும் திசை யும் காணமுடியாது மாதர் விழிகளும் அப்படியே யாதலின் ''குண்டலம் புலம் போர் புண்டரீகத்த'' என்றனர்.

''கெண்டை''யென்றது கெண்டை மீன்கள் போன்ற மாதர் விழிகளை. கெண்டை பிறழ்வது போன்று மகளிர்விழிகளும் பிறழும் என்பதனால் கெண்டை மீன்களுக்கு ஒப்பிடுவர் புலவர். ''வல்லி யென்றால்'' என்றது வல்லிக்கொடி ஒன்றினால் என்ப தாம். ''வல்லி'' என்ற சொல் இருமடி ஆகுபெயராய் இளம் மங்கையரைக் குறிக்கும். இங்கு இச்சொல் எழில்

மிகு மூக்குக்கானது. மூக்கு பெண்களின் முக அழகை மும்மடங்கு எடுத்துக்காட்டும்.

"கூராந்த வாளால் கொடிமூக்கும்..."

என்று சிறிய திருமடலில் வருவதும்

"கொடிமூக்குவமைய மூரைக்கு மாறரிதே"

என்று நைடதம் அன்னத்தைத்தூதுவிட்ட படலம் 14ல் வருவதும் காண்க.

"ஆட்டியும் தூற்றியும் நின்று அன்னைமீர் என்னை
நீர்நலிந்து ஏன்?
மாட்டுயர் கற்பகத்தில் வல்லியோ? கொழுந்தோ?
அறியேன்"

என்று திருவாய்மொழி 7.7.2 வருவதும் காண்க.

இரு கண்களுக்கு இடையில் மூக்கு இருப்பதால் இரு கெண்டைகளெனத் தோற்றமளிக்கின்றன, இல்லையேல் ஒன்றெனத் தோன்றும் நீண்டகன்ற விழிகள் என்பதை உணர்த்தவே "வல்லியொன்றால் விலக்குண்டு" என்றனர். "விலக்குண்டு" என்றது இரண்டும் தனித்தனியாக விலக்கப்பட்டு என்பதாம். இரு கண்களும் கெண்டை மீன்களெனத் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டிருந்து என்பதாம் "உலாகின்ற" என்றது பாய்வதற்கு இங்குமங்கும் உலாவுகின்றன என்பதாம்.

வேடன் தன் அம்புகளைப் பாய்ச்சக் குறிபார்க்கும் பொழுது இங்குமங்கும் நின்று பார்த்துத் தன் அம்பைக் குறிதவறாமல் பாய்ச்சுவான். அதே போன்று "வேல் விழிக்கின்றன" என்கிறார். "வேல்" மாதர் விழிக்கானது. "விழிக்கின்றன" என்பது இங்கு பாய்கின்றன என்பதாம். இதனை, அதாவது தன் தலைவியின் வேல்விழிகள் பாய்ந்து கலங்கியதை கண்ணன் திருப்

பாற்கடலைக் கடைந்ததோடு இங்கு ஒப்பிடு கிறார். "கண்ணன் கையால் மலக்குண்டு" என்கிறார். கண்ணபிரானது திருக்கைகளால் திருப்பாற் கடலைக் கலக்கியது போல கலக்கப்பட்டு என்பதாம்.

"மயக்கம்" என்றால் மனக்கலக்கம் என்பதால் மகளிர் வேற்கண் பாய்வதால் ஆடவர் மனக் கலக்கம் அடைவர் என்பதாக இங்கு கண்ணன் திருப்பாற் கடலைக் கலக்கியதை "மலக்குண்டு" என்ற சொல்லைப் பயன்படுத்தி கற்போர் மனத்தைக் கலக்கு வதும் காண்க. கடல் கலங்கிய பொழுது அமுதம் தோன்றியது. இங்கு ஆன்மாக்கள் இறைவன் திருவடித் தாமரைகளைப் பெற்றுப் பேரானந்தம் அடைகின்றனர் ஆதலின் "அமுதம் சுரந்த" என்கிறார். எம்பெருமான் வயப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவன் அமுதமழை யெனப் பொழிகிறான் என்பதையே இங்கு ஆழ்வார் அழகுபடச் சித்தரிக்கிறார்.

"மறிகடல் போன்ற என்றது அலை சுழிக்கப்பட்ட கடல் போன்று என்பதாம். "அவற்றால் கலக்குண்ட நான்று" என்பது எம்பெருமானால் கடல் கலக்கப்பட் டது போன்று தலைவியின் வேல் விழிகளால் கலக்கப் பட்ட பொழுது என்பதாம். "கண்டார்" என்றது அப் பொழுது என் பரிதாபகாரமான நிலையைக் கண்டவர் கள், பார்த்திருந்தவர்கள் என்பதாம். 'யாரும் கழறலரே' என்றது யாரேனும் என் நிலையைப் பார்த்துக் குற்றம் சொல்வார்களோ? இல்லை என்றபடி. இங்கு ஏகாரம் தேற்றமாகக் கொண்டு பொருள் கொள்ளப்பட்டது. அசையெனத் தள்ளினும் அமையும்.

அரும்பதவுரை : புலம்-திசை. இடம் குண்டலம்-ஆடவர். குண்டலம் அணிந்த ஆடவருக்கு ஆகு பெயர். புண்டரீகம்-தாமரை. புண்டரீகத்து வண்டுகள் போன்று, போர்க்கெண்டை - போருக்கு எழுவது

போன்ற கெண்டைவல்லி-வல்லிக் கொடி போன் பெண். அழகிய பெண்ணுக்காகி மூக்குக்கானது. விழ கின்றன - பாய்கின்றன. மலக்கு - கலக்கு. மறி கடல் அலைகடல். நான்று-பொழுது. கழறல்-சொல்லல்.

(தோழி தலைவன் பெருமையையுரைத்துத்
தலைவியையாற்றல்)

கழறலமொன்றே நிலமுழுதாயிற்றொருகழல் போய்
நிழறர வெல்லா விசும்பு நிறைந்தது நீண்ட வண்ட
துழறலர் ஞானச்சுடர் விளக்காயுயர்ந் தோரையில்ல
வழறலர் தாமரைக் கண்ணனென்னோ
விங்களக்கின்றதே 5

விளக்கவுரை : எம்பெருமானது திருப்பாதப் ஒன்றே உலகம் முழுவதுமாயிற்று. மற்றொரு திருவடி மேலே சென்று நிழலைச் செய்யும்படி மேலுலகப் முழுவதும் நிறைந்தது. நீண்ட அளவிட முடியாத பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனும் எங்கும் செல்ல வல்ல பரந்த ஞான ஒளி விளக்கு போன்றவனாய்த் தன்னினும் உயர்ந்தோர் இல்லாதவனாய் சேற்றில் மலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருகண்களை யுடையவனுமான திருமால் இங்கு வந்து அளக்க வேண்டியது ஏதேனும் உண்டோ?

திறனாய்வு : எம்பெருமான் மூவடி மண் கேட்டு உலகளந்த பெருமானாய் நின்ற கோலத்தை இங்கு தோழி தலைவிக்கு உணர்த்துவதுதாக அமைந்த பாசுரம். ''கழல் தலம் ஒன்றே, நிலம் முழுதுப் ஆயிற்று'' என்றதால் ஓர் அடியால் இவ்வுலகனைத்துப் அளந்ததை இவ்வாறு சிறப்பிக்கிறார்.

''மின்னார் மணிமுடிபோய் விண்தடவ-மேலெடுத்த
பொன்னார்கனை கழற்கால் ஏழுலகும்
போக்கடந்து'

என்றனர் திருமங்கையாழ்வார். பெரியதிருமடல். "கழற்கால் கழறலம்" என்று வருவது காண்க. எம் பெருமானின் பாதஅடிகள் "கழல்தலம்" அது ஒன்றே நிலம் முழுவதும் ஆயிற்று என்கிறார். மற்றொரு "சழல் போய் நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்து" என்கிறார்.

எம்பெருமானின் ஒருபாதம் பூமியளந்த மற்றொரு பாதம் இப்புவியில் உள்ளோரை நிழலாக நின்று காத்திட "எல்லா விசும்பும்" நிறைந்தது என்பதாம். விசும்பு எல்லாம் நிறைந்தது எனாமல் "எல்லா விசும்பு நிறைந்தது" என்று பன்மையில் கூறியிருத்தலால் விசும்புகள் பல என்பதும் அவற்றிலெலாம் நிறைந்து இருந்தது என்பதாம். சூரபதுமன் எனும் அசுரன் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கு அதிபதியாக இருந்து ஆண்டு வந்தனன் என்று கந்தபுராணம் கூறும். அது போன்று ஆயிரத்தெட்டு அண்டங்களுக்குமாய் விசும்புகளனைத்திலும் நிறைந்து நிழல்தரும் பாதம் என்பதாகும். "நீண்ட அண்டத்து" என்றது ஆயிரத் தெட்டு அண்டங்களுக்குமாய், அளவிட முடியாத பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் என்பதாம்.

"உழறு அலர் ஞானச்சுடர் விளக்காய்" என்றது சொல்லில் அடங்கா முதிர்ந்த அறிவுச் சுடராய் என்ப தாம். "உழறு" என்ற சொல் கலக்கம் என்ற பொருளில் வருவதாகும். சொல்ல நினைப்பதைச் சொல்லமுடியாத நிலையில் "உழறல்" ஏற்படும். எம்பெருமானது ஞானச்சுடர் எத்தகையது என்று சொல்லமுடியாத ஒன்று, நாவில் அடங்காத ஒன்று ஆதலின் "உழறு அலர்" என்றனர். "அலர்" என்றது மலர்ந்த, விரிந்த என்றும் முதிர்ந்த முழுமையடைந்த என்றும் வருவதாம். "உழறு அலர் ஞானச் சுடர் விளக்கு" என்பதால் நாவன்மைக்கு அப்பாற்பட்ட விரிந்த அல்லது முதிர்ந்த அறிவுச் சுடர் ஒளியாய்

என்பதாகிறது. "அழறு அலர் தாமரைக் கண்ணன்" என்றது அன்றலர்ந்த தாமரை மலர்கள் போன்ற கண்களையுடைய கண்ணபிரான் என்பதாகும். கண்ணன் கண்களையும் அன்றலர்ந்த தாமரையையும் பிரிக்க முடியாது. கண்ணன் என்பது காரணப் பெயராய் அமைந்தது ஆதலின் அழறு தாமரைக் கண்ணன் என்கிறார். தாமரை, சேற்றில் சிறப்பாக மலருமாதலின் "அழறு அலர்" என்றனர். "உயர்ந் தோரை இல்லா என்னோ அளக்கின்றதே" எனறது. "உழறு அலர் ஞானச்சுடர் விளக்காய் உயர்ந்தோரை யில்லா அழறு அலர் தாமரைக் கண்ணன் என்னோ அளக்கின்றதே" எனக் காணவேண்டும். "அளக் கின்றது" என்பது நிலைபெயர்ந்திருத்தல் ஒன்றினை எடைபோட்டுப் பார்த்தல், விண்ணையும் மண்ணை யும் அளந்தவன், உழறு அலர் ஞானச் சுடரானவன், உயர்ந்தோரையில்லாத கமலக் கண்ணன் தலைவியின் விஷயத்தில் நிலைதடுமாறி நிற்பதேனோ? இவ்வளவு சிறப்புக்கள் மிக்க தலைவன் தலைவியினிடத்துள்ள ஈடுபாடு காரணமாக நிலை குழைந்திருப்பது என்னோ? என்பதாம். "உயர்ந்தோரையில்லா" என்றதால் அவனுக்கு ஒப்புவமை யாரும் இல்லை என்றபடி,

"உயர்வறவுயர்நலம் உடையவன்"

திருவாய்மொழி 1.1.1.

"ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயா"

திருவாய்மொழி 2.3.2, என்பதாலும் அறியலாம். இந்த மாமாயன் தலைவியின் விஷயத்தில் அளக்கவேண்டு வதுமுண்டோ? என்பதாம்.

அரும்பதவுரை : கழறலம் - கழல்+தலம். பாத அடிகள். நிழறர - நிழல்+தர. எல்லாவிசும்பும் - விசும்பு களனைத்தும். உழறு அலர் - சொல்லில் அடங்காத,

விரிந்த. உயர்ந்தோரையில்லா - ஒப்பில்லாத. அழறு - அளறி, சேறு.

(இரவு நீடுவதற்கு ஆற்றாத
தலைவியைப் பற்றிச் செவிலி இரங்கல்)

அளப்பருந் தன்மையவூழியங்கங் குலந்தண்ணந்
துழாய்க்
குளப்பெருங்காதலி னீளியவாயுள வோங்குமுந்நீர்
வளப்பெரு நாடன் மதுசூதன னென்னும்
வல்வினையேன்
றளப்பெரு நீண்முறுவற் செய்யவாய
தடமுலையே 59

விளக்கவுரை : வல்வினையேனாகிய எனது, முல்லை அரும்பினது போன்ற பல்வரிசையையுடைய சிவந்த வாயையுடையவளான பருத்த முலைகளையுடைய இம்மகள். அளந்து பார்ப்பதற்கு அரிய தன்மையுடைய ஊழிகளிலும் அழகிய நீண்ட இரவுகளில் அழகிய குளிர்ந்த திருத்துழாயினுக்காக உள்ளத்துள் வளர்ந்த கடல்களால் சூழப்பட்ட வளப்பமுள்ள பெரிய நாட்டையுடையவன், மது எனும் அசுரனை அழித்தவன் என்று வாய்விட்டுச் சொல்லி அலற்றுகிறாள்.

திறனாய்வு : தலைவியின் ஆற்றாமையைக் கண்ட நற்றாய் இரங்கும் பாசுரம். தன் மகள்படும் துன்பங்களைக் கண்டதாய் அதனைக் காணச் சகியாதவளாய்த் தன் பிறப்பையே நொந்து கொள்வதாக, ''வல்வினையேன்'' என்கிறார். எனது வல்வினையால் இவள் எனக்கு மகளாகப் பிறந்து இப்படி துன்புறுகிறாளே என்றதை ''வல்வினையேன்'' என்ற சொல் உணர்த்துவதாகும்.

வல்வினையேனாகிய எனது, "தளவு பெருநீள் முறுவல் செய்ய வாயதடமுலையாள்" அதாவது முல்லைச் சிரிப்பை உதிர்த்து நீண்ட புன்முறுவல் பூக்கும் சிவந்த வாயை யுடையவளும் பருத்தமுலை களையுமுடைய மகள் என்பதாம். "தள" என்பது தளவு என்பதின் விகாரம். தளவு முல்லை. மகளிர் சிரிப்பைச் சிந்தும் பொழுது முல்லைச் சிரிப்பு என்பரா தலின் "தளவு பெரு நீள் முறுவல்" என்றனர். "தளவு பெரு" என்றது முல்லை விரித்தாற் போன்றதே ஆன, அளவுடைய என்பதாம். "நீண் முறுவல்" என்றது வெண்பற்கள் மென்மையாகத் தோன்றியதோர் காட்சி நீண்டதோர் முறுவலாய்த் தோன்றிற்று என்பதாம், சிரிப்பையே அவள் முகத்தில் காணாத நிலையில் அவள் புன்முறுவல் பூத்தது நீண்முறுவலானது எனினுமாம்.

"அளப்பு அரு தன்மைய" என்று உலகளந்த பெருமானைக் குறிப்பிடுகிறார். அவன் உலகெலாம் அளந்தான். அவனை அளப்பார் யாரோ? என்ப தால், "அளப்பு அரு தன்மைய" என்றனர். "தன்மைய" என்றதால் அவன் இயல்பே யாராலும் அளக்கப்பட முடியாத தன்மையினன் என்பதாம். "ஊழி அம் கங்குல்" என்று முடியா இருளின் எழிலை சிறப்பிக்கிறார். "அம்கங்குல்" என்றது அழகிய இருள் என்பதாம். "முடிவில்லாத துன்பமதிலும் இன்பம் வேறேது?" என்றது ஒரு திரைக் கூத்துப் பாடல். நீண்ட முடிவில்லா இருள் அழகு மிக்கது என்பது இதனால் விளங்கும். "அம் தண்ணம் துழாய்க்கு" என்றது பெருமைமிக்க குளிர்ந்த துழாய் மாலைக்கு ஏங்கி என்பதாம். "உளம் பெரு காதலின்" என்றது உள்ளத்துள் எழுந்த பெருத்த வேட்கையின் என்பதாம் "நீளியஆ உள" என்றது நீண்டனவாகவுள்ள என்பதாம். துழாய் மாலையின்

மேல் எழுந்த காதல் அளவிட முடியாததாய், கட்டுக்கு அடங்காததாய் இருந்ததாலின் "நீளியஆஉள" என்றனர். "ஓங்கு முந்நீர் வளப்பெரு நாடன்" என்று எம்பெருமானைச் சிறப்பிக்கிறார். "ஓங்குமுந்நீர்" என்றது சிறப்புமிக்க மூன்று வகைநீர்வளம் கொண்ட நாடு என்பதாம். முந்நீர் பற்றி முன்னமே தெளிவாகக் கூறப்பட்டுவிட்டது. "வளப்பெருநாடன் மதுசூதனன்" எனறு, மதுவெனும் அசுரனை அழித்த எம்பெருமான் நாடு என்கிறார்.

ஓங்கு முந்நீர்வளம் இறைவன் உயிரினங்களைக் காத்தல் தொழில் செய்வதற்கானது. "மதுசூதனன்" என்றது தீமைகளை அழித்து உயிரினங்களை காத்தல் தொழில் செய்யும் எம் இறைவன் என்றபடி. "மது சூதனன் என்னும்" என்றதால் தலைவி மதுசூதனன் என்று பிதற்றிக்கொண்டே இருக்கிறாள் என்பதாம்.

அரும்பதவுரை: அளப்பு அரும்-அளப்பதற்கு அரிய. கங்குல் - இரவு. அம் - அழகிய. உளப்பெரு - உள்ளத்தில் பெரிய. வளப்பெரு - வளமைமிக்க. மதுசூதனன் ' மது எனும் அசுரனை அழித்த கண்ணன். தள - தளவு என்பதன் விகாரம் முல்லை. செய்யவாய்-சிவந்தவாய். தடமுலை - பருத்தமுலை;

(தலைமகள் இளமைக்குச் செவிலி இரங்கல்)

முலையோ முழுமுற்றும் போந்தில மொய்
பூங்குழல்குறிய
கலையோ வரையில்லை நாவோ குழறுங் கடன்
மண்ணெல்லாம்
விலையோவென மிளிருங்கணிவள் பரமே பெருமான்
மலையோ திருவேங்கட மென்று கற்கின்ற
வாசகமே 60

விளக்கவுரை : முலைகளோ முழுமையாகத் தோன்றவில்லை. அடர்ந்த மென்மையான கூந்தல் முடிய முடியாதபடி சிறிதாக வளராமல் உள்ளது. பாவாடையை இடுப்பில் கட்ட நிற்கவில்லை; நாக்கோ குதலைச் சொற்களையே பேசுகின்றன. கண்கள் கடல் சூழ்ந்த உலகமெல்லாம் விலைப் பொருளோ என்று சொல்லும்படி விலைபேசி விழிக்கின்றன. திருவேங்கட மாமலை எனது தலைவன் இருப்பிடமோ? என்று பலதடவை வாய் சொல்கின்றது. இப்படி இளமைப் பருவமுடைய இவளிடம் தலைவனிடம் ஈடுபாடு உண்டானது எவ்வாறு? இளமை தோற்றது என்றபடி.

திறனாய்வு : இப்பாசுரத்தின் இனிமையை முழுமையாகச் சுவைக்க விரும்புவோர் பெரியாழ்வாரின் திருமொழி மூன்றாம் பத்து ஏழாம் திருமொழியின் பதினோரு பாசுரங்களையும் பயிலவேண்டும். இளம் பெண்மையின் எழில் கோலத்தை அங்கம் அங்கமாகப் பெரியாழ்வார் பெயர்த்து வைக்கிறார். அவற்றையெல்லாம் ஒருங்கு திரட்டி இப்பாசுரம் ஒன்றிலேயே தந்து விடுகிறார் நம்மாழ்வார். பெரியாழ்வார் பொழியும் அமுதைச் சுவைத்துப் பாருங்கள். அவற்றில் ஒன்று, அதுவும் முதற்பாசுரம்;

“ஐயபுழுதி உடம்பளைந்து இவள்பேச்சு
மலந்தலையாய்
செய்ய நூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும்
வல்லளல்லள்
கையினில் சிறுதூ தையோடு இவள் முற்றில்
பிரிந்துமிலள்
பையரவணைப் பள்ளியானொடு கைவைத்து
இவள் வருமே”

என்று தலைமகளின் இளமையை சிறப்பிக்கிறார். நம்மாழ்வார், “முலையோ முழுமுற்றும் போந்தில”

என்று முதலில் முளைத்தும் முளையா நின்ற முலையைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இதனை பெரியாழ்வார் "கொங்கை இன்னம் குவிந் தெழுந்தில" என்கிறார். மூன்றாம் பாசுரம். இதனையே,

"தரும்புகை யிடையிற் றோன்றுங்
 கனிதம யந்தி கொங்கைக்
குரும்பையை நிகர்ப்ப......"

என்பர் அதிவீரராம பாண்டியனார். நைடதம் உரை நூல். பக்கம். 83 காண்க. பருவமடையா மகளிரின் முலைகளைத் தென்னம் குரும்பைக்கு ஒப்பிட்டிருப்பது ஆங்காங்கு காணலாம். இந்நிலையையே "முலையோ முழுமுற்றும் போந்தில" என்கிறார். ஆடவர் கண்ணில் முதன் முதலில் படுவது முலைகளாதலின் அரும்பும் முலைகளை முதலில் சிறப்பிக்கிறார். அடுத்து கூந்தலைப் பற்றிக் கூறுமிடத்து, "பூங்குழல் குறிய" என்கிறார். பூங்குழல் என்றதால் மலர் சூடிய கூந்தல் என்றும் அழகிய மென் கூந்தல் எனினுமாம். "குறிய" என்றது குட்டையாக உள்ளது என்பதாம். இன்னமும் வளரவில்லை. இதனைப் பெரியாழ்வார், "மயிரும் கூடிற்றில" என்கிறார். இரண்டாம் பாசுரம். அடுத்து அவள் ஆடை அணியும் திறமை பெற்றுள்ளாளா என்று பார்க்கையில் "கலையோ அரை இல்லை" என்கிறார். ஆடை இடுப்பில் இல்லை என்பதாகக் காண்கிறார். இதனைப் பெரியாழ்வார் "செய்ய நூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லன்" என்கிறார். அவளின் மொழியின்பம் இப்பொழுதுதான் மழலை தாண்டி குழறு நிலையடைந்திருக்கிறாள் என்பதனை, "நாவோ குழறும்" என்கிறார். இதனைப் பெரியாழ்வார், "பேசவும் தெரியாத பெண்மையின் பேதை யென் பேதை" என்கிறார். ஏழாம் பாசுரம். இவள் கண், "கடல் மண் எல்லாம் விலையோ என மிளிரும்"

என்கிறார். இவள் கண்கள் உலகையே விலைக்கு வாங்கிவிடும் வலிமையுடையது என்பதாகச் சிறப்பிக் கிறார். இவள் இளமை நீங்காதிருந்தாலும் கண்கள் ஒளிவீசிக் கவருகின்றதே என்பதாகக் காண்கிறார். இத்தகு இளமைப் பருவத்தே எம்பெருமானோடு ஈடுபாடு கொண்ட இவள், எம்பெருமானின் இன்பப் பெருக்கைத் தாங்கும் வலிமையற்ற இச்சிறுமியின் கண்களில் ஒளிவீசுகிறதே எனக் காணும் பொழுது, அரும்பும் இளமையிலும் ஆழ்வார் இறையருள் பெற்று ஞானஒளியாய்த் திகழ்கிறார் என்பதனையே இப் பாசுரம் நமக்கு உணர்த்துகிறது. அவள் கற்கின்ற வாசகம் யாது எனில் "பரம்" எம்பிரான் என்ப தாகப் "பரமே பெருமான்" என்கிறார். அவன்வதியும் இடமாகிய, மலையைக் கூறுமிடத்து "மலையோ திரு வேங்கடம்" என்று "கற்கின்ற வாசகமே" என இதற்கு ஏகாரம் கொடுத்துச் சிறப்பிக்கிறார். பெருமான் எழுந் தருளியிருக்கும் மலையோ திருவேங்கடம் என்று கற் கின்ற வாசகம் தலைவி திருவேங்கடத்தை மனத்தில் நின்று போற்றியிருத்தலைக் குறிப்பதாகும்.

"வடமலையப் பன்னகஞ்சேர்ந்த வனிடை மங்கை கொங்கை
வ்டமலையப்பன்னரும் போகந்துய்த்தவன் மாயன் கண்ணன்
வடமலையப்பன் னருள் போற்றியைவர் மயக்குகர்
வடமலையப்பன்னிரு நாமநாவின் மலக்குவனே"

என்று திருவேங்கடத்தந்தாதியில் வருவதும் காண்க.39

அரும்பதவுரை: போந்தில்-முழுமையடையவில்லை. போந்து என்பது போது என்பதன் விகாரம். போது என்பது மலரும் நிலையிலுள்ள, முழுமையடையும் நிலையிலுள்ள என்பதாம். குறிய - குறுகிய என்பதன்

விகாரம். கலை - ஆடை. அரை - இடுப்பு. குழறு-குளறு உளறு; பேச்சுத் தடுமாற்றம். பரம் - இறைவன். திருமால் நிலை ஐந்தினுள் ஒன்று. வாசகம் - சொல். இப்பாசுரத்தில் வரும் ஓகாரம் ஐந்தில் முதன் மூன்றும் தெரிநிலை. கடையிரண்டும் வினா. ஏகாரம் இரண்டையும் அசையெனத் தள்ளினும் தள்ளுக. சேர்த்திசைத்தினும் அமையும்.

(தோழி தலைவனது நீர்மையைத் தலைவிக்குக் கூறல்)

வாசகஞ் செய்வது நம்பரமே தொல்லை வானவர்த
நாயகனாய வரெல்லாந் தொழுமவன் ஞாலமுற்றும்
வேயகமாயினுஞ் சோராவகை யிரண்டே யடியாற்
றாயவனாய்க்குல மாய்வந்து தோன்றிற்று
நம்மிறையே. 61

விளக்கவுரை: தொன்று தொட்டு நித்திய சூரிகளுக்குத் தலைவனும், பிரமன் முதலான தேவர்கள் எல்லோரும் தொழும் அவன், உலகம் யாவையும், ஒரு சிறு குச்சு ஊன்றும் அளவு நிலமாயினும் தவறாதபடி இரண்டே அடியால் அளந்து கொண்டவனுமாகிய நம் இறைவன், ஆயர் குலத்தில் ஒரு இடையனாய் வந்து தோன்றிய எளிமையை எடுத்துப் புகழ்ந்து கூறுவது நம்மால் இயலுமோ?

திறனாய்வு: இப்பாசுரத்தில் எம்பெருமான் ஆய்ப்பாடியில் ஆயர் குலக்கொழுந்தாய் வளர்ந்தருளிய சிறப்பினை எடுத்துக்காட்டித் தலைவன் சிறப்பைத் தலைவிக்கு உணர்த்துகிறார். பரமபதத்திருந்தெழுந்தருளி பூவுலகு வந்து திருவாய்ப் பாடியில் வளர்ந்த ஐயன் சிறப்பை விளக்குகிறார். பரமபதத்திருந்தருளியதைத் "தொல்லை வானவர் தன் நாயகன்" இங்கு எழுந்

தருளினன் என்பதாகக் கூறுகிறார். "தொல்லை" என்பது பழமையை உணர்த்துவது. தொன்று தொட்டு என்பதாம். கால எல்லைக்கு அப்பாற்பட்ட காலம் தொட்டுவதியும் பரமபதத்தவர், தொல்லை வானவர், நித்திய சூரிகள். நித்திய சூரிகளுக்குத் தலைவன் என்பதை "நாயகன்" என்ற சொல்லால் சிறப்பிக்கிறார். 'நாயகன்' என்ற சொல்லுக்குக் 'கணவன்' என்ற பொருளுமுண்டு ஆதலின் விண்ணவரை ஆட்கொள்ட வன் என்பதுமாகிறது. அங்கு நாயகர் என்று சொல்லட் படுபவர்களும் தொழும் நாயகன் என்பதால் "நாயகர் எல்லாம் தொழும்" என்றனர். பிரம்மலோகத்துக்கு பிரம்மனும் சிவலோகத்துக்குச் சிவனும் இந்திரலோகத் துக்கு இந்திரனும் எமலோகத்துக்கு எமதருமனும் நாயகராதலின் நாயகரெல்லாம் தொழும் நாயகன் என் றனர். அந்த நாயகன் ஒருநாள் "ஞாலம் முற்றும் வெய் அகம் ஆயினும் சோரா வகை இரண்டே அடி யால் தாயவன்" என்கிறார். "ஞாலமுற்றும்" என்றது உலகம் முழுவதும் என்பதாம். "வேய் அகம் ஆயினும் சோரா வகை" என்றது ஒரு சிறிது இடமும் விட்டுப் போகாமல் இரண்டே அடியால் அளந்து கொண்டவன் என்பதாம்.

ஒருகுறளாய் இருநிலம் மூவடிமண் வேண்டி
 உலகனைத்தும் ஈரடியாலொடுக்கி ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
 தாடாளன் தாளணைவீர்!

என்றனர் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 3-4-1 தான் கேட்ட மூவடிக்கு இடமில்லாமல் போக" ஈரடி யால் ஒடுக்கி" என்றனர். இரண்டடிகளாலேயே உல கனைத்தும் அளந்து கொண்டவன். "தாயவன்" என் றது தாவி அளந்தவன் என்பதாம். அவ்வாறு தாவி அளந்தவன் "ஆய்க்குலமாய் வந்து தோன்றிற்றி நம் இறையே" என்று இறைவனின் எளிமையை இங்கு சிறப்பிக்கிறார். "ஆய்க்குலமாய்" என்றது ஆய

களுடன் ஓர் ஆயர் மகனாய் என்பதாம். பாகுபாடற்று ஒன்றிய நிலையை இச்சொல்வலியுறுத்துகிறது. "வந்து தோன்றிற்று நம் இறையே" என்றது, "வானவர் தம் நாயகன்" ஆயர்குலத்தொருவனாய் இப்புவிக்கு எழுந்தருளி அவதரித்து என்பதாம். "நம் இறையே" என்பது நம் இறைவனே என்பதாம். இதனை "வந்து தோன்றி இற்று நம் இறையே" எனப் பிரித்துக் காணுமிடத்து ஆயர் குலத்து வந்து தோன்றி இன்றும் நம்மிடையே தங்கியதே என்றும் பொருள் கொள்ளினும் அமையும். "இறையே,' என்றது தங்கியதே என்பதாம். அவ்வாறு தங்கிய எம்பெருமான் பற்றி வாசகம் செய்வது அதாவது அதனை எடுத்துக் கூறுவது அவன் நம்மிடையே எழுந்தருளி யிருப்பதைக் கூறுவது நம்மால் கூறத்தக்கதல்ல, சொல்ல இயலாது, வேதங்களும் சொல்ல இயலாத ஒன்றை நம்மால் சொல்ல இயலாதது, அதைப்பற்றிக் கூறுதல் நம்மால் இயலுமோ? என்பதாம்.

அரும்பதவுரை : நம்பரமே - நம்மால் இயலுமோ நம்மால் சொல்லக்கூடியதோ? இதனையே தெய்வ ரகசியம் என்பர். மானிட எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட ஒன்று. தொல்லை - தொன்மை. தொன்று தொட்டு தோற்றம் அறியாத நிலை. நாயகன் - இறைவன். நாயகர் - தேவர் தலைவர். ஞாலம் - பூமி. வேய் - ஒரு சிறு அளவை. மூங்கிலால் அமைந்தது. வெய் - மூங்கில், ஆகம் - பூமி, இடம். சோரா - நழுவாமல், தவறாமல், தாயவன் - தாவி அளந்தவன். இறை - இறைவன். தங்கியவன். இறை - தங்கு.

(தலைவியினாற்றாமையைத் தோழி தலைவனை நோக்கிக்கூறல்)

இறையோ விரக்கினு மீங்கோர் பெண்பாலெனவும்
மிரங்கா
தறையோவென நின்ற திருங்கருங்கடலீங்கிவட

னிறையோவினியுன் றிருவருளாலன்றிக் காப்பரிதான்
முறையோ வரவணை மேற்பள்ளிகொண்டமுகில்
வண்ணனே 62

விளக்கவுரை : எவ்வளவு இரங்கி வேண்டினும், இவள் ஒரு பெண் என்று மன இரக்கம் கொள்ளாமல், கருங்கடலானது அறை கூவுவது போல் அதன் அலைகள் எழுந்து கூவுகிறதோ என்று சொல்லும்படி நிலைத்து நின்று முழங்குகிறது. ஐயகோ! இது ஒரு கொடுமை. பாம்புப் படுக்கையின் மீது பள்ளி கொண்ட மேகவண்ணனே! ஈங்கு இவள் தன் நிறைக் குணமோ? இவளுக்கு முடிவு இங்குதானோ? இனிமேல் உனது சிறந்த அருளால் அன்றி இவளைக் காப்பது அரிது- இவ்வாறு செய்தல் முறையோ?

திறனாய்வுரை : என்ன சொல்லியும் தலைவியின் நிலைக்கு இரங்காத தலைவனிடத்துத் தோழி கூறுவதாக அமைந்த பாசுரம். இறைவனையடைந்து விடத் துடிக்கும் ஆன்மாக்களின் நிலையும் முகில் வண்ணனேயன்றி யாராலும் இதனைத் தீர்க்க இயலாது என்பதை உணர்த்துவதாம். "இரக்கினும் ஈங்கோர் பெண்பாலெனவும் இறையோ இரங்காது" என்கிறார். பெண் என்றால் பேயும் இரங்கும் என்பர். இவள் ஒரு பெண் என்றும் பாராமல் எம் இறையோ இவளிடத்தில் இரக்கம் காட்டுவதாகத் தெரியவில்லை. இறையோ இரக்கம் காட்டாது இவளைத் துன்பத்தில் ஆழ்த்தியிருக்கிறது? என்பதாம். இங்கு ஓகாரம் தெரிநிலையில் வருவது காண்க. அப்படியிருக்க அவன் நிறத்தைத் தாங்கியதால் கருமை நிறத்தையடைந்த கடலானது "அறையோ என நின்று அதிரும்" என்கிறார் கடல் எம்பெருமான் மேனி நிறம் பற்றி கருங்கடலானது ஆதலின் "கருங்கடல்" என்றனர். "அறையோ" என்றது அறைகூவி என்பதாம். இவள் எதிரில் வந்து

அறைகூவுகிறதே என்றபடி. எம்பெருமான் இரக்கமும் காட்டுவதில்லை. இவள் நிலைகண்டு கடலும் ஆர்பரிக்கிறது, "இதுதான் முறையோ?" இப்படி இவளை வாட்டுவது முறையோ? முறைமையோ? தகுமோ? என்பதாம். "அரவு அணைமேல் பள்ளி கொண்ட முகில் வண்ணனே" என்று தலைவனை நோக்கி விளிக்கிறாள் தோழி.

"வெள்ளை வெள்ளத்தின்மேல் ஒரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன்மேல்
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்"

என்பர் பெரியாழ்வார். திருமொழி 5-1-7

"அரவு அணைமேல் பள்ளி கொண்ட முகல் வண்ணன்" என்று சிறப்பிக்கப்படுகிறது. பெரியாழ்வாரின் மேற்கூறிய பாசுரம் முன்னமேயே எடுத்தாளப் பட்டுள்ளது. கள்ள நித்திரை கொள்ளும் கண்ண! "இவள் தன் நிறையோ இனி உன் திரு அருளால் அன்றி காப்பரிது" என்கிறார். இவளது பெருமையை இனி உன் திரு அருளால் அன்றி வேறு யாராலும் காப்பது என்பது இயலாதது என்பதாம்.

நீ பாம்பை மெத்தையாக விரித்து படுத்துக் கிடக்கிறாய். இவளோ மெத்தை விரித்தும் உன் நினைவால் படுக்காமல் இருக்கிறாள். அவளை உன் மெத்தையில் சேர்த்தருள், இல்லையேல் இவளின் நிறை காப்பது எளிதன்று. கண்ணா! மேகவண்ணனே! அதன் குணங்களையுடைய நீ இவளிடத்தில் மட்டும் பாராமுகமாய் இருத்தல் ஏனோ? என்பதாம்

அரும்பதவுரை : இறை - தெய்வம். இரத்தல் - வேண்டுதல், அறை - அறைகூவல். நிறை - அடக்கம். கற்பு, அரவு அணை - பாம்பு மெத்தை. முகில் - மேகம்.

(தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிதல்)

வண்ணஞ் சிவந்து ளவானாட மருங்குளிர் விழிய
தண்மென் கமலத்தடம் போற்பொலிந்தன
தாமிவையோ
கண்ணன்றிரு மாறிரு மூகந்தன்னோடுங் காதல்
செய்தேற்
கெண்ணம் புகுந்தடியே னொடிக்கால
மிருக்கின்றவே 63

விளக்கவுரை : மேனிநிறம் சிவந்துள்ளவையும், தேவர் உலகு மகிழ்ந்திடக் குளிர்ந்த பார்வையை உடையவையும், குளிர்ந்த மென்மையான தாமரைத் தடாகம் போன்று விளங்குகின்றவையுமாகிய இந்தத் திருக்கண்களோ கண்ணன் திருமாலின் திருமுகத்தி னோடும் காதல் செய்வதற்கு எனது மனத்திலே புகுந்து இப்பொழுதும் என்னைவிட்டு நீங்காமல் அடியே னோடும் இருக்கின்றது.

திறனாய்வு : தன்னைப் பிரிந்திருந்த நிலையிலும் தலைவிக்குத் தலைவன்பாற் கொண்டிருந்த ஈடுபாடு இங்கு சிறப்பிக்கப்படுகிறது. எம்பெருமான் மேல் மோகம் கொண்ட ஆன்மாக்கள் அவன் ஓடோடி வந்து ஆட் கொள்ளவில்லையே என்பதற்காக, பிறர் யாது கூறினும் அதற்காக இறைவனை மனத்தில் துதித்தும் கண்களில் வைத்துப் போற்றாமலும் இருப்பதில்லை. இறைவன் நீக்கமற நிறைந்திருப்பவன் என்பதை இங்கு ஆழ்வார் சிறப்பாக எடுத்துக் கூறுகிறார்.

"கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து"

என்பது வள்ளுவம் 1127. காதற் சிறப்புரைத்தல் பகுதி யில் வரும் மற்றுமொரு குறளையும் காண்க.

"உவந்துறைவர் உள்ளத்துள் என்றும்
இகந்துறைவர்
ஏதிலர் என்னுமிவ்வூர்"

வள்ளுவம் 1130. கண்ணன் உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் உறைபவன் என்பதாகத் தோழிக்குத் தலைவி கூறுவதாக அமைந்த பாசுரம். வள்ளுவரும் நம்மாழ்வாரும் வேறுபட்ட சொற்களால் ஒரே கருத்தினைக் கூறியிருப்பது காண்க.

"வண்ணம் சிவந்துள" என்று திருநிறம் சிவந்துள்ளதையும், "வான் நாடு அமரும் குளிர் விழிய" என்று பரமபதம் ஆனந்தமடைய குளிர்ந்த பார்வையை யுடையவையும், "தண் மேல் கமலம் தடம் போல் பொலிந்தன" என்று குளிர்ந்த மென்மையான தாமரைத் தடாகம் போல் விளங்குகின்றவையுமாகிய, "இவையோதாம்" இத்திருக்கண்களோ! என்கிறார்.

"இத்திருகண்ளோ" என்றதற்கு, "வண்ணம் சிவந்துள்ள, வான்நாடு அமரும் குளிர்விழிய, தண்மெல் கமலம் தடம் போல் பொலிந்தன" என்பது நீண்டதோர் அடைமொழி. "இத்திருக்கண்களோ! கண்ணன் திருமால் திருமுகந்தன்னோடும் காதல் செய்தற்கு எண்ணம் புகுந்து" என்கிறார். கண்ணனும் திருமாலும் ஆகிய எம்பிரான் திருமுகம் தன்னோடும் காதல் வயப்பட்ட என் உள்ளத்துள் புகுந்து அதாவது இத்திருக்கண்கள் என் காதல் மயக்கை உணர்ந்து என் மனத்துள் புகுந்து, "இகாலம் அடியேனொடு இருக்கின்றவே" என்கிறார். "இகாலம்" என்றது இக்காலத்தும், நீங்காது நிலைத்து இக்காலத்தும் "இருக்கின்றவே" நிலைத்திருக்கின்றதே என்பதாம். இங்கு ஏகாரம் தேற்றம். இது தோழியின் கூற்றுக்கு மாறுபட்டது ஆதலின் "இருக்கின்றவே" எனத் தெளிவு படுத்தினார். இந்த நிலை தெரியாது தோழி

என் தலைவனை இழித்தும் பழித்தும்பேசிவிட்டாள் என்பதாகிறது.

அரும்பதவுரை : வண்ணம் - நிறம். வானாடு - பரமபதம். தடம் - தடாகம். பொலிந்து - மிளிர்ந்து. விளங்கி, தாம் இவையோ - இவையோதாம். இவைகள் தானா? இத்திருக்கண்களோ!. திருமால் - திருவின் கணவன். முகந்தன் - முகம்தன். காதல் - பற்று. எண்ணம் புகுந்து - மனத்துள் திளைத்து. இகாலம் - இக்காலம்.

(தலைவன் பேர் கூறித்திரிந்திருத்தலைத் தலைவி தோழிக்குக் கூறியிரங்கல்)

இருக்கார் மொழியானெ றியிழுக்காமை யுலகளந்த
திருத்தாளிணை நிலத்தேவர் வணங்குவர் யாமுமவ
வொருக்காவினை யொடுமெம் மொடு நொந்து
கனியின்மையிற்
கருக்காய் கடிப்பவர் போற்றிரு நாமச் சொல்கற்றனபே
64

விளக்கவுரை : நிலத் தேவர்களாகிய அந்தண இருக்கு வேதம் முதலியனவற்றிலுள்ள மந்திரங்களைக் கொண்டு முறைமை தவறாமல், உலகளந்த இரு திருத் தாள்களை வணங்குவர். நாமும் ஆசையை அடக் மாட்டாது அவ்வாறு வணங்குவதற்குத் தகாதவளான நான் செய்த பாவத்தையும், அதற்கு இடமான என்னையும் வெறுத்துக் கனியின்மையால் காய் கவர் துண்பவர் போல் திருப்பெயர்களாகிய சொற்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

திறனாய்வு : அந்தணர்களை இப்பாசுரத்தில் "நிலத்தேவர்" எனப் போற்றுகிறார். அந்தணர்க வேத மந்திரங்களை ஓதி முறைமை தவறாமல் எம்பெ

மான் கமலபாதங்களைப் வணங்குவராதலின், "நிலத் தேவர் இருக்கு ஆர் மொழியால், உலகுஅளந் திருத் தாளிணை நெறி இழுக்காமை வணங்குவர்" என்கிறார். வானுலகில் வாழ்வோர் தேவர்கள். அவர்கட்குச் சம மாகப் பூவுலகில் அந்தணர் கருதப்படுவர் ஆதலின் "நிலத்தேவர்" என்றனர்.

"இருக்கு ஆர் மொழியால்" என்றது இருக்குவேத மொழியினால் என்பதாம். வேதமந்திரங்களை "மொழி" என்றும் அந்தணரை "நிலத்தேவர்" என்றும் தனித்தமிழால் சிறப்பிப்பது காண்க. ஆழ்வார் பெரு மக்கள் பன்னிருவரும் தனித்தமிழில் பாசுரங்களை பொழிந்து சென்றனர் என்பதை மகிழ்ந்து காணலாம். "உலகு அளந்த திருத்தாள் இணை" என்றது உலகளந்த பெருமானின் பாதங்கள் இரண்டினையும் என்பதாம். "நெறி இழுக்கானம்" என்றது முறைமை தவறாமல் என்பதாம்.

"வணங்குவர்", வணங்கி இன்பம் துய்ப்பர். அது போன்றே "யாமும் அவா ஒருக்கா" என்றது நாமும் ஆசையைக் கட்டுப்படுத்த இயலாமல் என்பதாம். "எம்மொடும் வினையொடு நொந்து" என்றது தன்னொடும் நொந்து" அதாவது தன்னொடும் தான் செய்த பாவங்களோடும் நொந்து கொண்டு, "கனி இன்மையின் கருக்காய் கடிப்பவர்போல் திருநாமச் சொல்கற்றனமே" என்கிறார், கனி இன்மையின் என்றது உண்பதற்கும் கனிந்த பழம் கிடைக்கப் பெறாமையால் காயைக் கடித்துத் தின்பது போலாம், "கனியிருப்பக் காய்கவர்ந்தற்று" எனப்புழி "திருநாமச் சொல் கற்றனமே" என்கிறார். எம்பெருமான் திருநாமங்களை மட்டும் பயின்றனமே! என்னே இது என்பதாம். இங்கு திருநாமங்களைச் சொல்வதாகக் கூட கூறப்படவில்லை. "திருநாமச் சொல் கற்றனமே" என்பதை உற்றுக்காண்க. இறைவன் பெயர்களை

அறிந்து கொண்டோம். ஆயிரம் பெயருடையான் என்பதையறிவோம் ஆனால் அவற்றைச் சொல்லி யுமறியோம் என்பதாக அமைந்திருத்தல் ஈற்று ஏகாரத் தால் தெளிவாம். பூரணாநுபவம் கிடைக்கப் பெறாமல் பெயர் சொல்லிக் கொண்டிருக்கிறோம் என்ற படியுமாம்.

''கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவான்
நற்றாள் தொழாஅர் எனின்''

என்ற குறட்பாவை இங்கு நினைவு கொள்க.

அரும்பதவுரை : இருக்கு ஆர்மொழி - வேதங்கள் நான்கினுக்கும் முதன்மையான இருக்கு வேதம் ஆதலின் இருக்கு ஆர்மொழி என்றனர். ஆர் - என்றது அழகிய சிறந்த என்பதாம். வேதங்களெல்லாம் தனக்குள்ளே பொருந்தும் படியான மூலமந்திரமாகிய எண் எழுத்து மாமொழி என்பதாம். அஷ்டாட்ச்சரமகா மந்திரம். நெறி - முறைமை, இழுக்காமை - வழுவாமை. இணை - இரண்டு. தாளிணை - திருப்பாதங்கள். நிலத்தேவர் - அந்தணர், பிராமணர். வினை - செய்வினை ஊழ்வினையெனும் பாவமூட்டை. கருக்காய் - கடுக்காய் என்பதன் விகாரம். நாமச் சொல் - பெயர்ச் சொல். கற்றனமே - கற்று அறிந்தோமே.

(தலைவி நோக்கின் வாசி கண்டு
தலைவன் குறிப்பறிந்து உரைத்தல்)

கற்றுப் பிணைமலர் கண்ணின் குலம்
வென்றொரோகருமு
முற்றுப் பயின்று செவியொடுசாவியுலகமெல்லா
முற்றும் விழுங்கியுமிழ்ந்த பிரானார் திருவடிக்கீ
ழுற்றுமுறாது மிளிர்ந்த கண்ணாயெம்மை
யுண்கின்றவே 65

விளக்கவுரை : இளம் பெண் மான்களின் மலர் கண்களின் குலத்தைவென்று, ஒரே காரியத்தில் பொருந்தியிருந்து அக்காரியத்தில் பழகி, காதுகளுடன் கேட்டு ஆலோசித்து, ஏற்பதும், ஏற்காததுமாகித் தடுமாறுகிற கண்களாய், உலகம் முழுமையும் வயிற்றில் அடக்கி உமிழ்ந்த எம்பெருமான் திருவடிகளின் கீழ் எம்மைக் கவர்ந்து உண்கின்றன. திருவடித் தாமரை எம்மைக் கவர்ந்து கொண்டன என்றபடி.

திறனாய்வு : தலைவியின் நோக்கின் சிறப்பை இப்பாசுரத்தில் அழகுபட சித்தரிக்கிறார். கன்றுபிணை மலர் கண்ணின் குலம் வென்று ஒருரோ கரும "உற்று" என்கிறார் "கன்றுபிணை" என்றது இளம் பெண்மான். கன்று இளம்மானையும் பிணையென்சொல் பெண் மானையுங்குறிக்கும். இங்கு தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபு இயலில்,

> "யானையும் குதிரையும், கழுதையும் கடமையும்
> மானொடு ஐந்தும் கன்று எனற்கு உரிய"

என்பது காண்கிறோம். யானை, குதிரை, கழுதை, இவற்றை மகளிரோடு ஒப்பிடுவதில்லை யாதலின் "கன்று" என்ற சொல் மானுடன் ஒப்பிடப்பட்டது. பெண்மைக்கு இலக்கணம் வகுக்கும் பொழுது,

> "பேடையும், பெடையும் பெட்டையும். பெண்ணும்
> மூடும், நாகும், கடமையும் அளகும்
> மந்தியும், பாட்டியும், பிணையும், பிணவும்
> அந்தம் சான்ற பிடியொடு பெண்ணே"

என்றதால் இப்பாசுரத்தில் "கன்றுப் பிணை" என்பது பெண் மானைக் குறிப்பதாகும். "மலர் கண்ணின்" என்றதால் மலர்ந்த கண். விரிந்தகன்ற விழிகள் என்பபதாகிறது. மானின் நோக்கை மகளிர் நோக்கு வெல்லு

மாதலின் ''குலம் வென்று'' என்றனர். மானின் குலத்தை மகளிர்குலம் வெல்லும் என்பதாம். அது எப்படியெனில் மகளிர் நோக்கமானது ''ஒரோகருமம் உற்று, பயின்று செவியொடு உசாவி'' என்கிறார். ''ஒரோ கருமம்'' என்றது ஏதோ ஒரு காரணத்தை மனத்தில் கொண்டு என்பதாம். ''யான்நோக்கின் நிலன் நோக்கும்'' எனப்புழி. உற்று என்றது பொருந்தி யான் நோக்கும் பொழுது என்னை நோக்காமல் மற்றொன் றில் பொருந்தி என்பதுபோல அதனை நன்கு ''பயின்று செவியொடு உசாவி'' யாதோ ஒரு கருமம் உற்று அதனைப் பயின்று பொருந்திய பின் விழிகள் காதளவு பாய்ந்து பேசி என்பதனை, ''செயொடு உசாவி'' என்றனர். கண் காது ஆகிய இவையிரண்டும் அளவளாவி என்பதாம். ''செவியொடு உசாவியும் உற்றும் உறாதும் மிளிர்ந்து'' என்பது, காதுடன் அலோசனை நடத்தியும் ஒரு நிலைமை பெறாது அனுகூலமாகவும், இல்லாமலும் தடுமாறுகின்ற ஒளி வீசுகின்ற ''கண் ஆய்'' கண்களாய் என்பதாம். இந்தக் கண்கள். 'உலகம் எல்லாம் முற்றும் விழுங்கி உமிழ்ந்த பிரானார் திரு அடிக்கீழ் எம்மை உணர்கின்ற' என்கிறார். உலகம் யாவையும் உண்டு உமிழ்ந்த பெருமான் என்பதை, ''மூவுலகுண்டுமிழந்த முதல்வ'' என்றனர். தொண்டரடிப் பொடியாழ்வாழ்வார் திருமாலை 1. பிரளயகாலத்தில் எம்பெருமான் உலகனைத்தும் உண்டு பிறகு உமிழ்ந்து உயிர்ப்பித்தல் இங்கு சிறப்பிக்கப் படுகிறது. அத்தகு சிறப்புமிக்க எம்பெரு மானார் ''திரு அடிக்கீழ்'' எம்மைக் கவர்ந்து கொள் கின்றன என்பதால் எம்பெருமானுக்காகும்படி ஈர்த்துக் கொள்ளுகின்றன என்பதனை உண்கின்றவே'' என்றனர்,

அரும்பதவுரை : கன்று - இளம்மான், மான்கன்று பிணை - பெண்மான். சூலம் - இனம். ஒரோ - ஏதோ ஒரு. கருமம் - செயல். செவி - காது. உசாவி - பேசி இரகசியம்பேசி. உற்றும் - அனுகூலமாகவும் உறாவும் - அனுகூலம் இல்லாமலும். குளிர்தல் - ஒளிர்தல் தெரிதல் உண்கின்றவே - ஈர்த்துக் கொள்கின்றனவே.

(தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர் மறுத்தல்)

உண்ணாதுறங்கா துணர்வுறு மெத்தனையோகியர்க்கு
மெண்ணாய் மிளிருமியல் வினவாமெரி நீர்வளிவான்
மண்ணாகிய வெம்பெருமான் றனதுவைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையேனு யிராயின காவிகளே. 66

விளக்கவுரை : நெருப்பும், நீரும், காற்றும், ஆகாயமும், மண்ணும் ஆகிய ஐந்து பருப் பொருட்களின் வடிவமான எம்பெருமான் தனது வைகுந்தத்தை ஒத்து எப்பொழுதும் அனுபவிக்கத் தக்கவனான தலைமகனது கண்களென்று பேராய், அரிய வினைகளையுடைய எனக்கு உயிரான செங்கழு நீர் மலர்கள், உணவு கொள்ளாமலும், உறங்காமலும், உணர்வு மட்டும் பெற்று மிகுந்த யோக நிலையையுடைய முனிவர்களெல்லோருக்கும் நினைக்கத் தக்கவையாய் ஒளிவீசித் திகழும் இயல்வினவாம்.

திறனாய்வு : தலைவன் பாங்கனுக்குக் கழற்றெதிர் மறுத்தல் ஐம்பத்தேழாம் பாசுரத்தில் இத்துறையிலக்கணம் விரிக்கப் பட்டுள்ளது. இது தலைவன் உள்ளம் தளர்ந்து உரைத்தல் எனவும் கூறப்படும். எரி, நீர், வளி, வான், மண் ஆகிய ஐம்பெரும் பருப் பொருட்களின் வடிவமானவன் எம்பிரான், இதனை "எரி நீர்வளிவான் மண்ணாகிய எம்பெருமான்" என்கிறார். எல்லாம் அவனாய் என்பதாம். எங்குமாய் எதிலுமாய் நீக்கமறநிற்கும் திருமாலின் தோற்றத்தை

"தீயினுட் டெறனீ பூவினு ணாற்றநீ
கல்லினுண் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ
யறத்தினு ளன்புநீ மறத்தினுண் மைந்துநீ
வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
வெஞ்சுட ரொளியுநீ திங்க ளளியுநீ
யனைத்துநீ யனைத்தினுட் பொருளுநீ..."

என்று பரிபாடலில் கடுவனிளவெயினனார் போற்றிப் பாடியதை முதலிலேயே கூறினோம். எம்பெருமானைப் பற்றிய எண்ண உணர்வுகள் எப்படி ஒன்றிப்போயுள்ளன என்பது காண்க. இத்தகு தன்மையினைப் பெற்ற திருமாலினது வைகுந்தத்தை ஒத்த தலை மகளது கண்கள் என்பதனை "எம்பெருமான் தனது வைகுந்தம் அன்னாள் கண் ஆய்" என்கிறார். "கண் ஆய்" என்றது கண்கள் என்பனவாய், கண்கள் என்று சொல்லக் கூடியவை "அருவினையேன் உயிர் ஆயின்" என்று கண்கள் தீவினையையுடைய எனக்கு உயிர்கள் ஆயின என்பது காண்க. "காவிகள்" என்றது செங்கழுநீர் மலர்களை. இவற்றின் சிறப்பு இயல்புக்களைச் சித்தரிக்கிறார். "உண்ணாது உறங்காது உணர்வு உறும்" என்கிறார். அம்மலர்கள் உண்பதுமில்லை உறங்குவதுமில்லை. ஆனால் அவை எம்பெருமான் ஈடுபாட்டால் எப்பொழுதும் தியானத்தில் பொருந்தனதாயிருக்கும். "உணர்வு உறும்" என்றது ஞானத்தில் பொருந்திய தன்மையதாயிருக்கும் என்பதாம். "எத்தனை யோகியர்க்கும், எண் ஆய் மிளிரும் இயல்வின ஆம்" என்றது. எப்பொழுதும் யோக நிலையில் இருக்கும் முனிவர்கட்கும், எண்ணத்தக்கவையாய் ஒளிரும் இயல்புடையவையாம் என்பதாம். உண்ணல் உறங்கல் இல்லாமல் எப்பொழுதும் செய்து கொண்டிருக்கிற தேவர்களுக்கும் அனுபவிக்கத் தக்கவையாய் விளங்கித் தோன்றும் இயல்புடையவையாம். "காவி

களே''என்றது யாவரும் போற்றிக் கொண்டாடத் தகுந் தமை பற்றி ஞானவகைகளைக் ''காவிகள்'' என்றனர்.

அரும்பதவுரை : உறும் - தங்கும். பொருந்தி யிருக்கும். எண் ஆய் - எண்ணங்களாய். எரி - தீ, நெருப்பு. வளி - காற்று. வான் - ஆகாயம். அன்னாள் - அப்படிப்பட்ட தலைமகள். கண் ஆய் - கண்களென்று கூறப்படுபவையாய். காவிகள் - செங்கழுநீர் மலர்.

(தலைவன் பாங்கனுக்குத் தன்வலியழி வுரைத்தல்)

காவியு நீலமும் வேலுங்கயலும் பலபலவென்
றாவியின் றன்மை யளவல்ல பாரிப் பசுரைச் செற்ற
மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன்
வேங்கடஞ்சேர்
தூவியம் பேடையன் னாள் கண்களாயதுணை
மலரே. 87

விளக்கவுரை : அசுரர்களை அழித்த, வியக்கத் தக்க பெரிய கருடப் பறவையை ஏறி நடந்துகின்ற திருமகள் கணவனும் பசுக்கூட்டங்களைக் காப்பவனு மான திருமாலினது, திருவேங்கட மலையில் பொருந்தி வாழும், அழகிய சிறகுகளையுடைய அன்னப் பேடை போன்றவளது கண்களாகிய இருதாமரை மலர்கள் செங்கழு நிரையும், நீலோற்ப மலரையும், வேலையும், கயல் மீனையும், பலவிதங்களில் ஒப்பாகின்ற மிகப் பலவற்றையும் வென்று பாரிப்புக்கு உயிரின் தன்மை ஏற்ற அளவு அல்ல.

திறனாய்வு : இது தலைவியின்பாற் தலைமகன் கொண்ட ஈடுபாட்டையும் அவன் ஆற்றாமையையும் விளக்கும் பாசுரம். ''இழவோன் வேட்கை தாங்கற் கருமை'' என்றனர் பிறரும். ஆன்மாக்களைப் போற்றிப் பாதுகாத்தருளும் திருமால் மனம் மகிழ்ந்து தங்கும் திருத்

தலமாகிய திருவேங்கடத்தில் ஈடுபாடுடையவராக "அசுரை செற்ற மாவிய புள் வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம்" என்பதனால் தெளிவதாகும். அசுரர்களை அழித்தவன் வியக்கத்தகு கருடப் பறவையை வாகனமாக உடையவன். திருமகளின் கணவன். பசுக்களைக் காத்து நிற்பவன் அவன் எழுந் தருளியிருக்கும் மாமலையே திருவேங்கடம் என்பதாம். அத்தகு சிறப்புகளைப் பெற்ற திருவேங்கட மலையில், "திருவேங்கடஞ்சேர் தூவியம் பேடையன்னாள் கண் களாய் "துணை மலர்" என்று தலைவியின் கண்களை அம்மலையில் கண்டதைத் தலைவன் நினைவு கூறு கிறார். திருவேங்கடஞ்சேர் என்றதால் திருவேங்கடத் தில் தங்கியிருக்கும், அமைந்த மென்மையான சிறகு களின் தன்மையையுடைய அன்னப் பறவைபோன்ற இவளின் கண்களாகிய இருமலர்கள் என்கிறார். "துணை மலர்கள்" என்றது இணை மலர்கள் என்ப தாம். இணை மலர்கள் போன்ற கண்கள் என்பதாம். அவ்விணைக் கண்கள் "காவியும், நீலமும், வேலும், கயலும், பலபல வென்று" என்றனர். அக்கண்கள் செங்கழ நீரையும், நீலோற்பலத்தையும், வேலையும், கயல்மீன்களை இன்னும் சொல்ல இயலாத பலபல வென்று திகழ்வது என்பதாகக் கூறுகிறார். காவி, நீலம், வேல், கயல் இவை நான்கும் மகளிர்கண்ணுக்கு உவமையும் இரேகைகள் படர்ந்திருத்தலால் செங்கழு நீரையும் கருமை நிறமுடையதால் நீலோற்பல மலரை யும்கூர்மையாக ஆடவர் மீது பாய்வதால் வேலும் கயல் மீன்கள் போல் பிறழ்வதால் கயலுக்கும் உவமை யாக்கிக் கூறுவர் புலவர். பலபல என்றது மருண்ட பார்வையுடைய மான் விழிக்கும் ஒப்புவமையாக்குவர் என்பது காண்க. "வென்று" என்றது இவையனைத்தை யும் வென்று நின்ற பார்வை, இதனைப் "பாரிப்பு" என்றனர். "பாரிப்பு ஆவியின் தன்மை அளவு

அல்ல'' என்றது தலைவியின் கண்களின் தோற்றம் எனது உயிரின் தன்மைக்கு ஏற்றதல்ல என்பதாம்.

''... ... ... ... ... சாமீ! இவளழகை
எற்றே தமிழில் இசைத்திடுவேன்? கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?''

என்ற பாரதியின் வாக்கை நினைவு கொள்க. குயில் பாட்டு.

அரும்பதவுரை : காவி - செங்கழநீர். நீலம் - நீலோற்பலமலர். பலபல - மான்விழி போன்று மற்றும் பல. ஆவி - உயிர். பாரிப்பு - தோற்றம். பார்வை. கண் வலை. அசுரை - அசுரரை என்றதன் விகாரம். செற்ற - அழித்த. மாவியம் - வியத்தகு. புள்-பறவை. மாதவன் - திருமகள் கணவன். கோவிந்தன் - பசு காப்பவன். தூவியம் - சிறகுகள். பேடை - பேதை, பெண். கண்களாய - கண்களாயமைந்த. துணை - இரு.

(கால மயக்கு : காலம் இளையது என்றல்)

மலர்ந்தே யொழிந்தில மாலைப் பொன்வாசிகையும்
புலர்ந்தோய் தழைப் பந்தர் தண்டுற நாற்றிப்
பெருகடல் சூழ்வே
நிலந்தாவிய வெம்பெருமான்றனது வைகுந்த
மன்னாய்
கலந்தார்வரவெதிர் கொண்டுவன் கொன்றைகள்
கார்த்தனவே 68

விளக்கவுரை : அலைகள் மோதும் கடல் சூழ்ந்த இந்த உலகத்தைத் தாவி அளந்தருளிய எம்பெருமானது திருவைகுந்தம் போன்று இன்பம் பொழிபவளே! உன்னுடன் புணர்ந்து இன்பம் ஈந்து பின் பிரிந்து

சென்றவரது வருகையை எதிர்பார்த்து வலிய கொன்
மரங்கள் கருவடைந்து அரும்பின. அந்த மரங்க
பொழிந்த அரும்பு மாலைகளையும், பொன்னா
அமைந்த வாசிகை மாலையையும், வைத்த கன
வாங்க இயலாதபடி பொருந்தும்படியான தழைகளா
அமைந்த பந்தலிலே கொம்புகளிலே நெறுங்க
தொங்கவிட்டுக் கொண்டு முற்றிலும் மலர்ந்தி
வில்லை.

திறனாய்வு : 'கார்காலத்து வருவேன்' என்
சொல்லிப் போந்த தலைவன் அக்கார்காலம் வந்து
வரானாக, கொன்றை மரங்கள் பூத்துக் குலுங்குவ
கண்ட தலைவி காலம் வந்தமையறிந்த தலை
கலங்கி நிற்க அதுகண்ட தோழி, இது கார்காலமன்
பிரிந்து சென்ற தலைவன் வருகையை நோக்கி மகிழ்
யால் கொன்றைகள் அரும்பி நின்றனவொழியக் கால
வந்ததன்று எனக் காலமயக்கைக் கூறித் தலைவின
ஆற்றுவிக்கிறாள். இறைவனையே நினைந்து கிட
கும் ஆழ்வார்கள் உரிய காலத்தில் அவனை அடைய
பெறாமல் ஆழ்வார்கட்கு ஏற்பட்ட தளர்ச்சின
அன்பர்கள் போக்குதல் இதில் கூறப்பட்டுள்ளது.

தலைவியின் சிறப்பைச் சென்ற பாசுரங்களி
''வைகுந்தம் அன்னாய்!' என்று விளித்திருத்தல
நினைவு கூறுக. இப்பாசுரத்திலும் ''பொருகடல்
நிலம் தாவிய எம்பெருமான் தனது வைகுந்
அன்னாய்!'' என்று நீண்ட அடை கொடுத்
தலைவியை விளிக்கிறார். ''பெருங்கடல் சூ
என்றது பொருமும் கடல் சூழ்ந்த என்பது
அலைகள் பொங்கி எழும் கடல்கள் சூழ் உல
என்றபடி. நிலம் என்பது இந்நில உலகை. எம்பெ
மான் உலகனைத்தும் ஓரடியால் அளந்தவனாதல

''நிலம் தாவிய எம்பெருமான்'' என்றனர். அவன் இருப்பிடமான வைகுந்தத்தைப் போன்ற 'அன்னாய்!' என்கிறார். ''அன்னாய்'' என்றது வைகுந்தம் போன்று விளங்குபவளே! என்பதாம். எம்பெருமான் அந்த வைகுந்தத்தில் இல்லை உன்னிடம்தான் இருக்கிறான் என்று தலைவியினிடத்து எம்பெருமானுக்குள்ள ஈடு பாட்டைச் சிறப்பிக்கிறார்.

வைகுந்தம் போன்றவளே! ''கலந்தார் வரவு எதிர் கொண்டு'' அதாவது உன்னைப் புணர்ந்து சென்ற தலைவனின் வரவை எதிர்நோக்கி, ''வன் கொன்றைகள் கார்த்தன'' என்கிறார். கொன்றைகளை இங்கு ''வன்'' என அடைமொழி கொடுத்திருப்பது இவை எம்பிரான் வராமுன்னம் மலர்ந்தனவாதலின்''வன் கொன்றைகள்'' என்றனர் என்க. ''கார்த்தனவே'' என்றது கருவுற்ற னவேயன்றி வேறல்ல என்பதாம். மலர்கள் மலர்ந்தன என்பதை ஈங்கு ''கார்த்தன'' எனச் சிறப்பிக்கிறார்.

ஆனால் அவை இன்னமும் மலரும் நிலையை அடைந்தில என்பதாம். இதனால் காலம் முழுமை பெறவில்லை இளமையுடையது என்பதாம். மேலும், ''மாலையும் மாலைப் பொன் வாசிகையும்'' என்று, மாலைகளையும் மனங்கவர் பொன்னாலான வாசிகை யும் ''புலம் தோய்தழைப்பந்தர் தண்டு உற நாற்றி மலர்ந்தே ஒழிந்தில'' என்கின்றனர்.

''மாலையும்'' என்றது மலர் மாலையை ''மாலைப் பொன் வாசிகை'' என்றது மனங்கவர் பொன்னாலான மாலைகள் இவற்றைப் ''புலம் தோய்தழை பந்தல் தண்டு உற நாற்றி'' அதாவது வைத்த கண் வாங்க முடியாதபடி அமைக்கப்பட்ட தழைகளால் அமைந்த பந்தலின் கொம்புகளிலே என்பதாம், ''உற நாற்றி'' என்றது நெருக்கமாக மாட்டி வைத்ததால், ''மலர்ந்தே

ஒழிந்தில'' அவை மலரவே இல்லைஎன்கிறார். அப்படியே அரும்பாகவே நின்றுவிட்டன என்பதாம்.

திருமணங்கள் இப்பொழுதும் சிற்றூர்களில் அழகான பந்தல் அமைத்து அதைச் சுற்றி மலர் கொம்புகளையும் வேப்பந்தழைகளையும் ஆங்காங்கு மாட்டித் தொங்க விடுவர். அது பார்ப்பதற்கு இனிமை சேர்க்கும். இதனையே ''புலம்தோய் தழைப்பந்தர்'' என்றனர். ஆனால் இப்பாசுரத்தில் மாலைகளையும் பொன்மாலைகளையும் மாட்டி வைப்பதாகக் கூறுவது அக்கால மக்களின் செல்வச் செழிப்பை உணர்த்து கிறது. ''பாளைகடுகு பரிசுடைப் பந்தறகீழ்'' என்ற னர் நாச்சியார் ஏழாம் திருமொழி 2.

அரும்பதவுரை : மாலை - மலர் மாலை. மாலைப் பொன் வாசிகை - மனங்கவர் பொன்னாலான மாலை. வாசிகை - மாலை. புலம் - மனம். பந்தர் - பந்தல். நாற்றி - நாட்டி. நாலல் - தொங்கல். தொங்க விட்டு, பொரு - பொருமும். பொங்கும் - தாவிய, தாண்டிய. அன்னாய் - போன்றாய். வன் - கொடிய. கார்த் தனவே - கருவுற்றனவேயன்றி மலர்ந்து விடவில்லை யென்றபடி.

(மாலைப் பொழுது கண்டு மயங்கிய தலைவியைத்
தோழி ஆற்றுதல்)

காரேற்றிருள் செகிலேற்றின் சுடருக்குளைந்து
வெல்வான்
போரேற் றெதிர்ந்தது புன்றலை மாலைபு வனியெல்லா
நீரேற்றளர்ந்த நெடி யபிரானருளாவிடுமே
வாரேற்றிள முலையாய் வருந்தே லுன் வளைத்
திறமே 69

விளக்கவுரை : கச்சை அணிந்த முலைகளை யுடையவளே! உனது வளைகளின் தன்மைக்காக

வருந்தாதே. கார் நிறங்கொண்ட இருள் எனும் எரு தானது, சிவந்த கதிரவனாகிய எருதுக்கு எதிரில் ஒன்று மற்றதாகி மீண்டும் வெல்லும் பொருட்டு போர் செய்தலை ஏற்றுக்கொண்டு, எதிர்த்து வந்தது. அற்ப மான தன்மையையுடைய மாலைப் பொழுதிலே மாவலி நீர்வார்த்துக் கொடுக்க ஏற்று எல்லா உலகங்களையும் அளந்து கொண்ட ஓங்கி உயர்ந்தெழுந்த தலைவன் உனக்கு அருள் செய்யாதொழிவானோ?

திறனாய்வு : மாலைப்பொழுதானதும் தலைவன் தன்னைத்தேடி தேரை விரைவிற் செலுத்தி வருவான் என்று ஏங்கிக்கிடக்கிறாள் தலைவி. அப்பொழுது கதிர வனின் ஒளி மங்கி மாலைப் பொழுதெனக் காட்சியளிக் கிறது உடனே தலைவியின் ஆற்றாமையும் மேலோங்குகிறது. இதனைக் கண்ணுற்ற தோழி இது மாலைப் பொழுதன்று'' கார் இருள் ஏறு செகில் சுடர் ஏற்றிற்கு உளைந்து வெல்வான போர் ஏற்று எதிர்ந் தது'' அதனால் இருண்டது என்பதாகக் கூறுகிறார். ''கார் இருள் ஏறு'' என்றது கருமையான இளம் காளை ஒன்று என்பதாம். எருது என்ற சொல், வளர்ந்து முதிர்ந்த காளையையே குறிக்குமாதலின் ''ஏறு'' என்றனர்.

''செகில் சுடர் ஏற்றிற்கு'' என்றது சிவந்து சுடர் வீசும் கதிரவனாகிய காளை. மாலைப் பொழுதில் இந்தக் காளைகள் சற்று மேடான பகுதிகளைத் தனது கொம்பால் குத்திக்கிளறிக் கொண்டு திரியும். இதனைக் காணும்போது அது கதிரவனுடன் போர் செய்யப் புகுந்தது போன்று அதன் தோற்றம் இருக்குமாதலின் ''செகில் சுடர் ஏற்றிற்கு'' என்றனர். ஆழ்வார் இயற்கை யோடு ஒன்றி இதுபோன்ற பாசுரங்களைப் படைத் திருக்கிறார் என்பது பெருமகிழ்ச்சியளிக்கிறது. காளை யின் அடுத்த நிலையை ''உளைந்து'' என்கிறார். மண்

மேட்டைக் குத்திக் குத்திக் களைத்துப் பின் வாங்கி நிற்கும். இங்குமங்கும் சுற்றித் திரிந்து அதன் தோல்வியை ஏற்றுக்கொள்ள மனமில்லாமல் மீண்டும் பாய்ந்து குத்தும். இதனையே "உளைந்து வெல்வான் போர் ஏற்று எதிர்ந்தது" என்றனர். இந்நிகழ்ச்சியைக் கதிரவனைக் கண்டு போரிட்டதாகக் காண்பிக்கிறார் இப்பாசுரத்தில் இந்த அற்புதக் காட்சியை நேரில் கண்டோரே உணர்ந்து அனுபவிக்க முடியும். போரிடத் துடிக்கும் காளை கதிரவனாகிய காளையை மறைத்து நிற்பதால் மாலைப் பொழுதெனத் தோன்றுகிறது என்று தோழி தலைவியை ஆற்றுகிறாள்.

தலைவியின் ஆவலைத் தணிக்கும் பொருட்டு, "வாரேற்றிள முலையாய்! புன்தலைமாலை நீர் ஏற்று புவனி எல்லாம் அளந்த நெடிய பிரான் அருளா விடுமே" ஆதலின் "வருந்தேல் உன் வளைதிறமே" என்று கூறுகிறாள். தலைவியை "வாரேற்றிள முலை யாய்" என விளிக்கிறாள். கச்சையணிந்த முலைகளை யுடையவளே! என்பதாம். இளம் சிறுமியர் முலை களுக்குக் கச்சு அணிவதில்லை. நன்கு வளர்ந்து பருத்துப் பெருத்த முலைகளை மேலே ஏந்தியவாறு நிற்கும் பொருட்டுக் கச்சால் இறுக்கிக் கட்டியிருப்பர். இன்று ப்ரா கச்சின் வேலையைக் கச்சிதமாகத் தாங்கி நிற்கிறது. இதனையே "வாரேற்றிள முலையாய்" என்றனர். "புன்தலை மாலை" என்றது அற்பமான ஆயுளையுடைய மாலைப் பொழுது. மாலைப் பொழுது வருவதும் போவதும் தெரியாது. அந்நேரம் பார்த்து "நீர் ஏற்று" அதாவது மாபலி நீர்வார்த்துக் கொடுக்க "புவனி எல்லாம் அளந்த நெடிய பிரான்" என்கிறார். உலகெலாம் தன் அடிக்கீழ் கொண்ட நீண்டு நெடி துயர்ந்த பிரானார் என்பதாம். "அருளா விடுமே" என்று ஆற்றுகிறாள். உனக்கு அருளாதிருப்பானோ என்பதாம் "அருளா விடுமே" என்றது அருளா

விடுமோ என்பதாம். ஆதலின் "வருந்தேல்" வருத்த வருத்தமடையவேண்டாம் "உன் வளைத்திறமே" அதாவது உன் வளையல்களின் திறத்தால் அவன் பறந்து வந்து புணர்ந்து மகிழ்வான் என்பதாம். உன் வளையல்களின் ஒலியும் ஒளியும் அவனை ஈங்கு ஈர்த்து விடும் என்பதாம். மாங்கல்ய பாக்கியம் என்பர். அதுபோன்றது "வளைத்திறமே" என்றனர்.

ஆழ்வாரது பக்தியின் வலிமையால் எம்பெருமான் ஓடோடி வந்தருள் வான் என்பதாம். "வளைத்திறமே" என்பதும் ஆழ்வாருக்கு எம்பெருமானிடத்துள்ள ஈடுபாட்டின் சிறப்பு மிகுதியைக் குறிப்பதாகும்.

அரும்பதவுரை : கார் - கருமை. ஏறு - காளை, எருது. செகில் - சிவந்த. ஏற்று - காளை, எருது. உளைந்து - ஓய்ந்தளைந்து. புன்தலைமாலை - குறுகிய கால அளவையுடைய மாலை. அற்ப ஆயுள் உள்ள மாலை. தலை ஆயுளை உணர்த்துவது. புவனி-புவனம் என்பதன் திரிவு, புவி என்பதனின்றும் எழுந்த சொல். விடுமே - விடுமோ ஏ எதிர்மறை. வார் ஏற்றிளமுலை - கச்சணிந்த இளம்முலை.

(இரவின் நெடுமைக்குத் தலைவி இரங்கல்)

வளைவாய்த் திருச்சக்கரத்தெங்கள் வானவனார் முடிமேற்
றளைவாய் நறுங்கண்ணித் தண்ணந்துழாய்க்கு வண்ணம்பயலை
விளைவான் மிகவந்து நாடிங்களாண்டூழி நிற்கவெம்மை
யுளைவான் புகுந்திதுவோர் கங்குலாயிர மூழிகளே. 70

விளக்கவுரை : கூர்மையுடைய வட்டமான சக்ரா யுதத்தையுடைய எங்கள் வானவேந்தரும் பரமபத

நாயகனுமாகிய எம்பெருமானது திருமுடிமேல் சாத்தியுள்ள அழகாகத் தொடுத்துக் கட்டப்பட்ட மணங் கமழும் மாலையான குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்டு, எனது எழிற்கோலம் மாறிப் பசலை படரும்படி தொடர்ந்து வந்து நாளாகவும், மாதமாயும், வருடம், கல்பம் என்று வளர்ந்தது தவிர எம்மை முற்றிலும் அழிக்க நெருங்கிய இந்த ஒரு இரவு ஆயிரம் கல்பமாக நின்றது.

திறனாய்வு : பிரிந்து சென்ற தலைமகன் திரும்பி வராதது கண்ட தலைமகள், சில நாட்கள் கழிந்தும் வராததால் ஓர் இரவு ஆயிரம் ஊழிகளாக உணர்வதை இங்கு எம்பெருமான் வயப்பட்ட ஆழ்வாரின் ஆற்றாமையை அழகுபட சித்தரிக்கிறார். எம்பெருமான் சக்ராயுதனாதலின் “வளைவாய் திருச்சக்கரத்து” என்கிறார். வட்ட வடிவமான திருச்சக்கர ஆயுதம் ஏந்தி என்பதாம். “எங்கள் வானவனார்” என்றது எங்கள் பரமபதத்துக்கதிபதியானவர் என்பதாம். அவரது “முடி மேல் தளைவாய் நறு கண்ணி தன்அம் துழாய்க்கு” ஆசைப்பட்டு, அதாவது அவரது திருமுடியில் அழகாகத் தொடுக்கப்பட்ட மணம் கமழ் மாலைக்கு ஆசைப்பட்டு என்பதாம். துளசிமாலை அழகாகத் தொடுக்கப்பட்டிருப்பதால் “தளைவாய்” என்றனர். அதுமலர்கொத்துக்களால் ஆன மணம் வீசுகிறது. அப்பொழுதுதான் பறிக்கப்பட்டதால் மிகவும் குளுமையாக இருக்கிறது ஆதலின். “நறும் கண்ணி தண் அம் துழாய்” என்றனர். இவ்வளவு சிறப்புகளைப் பெற்ற அந்தத் துளசி மாலைக்கு, ஆசைப்பட்ட நாயகி

“......அவன் மார்பணிந்த வனமாலை
வஞ்சியதே தருமாகில் மார்பில் கொணர்ந்து பூட்டீரே”

என்பர். நாச்சியார் திருமொழி 13.3 அவ்வாறு ஆசைப் பட்டதால் “வண்ணம் பயலை விளைவான்” உடல்

முழுவதும் பயலை நிறத்தை விளைவித்தது; உடல் சோர்ந்து சோகை நிறமடைந்தது. அது "நாள் திங்கள், ஆண்டு, ஊழி என "மிகவந்து நிற்க" என்றனர். பயலை நிறமடைந்த நிலையில் நாட்கள் மாதங்களாக வருடங்களாகவும் ஊழிகளாகவும் மிகவும் நீண்டு அடர்ந்து நின்றது என்பதாம் "மிகவந்து நிற்க" என்ற ஊழிகளோடு பல ஊழிகளாகத் தொடர்ந்து என்பதாம் அவ்வாறு பயலை விளைந்து நிற்கும் என்னை இந்த இரவு "எம்மை உளைவான் புகுந்து இது ஓர் கங்குல் ஆயிரம் ஊழிகளே" என்றனர். என்னை முழுமையாக அழிக்கப் புகுந்தது. இது ஓர் இரவு அல்ல ஆயிரம் ஊழிகளே என்கிறார்.

அரும்பதவுரை : வளைவாய் - வளைந்து வட்ட வடிவான. வானவனார் - பரமபதத்துக்குத் தலைவன். தளைவாய்-தொடுக்கப்பட்ட. கண்ணி - மலர்க்கொத்து. தண் அம் துழாய் - குளிர்ந்த அழகிய துளசி. வண்ணம் நிறம். பயலை - பொன்நிறம், சோகை நிறம். விளை வான் - விளைவிப்பான். உளை - அலைகழித்தல். கங்குல் - இரவு. ஊழி - கற்பம், உலகம் அழிவு காலம்.

(செவிலி வெறுத்தலைத்
தலைவி தோழியருக்கு உரைத்தல்)

ஊழிகளா யுலகேழுமுண்டா னென்றிலம் பழங்கண்
டாழிகளாம் பழவண்ணமென்றேற் கஃதே
கொண்டன்னை
நாழிவளோ வென்னு ஞாலமுண்டான் வண்ணஞ்
சொல்லிற்றென்னுந்
தோழிகளோ வுரையீரெம்மையம்மனை
சூழ்கின்றவே 71

விளக்கவுரை : ஊழிகளுக்குத் தலைவனாய், ஊழிகளே நீயாய், ஏழுலகங்களையும் பெருங் கப்ப காலத்தில் விழுங்கி வயிற்றில் வைத்துக் காத்தருளியவன் என்பதை நாம் பெருமைபடக் கூறினோமில்லை. களாப்பழத்தைப் பார்த்து, இப்பழத்தின் நிறம் கடலின் நிறமென்று சொன்ன எனக்கு அந்தச் சொல்லையே கொண்டு எனது தாய், 'இவளோ சொன்ன சொல் கேளாமல் தனிவழியே செருக்குடன் நடப்பவள்' என்ற கடுஞ்சொல் கூறுவாள். தோழிகளே! எம்மை அம்மையர் மாறுபட நினைந்து சொல்லும் சொற்களுக்கு நீங்கள்தான் என் நிலையை எடுத்துரைத்து ஆற்ற வேண்டும்.

*திறனாய்வுரை :* இது ஒரு சிறப்பான பாசுரம். இயற்கைப் புணர்ச்சியின்பின் தலைமகளின் நிலை கண்ட தாய் ஊரார் பேசுவர் என அஞ்சி அவளை அடங்கியிருந்த நிலையில் தலைவனைப் பற்றிப் பிதற்றித் திரியும் தலைமகள் தன் தாயின் கடுஞ் சொற்களுக்கஞ்சி நிற்பதும் அதனைத் தோழிக்குக் குறிப்பால் உணர்த்துவதுமாகும்.

இறைவன் பிரானுடன் கொண்ட ஈடுபாட்டால் அவனைப் பாராட்டிப் பேசியது கண்ட ஞானிகள் ஆழ்வார் பேசியமைக்கு வேறு பொருள் கொண்டு பேசுவதும் ஆழ்வார் அதற்கான உண்மைப் பொருளை மனத்தில் கொண்டவராய்த்தன் அன்பரிடத்துச்சொல்லுவதுமாகும். இது எம்பெருமானை ஏற்காதார் ஆழ்வரிடத்து அவர்கள் கண்ட தோற்றத்தை மதியாது பேசு தலை அன்பர்களிடந்துக் கூறியதாகவும் இதன் உட்பொருள்.

எம்பெருமான் ஊழிகள் பலவாய் ஒவ்வொரு ஊழிகளிலும் உலகேழும் உண்டான் என்பதை "ஊழிகளாய் உலகேழும் உண்டான்" என்கிறார். 'ஊழிகளாய்'

என்று இங்கு பன்மையில் கூறியதால் ஊழிகள் பல என்பதும் அவ்வப்பொழுது எம்பிரான் உலகேழையும் உண்டு உமிழ்பவன் என்பதாகும். "உண்டான்" என்றது தனது திருவயிற்றில் காத்தருள்பவன் என்பதாம். அந்த ஊழிக்காலம் முடிந்ததும் உண்டதனைத்தையும் உமிழ்ந்து உயிர்கள் மறுபடியும் வாழ அருள்பவன். இதுவே எம்பிரான் உலகேழும் உண்பதன் நோக்கமாகும். இவ்வாறு, "ஊழிகளாயுலகேழு முண்டான்" என்று யான் தலைவனைப் பற்றி வெளிப்படையாக எதுவும் பேசவில்லை. இதனை "என்றிலம்" என்பதால் உணர்த்துகிறார். ஆனால் ஒரு "களாப் பழம் கண்டு பழம் வண்ணம் ஆழி என்றேற்கு" அதாவது ஒரு களாம் பழத்தைப் பார்த்து, அந்தப் பழத்தின் நிறம் கடலின் நிறம் என்று சொன்ன எனக்கு என்பதாம், "அஃதே கொண்டு இவளோ நாழ் என்னும்" என்றது அந்த ஒரு சொல்லையே வைத்துக் கொண்டு என்னைக் கர்வம் பிடித்தவள் என்று சொல்லுவாள் என்பதாம். "நாழ்" எனும் சொல் தான் தோன்றியாய்த் திரிதல். பெரியோருக்குக் கட்டுப்படாமல் மனம் போன போக்கில் செல்வதாகும். ஆழ்வார் ஈங்கு இச் சொல்லைப் பயன்படுத்துதல் மிகச்சிறப்பு மட்டுன்று செழுமை மிக்கதாகவுமுளது நம்மாழ்வாரே.

> "......... திருமாற்கு
> யாமார்? வணக்கமார்? ஏபாவம் நன்னெஞ்சே!
> நாமாமிகவுடையோம் நாழ்"

என்றும்,

> "நாழாலமர் முயன்ற வல்லரக்கனின்னுயிரை"

என்று பெரிய திருவந்தாதி 10-11ல் கூறுவதும் காண்க.

"வண்ணம் ஆழி" என்றுதான் சொன்னேன் அதற்கு "ஞாலம் உண்டான் வண்ணம் சொல்லிற்று

என்னும்'' என்கிறார். 'கடல் வண்ணம் என்றேன். ஆனால் என் அன்னையோ உலகெலாம் உண்டான் வண்ணத்தை நான் கூறியதாக ''எம்மை அம்மனை சூழ்கின்றவே'' என்கிறார். அதாவது எமது அம்மை எனது தாய் சுற்றிவளைத்துப் பேசுகிறாளே என் செய்வேன்! ஆதலின் ''தோழிகளோ உரையீர்'' என்று வேண்டுகிறார். தோழியர்களே எனது தாயிக்கு என் நிலையை எடுத்துக் கூறுங்கள் என்பதாம்.

அரும்பதவுரை : ஊழிகளாய் - பலகற்பங்களாய். ஆழி - கடல். களாம் பழம் - கருமை நிறமுடைய ஒரு பழம். நாழ் - கர்வம், அடங்காமை. நான் என்னும் எண்ணமுடமை. சூழ்கின்றனவே - சுற்றிவளைத்துப் பேசுகின்றாளே! யான் என் செய்வேன் என்றபடி.

(இருளுக்கு ஆற்றாத தலைவி இளம்பிறை கண்டு
தளர்ந்து உரைத்தல்)

சூழ்கின்ற கங்குற் சுருங்காவிருளின் கருந்திணிம்பைப்
போழ்கின்ற திங்களம் பிள்ளையும் போழ்கதுழாய்
மலர்க்கே
தாழ்கின்ற நெஞ்சத் தொருதமியாட்டியேன் மாமைக்
கின்று
வாழ்கின்ற வாறிதுவோ வந்து தோன்றிற்று
வாலியதே. 72

விளக்கவுரை : சூழ்ந்து கிடக்கும் இருளினுடைய சுருங்காத இருளினது கறுத்த நிறத்தின் அடர்த்தியைப் பிளக்கும் அழகிய பிள்ளை நிலவு என்னையும் பிளக்கத் தலைவனது திருத்துழாய் மலரை அடைவதற்கான மனத்தையுடைய ஒரு துணையுமில்லாமல் தளியனான என்னுடைய இயல்பான மேனி நிறத்துக்கு இப்பொழுது வாழ்க்கை சேரும்படி இளம்பிறை வந்து தோன்றியது இப்படியோ?

திறனாய்வு : தலைவன் பிரிந்து சென்ற நிலையில் இரவு மிகவும் கொடியதாகக் கண்டதாகக் கண்ட தலைவி மூன்றாம் பிறை தோன்றக்கண்டு, இரவு எனும் கொடியவன் ஒழிந்தான் என மகிழ்ந்திருக்கையில் அந்த இளம் பிறையும் என்னை பிளந்திடுதே. என்று தன் ஆற்றாமையினைக் கூறும் பாசுரம்.

''சூழ்கின்ற கங்குல்'' என்றது முழுமையாக மூடிக் கொண்ட இருள் என்பதாம். சூழ்ந்து கொண்ட இரவு; முழுமையான இரவு; மழைக்கால இரவு எனலாம். ''சுருங்கா இருள்'' என்றது சற்றுங் குறைவு பெறாமல் மிகுந்த இருள் என்பதாம். சுருங்கா இருளின் ''கருந் திணிப்பைப் போழ்கின்ற'' என்றது கருமையான அடர்ந்த இருளின் திண்மையைப் பிளக்கின்ற என்பதாம். ''திங்களம்பிள்ளை'' என்றது. அழகிய இளம் நிலவு மூன்றாம் பிறைச்சந்திரனுக்கே யான சிறப்புப் பெயர். ''துழாய் மலர்க்கே தாழ்கின்ற நெஞ்சத்து'' என்றது துழாய் மாலையைப் பெருவதற் கென்றே மனத்தை ஈடுபடுத்தி என்பதாம். மிக உயர்ந்த திருத்துழாயைப் பெற்றுவிட வேண்டும் என மிகத் தாழ்ந்திருத்தல் என்பதனையே, ''தாழ்கின்ற நெஞ்சத்து'' என்றனர். ''ஒருதமியாட்டியேன்'' யாரு மில்லாது தனித்திருப்பவளான நான், என்னுடைய ''மாமைக்கு'' என்றது மாமை நிறத்துக்கு, ''இன்று வாழ்கின்றவாறு'' ''வந்து தோன்றிற்று இதுவோ வாலியதே'' என்கிறார்.

துழாய் மாலையைப் பெற்றிடவேண்டும் என்று தாழ்கின்ற நெஞ்சத்தையுடைய நான், தனித்து விடப் பட்ட நான் எனது மாமை நிறம் நிலையாக இருக்க வந்து தோன்றியது இந்தப் பிறை நிலா ''வாலியதே'' என்பதால் ஒலி வீசிப் பிரகாசிக்கிறதே, என்கிறார். எதிர்மறை இலக்கணையால் வெறுத்தபடி கூறப் பட்டது.

அரும்பதவுரை : சூழ்கின்ற - சூழ்ந்து கொள்கின்ற. திணிம்பை - திட்பத்தை. செறிவை. திங்களம்பிள்ளை - மூன்றாம் பிறை நிலைவு. போழ்க - பிளக்க. தமியாட்டி - தனித்து இருப்பவள். மாமை - நிறம். வாலியதே - பிரகாசிக்கிறதே.

(பிறையுடை மாலைக்கு ஆற்றாத தலைவி
தளர்ச்சிகண்டு பாங்கி இரங்கல்)

வால்வெண் ணிலவுலகாரச் சுரக்கும் வெண்டிங்
கள்ளென்னும்
பால்விண் சுரவிசுர முதிர் மாலை பரிதிவட்டம்
போலுஞ் சுடரடலாழிப் பிரான் பொழிலே ழளிக்குஞ்
சால்பின்றனைமை கொலாந்த மியாட்டி
தளர்ந்ததுவே 73

விளக்கவுரை : விண்வெளியில், வெண்மையான ஒளிவீசும் பால்நிலவு, பாலை உலகமெங்கும் நிறையும்படி சுரந்து சொரிகின்ற வெண்திங்களாகிய பசுவின் சுரப்பு மிகுதியாகி மாலைப் பொழுதிலே தலைவன் சொன்னபடி வந்து சேராமையால் தனித்துத் தளர்ச்சியடைந்த இவளது தன்மை, சூரியமண்டலம் போன்று ஒளியையுடைய சக்கராயுதமுடைய அந்தத் தலைவன் எழு உலகங்களையும் காக்கும் பெருமை இதுதானோ?

திறனாய்வு : திங்கள் முழுமதியாய் உலகுக்கு ஒளி பரப்பும் பொழுது அதனைப் பால் நிலவு என்பர். வானின்றும் பால் பொழிவது போன்றதோர் தோற்றத்தை

"அருந்தவன் சுரபியே ஆதிவான் மிசை
விரிந்த பேர் உதயமா, மடிவெண் திங்களா,
வருந்தல் இல் பசுங்கதிர் வழங்கு தாடையா
சொரிந்த பால் ஒத்தது நிலவின் தோற்றமே"

என்று கம்பன் போற்றுவர். சுந்தரகாண்டம் ஊர்தேடு படலம் 56. கம்பனின் வாக்கை நம்மாழ்வார், ''விண் வால் வெண்ணிலவு பால் உலகு ஆர சுரக்கும்'' என்கிறார். ஒரேகருத்தை வெவ்வேறு வகையான சொல் நயத்தால் கற்போர் மனத்தில் களிப்பை ஊட்டிவிடு கின்றனர். ''விண் வால் வெண்ணிலவு'' என்றது விண்ணில் உள்ள மிகவும் வெண்மையான நிலவு என்பதாம். வானத்தில் மிதந்து வரும் பால் நிலவு என்பதாம். அந்த ''வெண்வால் நிலவு பால் உலகு ஆர சுரக்கும்'' என்றது திங்கள் பொழியும் ஒளி பால் சொரிவது போன்ற தோற்றமுடையதாதலின் உலக முழுதும் பால் பெய்து நிரம்பியது போன்று தோற்ற மளிக்குமாதலின் உலகு ஆர சுரக்கும்'' என்றனர். ''சுரக்கும்'' என்றது சுரந்து பொழியும் என்பதாம். ''வெண்திங்கள் என்னும் சுரவி'' என்றது வெண்மை யான நிலவாகிய பசு'' ''சுரமுதிர்'' அதாவது சுரப்பு மிகுதியாக ''மாலை''ப் பொழிதிலே ''தமியாட்டி தளர்ந்தது'' தனிமையில் விடப்பட்ட இவளின் தளர்ச்சியுடைய தன்மையானது என்பதாம். ''பரிதி வட்டம் போலும் சுடர் அடல் ஆழிபிரான் பொழில் ஏழ் அளிக்கும் சால்பின் தகைமை கொல் ஆம்'' என்கிறார். சூரிய மண்டலத்தை இங்கு ''பரிதி வட்டம்'' என்று தனித் தமிழில் தருகிறார். ''பரிதி மால் கலைஞன்'' எனப்புழி. எம்பிரான் ஒளிவீசும் சக்ரா யுதத்தையுடையவன் ஆதலின் ''சுடர் அடல் ஆழி பிரான்'' என்கிறார். ''பிரான்'' என்றதால் அடியார்க்கு வேண்டியதெல்லாம் அருளுபவன் என்பதாம். ஏழு உலகும் காப்பவனாதலின் ''பொழில் ஏழ் அளிக்கும்'' அத்தகு தன்மை யுடையவனாதலின் ''சால்பின் தகைமை கொல் ஆம்' என்றனர். அவ்வாறு காப்பதின் தன்மையோ? அல்லது வெண் திங்கள் பாலைச் சுரந்து பொழிவது தான் எம்பிரானுக்குப் பெருமையோ? என்றபடி.

இப்பாசுரத்தை "பரிதிவட்டம் போலும் சுடர் அடல் ஆழி பிரான் பொழில் ஏழ் அளிக்கும் சால்பின் தகைமை கொல் ஆம், வால் வெண்ணிலவு உலகு ஆர பால் சுரக்கும் வெண் திங்கள் என்னும் சுரவி விண்சுர முதிர் மாலை தமியாட்டி தளர்ந்ததுவே" எனப் பிரித்துப் பொருள்காண அமையும்.

அரும்பதவுரை: வால் - இளமை, வெண்மை, ஒளி, பெருமை. உலகு ஆர - உலகு எங்கும், முழுமையாக. சுரவி - வெண் பசு, அமுதசுரபி. விண்சுரவி - காமதேனு. சுரபி என்பது சுரவியானது. சுர - சுரப்ப, பால் சுரக்க. பரிதி - கதிரவன் பரிதி வட்டம் - சூரிய மண்டலம். சுடர் - ஒளிச்சுடர். அடர் - வலிய. ஆழி - சக்கரம். ஆழிபிரான் - சக்ரதாரி. பொழில் ஏழ் - ஏழு உலகம், அளிக்கும் - அருளும், காக்கும். சால்பு - மேன்மை, நிறைவு, தகைமை - பெருமை. தமியாட்டி - தனித்திருப்பவள். தளர்ந்தது - தளர்ச்சி நிலையடைந்தது. ஈற்றேகாரம் அசையெனத் தள்ளினும் தள்ளுக.

(தலைவனது துழாயிற் பட்ட தென்றல் வரத்
தலைவி மகிழ்ந்துரைத்தல்)

தளர்ந்து முறிந்தும் வருதிரைப் பாயற்றிரு நெடுங்கண்
வளர்ந்து மறிவுற்றும் வையம் விழுங்கியு
மால்வரையைக்
கிளர்ந்து மறிதரக்கீண் டெடுத்தான் முடிசூடுதுழா
யளைந்துண் சிறுபசுந்தென் றலந்தோ வந்து
லாகின்றதே 74

விளக்கவுரை: கொதித்தெழுந்து வந்து, காற்றின் வேகத்தால் தளர்ந்தும், முறிந்தும் வரும் அலைகளையுடைய திருப்பாற்கடலில், பாம்பைப் பாயாக விரித்து,

அழகிய நீண்ட திருக்கண்கள் உறங்கியும், அந்த உறக்கத்தில் யாவும் அறிந்தும், ஊழிக்காலத்தில் உலகெலாம் விழுங்கி வயிற்றில் கொண்டும், கோவர்த்தன மலையை ஏந்தி மாடுகளையும் இடையர் களையும் காத்தும். வந்த எம்பெருமானது திருமுடி யில் சூழப்பட்ட திருத்துழாய் மாலையை அசைந்தாட அளாவிவந்த புதிய தென்றல் மென் காற்று என்மேல் வந்து வீசி மகிழ்ச்சியுண்டாகும்படி செய்கிறது.

திறனாய்வு : இதுநாள் பரியந்தம் திருத்துழாய் மாலைக்கு எங்கிக் கிடந்த தலைவி இப்பொழுது தலை வனது துழாயிற்பட்ட தென்றல் வீசக் கண்டு மகிழும் செய்தி இப்பாசுரத்தில் கூறப்படுகிறது. இதனைத் தென்றல் வரவு கண்டு அதனைத் தாங்கமாட்டாது வருந்தியுரைத்தாள் எனவும் கூற அமையும். 'தளர்ந்தும் முறிந்தும்' என்று திருப்பாற்கடலின் தன்மையைக் கூறுகிறார். "வருதிரை தளர்ந்தும் முறிந்தும்" என்பதாம். ஒரு அலை ஒய்ந்து பின்னோக்கி நகரும் மற்றுமொரு திரை முன்னோக்கி வருவதால் முதலில் வந்ததிரை தளர்ந்து நகரும் பொழுது அடுத்துவரும் திரையை முறித்து விடுகிறது. அலைகளின் தன்மையை ஆழ்வார் பெருந்தகை ஆழ்ந்து கவனித்து இப்பாசுரத்தில் இச் சொற்களைப் பயன்படுத்தியிருக்கிறார் எனக் காணும் பொழுது உள்ளமெல்லாம் பூரிக்கிறது. திருமாலுக்கு படுக்கையே அந்தக் கடல்தான். ஆனந்தத் தூக்கத்தில் ஆழ்ந்து கிடப்பவன் ஆதலின் "பாயல்" என்கிறார். "பாயல் திரு நெடுங்கண் வளர்ந்தும்" அதாவது பாம்புப் படுக்கையில் படுத்து அவனுடைய நீண்ட திருக் கண்களை மூடிக்கொண்டு உலகேழையும் ஆட் கொள்ளும் சிந்தனையில் மூழ்கிக்கிடப்பவன் ஆதலின் "கண் வளர்ந்தும் அறிவுற்றும்" என்றனர். "வையம்

விழுங்கியும்'' என்றது உலகனைத்தும் பிரளயகாலத் உண்டு உயிர் காத்தவன். கோவர்தன மலை எடுத்துக் குடையாகப் பிடித்துக் காத்தவன் என்பதை ''மால் வரையைக் கிளர்ந்து மறிதரக் கீண்டு எடுத்தான் என்றனர். இவ்வளவு பெருமையையுமுடைய எ பிரானது ''முடிசூடு துழாய் அளைந்து உண் சி பசுந்தென்றல் அந்தோ வந்து உலாகின்றதே என்கிறார் தலைவி. இதனை முன்பே சொன்னது போ தென்றல் வரவுகண்டு வருந்திய தலைவியின் சொ எனவும், அது திருத்துழாய் மாலையின் அளைந் அதன் நறு மணத்தை உண்டு வந்ததால் தலைவ தன்னை நோக்கி வந்து கொண்டிருக்கிறான் அவ வரவை உணர்த்த வந்த துழாய் மணம் கமழ் தென்ற எனக்கண்டு மகிழ்ச்சியால் கூறினள் எனவும் கொள் லாம். ''அந்தோ'' என்றும் ''உலாவுகின்றதே'' எனு இச்சொற்கள் இதனை வலியுறுத்துவதாக அமைந்த காண்க.

அரும்பதவுரை : தளர்ந்தும் - வேகம் குறைந்து முறிந்தும் - வேகம் முறிக்கப்பட்டும். திரை - அலை பாயல் - படுக்கை. பாம்புப் படுக்கை, ஆதிசே சயனம். கண் வளர்ந்தும் - கண் துஞ்சியும். அறிவுற்று - கள்ள நித்திரையில் யாவற்றையும் அறிந்தும். மா வரை-கோவர்தனமலை. கிளர்ந்து - தூக்கி. குடையாக தூக்கி. மறிதர - பசுக்கள் வழக்கம் போல் புல்மேய்ந் கொண்டிருக்கும் படியாக. கீண்டெடுத்து - பெயர் தெடுத்து. அளைந்து - அதில் உழன்று. உண் - அத மணத்தை உண்டு. சிறுபசுந்தென்றல் - மென்மையா குளிர் தென்றல். அந்தோ - ஐயோ ஒரு இரக்க சொல். உலாகின்றது - வீசுகின்றது. ஈற்றேகார அசையெனத் தள்ளாது தெரிநிலையாகப் பொரு கொள்வதே மேன்மை.

(மதியுடம் படுக்கலுற்ற தலைவன் தலைவி
தோழியரைப் பதிவினாதல்)

உலாகின்ற கெண்டை யொளியம் பெம்மாவியை
யூடுருவக்
குலாகின்ற வெஞ்சிலை வாண் முகத்தீர் குனி
சங்கிடறிப்
புலாகின்ற வேலைப் புணரியம் பள்ளியம் மானடியார்
நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நுந்நிலை
யிடமே. 75

விளக்கவுரை : காதளவு சென்று மீண்டு வரும் கொண்டைமீன் போன்ற கண்கள் ஒளிவீசும் அம்பு போன்ற கண்கள் எமது உயிரை ஊடுருவித் துளைக்கும்படி அந்த அம்புகளை எய்தற்கு வளைகின்ற கொடிய வில்லையுடைய ஒளிவீசும் முகத்தினையுடையவளே! வளைந்த சங்குகளைக் கொழித்து புலால் நாற்றம் வீசும் அலைகளையுடைய கடலை, அழகிய பள்ளிகொள்ளுமிடமாகவுடைய எம்தலைவன் தன் அடியார்கள் விளங்கி வாழப் பெற்ற உங்களது இருப்பிடம் வைகுந்தமோ! வையகமோ.

திறனாய்வு : தலைவியும் தோழியும் தனித்திருக்கின்றனர். அதுகண்ட தலைவன் தலைவியிடம் ஏதாகிலும் பேசவேண்டும் என்கின்ற அவா. தலைவிக்கும் தலைவனுக்கும் முன்பே தொடர்பு உண்டு என்பது தோழிக்குத் தெரியக்கூடாது என்ற எண்ணம் கொண்டவனாய் மெல்ல அவர்களிருக்கும் இடம் சென்று என்ன கேட்பதென்பது தெரியாமல் தலைவியைப் பார்த்து உன் பெயரென்ன ஊர் என்ன என்பன போன்ற வினாக்களை எழுப்புவான். ஆழ்வரது பக்திமார்க்கத்தைக் கண்ட இறைவன் ஆழ்வாரைப் பார்த்துக் கேட்பதாக அமைந்த பாசுரம்.

"உலாகின்ற கெண்டை" என்று கயல்விழிகள் கண்கள் எனும் தடாகத்தில் உலாவுவதை இவ்வாறு குறிப்பிடுகிறார். "ஒளி அம்பு எம் ஆவியை ஊடு உருவ" என்று கண்களிலிருந்து பாயும் காதல் ஒளி உயிர்குடிக்கப் பாய்கின்றன என்கிறார். "ஊடுஉருவ" என்றது துளைத்துச் செல்ல. என்றபடி. "குலாகின்ற வெம்சிலை வாள் முகத்தீர்" என்றது நெளிந்துவளை கின்ற புருவமாகிய கொடிய வில்லையுடைய ஒளிவீசுட முகத்தையுடையவர்களே என்பதாம். "குனிசங்கு இடறி" என்றது வளைந்தசங்குகளை மிகுதியாகக் கொண்டு என்பதாம். "புலாகின்ற வேலை புணரி" என்றது புலால் நாற்றமுடைய அலைகளையுடைய கடலை, "அம்பள்ளி அம்மான்" என்றது அழகிய பாம்புப் படுக்கையை உடைய எம்மான், எம்பெருமானது "அடியார் நிலாகின்ற" அடியார்கள் நிலைத்து வாழப் பெற்ற, "நும் நிலை இடமே" உங்களது இருப்பிடமே, "வைகுந்தமோ, வையமோ" வைகுந்தமே இந்த உலகமோ என்று அடியார்கள் வாழும் இடமே எம்பெருமான் வாழும் இடமாதலின் இந்த உலகே எம் பெருமான் வாழும் வைகுந்தம் என்று மகிழ்ந்து கூறு கிறார்.

அரும்பதவுரை: உலாகின்ற - உலாவுகின் கெண்டை - கெண்டை மீன்போன்ற விழிகள். உவமை யாகுபெயர். ஆவி - உயிர். குலாகின்ற - வளைகின்ற வெம் - கொடிய. சிலை - வில். வாள்முகம் - ஒளிமுகம் குனி - வளைந்த. இடறி - கொழித்து. புலாகின்ற புலால் நாற்றம். மீன்நாற்றம். வேலை - அலை. புணரி கடல். அம் - அழகிய. பள்ளி - படுக்கை. அம்மான் யாவர்க்கும் தலைவனான எம்மான். நிலாகின்ற நிலைத்து வாழ்கின்ற. நும் நிலை இடம் - உம நிலைத்திருக்கும் இடம் வைகுந்தம்.

(தலைவனது மாலை பெறாது வருந்துந்தலைவி
மதிக்கு இரங்கி நெஞ்சொடு கூறல்)

இடம்போய் விரிந்திவ் வுலகளந்தா னெழிலார்
தண்டுழாய்
வடம் போதினையுமட நெஞ்சமே நங்கள்வெள்
வளைக்கே
விடம்போல் விரிதலிது வியப்பே வியன்றா மரையின்
றடம்போ தொடுங்க யெல்லாம் பல்லர்விக்கும் வெண்
டிங்களே. 76

விளக்கவுரை : மாபலி நீர்வார்த்துக் கொடுத்ததும் எங்கும் பரவி இந்த உலகத்தையெல்லாம் அளந்து கொண்டவனுடைய அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையைப் பெறுவதற்காக வருந்தும் மட நெஞ்சமே! சிறந்த பெரிய தாமரை மலரானது குவிவதற்கு எழுந்த ஆம்பலை அலரும்படி செய்யும் பால் நிலவு எமது வெண்மையான வளையல்களைக் கழல்விப்பதற் காகவே நஞ்சொளியைப் பரப்புவதாகிய இது; ஒரு வியப்போ?

திறனாய்வு: இரவில் மதியம் தோன்ற ஆம்பல் மலரத் தாமரை குவியும். இந்நிகழ்ச்சியை ஆழ்வார் அழகுபட அம்புலியின் இச்செய்கை ஆம்பலினிடத்து அன்பு வைத்து அதற்கு மகிழ்ச்சியுட்டி மலர வைத்தது என்றும் அதற்காகத் தாமரையைச் சிதைத்தது என்றும் கூறுவது இப்பாசுரத்தின் சிறப்பு. இத்தகு கொடிய செயலை யுடைய நிலவு தன் தலைவன் பிரிவால் வாடும் தலைவி யின் வளையல்கள் கழல்வதற்த கென்றே நஞ்சு போல் சுடுவதில் வியப்பொன்றுமில்லையே என்று கூறுகிறார்.

“இடம்போய் பிரிந்து இவ்வுலகு அளந்தான்” என்றது உலகளந்பெருமானை. “இடம் போய்

பிரிந்து'' என்றது எல்லா இடங்களிலும் போய் வளர்ந்து ''இவ்வுலகு அளந்தான்'' இந்த உலகை அளந்த எம்பெருமானுடைய என்பதாம். இந்த உலகளந்த பெருமானின் ''எழில் ஆர்தண் துழாய் போது வடம்'' என்றது அழகிய மிகவும் குளிர்ந்த திருத் துழாய் மாலை என்பதாம் ''போது'' என்றது மலரும் நிலையில் உள்ள என்பதாம். வடம் என்றது வடக் கயிறு போன்ற பெரிய மாலை என்பதாம். துழாய் வடத்துக்காக ''இனையும்'' என்றது வாடும் வருந்தும் ''மடநெஞ்சமே'' பேதை உள்ளமே! என்பதாம்! ''வியல் தாமரையின் தடம்போது ஒடுங்க'' அதாவது, சிறந்த பெரிய தாமரையின் பெருமைமிக்க இதழ்கள் குவிய, ''மெல் ஆம்பல் அலர்விக்கும் வெண் திங்களே'' என்றனர். ''மெல்'' என்றது ஆம்பலின் சிறுமையை உணர்த்தும். ''அலர்விக்கும்'' என்றது மலர்விக்கும் வெண்மை ஒளிபரப்பும் நிலவு அல்லது நிலவே என்றபடி. ஓ சந்திரனே! நீ பெருமைமிக்க பெரிய தாமரையை ஒடுக்குகிறாய் சிறுமையுடைய ஆம்பலை மலர்விக்கிறாய். உன் இயல்பு இப்படியிருக்க ''நங்கள் வெள் வளைக்கே விடம்போல் விரிதல் இது வியப்பே'' என்றது எமது வெண் சங்காலமைந்த வளையல்களைக் கழல்விப்பதற்காகவே நஞ்சு போல் உன் ஒளிக்கதிர்களைப் பரப்புவதில் வியப்பொன்று மில்லை என்பதாம்.

இப்பாசுரத்தில் எம்பெருமானை ஏற்றார் பெருமை யைத் தாமரைக்கும், ஏற்காத சிறு மனத்தாரை ஆம்ப லுக்கு ஒப்பிட்டுக் காண்பது சிறப்பு.

அரும்பதவுரை : இடம்போய் வரிந்து - இரேழுல கும் சென்று. போது - மலரும் நிலையில் உள்ள அரும்பு. வடம் - பெரிய கயிறு போன்ற மாலை. இனையும் - வருந்தும். மடம் - பேதமை. வியல் -

பெருமைமிக்க, பெரிய. தடம் - பெருமை. ஒடுங்க - குவிய. மெல் - சிறுமையுடைய. அலர் - மலர். நங்கள் - எங்கள். விடம் - நஞ்சு. விஷம் என்பதன் தமிழாக்கம். விரிதல், ஒளிவீசுதல்.

(மாலைப் பொழுதுக்கு ஆற்றாத தலைவி இரங்கல்)

திங்களம் பிள்ளை புலம்பத்தன் செங்கோலரசுபட்ட
செங்களம் பற்றி நின்றெள்கு புன்மாலை
தென்பாலிலங்கை
வெங்களஞ் செய்த நம்விண்ணோர் பிரானார்துழாய்
துணையா
நங்களை மாமை கொள்வான்வந்து தோன்றி
நலிகின்றதே. 77

விளக்கவுரை : பிறை நிலவாகிய அழகிய தனது குழந்தை அழுது புலம்பத் தனது ஆட்சியாகிய சிவந்த ஒளியை எங்கும் பரப்பும் செங்கோலையுடைய ஞாயிறு இறந்து மறைதற்கு இடமான; அவன் இரத்தத்தாற் சிவந்த போர்க்களமாகிய செவ்வானம் அடைந்து அங்கு நின்று வருந்துகின்ற மாலைப் பொழுதாகிய பெண், தெற்குத் திசையிலுள்ள இலங்கையைப் போர்க்களமாகச் செய்த தேவாதி தேவனாகிய நமது தலைவனது திருத்துழாயைத் தனக்குத் துணையாகக் கொண்டு நமது மாமை நிறத்தைக் கவர்ந்து கொள்வதற்கு வந்து தோன்றி வருத்துகின்றது.

திறனாய்வு : கதிரவன், மாலைப் பொழுது, நிலவு தோன்றுவது ஆகிய இம் மூன்றையும் வைத்து ஒரு சிறு நாடகம் நடத்திக் காண்பிக்கிறார். அதனால் தான் இவர் நம்மாழ்வார் எனச் சிறப்புப் பெயர் பெற்றனர் போலும் "திங்களம் பிள்ளை" என்று சந்திரனை குழந்தையாகக் காண்பிக்கிறார். "செங்

கோல் தன் அரசு'' என்று ஞாயிற்றை அரசோச்ச தலைவனாகக் காண்பிக்கிறார்.

''செம் களம்'' என்று செவ்வானத்தைப் போர்க்கள மாகக் காண்பிக்கிறார். ''எள்கு புல் மாலை'' என்று மாலைப்பொழுதைப் பெண்ணாக அதாவது கதிர வனின் மனைவியாக, சந்திரனின் தாயாகக் காண்பித்து நாடகத்தை நடத்துகிறார். ஞாயிறு தன் சிவந்த ஒளிக் கதிர்களை செங்கோலாகக் கொண்டு ஆட்சி செலுத்து கையில் செவ்வானம் எனும் போர்க்களத்தில் மாண்டு மறைந்து போக, மாலைப் பொழுது எனும் பெண்ணும் அவர்கள் பெற்ற சந்திரனும் வருந்தி நின்றனர் என்ப தாகக் காட்டியிருப்பது மிகவும் சிறப்பாக அமைந் துள்ளது.

அதிவீரராம பாண்டியனாரும் இதே காட்சியை தனக்கே உரிய சொல்லோவியத்தில்,

> ''செய்ய வெங்கதி ரிறத்தலு மவனுழைச் சிறந்த
> மொய்கொள் பேரொளி வனிதைக்கு மூட்டுசெந்
> தழலின்
> வெய்ய நீரதாய்ப் பரந்தெழு செக்கர்வான் மெலிந்த
> வைய்ய நுண்ணிடை யணங்கினுக்கென் கொலா
> யமையும்'

என்று தீட்டிக் காட்டுவர்; நைடதம் அடியனேன் உரைநூல் பக்கம் 254 கண்டு தெளிவுபெறுக.

''திங்களம்பிள்ளை புலம்ப'' என்றது பிறை நில வாகிய குழந்தை புலம்பி நிற்க என்பதாம். ''செங்கோல் தன் அரசுபட்ட'' என்றது சிவந்த கதிர்களைச் செங் கோலாகக் கொண்ட கதிரவன் தன் அரசு கவிழ்ந்ததால் இறந்து மறைவதற்கு இடமான இரத்தம் தோய்ந்த ''செம்களம்'' அதாவது செவ்வானமான போர்களம். இதனைப் ''பற்றி நின்று எள்கு புன்மாலை'' என்றனர்.

செவ்வானமாகிய போர்க்களத்தில் இருந்துகொண்டு என்பது "பற்றி நின்று" என்றனர். "எள்கு புல் மாலை" என்றது வருந்தும் மாலைப் பொழுதாகிய மனைவி என்பதாம்.

"இரவிமன்னவ னிறத்தலு
மெதிர்ந்த புன் மாலை"

என்றனர் அதிவீரராமர் நைடதம்உரைநூல் பக்கம் 252.

"தென்பால் இலங்கை வெம் களம் செய்த நம் விண்ணோர்பிரான்" என்றது எம்பெருமானை, தெற்கிலுள்ள இலங்கை சென்று கொடிய போர்க்களத்தில் வென்ற நம் விண்ணவர் தலைவனான தேவாதி தேவன். "துழாய் துணை ஆ" என்றது திருமாலின் மார் பணிந்த திருத்துழயைத் துணையாகக் கொண்டு, "நங்களை மாமை கொள்வான்" நமது மாமை நிறத்தைக் கவர்ந்து கொள்வதற்கு "வந்து தோன்றி நலிகின்றதே" மாலைப் பொழுது வந்து தோன்றி எம்மை வருத்துகின்றதே என்பதாம். கணவன் செம் களத்தில் மாண்டு மறைந்தான், திங்களம் பிள்ளை ஒருவனும் தனித்து நிற்கிறான். இவ்வளவு இன்னல்களுக்கும் இடையிலும் துழாய் மாலையைத் துணையாகக் கொண்டு எம்மை வந்து வருத்துகிறதே என்று தன் ஆற்றாமையைக் கூறுகிறார். இது மாலைப் பொழுதின் கொடுமையைத் தான் துன்பப்பட்ட நிலையிலும் பிரிந்தாரைத் துன்புறுத்துவதில் மிகக் கடுமையாகச் செயல்படுவதாகக் காண்பிப்பது சிறப்பு. மாலை இங்கு "புன்மாலையானது காண்க.

மாலைப் பொழுது துழாயைத் துணையாகக் கொண்டு வந்ததால் எம்பெருமானைச் சேர்ந்து அனுபவிக்கும் காலம் அருகில் உள்ளது என்பதாக ஆழ்வார் அருளிச் செய்தது இதன் உட்பொருள்.

அரும்பதவுரை : புலம்ப - அழுது நிற்க. தனிப் பட ("புலம்பே தனிமை") அரசுபட்ட - அரசு இழந்து இறந்துபட்ட, செங்களம் - இரத்த வெள்ளத்தால் சிவந்தது போன்றபோர்களம். எள்கும்-வருந்தும். புன் மாலை - சிறுமையுடைய மாலை. தன் இன்னல்களைக் கண்டு கொள்ளாமல் பிறருக்குத் துன்பம் விளைவிக்கப் புகுந்த புல்மாலை, சிறுமை படைத்த மாலைப்பொழுது. வெம்களம் செய்த - கொடிய போர்க்களத்தை வென்ற. "செய்த" என்றது செய்து வென்ற என்பதாம். துணைஆ - துணையாகக் கொண்டு நங்களை - எம்மை மாமை - அழகுநிறம். கொள்வான் - கள்வனெனக் கொள்பவன். நலிகின்றதே - வருத்துகின்றதே. ஏகாரம் வெறுப்பையும் அச்சத்தையும் உணர்த்த அமைந்தது. துழாயும் மாலையும் வாட்டுவதற்கு கூட்டு சேர்ந்தன. என்பதும் காண்க.

(பிரிவற்றாத் தலைவி தலைவனாற்றலைக்
கருதி நெஞ்சழிந்திரங்கல்

நலியுநரகனை வீட்டிற்றும் வாணன் றிண்டோ
டுணித்த
வலியும் பெருமையும் யாஞ் சொல்லு நீர்த்தல்லமை
வரைபோற்
பொலியு முருவிற் பிரானார் புனைபூந்துழாய் மலர்க்கே
மெலியு மடநெஞ்சினார் தந்து போயின
வேதனையே 78

விளக்கவுரை : கொடுமைகள் செய்யும் நரகாசுரனைக் கொன்றதும், வாணன், பாணாசுரனது வலிமை மிக்க தோள்களை அறுத்துத் தள்ளிய பெருமையையெல்லாம் நாம் பகழ்ந்து சொல்லும் தகுதியுடையவள் அல்ல. கருமையான மலைபோலும் ஒளி வீசும் உருவத்தையுடைய எம்பிரானாரது சாத்தப்பட்ட

அழகிய திருத்துழாய் மாலையைப் பெறுதற்காகவே ஆசைப்பட்டு வருந்தும் மடமையுடைய எனது மனம் என்னைவிட்டுப் போனபொழுது கொடுத்துவிட்டுச் சென்றது வேதனை மட்டுமே.

*திறனாய்வு :* தலைவன் பின் சென்ற மனம் திரும்பி வரா நின்ற நிலையில் ஆற்றாமையால் தலைவிக்கு விஞ்சியிருப்பது துன்பங்களே எனக் கூறும் பாசுரம். இது முன்னமேயே மூன்றாம் பாசுரத்திலேயே தலைவன் பின் சென்ற மனம் திரும்பி வராமையால் வருந்தியது கூறப்பட்டது. என்றாலும் இப்பாசுரத்தில் சென்ற மனம் விட்டுச் சென்றது வேதனையே என்பதாகக் கூறப்படுகிறது. மேலும் இப்பாசுரத்தில் நரகாசுரனை வீட்டின கதையும், பாணாசுரனைப் பாழ்படுத்தியதும் கூறப்படுகிறது.

''நலியும் நரகனை வீட்டிற்றம்'' என்றது உலகை வருத்திக் கொண்டிருந்த நரகாசுரனை வீழ்த்திய திறம் என்பதாம். இங்கு ''நலியும் நரகாசுரன்'' என்றதால் உலகத்தைத் துன்புறுத்தியதால் தானே அழிந்து போக இருக்கும் நரகாசுரன் எனினுமாம். ''வீட்டிற்றம்'' என்பது விடு என்பதன் விகாரமாகிய வீடு என்பதன் பிறவினை வீட்டு என்பதாயிற்று. வீழ்த்திற்று என்பது வீட்டிற்று என மருவிற்று எனலாம். ''வாணன் திண்தோள் வலியும்'' என்றது பாணாசுரனது வலிமை மிக்க தோள்களை அறுத்துத் தள்ளி வலிமையும் என்று எம்பெருமானின் போர்த்திறத்தை இங்கு எடுத்துக் காட்டுகிறார்.

நரகாசுரன் என்பவன், மகாவிஷ்ணு வராக அவதாரம் எடுத்து பூமியை மீட்ட பொழுது விஷ்ணுவுக்கும் பூ மகளுக்கும் பிறந்தவன். இவன் தேவர்களுக்குக் கொடுமைகள் பல செய்தானாதலின் இந்திரனின் வேண்டுகோளுக்கிணங்கி இவனைக் கொன்று இவன்

சிறைபிடித்து வைத்திருந்த 16100 அரசகுமாரிகளையும் கண்ணபிரான் மணந்து கொள்கிறார். பாகவதத்தில் இவன்பெயர் பௌமகாசுரன் எனவும் வழங்கப்படுகிறது.

வாணன் என்றது பலிச்சக்கரவர்த்தியின் வமிசத்தில் தோன்றிய பாணாசுரனைப் பற்றியது. இவனுடை பெண்ணான உஷை என்பவள் தான் கனவில் கண்ட இளைஞனைப் புணர்ந்திடக் காமம் கொண்டு அவனைத் தன் தோழி சித்ரலேகையின் உதவியுடன் கண்ணபிரானது மகன் பிரத்யும்நனது குமாரனான அநிருத்தனென்பனை அவன் தூங்கிக் கொண்டிருக்கையில் மாயையால் துவாரகையிலிருந்து எடுத்து வந்து அவனுடன் வாழ்ந்தாள். இச்செய்தியை நாரதர் மூலம் தெரிந்து, கண்ணபிரான் பாணாசுரனது ஆயிரம் தோள்களையும் சக்ராயுதத்தால் அறுத்தழிந்தார். அப்பொழுது சிவபெருமான் வேண்டுகோளின்படி அநிருத்தனுக்கும் உஷைக்கும் திருமணம் நடந்தது. இக்கதையை,

"மன்னவன் வாணன் அவுணர்க்கு வான் வேந்தன்
தன்னுடைய பாவை யுலகத்துத் தன்னொக்குங்
கன்னியரை யில்லாத காட்சியாள் - தன்னுடைய
இன்னுயிர்த் தோழியா லெம்பெருமானீன்றுழாய்
மன்னுமணிவரைத் தோள் மாயவன் - பாவியேன்
என்னையிது விளைத்த ஈரிரண்டு மால் வரைத்தோள்
மன்னவன்றன் காதலனை மாயத்தாற் கொண்டு
போய்க்
கன்னிதன்பால் வைக்கமற்றவனோ டெத்தனையோர்
மன்னிய பேரின்ப மெய்தினாள்..."

என்பர் திருமங்கையாழ்வார், பெரியதிருமடல் அடியேனென் உரை நூல்பக்கம் 106—107 காண்க.

இவ்விருவரையும் அழித்த எம்பிரான் வலிமையைக் கூறுமிடத்து "பெருமையையும் யாம் சொல்லும் நீர்த்து அல்ல." என்கிறார். அவன் பெருமையை எடுத்துக்

கூறு வல்லமை எமக்கில்லை என்றபடி. "மை வரை" போல் பொலியும் உருவமுடையவன் எம்பிரானார் என்கிறார். "புனை பூதுழாய் மலர்க்கே" என்றது தொடுக்கப்பட்ட அழகிய துளசிமாலையைப் பெறுவதற்கென்று என்பதாம். "மெலியும் மட நெஞ்சினார்" என்றது, வாடும் என் மனமே என்பதாம். "தந்து போயின வேதனையே" என்றது துழாய் மாலைக்கு ஆசைப்பட்டு மை வரைபோல உருவின் பிரானார் பக்கல் சென்ற மனமானது எமக்கு விட்டுப் போனது "வேதனையே" வேதனை மட்டுமேயன்றி வேறொன்றும் இல்லை என்பதாம்.

அரும்பதவுரை : நலியும் - அழியும், நொந்து போகும். இங்கு தன் அழிவுக்கு வழி வகுத்துக் கொண்டிருக்கும். வீட்டிற்றும் - வீழ்த்திற்றும். நரகன் - நரகாசுரன் மகாவிஷ்ணுவுக்கும் பூமாதேவிக்கும் பிறந்தவன். திண்தோள் - வலிமை மிக்க தோள்கள். துணித்த - வெட்டிய. நீர்த்து - தன்மை. மைவரை - மைபோன்ற கரியமலை. புனை - தொடுத்த. மெலியும் - வருந்தும். வேதனையே - வேதனை மட்டுமே.

(தலைவனைப் பிரியாத மகளிரது சிறப்பைக்
கூறித் தலைவி இரங்கல்)

வேதனை வெண்புரி நூலனை விண்ணோர் பரவநின்ற
நாதனை ஞாலம் விழுங்கும நாதனை ஞாலந்தத்தும்
பாதனைப் பாற்கடற் பாம்பணை மேற்பள்ளி
கொண்டருளுஞ்
சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ்
சீரியரே. 79

விளக்கவுரை : வேதநாயகனை, வெண்மையான முப்புரி நூலை அணிந்தவனை, வான்தேவர் தொழுது போற்றும் தலைவனை, பிரளய காலத்தில் உலகம்

யாவையும் விழுங்கித் தன் வயிற்றினுள் அடக்கிக் காத்த ஒப்பற்ற தலைவனை, உலகளந்த பெருமானை, திருப்பாற்கடலில் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளு கின்ற குளிர்ந்த தன்மையுடையவனை இடைவிடாது வணங்கி அனுபவிக்கப் பெற்றவர் பரமபதத்தில் உள்ள நித்திய சூரியரிலும் சிறந்தவராவர்.

திறனாய்வு : இப்பாசுரம் எம்பெருமானை நீங்காது தொழுது நிற்பார் சிறப்பு கூறப்படுகிறது. தலைவனைப் பிரியாது இருக்கும் மகளிர் என்றும் இன்புற்று இருக்கும் வாழ்வையுடையவராதலின் அத்தகைய ஆன்மாக்களின் சிறப்பு விரிக்கப் படுகிறது. "வேதனை" என்றது வேதங்களுக்கு முதல்வனை என்பதாம்.

"உன்னியயோகத் துறக்கந் தலைக்கொண்ட
பின்னைத் தன்னாபி வலயத்துப் பேரொளிசேர்
மன்னிய தாமரை மாமலர்பூத் தம்மலர்மேல்
முன்னந் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும்
முன்னம் படைத்தனன் நான்மறைகள்"

என்பர் திருமங்கை மன்னர். பெரிய திருமடல் அடியனேன் உரை நூல் பக்கம் 67 காண்க.

வேதங்கள் யாவும் இவனுள் அடங்கும், அவனே வேதமானவன் என்றபடி. "புரிநூலனை" என்றது வெண்மையான முப்புரிநூலை மார்பில் தரித்தவன். "விண்ணோர் பரவ நின்றநாதனை" என்றதை,

"வேதமுதல்வன் விளங்கு புரிநூலன்
பாதம் பரவிப் பலரும் பணிந்தேத்தி"

என்றனர் திருமங்கை மன்னர். பெரிய திருமொழி 8.4.2. விண்ணோர்கள் அவன் துதிபாடியிருப்பதையே 'பரவ நின்றநாதனை' என்றனர். அவன் பிரளயகாலத்து

உலகெலாம் விழுங்கி வயிற்றினுள் அடிக்கிக் காத்தவனாதலின். "ஞாலம் விழுங்கும் அநாதனை" என்றனர். "அநாதன்" என்றது தனக்குமுன் யாருமில்லாதவன் முழுமுதற் கடவுள் என்பதாம். "ஞாலம் தத்தும் பாதன்" என்றது உலகெலாம் அளந்து எடுத்துக் கொண்ட பாதங்களையுடைய என்பதாம். "பால் கடல்மேல் பள்ளி கொண்டு அருளும் சீதனை" என்றது திருப்பாற்கடலில் திருவநந்தாழ்வானாகிய படுக்கையில் கள்ள நித்திரை அல்லது யோக நித்திரை கொண்டருளுகிற குளிர் தன்மையனை எம்பிரானை நித்தம் தொழுதேத்தி நிற்பவர்கள்; "விண் உளாரிலும் சீரியரே" விண்ணுலகிலுள்ள தேவர்களிலும் சிறந்தவர்கள் என்பதாம்.

அரும்பதவுரை : வேதன் - வேதங்களுக்குத் தலைவன். வேதங்களானவன். புரிநூலனை-வெண்மையான முப்புரிநூலையுடையவன். பரவ - துதிக்க. நாதன் - கடவுள். தலைவன் அநாதன் - யாவர்க்கும் முதல்வன். அவனுக்கு முன் யாருமில்லாதவன். தத்தும் - அளக்கும். தாண்டும். சீதனை - அருளுடையவன். அந்தணன் என்பதில் தணன் எனப்புழி. சீறியர் - சிறந்தவர். "உளாரிலும்" என்றதால் 'சீரியரே' என்றதின் ஏகாரம் தேற்றம்.

(பிரிவாற்றாத தலைவி
மாலைப் பொழுது கண்டு இரங்கல்)

*சீரரசாண்டு தன்செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த*
*பாரரசொத்து மறைந்தது நாயிறு பாரளந்த*
*பேரரசேயெம் விசும்பரசே யெம்மைநீத்து வஞ்சித்*
*தோரரசேயருளா யிருளாய் வந்துறுகின்றதே.* 80

விளக்கவுரை : நீதி தவறாத செங்கோல் செலுத்திச் சிறப்பாக அரசாண்டு, பின்பு இறந்து மறைந்தொழிந்த

உலகம் முழுதுக்கு ஓர் அரசு போன்ற ஞாயிறு மறைந்தது உலகளந்த பேரரசே! பரமபதத்து நாயக னான எம் அரசே! எம்மைத் தனியே விட்டுப் பிரிந்து வஞ்சனை செய்த ஒப்பற்ற நாதனே! இருள் முன்னை விட மிகக் கொடியதாக வந்து வாட்டுகின்றது. இத் துன்பத்தினின்றும் நான் விடுதலை பெறக் கருணை செய்வாய்.

திறனாய்வு: மாலைப் பொழுது வரவு கண்டு அஞ்சித் தன்னைப் பிரிந்த தலைவனை நோக்கிக் கூறிய பாசுரம். தலைவனை உருவெளிப்பாட்டினால் கண்ணெதிரில் கண்டு கூறினமையாகவும் கொள்ள லாம். கதிரவன் மறைவதைப் பகல் முழுவதும் சிறப்பாக அரசாண்டு மறைந்ததை, “சீர் அரசு ஆண்டு, தன் செங்கோல் சிலநாள் செலீஇ கழிந்த பார் அரசு ஒத்து நாயிறு மறைந்தது” என்கிறார். சிறப்பாக ஆட்சியை நடாத்திச் சிலநாட்களே செங்கோல் செலுத்திய அரசு போன்று ஞாயிறு பகல் முழுதும் உலகை ஆண்டு மறைந்தது என்பதாம்.

“பொருவிலாழி யொன் றுருட்டியெப்
புவனமும் விளக்கு
மிரவி மன்னவ னிறத்தலு
மெதிர்ந்த புன்மாலை”

என்பது நைடதம். உரைநூல் பக்கம் 252 காண்க. இரவிமன்னன் எனக் கதிரவனைக் குறிப்பிட்டிருத்தல் காண்க. உலகை ஆளும் அரசன் போன்று சிறப்பாக இருந்த கதிரவன் மறைந்தது, சீர் அரசு மறைந்தது, இனி எம்நிலை என்னவோ என அஞ்சும் தலைவி நடுக்குற்றுத் தன் தலைவனைப் “பார் அளந்த பேரரசே! எம்விசுபரசே! எம்மை நீத்து வஞ்சித்த ஓர் அரசே! என விளிக்கிறார்.

ஓ உலகளந்த பெருமானே! எம்பரமபதத்து நாயகனே! என்னை இவ்வாறு தனியேயிருக்க வஞ்சனை செய்து பிரிந்த ஒப்பற்றநாதனே! "இருள் ஆயவந்து உறுகின்றது" என்கிறாள். இருள் மிகுதியாக வந்து என்னை பயமுறுத்துகிறது, வருத்துகிறது. அருளாய் என்கிறார். அருள் செய்து என்னை ஆட்கொள்வாய் என்பதாம்.

அரும்பதவுரை : சீர் - சிறப்பு. செலீஇ - செலுத்தி- சொல்லிசை அளபெடை. கழிந்த - பிறகு. நாயிறு - ஞாயிறு. விசும்பரசு - பரமபதத்துத் தலைவன். நீத்து - நீங்கி. உறுகின்றது - உறுத்துகின்றது. வருத்துகின்றது. ஏகாரம் அசையெனத்தள்ளுக.

(வெறிவிலக்கத் தொடங்கிய தோழி இரங்கல்)

உறுகின்றகன்மங்கண் மேலனவோர்ப்பிலரா
யிவளைப்
பெறுகின்ற தாயர்மெய்ந்நொந்து பெறார் கொறு ழாய்
குழல்வாய்த்
துறுகின்றிலர் தொல்லை வேங்கட மாட்டவுஞ்
சூழ்கின்றில
ரிறுகின்ற தாலிவளாகமெல்லா விரியெரிகொள்ளவே. 81

விளக்கவுரை : இவளுக்கு ஏற்பட்டிருக்கிற நோயின் தன்மையையும் அதன் காரணத்தையும் ஓர்ந்து காணாதவர்களாய், அறியாமையால் இவளது தாய்மார்கள் தொடர்ந்து செய்யும் வெறியாட்டம் முதலியன மேல் மேலும் அதிகரிக்கிறது. இவளைப் பெற்ற தாயார் பிரசவ வேதனை எதுவுமின்றிப் பெற்றெடுத்தாளோ? எம்பெருமான் திருத்துழாயை இவள் கூந்தலில் சூட்டவில்லை. தொன்று தொட்டு என்று மிருக்கும் திருவேங்கடமலையில் இவளைக் கொண்டு

போய்ச் சேர்க்க வேண்டும் என்றும் எண்ணவில்லை இவளது உடலானது மென்மையான உயிரைக் காமத் தீ கவர்ந்து கொள்ளும்படி இருக்கிறது.

திறனாய்வு: தலைமகள் தன் தலை மகனாகிய திருமாலின் மேல் எழுந்த வேட்கையினால் உடல் மெலிந்து வாடுவது கண்ட செவிலியர் அவளுக்கு முருகக் கடவுளின் ஆவேசம் புகுந்ததெனத் தவறாக எண்ணி, அதற்குப் பரிகாரமாக ஆடுமுதலியன பலி கொடுத்துக், கள், இறைச்சி முதலியன தூவியும் கருஞ் சோறு செஞ்சோறு படைத்தும் அவள் நோயைப் போக்க முயல்கின்றனர். தான் காதலித்த தலை மகனுக்கு ஏற்காத இவற்றால் தலைமகளின் நோய் மிகுதியாகி மேலும் மெலிந்து காணப்படுகிறாள். இந்நிலை கண்ட தோழி தாய்மார்கட்கு முன்னிலைப் படர்க்கையாகக் கூறியது இப்பாசுரம்.

"இதுகாண்மின் அன்னைமீர்! இக்கட்டுவச்சி
சொற் கொண்டு நீர்
எதுவானும் செய்து அங்கோர் கள்ளும்
இறைச்சியும் தூவேன் மின்"

என்றும்,

"மருந்தாகுமென்று ஆங்கோர் மாயவலவை
சொற் கொண்டு நீர்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும்
களனிழைத்தென்பயன்

என்றும், திருவாய் மொழியில் 4-6-3, 4. கூறியிருப்பதும். நினைவில் கொள்க.

"உறுகின்ற கன்மங்கள் மேலன ஓரப்பு இலராய்" என்றது, செய்ய வேண்டியவைகளை ஒன்றன்பின் ஒன்றாகச் செய்வதறியாதவர்களாய் அல்லது ஆராயாத வர்களாய் இருந்தனர் என்பதாம். தலைமகளின் மனத்தை ஆட்கொண்டவன் யார்? அதற்குப் பரிகாரம் என்ன எப்படியெப்படிச் செய்ய வேண்டும் என்பதை அறியாதவர்கள் என்பதாம். அதனால் "இவளைப் பெறுகின்ற தாயர் மெய்நொந்து பெறார்கொல்"

அதாவது இவளைப் பெற்றதாய் உடல் வருந்திப் பெற்றெடுக்க வில்லையோ எனும் ஐயப்பாட்டை எழுப்புகின்றனர். இவர்கள், "துழாய் குழல்வாய் துறுகின்றிலர், தொல்லை வேங்கடம் ஆட்டவும் சூழ்கின்றிலர்" என்கிறார். தலைவிக்கு இந்நிலையில் வேண்டியது எம்பெருமான் திருமார்பணிந்த திருத் துழாய். அதனைக் கொணர்ந்து இவளின் கூந்தலில் சூட்டுகின்றாரில்லை. தொன்மை மிகு திருவேங்கடம் கொண்டு போய் இவளைச் சேர்ப்பித்தற்கு சிந்திப்பாருமில்லை, மாறாக வேறு வேண்டாதவனவற்றையெல்லாம் செய்கின்றனர் என்றபடி. ஆதலின் "இவள் ஆகம் மெல் ஆவி எரி கொள்ள இறுக்கின்றது." என்கிறார். இவளது உடம்பு மென்மையான உயிரைக் காமத்தீ கவர்ந்து கொள்ளும் நிலையை அடைய இருக்கின்றது. சாவை நெருங்கிக் கொண்டிருக்கிறாள் என்றபடி.

அரும்பதவுரை: ஓர்ப்பு - ஆய்ந்து பார்த்தல், தெளிவு, நினைவு, ஓர்பு - ஆராய்தல். உறுகின்ற - பொருந்துதல், நன்மையாதல், கன்மங்கள் - செயல்கள் கர்மங்கள் என்பதன் திரிபு. மேலன - அடுத்துச் செய்ய வேண்டியவன. பெறுகின்ற - பெற்றெடுக்கின்ற. மெய்நொந்து - பிரசவ வலி வந்து. தொல்லை. தொன்மை, பழமை. ஆட்ட - சேர்க்க. சூழ்கின்றிலர் - சேர்ந்து ஆலோசித்தாரில்லை. ஆகம் - உடம்பு. ஆவி - உயிர். விரகத்தீ - காமத்தீ. இறுகின்றது- சுருங்குகின்றது. சாவு விரைகின்றது நெருங்குகின்றது.

(உருவெளிப்பாடுகண்ட தலைவி தலைவன்
கண்ணழகுக்கு இரங்கல்)

எரிகொள் செஞ்ஞாயிறி ரண்டுடனே யுதயம்
மலைவாய்
விரிகின்ற வண்ணத்தவெம் பெருமான் கண்கள்
மீண்டவற்று

ளெரிகொள் செந்தீ வீழசுரரைப்போல வெம்போலி
யர்க்கும்
விரிவசொல்லீரிது வோவைய முற்றும் விளரியதே. 82

விளக்கவுரை : எரிவீசும் ஞாயிறு இரண்டு ஒருங்கே உதயமலையில் தோன்றி விளங்கும் தன்மை போன்று எம்பெருமானது திருக்கண்கள். அவற்றுள் ஒளியைப் பாய்ச்சித் தோன்றுகின்ற சிவந்த தீயில் அடைக்கலம் புகவேறு இடமில்லாமல் வந்து விழுந்து இறக்கும் அசுரர்களைப் போன்று, மெல்லியளான என் போன்றவர்களுக்கும் அதனை விரிவுபடுத்துகிறது. எம் பெருமான் உலகெலாம் காத்துச் செழித்தோங்கச் செய் யும் தன்மை இதுதானோ? சொல்லுவீர்.

திறனாய்வு : உருவெளித்தோற்றத்தில் தலைவ னைக் கண்ட தலைவி, தலைவனின் கண்ணழகை இரு செஞ்சூரியனுக்கு உருவகப்படுத்திக் கூறுகிறார். கிழக்கு வானில் இரு சூரியன்கள் ஒரே நேரத்தில் எழுந்தால் எப்படியிருக்கும்? எண்ணிப்பார்க்க இயலாத ஒரு பெருங்காட்சி. கற்பனைக்கு அடங்காத அர்ப்புதக் காட்சி. இதனை இங்கு ஆழ்வார் அமைத்துக் காட்டு கிறார். ''எரிகொள் செம் ஞாயிறு இரண்டு உடனே உதயம் மலைவாய்'' என்கிறார். காலைக் கதிரவன் செம்மண் குழம்பு பூசி ஒளி பெற்றது போன்று தோன்று மாதலின் ''எரிகொள் செம்ஞாயிறு'' என்றனர். ''இரண்டு உடனே'' என்றது இரண்டு கதிரவன்கள் உடன் சேர்ந்து, ஒன்று சேர்ந்து ஒரே நேரத்தில் என்ப தாம். ''உதயமலைவாய்'' என்றது. கதிரவன் உதய கிரியிலிருந்து எழுபவன் என்பதாம். உதயம் என்பது உதித்தல் என்பதன் திரிபு. பிறத்தல் என்பது. உதயன் என்ற சொல்லுக்குக் கதிரவன் என்று பொருள் ''விரிகின்ற வண்ணத்த எம்பெருமான் கண்

கள்" என்று சிறப்பிக்கிறார். செம்ஞாயிறு இரண்டு உடன் எழுகின்றன. அவை இரண்டும் ஒளியைப் பரப்பி விரிகின்ற அழகைச் சொற்களால் அடக்க இயலுமோ? ஆதலின் "விரிகின்ற வண்ணத்த" என்று சொல்லில் அடங்காத ஒன்றை வண்ணத்த என்ற சொல்லால் நமக்கு விளங்க வைக்கிறார். "அவற்றுள்" என்றது அவ்விரு கதிரவன்களான கண்களிலே, "எரிகொள் செம்தீ மீண்டுவீழ் அசுரரைப்போல்" என்றது, சுவாலை விட்டு எரிந்து கொண்டிருக்கும் செந்தீப்பிழம்பில், செல்லவழியில்லாது மீண்டும் வந்து விழும் அசுரரைப் போல் என்பதாம். "எம்போலியர்க்கும் விரிவ வையம் முற்றும் விளரியது இதுவோ சொல்லீர்" என்றது, எம்போன்றவர்கட்கு அதாவது அசுரர் செம்தீயில் வீழ்தல்போல், எம்போன்ற எலியோர்களுக்கும் அந்தத் தீ பரவுகின்றன. உலகம் முழுவதையும் அன்புடன் செழிக்கச் செய்யும் எம் பெருமான் தன்மை இதுதானோ? சொல்லுங்கள் என்பதாம். உலகைக் காத்து இரட்சிக்கும் தன்மை இதுதானா? சொல்வீர் என்பதாம்.

அரும்பதவுரை : எரிகொள் - எரித்துக்கொண்டு வான வீதியில் செல்பவன். ஞாயிறு இரண்டு - இரண்டு சூரியன்கள். உடனே - உடன் சேர்ந்து. விரிகின்ற - தொன்றிப் பிரகாசிக்கும். வண்ணத்த - தன்மை. எம்போலியர் - எம்போன்றவர். விரிவ - பரவ. விளரியது - மிக்க விருப்பம்.

(பிரிவாற்றாத தலைவியின் தளர்ச்சிகண்டு
தோழி இரங்கல்)

விளரிக்குரலன்றின் மென்பெடை மேகின்ற
முன்றிற் பெண்ணை
முளரிக் குரம்பையிதுவிதுவாக முகில் வண்ணன்பேர்

கிளரிக் கிளரிப்பிதற்று மெல்லாவியுநைவு மெல்லாந்
தளரிற் கொலோ வறியேனுய்யலாவதித்
தையலுக்கே. 83

விளக்கவுரை : விளரி இராகம் பாடும் அன்றிற் பறவைகள், மென்மையான தனது பேடைகளுடன் விரும்பித் தழுவுகின்ற அவற்றின் இடமான பனை மரத்தில் முட்களைக் கொண்டு அமைக்கப்பட்ட கூடு இப்படியாக எங்கும் இருக்க அவற்றின் ஒலியை எப்பொழுதும் கேட்டுக் காதல் நோய்வாட்டிக் கொண்டிருக்கக், காளமேகம் போன்ற திருமேனியை யுடைய நம் தலைவனது பெயரை மேலும் மேலும் கூறிப் பிதற்றிக் கிடக்கும் இவளது மெலிந்து போன உயிரும் நைந்துபோன உடம்பும் என்னும் இவை யாவும், தளர்ந்ததோ? இவளுக்கு உய்வு அறியேன்.

திறனாய்வு : ஆணும் பெண்ணும் கூடிவாழ்தலுக்கு அன்றில் பறவையை உதாரணமாகக் கூறுவர் புலவர். இவை இணைபிரியாதிருப்பவை. ஒன்றையொன்று பிரிந்திட நேரிட்டால் அத்துயரத்தைத் தாங்க மாட்டாமல் ஓரிருமுறை கத்திக் கூவியும் தன்துணை வந்து கூட்டாவிட்டால் உடனே இறந்துபடும். இதனை வடநூலார் கிரௌஞ்சிதப்பரவை என்பர். தமிழில் குருகு எனவும் வேறு பெயர் உண்டென்பர். எனினும் அன்றில் எனும் பெயரே பொதுவாக இலக்கிய நூல்களில் அதிக இடம் பெற்றுள்ளது காண்கிறோம். அன்றில் பறவையின் குரல் காமத் தீயை வளர்க்கும் என்பர். இது பொதுவாகப் பனை மரத்தையே தன் இருப்பிடமாகக் கொள்ளும். இதன் ஒலி ஏழிசைகளில் ஒன்றான விளரிபோன்று இருக்கு மாதலின் ''விளரிக்குரலன்றின் மென் பெடை' என்றனர் ''மென் பெடை'' என்றது பிரிவுபொறா

மென்மையான பெண் அன்றில் என்பதாம். "மேகின்ற முன்றிற் பெண்ணை முளரிகுரம்பை" என்று அன்றில் பறவைகள் பனைமரத்தின்மேல் முட்களால் அமைக்கப் பட்ட கூட்டிலிருந்து கொண்டு புணர்ந்து இன்புறு மிடமான என்கிறார்.

"முன்றில் பெண்ணைமேல் முளரிந் கூட்டகத்து
அன்றிலின் குரல் அடரும் என்னையே"

என்றும்,

"முன்றில் தனிநின்ற பெண்ணைமேல் கிடந்தீர்கின்ற
அன்றிலின் கூட்டைப் பிரிக்கநிற்பவர்
ஆர்கொலோ?"

என்றும் பெரிய திருமொழியில் 11-1-6; 11-2-1 வருதும்,

"...............பெண்ணைமேல்
பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு
உன்னி யுடலுருகி நையாதார்......"

என்று பெரியதிருமடலில் வருவதும் காண்க.

"மேகின்ற முன்றில் பெண்ணை முளரிகுரம்பை" என்றது தழுவுதற்கிடமான முன்வாயிலில் உள்ள பனை மரத்தின் மீது தாமரையின் தண்டுகளால் அமைக்கப் பட்ட கூடு என்பதாம். "முளரிகுரம்பை"யென்றது முட்செடி, குச்சிகள் முதலானவற்றால் அமைத்த கூடு. குரம்மையென்பது குடிசை, பறவைக்கூடு என்பது பொருள். "இது இது ஆக" என்றது இப்படி இப்படியி ருக்க, அன்றில் முன்றில் இருந்து கத்த என்றபடி "முகில் வண்ணன் பேர்கிளரி கிளரி பிதற்றும்" என்றது காள மேகன் தன் தலைவனது பெயரையே சதா வருந்தி யழைத்து வாய் பிதற்றியிருக்கும் என்பதால். இவளது "மெல் ஆவியும் நைவும் எல்லாம் தளரின் கொலோ

இதையறுக்கு உய்யல் ஆவது அறியேன்'' என்று தோழி கூறுகிறார். ''மெல்ஆவியும்'' என்றது ஒட்டிக் கொண்டிருக்கும் இவள் மேன்மையான உயிரும் நைவும்'' அதாவது நைந்து போகும். ''எல்லாம் தளிரின் கொலோ'' என்றது எல்லாம் தளர்ந்து போனதோ என்பதாம். இவள் இதையலுக்கு உய்யல் ஆவது அறியேன் அதாவது இவள் ஈடேறுவதை அறியேன் என்பதாம்.

அரும்பவுரை : விளரி - விளரி இராகம். பெடை - பெண் பறவை. மேகின்ற - தழுவுகின்ற, மேய்கின்ற முன்றில் - இல்முன், முன்புறத்தில். பெண்ணை - பனை முளரி - முள் குச்சி. முட்செடி. குரம்பை - குடம்பை கூடு. நைவும் - நையும். தளிரின் - தளரும். உய்யல் - ஈடேறுவது. தையல் - அழகு, பெண்.

(தலைவி தலைவனைக் காண விழைதல்)

தையனல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளு
மையநல்லார்கள் குழிய விழவினுமங்கங்கெல்லாங்
கையபொன்னாழிவெண் சங்கொடுங்
காண்பானவாவுவனான்
மையவண்ணா மணியே முத்தமே யென்றவன்
மாணிக்கமே. 84

விளக்கவுரை : கருமை நிறக் கண்ணா! மணியே! முத்தே! என் மாணிக்கமே! அழகிய மகளிர் குழுமிய கூட்டத்தினுள்ளும், சிறந்த ஆடவர்கள் திரண்ட திருவிழாவிலாயினும், இன்னும் அப்படிப்பட்ட இடங் களிலெல்லாம் உன் கையிலுள்ள பொன்னிறமான சக்கரத்துடனும், வெண்ணிறமான சங்குடனும் நான் உன்னைக்காண விரும்புகின்றேன்,

திறனாய்வு : தலைவி தலைவனைத் தணித்துக் காண இயலா நிலையில் நன்மங்கையர் கூட்டத்திலேனும், நல்லாடவர் கூட்டத்திலேனும் காண விழைவதாகக் கூறும் பாசுரம். பொன் ஆழியும் வெண்சங்கும் கையுமாகக் காணத் துடிக்கும் தலைவியின் வேட்கை இங்கு மிகச் சிறப்பாகக் கூறப்படுகிறது.

> "வெள்ளை விளிசங்கு வெஞ்சுடர்த் திருச்சக்கரம் ஏந்துகையன்
> உள்ள விடம் வினவில் உமக்கு இறைவம்மின் சுவடுரைக்கேன்"

என்பதற்கொப்ப அமைந்தது. பெரியாழ்வார் திருமொழி 4-1-7, பெரியாழ்வார் மேற்கூறிய பாசுரத்திற்கு பதிலுரைத்ததுபோல்,

> "பல்லாயிரம் பெருந்தேவமாரொடு பௌவம் எறிதுவரை
> எல்லாரும் சூழச் சிங்காதனத்தே இருந்தானைக் கண்டாருளர்"

என்பர். பெரியாழ்வார் திருமொழி 4-1-6: நம்மாள் தரும் நாயகியாய், "மையவண்ணா! மணியே! முத்தமே! என்றன் மாணிக்கமே! என்று தலைவனைப் பிரார்த்திக்கிறார். "மையவண்ணன்" கருமை நிறத்தவன். "மணியே" என்றது நீலமணி போன்றவனே என்பது. "முத்தமே" என்றது முத்துக்கள் போன்று தெளிவுடையவன். காட்சிக்கு எளியன் என்றபடி. "என்தன் மாணிக்கமே" என்றது கிடைத்தற்கரிய மாணிக்கம் அது எனக்கே உரியது என்பதாகக் கூறியது என்பதாம். உன்னை எப்படியெல்லாம் வேண்டியும் நீ எழுந்தருளுவாயில்லை. இருப்பது இந்த உயிர் ஒன்று மட்டுமே. இந்த உயிர் உடலை விட்டு நீங்கும் முன் உன்னைத் "தையல் நல்லார்கள்

குழாங்கள் குழிய குழுவினுள்ளும்'' என்று மகளிர் கூட்டத்தில் தலைவனைக் காணவிழைகிறார். கண்ணன் கோபிகளுடன் சேர்ந்து கூத்தடிப்பவன் என்பது தலைவிக்குத் தெரியுமாதலின், 'கண்ணா' நீ என்னைத் தேடிவர மாட்டாய். நான் உன்னைத் தேடி வருகிறேன். நீ கோபியருடன் கூத்தடித்துக் கொண் டிருப்பாய் என்பதை நன்கு அறிவேன்' என்பதாகக் கூறுவதாக அமைந்தது இப்பகுதி. கோபியர்கள் யாவரும் நல்லவர்களாதலின் ''தையல் நல்லார்கள்'' என்றனர். கண்ணன் மங்கையர் சூழ இருப்பான் அல்லது மாமன்னர் சூழ இருப்பான் என்பது தலைவிக்குத் தெரியுமாதலின், ''ஐய நல்லார்கள் குழிய விழவினும்'' என்றனர். ஐய நல்லார்கள்'' என்றது சிறந்த ஆடவர், அரசர்குழாம்.

''காந்தன் முகிழ்விரற் சீதைக்காகிக் கடுஞ்சிலை
சென்றிறுக்க
வேந்தர் தலைவன் சனகராசன்றன் வேள்வியிற்
கண்டாருளர்''

என்றனர் பெரியாழ்வார். திருமொழி 4.1.2. ''குழிய விழவினும்'' என்றது குழுமியிருந்த வேள்வியிலும் என்பதாம். ''அங்கெங்கெல்லாம்'' என்றது அந்தந்த இடங்களிலெல்லாம், ''கைய பொன்னாழி வெண் சங்கொடும் காண்பான் அவாவுவன் நான்'' என்றனர். பொன்னாலான சக்ராயுதமும் வெண்மையான சங்கும் கையிலேந்தி நிற்கக் காண ஆவலுடையவளாக இருக் கின்றேன் என்பதாம்.

அரும்பதவுரை : தையல் நல்லார் - நல்தையலார். நல்அழகு, அழகியருக்கானது. குழாம் - கூட்டம். குழிய - குழுவிய தழிய, தழுவுய எனப்புழி. ஐய - ஐயன்மார். ஆடவர். விழவினும்- விழாவினும். வேள்வி

யினும். கையபொன் ஆழி - பொன் ஆழி கையன். ஆழி- ஆயுதம். காண்பான் - காணுதற்கு. அவாவுதல் - விரும்புதல். மைய - மை போன்ற, கரிய.

(மாலைப் பொழுது கண்டு வருந்திய
தலைவி இரங்கல்)

மாணிக்கங் கொண்டு குரங்கெறிவொத் திருளோடு
முட்டி
யாணிப் பொன்னன்ன சுடர்படுமாலை யுலகளந்த
மாணிக்கமேயென் மரதகமே மற்றொப்பாரையில்லா
வாணிப் பொன்னேயடியேனடியா வியடைக்கலமே
85

விளக்கவுரை : உலகளந்த மாணிக்கமே! என் மரகதமே! மற்று ஒப்பாரை இல்லா ஆணிப் பொன்னே! மாணிக்கம் கொண்டு குரங்கு எறிந்தது போன்று ஆணி பொன் போன்ற சுடர் இருளொடு முட்டி மறையப் பெற்ற மாலைப் பொழுதிலே அடியேன் சொந்த உயிர் உன்னிடம் அடைக்கலமே.

திறனாய்வு : மாலைப் பொழுது காமத்தீயை மூட்டுமாதலால், அதற்கு ஆற்றாமையினால், தன் உயிரைப் பாதுகாக்க வேறு வழியில்லாத தலைமகனை வேண்டி அழைக்கும் பாசுரம். "உலகளந்த மாணிக்கமே! என் மரகதமே! மற்று ஒப்பாரை இல்லா ஆணிப் பொன்னே!" என்று அழைக்கிறார். உலகளந்த பெருமானே மாணிக்கம் போன்றவனே, மரகத ரத்தினம் போன்ற பசிய வடிவமுடையவனே, வேறு எவரையும் தனக்கு நிகர் இல்லாத ஆதி முதல்வனே! பொன் போன்றவனே! என்பதாம். "ஆணி" இங்கு முழு முதல் என்று மற்று ஒப்பாரை இல்லா என்றதால் வந்தது. யாவற்றிற்கும் ஆதாரமானவன், முதன்மை

யானவன் என்பதாம். 'மாணிக்கம் கொண்டு குரங்கு எறிவு ஒத்து'' என்றது குரங்குகையில் அகப்பட்ட மாணிக்கம் போன்று. மாணிக்கத்தைக் குரங்கிடம் போட்டது போன்று என்பதாம். ஆணி பொன் அன்னசுடர் இருளோடு முட்டிபடும் மாலை.'' என்றது மாற்றுக் குறையாத தங்கம் போன்ற கதிரவன் இருளில் விழுந்து மறைந்ததால் ஏற்பட்ட மாலைப் பொழுதிலே, என்பதாம். ''அடியேன் அடி ஆவி அடைக்கலமே'' என்றது அடிமையாகிய நான் உனக்கே உரியதான என் உயிர் அடைக்கலமே என வந்தடைந்தேன் காத்தருள வேண்டும் என்பதாம்.

அரும்பதவுரை : ஆணிப்பொன்- பத்தரை மாத்துத் தங்கம் என்பர். குறையொன்றுமில்லாத தங்கம். மரதகமே - மரகதமே. இதில் எழுத்து நிலைமாற்றம். ஆணி - ஆதாரமானவன். முதன்மையான. அடைக் கலம் - சரண். முழுமையாக ஒப்படைக்கப்படல்.

(தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கல்)

அடைக்கலத்தோங்கு கமலத்தலரயன்
சென்னியென்னு
முடைக்கலத்துண் முன்னரனுக்கு நீக்கியையாழி
சங்கம்
படைக்கலமேந்தியை வெண்ணெய்க் கன்றாய்ச்
சிவன்றாம்புகளாற்
புடைக்கலந்தானை யெம்மானையென் சொல்லிப்
புலம்புவனே 86

விளக்கவுரை : திருமாலின் நாபிக் கமலத்தில் வெளிப்பட்டு அந்தத் தாமரை இலையாகிய இடத்திலே அமர்ந்த பிரமனதுமுடை நாற்றமுடைய கபால ஓட்டில் உணவு இரந்த சிவனுக்கு முன் ஒரு காலத்தில் துன்பம்

நீக்கியருளினவனும், சங்கையும் சக்கரத்தையும் ஆயுத மாக ஏந்தியவனும் வெண்ணெய் உண்டதற்காக அந்நாளில் அசோதை வலியக் கயிறு கொண்டு அடிக்க வருந்தியவனும் எமது தலைவனுமான திருமாலைக் குறித்து என்ன சொல்லி அழுவேன்?

திறனாய்வு : இப்பாசுரத்தில் நான்முகனின் தோற் றத்தையும், சிவபெருமான் கபாலம் ஏந்தியதும், அசோதை கண்ணபிரானை சிறு தாம்புக் கயிற்றால் கட்டியதும் சிறப்பாகக் கூறப்படுகிறது. பிரமன், நாராயணன் உந்தி கமலத்துதித்தவன் இதனை "அடை கலத்து அலர் அயன்" என்றனர். திருமாலின் வயிறு இலைபோன்று இருப்பதையும் அவன் நாபியை யும் "அடை கலத்து" என்கிறார். அவன் நாபியில் தோன்றிய தாமரை ஓங்கி வளர்ந்த தண்டில் மலர்ந்த கமலத்தில் தோன்றியவன் அயன் என்பதால் "ஓங்கு கமலத்து அலர் அயன்" என்றனர்.

அலர்தல் என்பது மலர்தல் போன்று தோன்றி யவன் என்பதாகும். அவன் தோன்றிய பொழுது ஐந்து தலைகளுடன் தோன்றினான் என்று கண்ட சிவபெருமான் தன்னைப் போலவே ஐந்து தலைகள் இருப்பது பார்வதி பார்த்து மயங்குதற்குக் காரணமாக இருப்பது கண்டு பிரமன் தலைகளில் ஒன்றைக் கிள்ள, கிள்ளப்பட்ட தலை சிவன் கையிலேயே ஒட்டிக் கொண்டது. ஒட்டிக் கொண்ட தலையை நீக்க தேவர் களும் முனிவர்களும் ஒருங்குகூடி இப்பாவம் தொலைய சிவன் அந்தக் கபாலத்தில் பிச்சையெடுக்க வேண்டு மென்றனர். அவ்வாறே பிச்சையெடுத்தும் கபாலம் நிறையாதிருக்க சிவபெருமான் மகாவிஷ்ணுவிடம் பிச்சையேற்ற பொழுது உடனே அது நிறைந்து கபால மும் கைவிட்டகன்றது என்பர். இதனையே "சென்னி யென்னும் முடைகலத்து ஊண் முன் அரனுக்கு

நீக்கியை'' என்றனர். ''முடை கலம்'' என்பது புலால் நாற்றமுடைய பாத்திரம் என்பதாம்.

> பண்டங் கறுத்தொர் கையுடை யான்படைத்தான் தலையை
> உண்டங் கறுத்ததும் ஊரொடு நாடவை தானறியும்''

என்பர் திருநாவுக்கரசர். தேவாரம் நான்காம் திருமுறை 93-3. ''உண்முன் அரனுக்கு நீக்கியை'' என்றது உணவளித்து முன்பொரு காலத்தில் சிவனுக்கு நேர்ந்த பாபம் நீக்கியவன் என்பதாம்.

எம்பெருமான் சக்கரப்படை முதலானவற்றை எப்பொழுதும் கையிலேந்தியே யிருப்பவனாதலின் ''ஆழி சங்கம் படைக்கலம் ஏந்தியை என்றனர். ''ஆழி சங்கம்'' எப்பொழுதும் அவன் திருக்கைகளை அலங் கரிப்பவை. ''வெண்ணெய்க்காக அன்று ஆய்ச்சி வல் தாம்புகளால் புடைக்க அலந்தானை'' என்றது வெண் ணெய் திருடியதற்காக சிறு தாம்பால் கட்டுண்டு நொந்தவன் போல் இருந்தானை என்பதாம்.

> ''கண்ணிநுண்சிறு தாம்பினாக கட்டுண்ணப்
> பண்ணிய பெருமாயன்...''

என்றனர் மதுரகவியாழ்வார். கண்ணிநுண் சிறுதாம்பு.

> ''சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை
> வேரார்நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு
> நாரா ருறியேற்றி நன்கமைய வைத்தனைப்
> போரார் வேற்கண் மடவாள் போந்தனையும் பொய்யு றக்கம்
> ஓரா தவன்போல் உறங்கி யறிவுற்றுத்
> தாரார் தடந்தோள்க ளுள்ளளவுங் கைநீட்டி
> ஆராத வெண்ணெய் விழுங்கி—அருகிருந்த

மோரார் குடமுருட்டி முன்கிடந்த தானத்தே
ஓராதவன்போல் கிடந்தானைக் கண்டவளும்
வாராத்தான் வைத்தது காணாள்—வயிறடித்திங்கு
ஆரார்புகுதுவர் ரைய ரிவரல்லால்
நீரா மிதுசெய்தீ ரென்றோர் நெடுங்கயிற்றால்
ஊரார்க ளெல்லாரு ங்காண வுரலோடே
தீரா வெகுளியனாய்ச் சிக்கன ஆர்த்தடிப்ப
ஆரா வயிற்றினோ டாற்றாதான்...''

என்று திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் கூறி யிருத்தலை இங்கு நினைவில் கொள்க. அடியனேன் உரை நூல் பக்கம் 18-21 கண்டு பயில்வோருக்கு இன்பம் பெருகும்.

''வன்தாம்புகளால் புடைக்க'' என்றது ''கண்ணி நுண் சிறு தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய'' என்ப தாம், ''அலந்தானை'' என்றது ''பெருமாயன்'' என்ப தாம். துன்பப் பட்டவன் போல் நடித்தானை என்ப தால் 'பெருமாயன்' என்றனர் என்க. ''எம்மானை என் சொல்லி புலம்புவேன், இவன் செய்த மாயங் களையெல்லாம் பார்த்தால் என் சொல்லிப் புலம்பியும் யாது பயன் என்பதாம்.

அரும்பதவுரை : அடை - இலை. கலம் - இடம். அலர் - மலர் தோன்றுதல். அயன் - பிரமன். சென்னி - தலை. முடை - மாமிச நாற்றம். கலம் - பாத்திரம். ஊண் - உணவு. அரன் - சிவன் அழிப்பவன். ஆழி - சக்ராயுதம். புடைக்க - அடிக்க. அலந்தான் - வருந்தியது போன்றிருந்தான். எம்மான் - தலைவன்.

அன்றிக்கும் ஆழிக்கும் ஆற்றாத தலைவிக்குத்
தோழி இரங்கல்)

புலம்புங்கனகுரற் போழ் வாயவன்றிலும் பூங்கழிபாய்ந்
தலம்புங்கனகுரற் சூழ் திரையாழியு மாங்கவை நின்

வலம்புள்ளது நலம்பாடுமிது குற்றமாக வையஞ்
சிலம்பும்படி செய்வதே திருமாலித்
திருவினையே. 87

விளக்கவுரை : திருமகளிடம் மோக மயக்க முடையவனே! பிரிவாற்றாமையால் புலம்பும் கனத்த குரலையுடைய, அகன்ற வாயையுடைய அன்றில் பறவையும், அழகிய கழியிலுள்ளே புகுந்து அலைகின்ற கனத்த குரலையுடைய சூழ்ந்த அலைகளையுடைய கடலுமாகிய அவ்விடத்துள்ள பொருட்கள் உன் வலிமையான பறவையினது நலம் பாடுவதையே குற்றமாகக் கொண்டு உலகத்தார் முறையிடும்படி திருமகள் பேன்ற இப்பெண்ணைத் துன்புறுத்துதல் தகுதியோ?

திறனாய்வு : அன்றில் பறவைகளின் இயல்பும் அவை எழுப்பும் குரல் ஒலியால் தலைவனைப் பிரிந்தோர் படும் துன்பங்களைப் பற்றி எண்பத்து மூன்றாம் பாசுரத்தில் விரிவாகக் கூறப்பட்டது. இப்பாசுரத்தில் அன்றிலுடன் கடல் ஒலியும் தலைவியை வருத்துவது கூறப்படுகிறது. "திருமால்" என்று திருமகளிடத்து எம்பெருமானுக்குள்ள மோக இயல்பைக் குறிப்பிடுவதாகத் திருமகளிடத்து மோகமுடைய என்பிரானே! "புலம்பும் கனகுரல் போழ்வாய் அன்றியும்" என்று அன்றில் பறவை எழுப்பும் குரல் ஒலியை, கனத்த குரலை யுடைய பிளந்த வாயையுடைய அன்றிற் பறவையும் என்கிறார். கடலின் ஒலியை பூகழி பாய்ந்து அலம்பும் கனகுரல் சூழ்திரை ஆழியும்" என்கிறார். அதாவது அழகிய கழியினுள்ளே பாய்ந்து பாய்ந்து அலைமோதுகிற பெருமை மிக்க குரல் ஓசையுடைய நிலப்பரப்பைச் சூழ்ந்த அலைகளையுடைய கடலுமாகிய என்பதாம். "ஆங்கு அவை" என்றது ஆங்காங்குள்ள பொருட்கள். "நின் வலம் புள்ளது

நலம் பாடும் இது குற்றம் ஆக'' என்றது உனது வலிமைமிக்க கருடாழ்வாரின் நன்மையை இவள் எடுத்துப் பாடுவதே குற்றமாகக் கொண்டு, ''வையம் சிலம்பும்படி இ திருவினை செய்வதே'' என்கிறார். உலகத்தார் இதுபற்றி உன்னிடம் வந்து கூறும்படி, திருமகள் போன்ற சிறப்புகளுடைய இப்பெண்ணை துன்பப்படுத்துவதேன் என்றபடி. ''திருமால்'' என்று முதன் முதலில் விளித்தது திருமகளுடன் மோகம் கொண்டவன் என்பதாம். திருமகள் போன்ற குணங் களனைத்தையுமுடைய இவளிடத்து உலகம் நிந்தித்தும் அருளாமல் இருப்பதும் எங்கனே? என்ற படி. இது ஆழ்வார்கட்கும் எம்பெருமானுக்கும் உள்ள ஈடுபாட்டைப் பன்மடங்கு விரித்துரைக்கிறது.

அரும்பதவுரை : புலம்பும் - அழுது வாடும். கன குரல் - கனத்தகுரல். மிகு ஒலி. போழ்வாய் - பிளந்த வாய் அன்றில்-அன்றில் பறவை சாம்பல் நிறத்தில் வாய் அகன்று சற்று வெண்மையுடன் பனை மரங்களிலும், வேலிகளிலும் காணப்படும். பூகழி - அழகிய கழி. மூங்கில் எனலாம். கனகுரல் - பெருமை மிக்க ஒலி. அலம்பும் - அலைபாயும். சூழ்திரை - நிலப்பரப்பைச் சூழ்ந்த அலைகள். ஆழி - கடல். புள் - கருடப்பறவை. திரு - திருமகள்.

(போலிகண்டு அழிகிற தலைவி
ஆற்றாமைக்கு இரங்கல்)

திருமா லுருவொக்கு மேருவம் மேருவிற் செஞ்சுட
ரோன்
றிருமா றிருக்கைத் திருச்சக்கரமொக்கு மன்ன கண்டுந்

திரு மாலுருவோ டவன் சின்னமே பிதற்றா
நிற்பமதோர்
திரு மாறலைக் கொண்ட நங்கட் கெங்கே வருந்
தீவினையே 88

விளக்கவுரை - மேருமலை திருமால் உரு ஒக்கும், அம்மேருவில் செம்சுடரோன், திருமால் திருகை திருச் சக்கரம் ஒக்கும், இவை போன்ற பொலிகண்டும். திருமால் உருவொடு அவன் அடையாளத்தை அதாவது போலியைப் பேரிட்டுப் பிதற்றி நிற்பதாகிய ஒப்பற்ற திருமால் தலைக்கொண்ட நமக்கு தீவினை எங்கே வரும்?

திறனாய்வு : எம்பெருமானைக் காண வேண்டு மென்கிற பேரவாவினால் தலைவிக்குக் காண்பவை யாவும் அவனாகவே தோன்றுகிறது. மேரு திருமால் உரு ஒக்கும். அமேருவில் செம் சுடரோன் திருமால் திருகை திருசக்கரம் ஒக்கும் என்றது,மேரு மலையானது திருமகள் கணவனான தலைவனுடைய, எம்பெருமான் திருமேனியை ஒக்கும். அந்த மேரு மலையிலிருந்து எழும் கதிரவன் அத்தலைவனது கையில் உள்ள திரு ஆழியை ஒக்கும் என்பதாம். எம்பெருமானைக் காணாமல் அவனுருவைப் போன்றவையும் அவன் திருக்கைகளை அலங்கரிக்கும் ஆழியையும் கண்டும் என்பதனை, "அன்ன கண்டும்" என்றனர். போலியைக் கண்டும் "திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பது" அதாவது அவனது உருவமொடு அவனது அடையாளங்களையே அவ னாகக் கண்டு பிதற்றியிருப்பது, பெயரிட்டுக் கூவி அழைப்பது, ஓர் திருமால் தலைகொண்ட நங்கட்கு தீவினை எங்கே வரும்? என்கிறார். "ஓர் திருமால் தலைகொண்ட" என்றது ஒப்பற்ற செல்வமான வேட்கையை ஏற்றுக் கொண்டுள்ள நமக்கு பாவம்

எப்படி வந்தடையும் என்றபடி. இதனையே திருவாய் மொழியில்,

"ஒன்றியதிங்களைக் காட்டி ஒளி மணிவண்ணனே
யென்றும்
நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே! வா
வென்று கூவும்"

என்றும் (4-4-4)

"பெய்வளைக்கைகளைக் கூப்பிப் பிரான்கிடக்கும்
கடலென்னும்
செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன்
மூர்த்தி ஈதென்னும்

என்றும் (4-4-2) கூறுவதும் காண்க. இப்பத்தில் வரும் பத்துப் பாசுரங்களிலும், போலியைக்கண்டு வருந்தும் செய்தியே மலிந்து கிடக்கின்றன.

அரும்பதவுரை: மேரு - மேருமலை. செஞ்சுடரோன் - கதிரவன். அன்னகண்டும் - அத்தகைய கண்டும். சின்னம் - அடையாளம். நங்கட்கு - எங்களுக்கு.

(தலைவன் கலவிக்கு விரைகிற தலைவி இரங்கல்)

தீவினைக்காரு நஞ்சைந் நல்வினைக்கின்ன
முதத்தினைப்
பூவினைமேவிய தேவிமணாளனைப் புன்மையெள்கா
தாவினை மேய்க்கும் வல்லாயனை யன்றுலகீரடியாற்
றாவின வேற்றை யெம்மானை யெஞ்ஞான்று
தலைப்பெய்வனே. 89

விளக்கவுரை: தீவினைக்கு நஞ்சு போன்றவனை, நல்வினைக்கு இனிய அமுது போன்றவனை, பூவினை

மேவிய திருமகள் மணாளனை, சிறுமை எனக் கருதாது பசுவினை மேய்க்கும் நல் ஆயனை, அன்று உலகை ஈரடியால் அளந்த ஏற்றை எம் தலைவனை எப் பொழுது தலையாற் சென்றடைவேன்?

திறனாய்வு: எம்பெருமானின் குணநலன்களை நன்கு உணர்ந்த தலைவி, அவன் அடியார்கட்குப் பகை தீர்ப்பவனும், திருமகளின் கணவனும் அன்பர் கட்கு எளியனும் எல்லா உலகையும் ஆட்கொள்பவனு மான எம்பிரானை எப்பொழுது புணர்ந்து இன்புறுவே னென்று ஆழ்வார் விரைதல் இதன் உட்பொருள்.

"தீவினைக்கு ஆரு நஞ்சை" என்றது அடியார்க ளுடைய பாவங்களைப் பொறுத்தழிப்பதில் நஞ்சு போன்றவன். கொடிய நஞ்சு ஒருவனை மாய்த்து விடும். அதேபோன்று கொடிய துன்பத்தை உண்டு பண்ணும் தீய செயல்களை, பாவங்களை நஞ்சு போன்று போக்கிவிடுபவன் என்பதாம். "தீவினைக் காரு நஞ்சு" என்தில் "ஆரு" என, செய்யுள் விகாரத்தை ஏற்று நீட்டொலித்தது என்பதாம். 'அரு' என்றது "ஆரு" என்றானது காண்க. இதனைத் "தீவினைக்கு அரு நஞ்சு" எனப் பாட பேதம் கூறுவர். "நல் வினைக்கு இன் அமுதத்தினை" என்பது அடியார் களது இனிய நற்செய்கைகளை அழியாது காப்பதில் அமுதம் போன்றவன் என்பதாம். தீவினை அழிப் பதும் நல்வினைகளைக் காப்பதும் எம்பெருமான் செய லாதலின் அழிக்கும் கொடிய நஞ்சாக தீவினைகட்கும். தேவர் உணவாகிய அமிர்தமாக அதாவது என்றும் சாகாது நித்தியசூரிகளாய் நிலைத்திருக்க நல்வினைக்கு மானவன் என்பதாம். "பூவினை மேவிய தேவி மணாளனன்" என்று தாமரை மலரில் அமர்ந்தவளான திருமகளுக்குக் கணவனை என்றனர்.

"புன்மை எங்களது ஆவினை மேய்க்கும் வல் ஆயனை." என்றது எம்பெருமான் மாடுமேய்க்கும் சிறுவன். ஆதலின் புன்மை என்களது" என்றனர். சிறுமையென்றும் பாராமல் சிறுமையை இகழாது பசுக் களை மேய்க்கும் வலிமை மிக்க இடையன், என்பதாம். "அன்று உலகு ஈர் அடியால் தாவின ஏற்றை" என்று உலகளந்த பெருமானை, "எம்மானை" எம் தலைவனை "எஞ்ஞான்று தலைப் பெய்வன்" எப்பொழுது சேர்ந் திடுவேன் என்கிறார். 'தலைப்பெய்வன்' என்ற சொல் ஆற்றமை அல்லது ஏமாற்ற நிலையை உணர்த்துவ தாகும். தலைவனைச் சேர்ந்துவிட வேண்டும் என்ற ஏக்கம் "எஞ்ஞான்று தலைப் பெயவன்" என்று கூற வைக்கிறது. ஏகாரம் அசையெனத் தள்ளுக.

"கடல் விளங்கு கருமேனியம்மான் தன்னைக்
கண்ணாரக் கண்டுகக்கும் காதல் தன்னால்"

என்றனர் குலசேகராழ்வார். பெருமாள் திருமொழி 1. 11

அரும்பதவுரை : ஆரு - அரு என்பதன் விகாரம். இன் - இனிய. மேவிய - பொருந்திய. தங்கிய. புன்மை - சிறுமை. எள்காது - பழிக்காமல். ஆ - பசு. ஆயன் - இடையன். தாவின - தாண்டிய. ஏறு - காளை, சிங்கம். பெருமைமிக்கவன். எம்மான் - தலைவன். எஞ்ஞான்று எப்பொழுது. தலைப்பெய்வன் - அடைவேன்.

(தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றாது உரைத்தல்)

தலைப்பெய்தியானுன் றிருவடி சூடுந்தகைமை யினா
னிலைப்பெய்த வாக்கைக்கு நோற்ற விம்மாயமு
மாயஞ்செவ்வே
நிலைப் பெய்திலாத நிலைமையுங் காண்டோற சுரர்
குழாந்
தொலைப் பெய்தநேமியெந்தாய் தொல்லை யூழி
சுருங்கலதே. ௪0

விளக்கவுரை : அசுரர் கூட்டத்தைத் தொலைத் தொழித்த சக்கரப் படையையுடைய எம்தலைவனே! நான் உனது திருவடித் தாமரைகளை எனது தலைமேல் சூடிக் கொள்ளும் அவாவினால் நான் உன்னைத் தலையால் சேர்ந்து நிலை பெற்றிருக்கும்படியாக இந்த உடலைப் பெறுதற்குத் தவம் செய்த இந்த மாயத்தையும் மாயமாய்ச் செவ்வனே நிலைபெறப்படாத நிலைமையைக் காணுந்தோறும் தொன்மையான ஊழிக் காலம் சுருங்கவில்லை.

திறனாய்வு : எம்பெருமானையே நினைந்து நினைந்து அவனைச் சரணடைந்த ஆன்மாக்கள் ஆழ்வார்கள் அவன் கமல பாதங்களையே கண்களில் கொண்டு அவனை முழுமையாக அடையப் பெறாமையினால் இவ்வுடல் உருப்பெற்றதன் பயனை அனுபவிக்க இயலாமல் காலங்கடப்பதை நினைந்து நினைந்து கலங்கியுரைத்தல் இப்பாசுரத்தின் உட்பொருள்.

''அசுரர் குழாம் தொலைப் பெய்த நேமி எந்தாய்!' என்று எம்பெருமானைக் கூவி அழைப்பது காண்க அசுரர்களின்கூட்டத்தை 'தொலைப் பெய்த' என்கிறார். 'தொலைச்சுக் கட்டிட்டுத்தான் மறுவேலை' என்று சொல்லுவர். அதுபோன்று ''தொலைப் பெய்த'' என்பதற்கு அழித்தல் செய்த என்பது பொருள். ''நேமியெந்தாய்'' என்றது சக்ராயுதமுடைய எம் தந்தையே தலைவனே! என்பதாம். ''யான் உன் திருஅடி சூடும் தகைமையினால்'' என்றது அடியேன் உனது திருவடித் தாமரைகளை எனது தலைக்கு அலங்காரமாகச் சூடிக் கொள்ளும் பெருமையினால், உன் கமல பாதங்களை என் தலைக்கு மகுடமாகச் சூடி அடிமைப்பேறு பெற்றதனால் என்பதாம்.

''ஓலமிட்டு நானழைத்தால் ஒன்றும் வாராயாகிலும்
கோலமாம் என்சென்னிக்கு உன்கமலமன்ன
குரைகழலே'

என்றனர் திருவாய் மொழியிலும் 4.3.6. ''எய்த ஆக்கைக்கு நோற்ற இமாயமும், மாயம் செவ்வே நிலைப்பு எய்திலாத நிலைமையும் காண்தோறும் தொல்லை ஊழி சுருங்கலதே'' என்றனர். ''எய்த ஆக் கைக்கு நோற்ற இமாயமும்'' என்றது இவ்வுடலைப் பெறுதற்கு நான் முற்பிறவிகளில் செய்த நோன்புகளும் அவை செய்த வியப்பும் என்பதாம். ''மாயம் செவ்வே நிலைப்படி எய்திலாத நிலைமையும்'' என்றது அந்த வியப்பு செம்மையாக நிலைபெற்ற முடிவையடையா நிலைமையையும் என்பதாம். ''காண் தோறு தொல்லை ஊழி சுருங்கலதே'' என்றது இந்த என் நிலையை நோக்குந்தோறும், தொன்மையான ஊழிக்காலம் சுருங்குவதாகக் காணோம்; நீண்டு கொண்டே போகிறது என்பதாம். ''காலம் நெருங்கி விட்டது'' என்றால் முடிவுகாலம் அருகில் உள்ளது என்பது பொருள். அதுபோன்று ''தொல்லை ஊழி சுருங் கலதே'' தொன்மையுடைய இந்த ஊழிக்காலம் சுருங்கு வதற்குப் பதிலாக நீண்டு கொண்டே போகிறதே! என்ன இந்த நிலை? என்ற வியப்பையும் அச்சத்தை யும் அடைகிறார் தலைவி என்பதாம்.

அரும்பதவுரை : தலைப்பெய்தி - சரணடைந்து அடிமைநிலையடைந்து. தகைமை - பெருமை. தகுதி நிலைப்பு - நிலைபெற்ற. ஆக்கை - உடம்பு. நோற்ற செய்த தவம். மாயம் - வியத்தகு செயல். செவ்வே செம்மையாக, முழுமையாக, சிறப்பாக. காண்தோறும் பார்க்கும் பொழுதெல்லாம். தொலைப்பெய்த - தொலைத்துக்கட்டிய. அழித்த. நேமம் - சக்ராயுதம். எந்தாய் - எம்தந்தை. தலைவன். தொல்லை - தொன்மை, பழமை. ஊழி-ஊழிக்காலம். சுருங்கலதே - சுருங்காமல் நீள்கிறதே.

(தோழிக்குத் தலைவி தன் கற்பு உணர்த்தி
அறத்தொடு நிற்றல்)

சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வனை
வையமுற்று
மொருங்குறவுண்ட பெருவயிற்றாளனை மாவலிமாட்
டிருங்குறளாகி யிசையவோர்மூவடி வேண்டிச் சென்ற
பெருங்கிறியானை யல்லாலடியே னெஞ்சம்
பேணலதே. 91

விளக்கவுரை : சுருங்கக் கட்டப்பட்ட உறி வெண்ணெயைத் திருடி உண்ட கள்வனை, வையம் முழுவதையும் ஒரேயடியாக உண்ட பெருவயிற்றாளனை, மாவலியிடத்தில் ஒரு குள்ளனாகி அவன் விரும்பிக் கொடுக்க மூஅடி மண் வேண்டிப் பெற்ற பெருந் தந்திரியை அல்லால் அடியேன் நெஞ்சம் வேறு ஒரு தெய்வம் விரும்பாது.

திறனாய்வு : தலைமகள் களவொழுக்கத்தில் ஈடுபட்டு இயற்கைப் புணர்ச்சியால் தலைவனுடன் முழுமையாகத் தன்னைக் கொடுத்துவிட்ட நிலையில் மகளின் நிலைகண்ட பெற்றோர் அவளுக்கு மணமுடித்தாலே அவள் தோற்றத்தில் மாற்றம் காணமுடியும் என மணம் பேசுவது கண்ட தலைவி, தான் கற்பு அறத்தோடு நிற்றலைக் கூறும் பாசுரம்.

''சுருங்கு உறி வெண்ணெய் தொடு உண்ட கள்வன்'' என்று எம்பெருமானை விளிக்கிறார்'' சுருங்கு உறி'' என்பது உறியின் மேல் பாத்திரங்களை வைக்கும்பொழுது அவை விழுந்து விடாதபடி அந்த உறி சுருங்குவதற்காக இரு வளையங்கள் இருக்கும். அவற்றைப் பாத்திரத்துடன் நெருங்கியிருக்க இழுத்து விட்டால் சட்டி முதலிய பாத்திரம் நழுவாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இருக்கும். அந்த

வளையத்தை மேலே தூக்கினால் உறிவிரிந்து கொள்ளும், அப்பொழுது பாத்திரத்தை எடுக்கச் சுலப மாக இருக்கும். இதனையே "சுருங்கு உறி" எனச் சிறப்பிக்கின்றனர்.

சுருங்கு உறியில் வைக்கப்பட்டிருந்த வெண்ணெய் யைத் தோண்டி உண்ட திருடனை. என்கிறார். கை முழுவதும்விட்டு அள்ளி அள்ளி உண்ட கள்வனை என்றபடி.

"தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய"

என்றனர் பெரியாழ்வார். திருமொழி 1.4.9.

"திண்ணக் கலத்தில் திரையுறிமேல் வைத்த
வெண்ணெய் விழுங்கி..."

என்றதும் காண்க, பெரியாழ்வார் திருமொழி 2.5.2. "தொடு உண்ட" என்றது கைமுழுதும் விட்டு அள்ளி உண்ட என்பதாம். "வையம் முற்றும் ஒருங்குஉற உண்ட பெருவயிற்றானை" என்றது பிரளய காலத்தில் உலக முழுவதையும் ஒன்றாக விழுங்கி அடக்கிய பெரு வயிற்றன் என்பதாம்.

"மண்ணும் மலையும் கடலும் உலகேழும்
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு"

என்றனர் பெரியாழ்வார். திருமொழி 1.2.18. உல கெலாம் உண்ட பெரு வயிற்றன் "உளஉண்ட" என்றது ஒரே சமயத்தில் உண்ட என்பதாம். "மாவலி மாட்டு இரு குறள் ஆகி ஓர்மூ அடிவேண்டிச் சென்ற பெருகிறியானை அல்லால்" என்றது வாமன அவதாரத் தில் மூவடிமண்வேண்டி உலகெலாம் அளந்த மாயனை அல்லாமல் "அடியேன் நெஞ்சம் பேணலதே" அதாவது எனது மனம் வேறு கடவுளை விரும்பாது ஏற்றுக்கொள்ளாது என்பதாம்.

"ஊனிடையாழி சங்குத்தமர்க்கென்று
உன்னித்தெழுந்த என்தட முலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழ்கில்லேன் கண்டாய் மன்மதனே!"

என்றனர் நாச்சியார், திருமொழி 1.5. "அடியேன் நெஞ்சம் பேணலதே" என்று நம்மாழ்வார் கூறியது போன்று நாச்சியாரும் உலகுக்கறிவித்திருத்தல் காண்க.

அரும்பதவுரை : சுருங்கு உறி - சுருங்கி விரியும் வசதி படைத்த உறி. தொடு - தோண்டி ஆழமாக. வையம் - உலகம். உற - முழுமையாக, அப்படியே, உறுஞ்சி, இருகுறள் - மிகச்சிறிய. இசைய-விரும்பும்படி கிறியான் - மாயன். பேணலது - விரும்பாது, ஏற்காது. ஈற்றேகாரம் அசையெனத் தள்ளுக.

(வேந்தற்குற்றுழிப் பிரிவில் தலைவனைக் குறித்துத் தலைவி இரங்கல்)

பேணலமில்லாவரக்கர் முந்நீர பெரும்பதிவாய்
நீணகர் நீளெரிவைத் தருளாயென்று நின்னை
விண்ணோர்
தாணிலந்தோய்ந்து தொழுவர் நின்மூர்த்திபல்
கூற்றிலொன்று
காணலுமாங் கொலென்றேவை கன்மாலையுங்
காலையுமே. 92

விளக்கவுரை : உன்னை விரும்பிப் பக்தி செய்யாத இராக்கதர்களது பெருங்கடலால் சூழப்பட்ட பெரியமலையின் மீதுள்ள பெரிய இலங்கை மாநகரை எங்கும் தீப்பற்றி எரிய வைத்தழித்தாய் என்று சொல்லிப் பிரார்த்தனை செய்து உன்னைத் தேவர்கள் நாள் தவறாது காலையும் மாலையும் தங்கள் கால்கள் நிலத்தில் படும்படி வந்துநின்று வணங்குவர். அவர்கள்

அவ்வாறு வந்து வணங்குவது உனது திருக்கோல வடிவில் ஒன்று காணவேண்டுமென்றே யாம் பரமபதத்தில் கிடைக்கப் பெறாத பேற்றினை இவ் வுலகில் வந்து பெருகின்றனர் என்றபடி.

திறனாய்வு: பரமபதத்து எழுந்தருளியிருக்கும் எம்பிரான் விண்ணவர் சூழ இருப்பவன் என்றாலும் அவன் திருஅவதாரங்களின் ஒன்றான இராம அவதாரத் தில் இலங்கையை அழித்தற் பொருட்டு எழுந்தருளிய அவன் வடிவின் பலவற்றின் ஒன்றான கமலபாதங் களைக் காணவேண்டும் என்ற அவாவினால் அவர்கள் பாதங்கள் தரையில் தோய்ந்து நிற்கும்படி வந்து வணங்குவர் என்பதுவே இப்பாசுரத்தின் சிறப்பு.

"பேண்நலம் இல்லா அரக்கர்" என்றது, எம் பெருமானே! உன்னைப் பேணி அன்பு செய்தல் இல்லாத அரக்கர் என்பதாம். "முந்நீர பெரும்பதிவாய் நீள் நகர் நீள்எரி வைத்தருளாய்" என்றது அரக்கர் களது கடலாகிய பெரு நீரையுடைய பெரிய இடமான அல்லது பெரிய மலைகளையுடைய பெரிய இலங்கை மாநகரிலே பெரிய தீயை வைத்து அழித்தருளினாய் என்பதாம்.

"ஓதமாகடலைக் கடந்தேறி
உயர்கொள் மாக்கடி காவையிறுத்து
காதல் மக்களும் சுற்றமும் கொன்று
கடியிலங்கை மலங்க எரித்து"

என்றனர் திருமங்கை மன்னர். பெரிய திருமொழி 10.2.6. "என்று நின்னை விண்ணோர் தாள்நிலம் தோய்ந்து நின்மூர்த்தி பல்கூற்றில் ஒன்று காணலும் அங்கொல் என்றே வைகல் காலையும் மாலையும் தொழுவார்" என்று தேவர்கள் விண்ணுலகை நீத்து இப்பூவுலகில் வந்து தமது பாதங்கள் நிலத்தில் தோய்ந்து நிற்க உமது

உருவின் பகுதிகளில் ஒன்றையாயினும் காண்போ மென்று பாதங்கள் மட்டும் காணப் பெற்றவராய்த் தினமும் காலையிலும் மாலையிலும் தொழுது நிற்பர் என்பதாம். "நின்மூர்த்தி பல்கூற்றில் ஒன்று காணலும்" என்றது, நின்மூர்த்தங்கள் பலவற்றினும் ஒன்றாயினும் காணும் பொருட்டு அவர்கள் இவ்வுலகை நோக்கி வர, ஓங்கி வளர்ந்தெழுந்த பரமன் பாதங்கள் மட்டுமே கிடைக்கப் பெற்றவர்களாய் அதனையே கண்டு களித்தனர் என்றபடி "நின்மூர்த்தி பல கூற்றில்" என்றதற்கு கம்பநாட்டாழ்வார் இராமபிரானின் எழில் தோற்றத்தை,

"தோள்கண்டார், தோளே கண்டார், தொடுகழல் கமலம் அன்ன
தாள்கண்டார், தாளேகண்டார்; தடக்கை கண்டாரும், அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே, வடிவினை முடியக் கண்டார்"

என்று ஒரு வினாவினை எழுப்புவது காண்க. இவ்வினாவினுக்கு விடை காணமுடியாத விண்ணோர், "தாள்கண்டார் தாளே கண்டார் என்பதாம்.

அரும்பதவுரை: பேண் - பேணுதல், காத்தல்' முந்நீர் - மூன்று நீர், கடல். பெரும்பதி - பெரிய இடம் மலை. நீள் நகர்-பெருநகர். நீள்எரி-ஊழிக்கால நெருப்பு. வைகல் - நாள். தாள் நிலம் தோய்ந்து - பாதம் நிலத்தில் பட. மூர்த்தி - வடிவம். கூற்று - சிறப்புகள்.

(இருள்கண்டு அஞ்சுகிற தலைவி தோழி
செவிலியரை வெறுத்தல்)

காலைவெய்யோற்கு முன்னோட்டுக் கொடுத்த கங்குற்குறும்பர்
மாலைவெய்யோன் படவையகம் பாவுவரன்ன கண்டுங்

காலை நன்ஞானத்துறை படிந்தாடிக்கண்போது
செய்து
மாலை நன்னாவிற் கொள்ளார் நினையார
வன்மைப்படியே. 93

விளக்கவுரை : காலைக் கதிரவனின் முன் நிற்க மாட்டாமல் ஓட்டமெடுத்த இருளாகிய சிற்றரசன் மாலையில் ஞாயிறு ஆகிய அப்பேரரசன் அழிய உலக முழுவதும் பரப்பும் அப்படிப்பட்ட கொடுமைகளைப் பார்த்தும் பலர் நல்ல ஞானமாகிய துறையில் இறங்கி மூழ்கிக் கண்களை மூடிக்கொண்டு எம் தலைவனான திருமாலை நாவால் துதித்துப் போற்றாதவர்கள் அவன் கருமேனியை நினைக்கவுமாட்டார்கள்.

திறனாய்வு : தலைவி எம்பெருமானாகிய தலைவனைப் பிரிந்து ஆற்றாத நிலையில் கதிரவன் மறைந்து காரிருள் சூழ்ந்த நிலையில் அந்தக்கரிய இருள் எம்பெருமான் திருமேனியழகைத் தலைவிக்கு நினைவூட்ட, அவள் படும் துன்பங்களுக்கு அவளது நோய்க்குப் பரிகாரம் காணாத தோழியரையும் செவிலியரையும் வெறுத்துரைத்தல் இங்கு கூறப்படுகிறது.

"காலை வெய்யோற்கு முன் ஓட்டு கொடுத்த கங்குல் குறும்பர்" என்று காலைக் கதிரவனை மாமன்னனுக்கும் இருளை அவனடிபட்ட சிற்றரசுக்கும் ஒப்புவுமை கூறிக் காண்பிக்கிறார்.

"பொருவி லாழியொன் றுருட்டியெப் புவனமும்
விளக்கு
மிரவி மன்னவ னிறத்தலு மெதிர்ந்த புன் மாலை
பரவை மாநில முழுவதும் பரிப்பவ னிறப்ப
விரவு வெந்தொழிற் குறுநில வேந்து
போன்றுளதே"

என்றனர் அதிவீர ராமபாண்டியனாரும் நைடதம். அடியனேன் உரைநூல் பக்கம் 252 காண்க. அது போன்று "கங்குல் குறும்பர்" என்கிறார். "ஓட்டுக் கொடுத்த கங்குல் குறும்பர்" என்பது சிறப்பு. புறங் கொடுத்தோடிய சிற்றரசர் என்பதாம். "மாலை வெய்யோன் பட வையகம் பாவுவர்" என்றது மாலையில் கதிரவன் அழிய, மறைய உலகம் முழுதும் பரவியிருக்கும் இருள் என்பதாம். "அன்ன கண்டும் காலை நல் ஞானம் துறைபடிந்து ஆடி, கண் போது செய்து, மாலை நல்நாவில் கொள்ளார்" என்றது புன்மாலை கதிரவன் பட வையகம் முழுவதும் பரவக்கண்டும், அந்நேரத்திலும், எம்பெருமானாகிய திருமாலை நல்ல ஞானமாகிய துறையில் நின்று அவன் புகழ்பாடித் துதித்துக் கண்களை மூடிக் கொண்டு தமது நாவினால் அவன் பெயரைக் கூவி அழைத்துத் துதித்திரார். என்பதாம். "அவன் மை படியே நினையார்." என்றது அவன் கரிய திருமேனியின் நிறமாகிய இவ்விருளினைக் கண்டும் அவனது கரிய மேனியை நினைந்து வாடார் என்பதாம்.

அரும்பதவுரை : வெய்யோன் - கதிரவன். ஓட்டு- ஓட்டமெடுத்து. கங்குல் - இரவு. குறும்பர் - சிற்றரசர். பட - அழிந்துபட. பரவுவர் - போற்றுவர். அன்ன கண்டும் - அப்படிக் கண்டும். போது - அரும்பு. நல் ஞானம் - நல்அறிவு. மாலை - திருமாலை. மைபடி - மைபோன்ற திருமேனியின்படி

(தலைவியைக் கண்ட பாங்கன் மீண்டு தலைவனையடுத்து வியந்து கூறல்)

மைப்படி மேனியுஞ் செந்தாமரைக் கண்ணும
வைதிகரே
மெய்பபடி யாலுன் திருவடி சூடுந்தகைமை யினா

ரெப்படி யூராமிலைக்கக் குருட்டா மிலைக்குமென்னு
மப்படி யானுஞ் சொன்னேனடியேன் மற்றியா
தென்பனே. 94

விளக்கவுரை : நீலநிற மேனியும், செந்தாமரை போன்ற திருக் கண்களையுமுடைய உனது திருத்தாள் மலர்களை வைதிகர்களே உண்மையான நெறியால் தலைமேல் சூடும்படியான தன்மையுடையவர். எப்படி யெனில் ஊரின் மந்தையில் மேய்ந்து வரும் பசுக் கூட்டத்தில் குருட்டுப் பசுவும் இடமறிந்து கனைக்கும் என்று உலகம் சொல்லுமோ அப்படியே, நானும் என்னைக் குருட்டுப் பசு போன்று குறை கூறினேன். அடியேன் வேறு என்ன சொல்லுவேன்?

திறனாய்வு : இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் பிரிந்த தலைமகன் மீண்டும் சேர்ந்திட விரும்பிப் பாங்கனுக்குரைக்கப்பாங்கன் தலைவியின் திறனறியாது தலைவனை இடித்துக்கூறிப் பிறகு தலைவியின் எழில் வளத்தை நோக்கி வியந்து, தலைவனுக்குக் கூறுதல் இங்கு சிறப்பிக்கப்படுகிறது. இதனைத் தலைவன் தனக்குத் தலைவியின் நிலை கூறல் எனும் ஒரு துறையின் பாற்படுத்தி இவ்வாறு கூறப்பட்டதெனினுமாம்.

"மை படி மேனியும் செந்தாமரைக் கண்ணும்" என்றது நிலநிறமுடைய எம்பெருமான் திருமேனியும் அவனது அன்றலர்ந்த தாமரை மலர்க் கண்களுமாம். "உன் திருஅடி வைதிகரே சூடும் தகைமையினர்" என்றது உன் திருவடித் தாமரைகளை வேதவிதிப்படி ஒழுகும் வல்லுனர்களே அவர்களது உண்மையான நெறியால் தலைமேற் கொண்டு வணங்கும் தன்மை யுடைவர்களாவர் என்பதாம். எப்படியெனில், "எப்படி ஊர் ஆ மிலைக்க குருட்டு ஆ மிலைக்கும் என்னும் அப்படி" என்றனர். வெளியில் மேய்ந்து திரியும் பசுக்கள் இடமறிந்து உண்ணும் பொருள்

அறிந்து கனைப்பது பார்த்து குருட்டுப் பசுவும் கூடக் கனைக்குமாப் போலே "நானும் சொன்னேன்." என்றனர் "அடியேன் மற்று யாது என்பன்" என்றது அடியவனான நான் வேறு என்ன சொல்ல இயலும் என்பதாம்.

இதனைச் சற்று விரிவாகக் காணுதல் நன்மை பயக்கும். எம்பெருமான் மேனியும் கண்களும், "மை படிமேனி செந்தாமரைக்கண்" எனச் சிறப்பிக்கப் படுகிறது. தலைவியின் அழகை வருணிக்காமல் தலைவனின் அழகைக் கூறும் பொழுது அவனுக்கேற்ற அழகி என்பதாகிறது. அல்லது இவ்வழகிக்கேற்ற திரு உருவைப் பெற்றிருக்கும் தலைவனே என்பதாகிறது. அந்த அழகியைக் கண்டும் அந்த வடிவழகியைச் சேர்தற்கு ஏற்ற எழில் வடிவுடையவனாய் இருந்தும், ஒருவாறு அறிந்திருந்த சிறப்பினைக் கண்டு, உன் பாங்கனான என் போன்றோரால் உன்னை முழுமை யாக அறிந்து கொள்ளுதல் என்பது முடியாத ஒன்று, "வைதிகரே மெய்படியால் உன்திருஅடி சூடும் தகைமையினர்." என்று பாங்கன் மேலும் தன் நிலையைப் பற்றிக் கூறுமிடத்து, மாடுகள் மேய்ந்து வரும் பொழுதும் இடம் பொருள் நோக்கிக் கனைக்கும். ஆனால் அதனுடன் சேர்ந்திருக்கும் குருட்டுப் பசுவுக்கு ஒன்றும் தெரியாது. கண் உள்ள பசு கனைத்தது போல குருட்டுப் பசுவும் கனைக்கும்—அது போன்று முன்பு நான் தலைவியைப் பற்றிக் கூறியது என்பதாகக் கூறினான் என்க. இப்பாசுரத்தை அவையடக்கமாகக் கூறினார்எனினுமாம்.

அரும்பதவுரை : மைபடி மேனி - நிலநிற மேனியன். கருமை நிறமுடைய திருமேனிநாதன். வைதிகரே - வேத விதிகளையறிந்தோரே. மெய்படி - உண்மை நெறிப்படி. ஊர் ஆ - ஊரில் சார்ந்த பசு. மிலைக்கும் - கனைக்கும்.

(தலைவி அறத்தொடு நிற்கத் துணிதல்)

யாதானு மோராக்கையிற் புக்கங் காப்புண்டு
மாப்பவிழ்ந்து
மூதாவியிற்றடுமாறு முயிர் முன்ன மேயதனால்
யாதானும் பற்றிநீங்கும் விரதத்தை நல்வீடு செய்யு
மாதாவினைப் பிதுவைத திருமாலை
வணங்குவனே. 95

விளக்கவுரை : இந்த உயிரானது பழம் பிறப்புக் களுள் ஏதாகிலும் ஒரு உடம்பினுள் புகுந்து அந்த உடம்பில் கட்டுப்பட்டு நின்றும், அந்தக் கட்டு நீங்கி யும் நிலை தடுமாறி அலையும் தன்மையது ஆதலால் முன்னம் எனது உயிர் இவ்வுடலை விட்டு நீங்குதற்கு முன்பாகவே எவ்விதத்தினாலாவது, தலைமகன் என்னைப் பிரிதலாகிய நிலையை வீடுவித்தற்கு ஏறப-தாயையும், தந்தையையும், திருமாலாகிய எனது அந்தத் தலைவனையும் வணங்கி வேண்டிக் கொள் வேன்.

திறனாய்வு : இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவனைப் பிரிந்திருக்க ஆற்றாத தலைவி இனி உயிர் பிரிதல் உண்மையெனக் கருதியவளாய், இறந்த பின்பு எடுக்கும் பிறவிகளால் இறைவனைக் கூடுதல் ஆகுமோ என அச்சம் மேவி உயிர் பிரியும் முன் அவனுடன் கலந்திட அவள் தாய் தந்தையரை வேண்டி விரைவில் வரைந்து கொள்ளுமாறு செய்வேன் என்றும் பலவாறும் தான் அறத்தோடு நிற்றலைத் தோழிக் குரைத்தலாம். ''உயிர் முது ஆவியில் யாது ஆனும் ஓர் ஆக்கையில் புக்கு'' என்று இறந்தபின் மறுபிறப் பின் விதியைக் கூறுகிறார். உயிரானது ''முது ஆவியில்

யாது ஆனும்'' என்றது பழமையான பலபல பிறப்பு களில் என்பதாம்.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக்க மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவ ராய்ச்
செல்லாஅநின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்''

என்பர் மாணிக்க வாசகர். திருவாசகம் சிவபுராண்ம் (26-3) ''யாது ஆனும் ஒரு யாக்கையில் புக்கு'' என்பதனை மாணிக்கவாசகர் சிறப்பாக அடுக்கிக் காண்பிக்கிறார். அத்தகு பிறப்புக்களில் புகுந்து, ''அங்கு ஆப்புண்டும் ஆப்பு அவிழ்ந்தும் தடுமாறும்'' என்றதில் ஆப்பு அடித்தல் என்பதனையே இங்கு ஆப்புண்டும் என்றனர். ஆப்பு அடித்து வைத்து விட்டால் அதினின்றும் தப்புதல் எளிதன்று. ஆப்பு அடித்து மாடு, குதிரை, யானை முதலியவற்றை அதில் கட்டி விடுவர். ''ஆப்புண்டும்'' என்றது ஒரு பிறப்பெய்திக் கட்டுண்டு என்பதாம். ஆப்பு அவிழ்ந்து என்றது அப்பிறவியிலிருந்து விடுபட்டு வேறு ஒரு பிறவி எடுத்தலாம். இவ்விரண்டுக்கும் இடையில் தடுமாறும் அலையும் தன்மையடைந்து என்பதாம். இந்த நிலையற்ற தன்மையில் எம்தலைவனை இறந்த பின்பு கூடுவதென்பது எவ்வாறு? ஆதலின், ''முன்னமே யாது ஆனும் பற்றி நீங்கும் விரதத்தை நல் வீடு செய்யும்'' என்றது சாவதற்கு முன்னதாகவே, எந்த விதத்திலானும் தலைமகன் என்னைப் பிரிதல் எனும் ஒழுக்கத்தை நன்கு விடுவித்தற்கு ஏற்ற என்பதாம். அதற்காக அவன் ''மாதாவினை, பிதாவை, திருமாலை வணங்குவன்'' அதாவது அவன் தாயை, தந்தையை வேண்டி என்னைச் சேர்த்திட வேண்டுவேன், அல்லது

திருமாலாகிய என் தலைவனையே உருவெளித் தோற்ற மாய் எழுந்தருள வேண்டுவேன் என்பதாம்.

அரும்பதவுரை : யாதானும் - ஏதாகிலும் ஆக்கை- உடல். ஆப்புண்டு-கட்டுண்டு. ஆப்பவிழ்ந்து - பிறப்பு நீங்கி. முது ஆவி - பழம் பிறப்பு. நீங்கும் விரதத்தை நல்வீடு செய்தல் - பிரிதல் இல்லாமல் களவொழுக்கம் நீங்கி வெளிப்படையாகப் பெற்றோருடன் பேசியோ அல்லது தலைவனும் தலைவியும் ஒன்றுசேர்ந்து வாழும் வாழ்க்கை. மாலை - திருமாலை வழிபட்டு வாழ்தல் எனினுமாம்.

(தலைவி வெறி விலக்கு விக்க நினைத்தல்)

வணங்குந் துறைகள் பலபல வாக்கி மதிவிகற்பாற்
பிணங்குஞ் சமயம் பலபல வாக்கியவை யவைதோ
றணங்கும பலபல வாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தா
யிணங்கு நின்னோரை யில்லாய் நின் கண்வேட்கை
யெழுவிப்பனே 96

விளக்கவுரை : தெய்வ வழிபாட்டின் முறை களைப் பலபலவாக்கி, அறிவின் வேறுபாட்டால் மாறுபடும் சமயங்கள் பலவற்றையும் தோற்றுவித்து. அந்த அந்த சமயங்கள் தோறும் தெய்வங்கள் பல வற்றையும் உண்டாக்கி இவை எல்லாவற்றிலும் உனது திருவடிவையே பரவச் செய்துள்ளாய். உன்னோடு இணையாகச் சொல்லத்தக்க உன்போன்றோர் யாரும் இல்லாதவனே! உன்னிடத்திலுள்ள என் காதலை வெளியிட்டு விடுவேன்.

திறனாய்வு : திருமாலாகிய தலைவனைக் கள வொழுக்கத்தால் புணர்ந்து பிரிந்த நிலையில் தலைவி

யின் மெலிவு கண்ட செவிலி அவளை வெறியாட்டத்துக்கு ஈடுபடுத்த, பிறதெய்வங்களை வேண்டாத தலைவி வெறிவிலக்குவிக்கக் கருதித் தான் புணர்ந் தனுபவித்த தலைவன் எம்பெருமானே யெனத் துணிந் துரைத்தல். இதனையே திருவாய் மொழியில்;

"அவரவர் தமதம தறிவறிவகை வகை
அவரவர் இறையவ ரெனவடியடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழியடைய நின்றனரே"

என்றனர் (1.1.5)

"வணங்கும் துறைகள் பலபல ஆக்கி" என்றது இறைவனை வணங்கும் விதங்கள் பலவிதமாகப் படைத்து, "மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபல" என்றனர். அறிவு மயக்கத்தால் சமயங்கள் பலபல தோன்றின என்பதாம். ஆக்கி என்றது படைத்து, உண்டாக்கி "அவை அவை தோறும் அணங்கும் பல பல" என்றது அந்தந்த மதங்களில் வணங்கப்படும் தெய்வங்களும் பலபல உண்டாக்கி என்பதாம். உலகின் பலபல சமயங்களுக்கும் சமயங்கள் போற்றும் தெய்வங்களும் மனிதன் மதிவிகற்பால் உண்டாக்கப் பட்டவை என்பது காண்க. இவ்வாறு பல சமயங்களும் பல தெய்வங்களும் மனிதன் மதிவிகற்பால் படைக்கப் பட்டாலும், எம்பெருமானே நீ, "நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்" உனது எழில் வடிவை உலகெங்கும் பரவிடச் செய்தாய். "இணங்கும் நின்னாரை இல்லாய் நின் கண் வேட்கை எழுவிப்பன்" என்றனர் உன்னொடு இணையாகக் கூற யாருமில்லாமையால் உன்னிடத்தில் என் காதலை வெளியிடுவேன். எம்பெருமானிலும் மேலான தெய்வம் ஒன்றும் இல்லை என்றபடி.

"அங்கிங் கெனாத படி யெங்கும்ப்ர காசமா யானந்த
பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது, தன்னருள்
வெளிக்குளே யகிலாண்ட கோடி யெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த் தழைத்த
தெது•
மனவாக்கினில் தட்டாம லின்றதெது, சமயகோ
டிகளெலாந் தந்தெய்வ மெந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
எங்கனு
பெருவழக்கா யாதினும் வல்லவொரு சித்தாகி
யின்பமா
யென்றைக்கு முள்ளதெது, மேல்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெது அது
கருத்திற் இசைந்
ததுவே கண்டன வெலாமோன வுருவெளிய
தாகவுங் கருதியஞ்சலி செய்குவாம்"

என்று தாயுமானவர் பாடிய முதற்பாடலை இப்பாசுரம் நினைவூட்டுகிறது- அடியனேன் தாயுமானவர் பாடல் முதல்நூல் உரைநூல் பக்கம் 10-12 கண்டு மகிழ்க.

அரும்பதவுரை : துறை - வழிகள். மதி - அறிவு. விகற்பம் - வேறுபாடு. மயக்கம். பிணங்கும் - மாறு படும். சமயம் - மதம். மூர்த்தி - கீர்த்தி வடிவு. அழகு. நின்னோரை - உன்போன்றோரை வேட்கை - ஆவல், காதல்.

(தலைவனைப் பிரிந்து துயில் கொள்ளாத
தலைவி இரங்கல்)

எழுவது மீண்டே படுவதும் பட்டெனை யூழிகள்
போய்க்
கழிவதுங் கண்டு கண்டெள் கலல்லாலிமை
யோர்கள் குழாந்

தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய்தொல்லை மாலைக்
கண்ணாரக் கண்டு
கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கடுஞ்
சுதலே. 97

விளக்கவுரை : ஞாயிறு தோன்றுவதும் மறைவது மாக இவ்வாறு நிகழ்ந்து எத்தனையோ ஊழிகள் சென்று கழிவதும் பார்த்துப் பார்த்து வருந்துவதே யல்லாமல், தேவர்கள் கூட்டம் வணங்குவதையும் பரிவாரமாகச் சூழ்ந்து கொள்வதையும் செய்யப் பெற்ற என்றுமுள்ள திருமாலைக் கண்கள் குளிரக் கண்டு. களிப்பது அவன் மீது வேட்கையுடையவருக்கும் கண்ணுறக்கம் உண்டோ?

திறனாய்வு : தலைவன் எம்பெருமானைப் பிரிந்து நின்ற தலைவி அவன் பிரிவைத் தாங்கமாட்டாமையால் இரவும் பகலும் தூக்கமின்றியிருக்கக் கண்ட தோழி, தலைவியைத் தேற்றமுயன்ற பொழுது தலைவி கூறியதாகும். கணவனைக் காணாத கண்கள் என்ன கண்கலோ என்று வருந்துகிறார் ''எழுவதும் மீண்டே படுவதும் பட்டு எனை ஊழிகள் போய் கழிவதும்'' என்று இரவும் பகலும் மாறி மாறி வருவதை யும் அவை எத்தனையோ காலங்கள் அதாவது காலம் காலமாகக் கதிரவன் தோன்றுவதும் மறைவதுமானது என்பதாசக் கூறுகிறார். 'எழுவதும்' என்பது ஆதவன் கிழக்கு வானில் எழுவதையும் 'மீண்டே படுவதும்' என்று மாலையில் மறைவதைக் குறிப்பிட்டு, ''பட்டு எனை ஊழிகள்'' என்று எத்தனை எத்தனை காலம் இவ்வாறு நிகழ்ந்துகொண்டிருக்கின்றன என்கிறார்.

''எனை ஊழிகள் போய் கழிவதும் கண்டு கண்டு எள்கல் அல்லால்'' என்றது எத்தனையோ ஊழிகள் வருவதும் வந்து போவதும் பார்த்துப் பார்த்து

வருந்துதலே யல்லாமல் என் செய்வது என்பதாம்· "எள்கல்" என்றது ஏளனம் செய்தல் அல்லாது என்பதே மிகச் சிறப்பு. எள்ளி நகையாடுதல் என்ற படி. இவ்வாறு இரவும் பகலும் மாறி மாறி வருதல் கண்டு "எள்கல்" அல்லால் யாது பயன்? என்கிறார்.

"இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதும் செய்தொல்லை மாலை கண் ஆரக்கண்டு கழிவது ஓர் காதல் உற்றார்க்கும் கண்கள் துஞ்சுதல் உண்டோ?" என்றது தேவர்கள் கூட்டம் எம்பெரு மானை வணங்கி நிற்பதும் அவனையே சூழ்ந்து சேவித் திருப்பதுமாக உடைய தொன்மையான திருமாலைக் கண்கள் குளிரக் கண்டு களித்தவர்கட்கு அவனைக் கண்டு களிப்பில் ஆழ்ந்தவர்கட்கு கண் உறக்கம் என்பது உண்டோ? இல்லையென்றபடி.

"கண்கள் உறங்கவொரு காரணமுண்டோ
கண்ணனை இன்றிரவு காண்பதன் முன்னே?"

என்றனர் மகாகவி சுப்ரமணி பாரதி. கண்ணன் என் காதலன். நம்மாழ்வரும் சுப்ரமணிய பாரதியாரும் காலத்தால் வேறுபட்டவர் கருத்தால் ஒன்றானவர். நம்மாழ்வாரின் பாடல்கள் போலவே மகாகவியின் பாடல்களு கண்ணீர் மல்க வைப்பவை.

அரும்பதவுரை : எழுவது - காலையில் எழுவது- உதித்தல். மீண்டே - மீண்டும். படுவது - மறைவது. பட்டு - இறந்து. எனை - எத்தனை. எள்கல் - எள்ளு தல் இகழ்தல். இமையோர்—கண் இமையாதவர். தேவர். தொல்லை - தொன்மை. பழமை. மாலை - திருமாலை. கண் ஆர - கண் குளிர. முழுமையாக. துஞ்சு - தூங்கு.

(தலைவனது அருமையை நோக்கிக்
கவல்கிற தலைவிக்குத் தோழி கூறல்)

துஞ்சா முனிவருமல்லாதவருந் தொடர நின்ற
வெஞ்சாப் பிறவியிடர் கடிவானிமையோர் தமக்குந்
தன்சார் விலாத தனிப்பெருமூர்த்தி தன் மாயஞ்
செவ்வே
நெஞ்சானினைப் பரிதால் வெண்ணெயூணென்னு
மீனச் சொல்லே. 98

**விளக்கவுரை :** கண் துஞ்சாது தவமியற்றும் முனிவர்களும் முனிவர் அல்லாத தேவர்கள் முதலான மறையோர்களும் தாம் பின்பற்றி வழிபட நின்ற அடியார்களது பிறவித்துன்பங்களை, வானும் தனக்கு நிகரில்லாதவனும் ஒப்பற்ற உருவமுடையவனு மான எம்பெருமானது வெண்ணெய் திருடி உண்டான் எனும் இழிச் சொல்லுக்கு இடமான மாயம் இமை யோர்க்கும், நன்றாக மனத்தால் நினைப்பதரிது.

**திறனாய்வு :** உண்ணாது உறங்காது எப்பொழு தும் தவ நெறியிலேயே மூழ்கிக் கிடக்கும் முனிவர் களும் மற்றவர்களையும் "துஞ்சா முனிவரும் அல்லாத வரும் என்கிறார். காட்டில் தவமியற்றச் செல்பவரின் தன்மையை.

"தொன்னெறியை வேண்டுவோர் வீழ்கனியும்
வீழிலையும்
என்னும் இவையே நுகர்ந்து உடலம் தாம் வகுந்தி
துன்னும் இலைக்குரம்பைத் துஞ்சியும்...

என்கிறார் திருமங்கையாழ்வார் பெரியதிருமடல் எம் பெருமானை அடைந்துவிட வேண்டும் எனத் தன்னைத் துன்புறுத்திக் கொள்ளும் முனிவர்களும் மற்றவர்களும் "தொடர நின்ற எஞ்சா பிறவி இடர்கடிவான்"

என்றனர். "தொடர நின்ற" என்றது தாம் விரும்பிய பேறு பெறும் பொருட்டு எம்பெருமானைத் தொடர்ந்து வழிபட்டு நின்ற என்பதாம். "எஞ்சா பிறவி இடர் கடிவான்" என்றது எஞ்சிய பிறவி எனும் துன்பங் களைத் தீர்த்து வைப்பவன். அடுத்தடுத்து எடுக்க இருக்கும் பிறவித் துன்பங்களைத் தீர்ப்பவன் என்ப தாம். "தன் சார்வு இலாத தனிப் பெருமூர்த்தி தன்" என்றது. தனக்கு நிகரில்லாத ஒப்பற்ற தனித்தன்மை வாய்ந்த மூர்த்தத்தையுடையவனது உடையவனான எம்பெருமானது என்பதாம். "வெண்ணெய் ஊண் என்னும் ஈனச்சொல்" என்றது வெண்ணெய்தான் அவனுக்கு உணவு என்று கூறும்படியான அந்த இழி சொல்லுக்குக் காரணமானதன் "மாயம் செவ்வே நெஞ்சால் இமையோர் தமக்கும் நினைப்பரிது" என்றனர். வெண்ணெய் உண்ட மாயன் கள்வன் என்றெல்லாம் ஏச்சுக்கு பேச்சுக்கும் இலக்கானவன் ஆதலின் வெண்ணெயின் பால் ஐயன் கொண்டிருந்த அவா வெளிப்படை.

> "பொத்தவுரலைக் கவிழ்த்து அதன் மேலேறி
> தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
> மெத்தத்திருவயிறார விழுங்கிய
> அத்தன்..."

என்பர் பெரியாழ்வார். திருமொழி 1.9.7 இது வெண்ணெயே ஊன் என்பது உறுதியாகிறது. தேவர் கள் உணவான அமிர்தம் மிகுந்து கிடக்க இவ்வுலகில் எழுந்தருளி வெண்ணெயுண்டு தின்று மகிழ்ந்த மாயம் தான் என்னே? அந்தமாயம் நன்றாக ஆழ்ந்து மனத்தில் சிந்திக்கும் தேவர்கட்கும் தெரிதல் அரிது என்பதாம்.

அரும்பதவுரை : துஞ்சா - தூஞ்காத. தொடர - தொடர்ந்து வழிபட்டு நிற்க. எஞ்சா - எஞ்சிய. எடுக்க இருக்கும் பிறவிகள். பிறவி - தொழிற்பெயர். வி,

விகுதி. இடர் - துன்பம். கடிவான் - நீக்குவான். களைவான். சார்வு - இணைப்பு. ஊன் - உணவு. உண்ணப்படுவது. ஈனம் - இழிவு.

(தலைவன்பால் தனக்கு உள்ள அன்புறுதியைத் தலைவி தோழிக்குக் கூறல்)

ஈனச் சொல்லாயினுமாகவெறி திரைவயமுற்று
மேனத் துருவா யிடந்த பிரானிருங் கற்பகஞ்சேர்
வானத் தவர்க்கு மல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கு
ஞானப் பிரானை யல்லாலில்லை நான்கண்ட
நல்லதுவே 99

விளக்கவுரை : ஊராரும், உற்றமும், சுற்றமும் இழித்துச் சொல்லினும் சொல்லுக, அலைவீசும் பிரளயத்தில் மூழ்கிய பூமி முழுவதையும் வராக மூர்த்தியாய்த்தன் கோட்டாற் குத்தி எடுத்துவந்த தலைவனும், பெரிய கற்பக மரங்களையுடைய சுவர்கத்திலுள்ள தேவர்களும் மற்ற முனிவர் மனிதர்களும், மற்றும் நரகர் முதலானோருக்கும் அறிவைக் கொடுக்கும் எம்பெருமானையல்லாமல் நான் அறிந்த நற்பொருள் வேறு இல்லை.

திறனாய்வு : பெண்ணே தன் ஆசை பேசுதல் உண்டோ என வியப்போர்க்கு இங்கு தலைமகள் தலைவன்மேல் கொண்ட காதலின் துணிவை நாணத்தைத் துறந்தவளாய்த் தோழிக்கு எடுத்துக் கூறுகிறாள். நான் சொல்லும் இச்சொல் ''ஈனச்சொல் ஆயினும் ஆக'' அதாவது இழிசொல் ஆயினும் ஆகுக என்பதாம். ''எறிதிரை வையம் முற்றும் ஏனத்து உரு ஆய் இடந்தபிரான்'' என்று தன் தலைவனைப் போற்றுகிறார். வீசும் கடல் அலைகள் சூழ்ந்த இவ்வுலகம் முழுமையாக வராக மூர்த்தியாய் அதன்

மூக்கில் குத்தி எடுத்து வந்த தலைவன் என்பதாம். "வையம் முற்றும்" என்றது தலைவியைத் தலைவன் முழுமையாக அப்படியே அள்ளி எடுத்து வந்ததாகக் காண்க. அந்த என் தலைவன் "இரு கற்பகம் சேர் வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றும் எல்லாய வர்க்கும் "ஞானம் பிரானை அல்லால் நான் கண்ட நல்லது இல்லை." என்று புகழ்ந்து போற்றுகிறார். "இரு கற்பகம் சேர்வானத்தவர்" என்றது பெரிய கற்பக மரங்கள் மிகுந்த வான் தேவர்கள். "அல்லாதவர்கள்" என்றது மனிதர்களை. "மற்றும் எல்லாயவர்க்கும்" என்றது நரகர் முதலானோர் எல்லாம் என்பதாம். "ஞானப்பிரான் அல்லால்" என்றது அறிவைக் கொடுக் கும் தலைவனாகிய எம்பிரான் அல்லாமல் நான் கண்ட நன்மை பயக்குவது வேறு எதுவும் எவரும் இல்லை என்றபடி.

அரும்பதவுரை : ஈனம் - இழிவு. எறிதிரை - வீசும் அலை. ஏனம் - வராகம் பன்றி. இடந்த - எடுத்து வந்த. இரு - பெரிய. எல்லாயவர்க்கும் என்றது மற்ற உயிரினங்களுக்கும் என்றபடி. கற்பகம் - தெவலோக மரம். வேண்டியதை வேண்டும் போது தரும் மரம் கல்பித்தல் - உண்டாக்குதல்.

(நூற்பயன்)

நவ்லார் நவில் குருகூர் நகரான்றிரு மாறிருப்பேர்
வொல்லாரடிக் கண்ணி சூடிய மாறன் விண்ணப்பஞ்
செய்த
சொல்லார் தொடை யலிந்நூறும் வல்லாரழுந்தார்
பிறப்பாம்
பொல்லா வருவினைமாயவன் சேற்றள்ளற் பொய்ந்
நிலத்தே 100

விளக்கவுரை : நல்லறிவாளர்கள் புகழ்ந்துரைக்கப் பெற்ற திருக்குரு கூரென்னும் திருப்பதியில் அவதரித்த திருவின் கணவனான எம்பெருமான் திருப்பெயர்களைப் பயின்றவரான அடியார்களது திருப்பாத மலர்களைத் தம் முடியில் அணிந்து கொண்டவருமான நம்மாழ்வார் எம்பெருமானிடம் விண்ணப்பம் செய்த சொல் மாலை யான இந்த நூறு பாடல்களையும். கற்கவல்லார் பிறவிப் பெருவினையாகிய மாயம் உண்டாக்கும் கொடிய சேற்றினையுடைய பொய்யுலகைச் சென்றமுந்தார்.

திறனாய்வு : இது வாழ்த்துப் பாடல். இந்நூறு பாடல்களையும் பயின்றவர்களை "வல்லார்" என்று சிறப்பிப்பது காண்க. இப்பாசுரங்களைப் பயில்வ தென்பது அவ்வளவு சுலபமானதன்று என்பதனை, "இந்நூறும் வ்ல்லார்" என்பது காண்க. இந்நூலைப் பயில்பவர்களே "வல்லார்" என்றால், இதனைப் படைத்தவர் எத்தகையவர் என்பதை, "நல்லார் நவில் குருகூர் நகரான் திருமால் திருப்பேர் வல்லார் அடிக்கண்ணி சூடிய மாறன்" என்கிறார். "நல்லார்" என்றது சொல்லாலும் செயலாலும் நல்ல தையே நாடுபவர்கள். "நவில் குருகூர் நகரன்" என்றது நல்லவர்கள் போற்றும் திருக்குருகூரில் அவதரித்தவர். "திருமால் திருப்பேர் வல்லார் அடி கண்ணி சூடிய மாறன்" என்றது திருமகளின் கணவன் திருப்பெயர்களைப் பயின்ற அடியார் களுடைய திருஅடிகளாகிய மலர் மாலையைத் தமது தலைக்குச் சூடிக் கொண்ட நம்மாழ்வார்; இவர் நல்லார் நவின் மாறன் ஆதலின் நம்மாழ் வாரானார் என்றபடி. அத்தகு சிறப்பினைப் பெற்ற "நம்மாழ்வார் விண்ணப்பம் செய்த" எம்பெரு மானிடத்து வேண்டிக் கொண்ட "சொல் ஆ தொடை யல் இ நூறும்" சொற்களால் தொடுக்கப்பட்ட மாலை

யான் இந்நூறு பாடல்களையும், பாசுரங்களையும் "வல்லார்" கற்று அறிந்து ஓதவல்லவர்கள் என்பதாம். "பிறப்பு ஆம் பொல்லா அருவினை மாயம்" என்றது பிறப்பு எனும் பொல்லாத கொடிய ஊழ்வினையால் எழுந்த மாயம் என்பதாம். "வல்சேறு அள்ளல் பொய் நிலத்தே அழுந்தார்" என்றது கொடிய அடர்ந்த சேற்றில் அமிழ்ந்து மாண்டு போகார் என்பதாம். "வல்சேறு அள்ளல் பொய்நிலம்" என்றது சேறு நிறைந்த நிலப்பரப்பு அதில் சிக்கிக் கொண்டால் அதி லிருந்து மீழ்வது இயலாது. அதிலேயே மூழ்கி மறைந்து விடுவர். ஊழ்வினைப் பயனால் பல பிறப்புகளில் சிக்கி அழிந்து போகார் என்பதாம். "அழுந்தார்" என்றது அழுந்தி அழுந்தி முழுவதுமாக மறைந்து போவதிலிருந்தும் காப்பாற்றப்படுவர். பரமபத மடைவர் என்பதாம்.

அரும்பதவுரை : நவில் - சொல் கண்ணி - மாலை. ஆர் - அழகிய. தொடை - மாலை. அழுந்தார் - மூழ்கார். வீடே பெறுவர்.

நம்மாழ்வார் அருளிய திருவிருத்தம் மூலமும் கோக்கலை ஜேராஜன் உரையும் முற்றுப் பெற்றது.



# இதுவரை உரையிசைத்ததன் பாடல்களுக்கான விவரம்

| | நூல் | பாடல்கள் |
|---|---|---|
| 1. | திருவிருத்தம் (திறனாய்வு) | 100 |
| 2. | பட்டினத்தார் பாடல் (விருத்தியுரை) | 573 |
| 3. | தாயுமானவர் பாடல் | 1452 |
| 4. | நைடதம் | 1172 |
| 5. | நளவெண்பா | 428 |
| 6. | சிறிய திருமடல்—பெரிய திருமடல் (கண்ணிகள்) | 226 |
| 7. | திருப்பாவை | 30 |
| 8. | திருஞானசம்பந்தர் புராணம் | 1256 |
| | மொத்தம் | 5237 |

# திருவிருத்தம்
# செய்யுள் முதற்குறிப்பகராதி

